# ஐரோப்பிய வரலாறு

(கி.பி. 476 - 1453)

(பட்டப்படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)

ஆசிரியர்

தி. வை. சொக்கப்பா






மிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் — >

# ஐரோப்பிய வரலாறு

(கி. பி. 476 - 1453)

(பட்டப்படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)

ஆசிரியர்
தி. வ. சொக்கப்பா, எம்.ஏ., எல்.டி.,
ஓய்வு பெற்ற பேராசிரியர், வரலாற்றுத்துறை,
அரசினர் கல்லூரி, சேலம்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition — March, 1963
Second Edition — May, 1971
Third Revised Edition — January, 1976

T.N.T.B.S. (C.P.) No. 9



**History of Europe** (476 A.D. to 1453 A.D.)

T. V. CHOKKAPPA

Price Rs. 5-10

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture) New Delhi.

Printed out of the Paper allotted by the Government of India.

*Printed by*
Annai Anjuga Achagam,
Madras - 600 014.

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

*(தமிழகக் கல்வி அமைச்சர்)*

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந் தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தை யும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன் வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரி யர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், மெய்ப்பொருளியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய பல துறை களில் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகை யிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'ஐரோப்பிய வரலாறு (கி.பி. 476-1453)' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் சார்பில் வெளியான 9ஆவது வெளியீடாகும். தமிழ் மக்களின் பேராதரவினாலும் தமிழைப் பயிற்சி மொழியாகக் கொண்டவர் களின் நல்லூக்கத்தினாலும், இதன் முந்தைய பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன. ஆதலின். இப்பொழுது இந் நூல் மீண்டும் வெளிவருகின்றது. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும், கலையியற் பாடங் களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளர வேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ், எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங் களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

## படங்கள்

# முன்னுரை

கி. மு. 12,000 அளவில் ஐரோப்பிய நிலப்பரப்பில் மனிதன் வாழத் தொடங்கினான் என்று அறிகிறோம். அவ்வாதி மனிதன் ஆசியாவின் மேட்டு நிலங்களிலிருந்தோ, ஆப்பிரிக்காவிலிருந்தோ, தென் உருசியாவிலிருந்தோ வந்து குடியேறி இருக்கவேண்டும். புதிய கற்கால ஐரோப்பியர்கள் நார்டிக்கு (Nordic), ஆல்பைன் (Alpine), மத்திய தரைக்கடல் (Mediterranean) இனங்களாகிய முப்பெரும் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள். ஆரியர் வருகைக்கு முன்னர் ஐரோப்பாவின் பல்வேறு பகுதிகளில் குடியேறி, வெண்கலக் கருவிகளையும், கலங்களையும் பயன்படுத்தியவர்கள் மத்திய தரைக்கடல் இனத்தைச் சேர்ந்த ஐபீரியர்களே (Iberians) ஆவார்கள். பிறகு இந்தோ-ஐரோப்பியர் என்று பேசப்படுகிற ஆரியர்கள் அலையலையாக வந்து குடியேறி, அப் பழங்குடிகளுடன் கலந்தனர். இக்கலவையினின்று தோன்றியவர்களே கிரேக்கர்கள், உரோமானியர்கள், கெல்டுகள் (Celts), டியூட்டானியர்கள் (Teutons), ஸ்லாவ் மக்கள் (Slavs) ஆகியோர். பல்வேறு இனங்கள் நாகரிக வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்ந்துவந்த மத்திய தரைக் கடற் பகுதிகளில் கிரேக்கர்கள் குடியேறி ஆதிக்கஞ் செலுத்தத் தொடங்கிய காலமே ஐரோப்பிய வரலாற்றுக் காலத் தொடக்க மாகும்.

பல்வேறு இனக்கலப்பின் வழித்தோன்றல்களான ஐரோப்பிய மக்கள் பல நூற்றுண்டுகளாக எண்ணிய எண்ணம், சாதித்த செயல், வளர்த்த சமயக் கருத்து, தீட்டிய இலக்கியம், உருவாக்கிய கலை—ஏன்—அவர்கள் வாழ்வியலினின்றும் பெறப்பட்டதே ஐரோப்பிய வரலாறும் பண்பாடுமாகும். கடந்த ஐந்து நூற்றுண்டு களாய் ஐரோப்பியர்கள் உலக மக்களை ஆட்டிப்படைத்து, உலக வரலாற்றுப் போக்கினையே மாற்றி வந்துள்ளனர். ஆயினும் அவர் களின் தொடக்கக்கால வாழ்க்கையும் வரலாறும் பண்டைய ஆசிய ஆப்பிரிக்க மக்களின் நாகரிக வாழ்வினால் வளம் பெற்றன. உலகத்தில் எப்பகுதியில் உள்ள மக்களாயினும் பிற பகுதிகளி லுள்ள மக்களின் செயலாலும் வாழ்வாலும் மாற்றமடையாமல் இருந்ததில்லை.

கிரேக்கச் சமுதாயமே மேனாட்டு நாகரிக வாழ்வின் ஊற்று எனலாம். கிரேக்க வாழ்விலே உருவாகிய கரு உரோமப் பேரரசி

ஞல் பேணிப் பாதுகாக்கப்பட்டது. இரண்டகால நூற்றுண்டு களில் (Dark Ages) பிறந்த ஐரோப்பியச் சமுதாயக் குழந்தை தன்னை ஈன்ற கிரேக்க உரோமானிய நாகரிகங்களினின்றும் பிரிந்து, தனியே சிலகாலம் தவிக்க வேண்டி வந்தது. இடைக் காலத்திலே (Middle Ages) அக் குழந்தை வளர்ந்து பதினன்கு பதினைந்தாம் நூற்றுண்டுகளில் இளமைப் பருவத்தை எய்தியது.

## 2

ஆசியா, ஆப்பிரிக்கா, அமெரிக்காக் கண்டங்களைக் காட்டிலும் நிலப்பரப்பில் ஐரோப்பாக் கண்டம் சிறியதாகும். ஆசியாவும் ஐரோப்பாக் கண்டம் சிறியதாகும். ஆசியாவும் ஐரோப்பாவும் சேர்ந்து பரந்து விரிந்த நிலப்பகுதியாயுள்ளது. இரு கண்டங்களின் தென்பகுதிகள் மட்டுமே பிரிந்துள்ளன. அவற்றின் எல்லைக் கோடாகக் கிழக்கில் அமைந்துள்ள யூரல் மலைகளும், காஸ்பியன்—கருங்கடல்களுக்கு இடையில் உள்ள காகசஸ் மலைத்தொடரும் அக் கண்டங்களினிடையே மக்கள் போக்கு வரவிற்குத் தடைகளாய் உள்ளன. ஆதலால் வணிகர்களும் வழிப்போக்கர்களும் படை-யெடுத்து வந்தவர்களும் குறிப்பிட்ட ஒரு சில வழிகளையே பயன் படுத்தினர். அஃதே போன்று தெற்கிலுள்ள ஆல்ப்ஸ், பிரனீசு மலைகளால் வடபுல மக்கள் தென்னுட்டினருடன் கலந்து உறவாடி ஒன்றுபட இயலாமல் போயிற்று. இம் மலைகளிலுள்ள ஒருசில கணவாய்களும் மக்கள் எளிதில் கடக்க உதவாததால், அவர்கள் ஆங்காங்கு தங்கி வாழ்க்கை முறைகளையும் ஆட்சி வகைகளையும் வகுத்துக் கொண்டார்கள். மேற்கு ஐரோப்பாவில் விரிந்த அளவில் பேரரசுகள் தோன்றுவதற்கும், வேற்றுமைகள் நீங்கி ஒன்றுபட்ட வாழ்வு அமைவதற்கும் அங்குள்ள மலைகள் தடைகளாக இருந்தன.

மேலே ஐரோப்பாவில் மலையும் வளமான பள்ளத்தாக்கும் அடுத்தடுத்துள்ளன. மலையும் கடலும் குளிரையோ வெப்பத்தையோ மிகுதியாக்காமல் மிதமாகவே வைத்துள்ளன. காலநிலை, சுறுசுறுப்பாய்ச் செயலாற்றவும், சிந்திக்கவும் மக்களைத் தூண்டுகிறது. இதற்கு நேர்மாருக உருசியாவின் உள்நாட்டுப் பகுதிகள் கடலுக்கு நெடுந்தொலைவில் இருப்பதால், அளவு மீறிய குளிர் காரணமாய் மக்கள் விழிப்புணர்ச்சி பெறவும், சுறுசுறுப்பாய்ச் செயல்படவும் ஏற்றதாயில்லை. எதுவரினும் ஏற்று, எதனையும் எதிர்க்கும் உறுதிப்பாடின்றி செயலற்று வாழ்ந்த மக்கள் நிலை உருசியாவில் உருவாயிற்று.

ஐரோப்பாவின் நடுவில் அமைந்துள்ள சமவெளிகள் பெருந் ரளான மக்கள் கூடி வாழ்ந்து ஒன்றுபடவும் பெருநிலப்பகுதி

களின்மேல் ஆதிக்கஞ் செலுத்தவும் வாய்ப்பளித்தன; ஆடுமாடுகள் மேய்த்தும், நிலத்தைப் பண்படுத்திப் பயிரிட்டும் வந்த மக்கள் பெருகிச் சமுதாய, அரசியல், சமயத் துறைகளில் ஒன்றுபட வழி வகுத்தன.

தெற்கு வடக்காய்ப் பாய்கிற ஐரோப்பிய ஆறுகள், இடைக் காலத்தில் வாணிபத்திற்கும் வழிப்போக்கிற்கும் பெருஞ்சாதனங் களாயிருந்தன. ரைன் ஆறு, ரோன், டான்யூப் ஆறுகளோடும், விஸ்டுலா, நீமென் முதலிய ஆறுகள், வோல்கா, டான் ஆறு களோடும் இணைந்து ஐரோப்பியப் போக்குவரவிற்கு இயற்கை யாய்த் துணை செய்வதைக் காண்கிறோம். ஆறுகளின் போக்கு வேறுபட்டிருந்தால் கண்டத்தின் வரலாறும் வாழ்வும் மாறுபட் டிருக்கலாம். போர்த்துகல் (Portugal), ஆலண்டு (Holland), பெல்ஜியம் ஆகிய நாடுகள், பெரிய ஆறுகள் கடலில் கலக்கின்ற வட்டாரங்களில் அமைந்திருப்பதால் எல்லாவகையிலும் அந் நாடுகள் முன்னேறிவந்தன.

ஐரோப்பாக் கண்டத்தின் பலவிடங்களில் கடல் நிலத்திற்குள் ஊடுருவியிருப்பதால், கண்டத்தின் கடற்கரை மிக நீண்டுள்ளது. அதனால் அக் கண்டம் இயற்கை வசதிகளையும் வாய்ப்புகளையும் பெற்றிருக்கிறது. கண்டத்தினுள் இரு உள்நாட்டுக் கடல்கள் வாணிபத்தை வளர்க்க தனிவசதி ஏற்படுத்தித் தந்துள்ளன. மத்திய தரைக்கடல், பால்டிக்குக் கடற்கரைகளைச் சுற்றிலும், முதல் வாணிப நகரங்கள் தோன்றியதில் வியப்பொன்றுமில்லை.

மலைத் தொடர்களும், ஆழமான குடாக்களும் கண்டத்தைப் பல இயற்கைப் பிரிவுகளாய்ப் பிரித்துள்ளன. உருசியச் சமவெளி, டான்யூபு சமவெளி, பால்கன், இத்தாலிய, ஐபீரிய (Spanion) ஸ்காண்டிநேவியத் தீவக்குறைகள் (Peninsulas), பிரிட்டிஷ் தீவுகள் என்பன அப் பிரிவுகளிற் சில. கண்டத்தின் தென்பகுதி மூன்று தீவக்குறைகளாய்க் காட்சியளிக்கின்றது ஐரோப்பிய நாடு களுட் பல, தீவுகளாயும் தீவக்குறைகளாயும் உள்ளன.

மக்களின் பழக்கங்கள், உடை, சமுதாய வாழ்வு, கட்டடங் களின் அமைப்பு ஆகிய யாவும் தட்பவெப்ப வேறுபாட்டால் மாறுபாடு அடைகின்றன. மிதத் தட்பவெப்ப மத்திய தரைக் கடல் நாடுகளிலிருந்து வடக்கிலுள்ள குளிர்ப்பகுதி ஆல்ப்சு மலைத் தொடர்களால் பிரிக்கப்பட்டுள்ளது. நீண்ட குளிர்காலத்தின் போது ஏற்படுங் கடுங்குளிரால் தென்புல மக்களைக் காட்டிலும் வடவர் வருந்தினர். வட குளிர்ப்பகுதியின் மேலைப்பகுதி கடற்

குடைவினுல் தட்பவெப்ப ஏற்ற இறக்கம் அதிகமின்றி இருக்கிறது. உருசியச் சமவெளி மட்டுமே தட்பவெப்ப ஏற்ற இறக்க மிகுதியால் பாதிக்கப்படுகிறது. அட்லான்டிக் மாக்கடல் (Ocean) பகுதியிலிருந்து தெற்கில் மத்திய தரைக்கடலையும் வடக்கில் பால்டிக்குக் கடலையும் நோக்கி ஓடும் நீர் வழிகளும், டார்டனல்க (Dardarnelles), மார்மோரா, பாசுப்பரசு (Bosphorus) வழியாய் ஏற்பட்டுள்ள ஏஜியன் கடல், கருங்கடல் வழிகளும், மிகுதியும் ஏற்ற இறக்கமில்லாத மிதத் தட்பவெப்பநிலை நிலவுவதால், மக்களை உழைக்க ஊக்குகின்றன. இவ்வாறு மக்கள் வாழ்க்கை தட்பவெப்பத்தால் உருவாகிறது.

நிலத்தின்கீழ்ப் புதைந்துள்ள கனிப்பொருள் மூலங்கள் (Mineral resources) கண்டமெங்கும் பரவலாய்க் காணப்படினும், கருந்தனமாகிய உயர்ந்தவகை நிலக்கரி (Bituminous Coal) பிரிட்டனிலும், ஜெர்மனியிலும் உருசியாவிலும் ஏராளமாய்க் கிடைத்ததால், அந்நாடுகள் இயற்கையாகவே தொழில் வளவாய்ப்புப் பெற்றிருந்தன. மேலும், உருசியாவில் பெட்ரோலிய வைப்புகள் (Petrol deposits) ஏராளமாயிருந்தன.

உலகில் ஐரோப்பா அமைந்திருக்கின்ற இடமும், அதன் நில அமைப்பும்—மலைகள், ஆறுகள், சமவெளிகள், கடற்கரைகளும்— தட்பவெப்பநிலையும், அக் கண்டத்தின் வரலாற்றினைப் பல்வேறு வகையில் உருவாக்கியுள்ளன. கண்டத்தின் நில அமைப்பிலாகட்டும், தட்பவெப்பநிலையிலாகட்டும், ஓமர் (Homer) காலந் தொட்டு எப்பெரிய மாறுதலும் ஏற்படவில்லை.

## 3

கி.மு. 1000 அளவோடிருந்த ஐரோப்பிய வரலாற்றுத் தொடக்கத்தைப் புதைபொருள் ஆராய்ச்சியாளர்களும் Excavators), கட்டடக்கலை ஆய்வோரும் (Archaeologists), பல நூற்றுண்டுகளுக்கு முன்னர்க் கொண்டு சென்றுள்ளார்கள். ஷ்லீமன் (Schliemann) என்பார் புதைபொருள் ஆராய்ச்சியைக் கி.பி. 1873-ல் டிராய் (Troy) என்னும் பண்டை நகரில் தொடங்கி, பின்னர் மைசீனே (Mycenae), டிரின்சு (Tiryns) என்ற நகரங்களையும் அகழ்ந்து அரும் பொருள்களையும், அழகிய கட்டடங்களையும் வெளிப்படுத்தினர். அதே போன்று அறிஞர் இவான்சு (Dr. Evans) கி.பி. 1893-ல் கிரீட்டு (Crete)த் தீவின் ஆராய்ச்சியைத் தொடங்கி, தலைசிறந்த ஒரு நாகரிகத்தை உலகிற்கு உணர்த்தினர். இத்தகைய ஆராய்ச்சிகளால் ஐரோப்பிய வரலாற்றின் தொன்மை புலனாயிற்று.

ஐரோப்பியப் பண்பாடு சிறிதும் தயங்காமல் பல்வேறு நாகரிகங்களின் சிறந்த கூறுகளைத் தனக்குரியனவாக்கிக்கொண்டது. பண்டைக் காலத்தில் அப் பண்பாடு ஆசியா, ஆப்பிரிக்காக் கண்டங்களின் நாகரிக வாழ்விற்குப் பெரிதும் கடன்பட்டிருந்தது. இன்று ஐரோப்பிய வாழ்வியல் பரவாத இடமே உலகில் இல்லையெனக் கூறும் அளவிற்குச் சென்ற ஐந்து நூற்றாண்டுகளாய் உருவாகி உலக வாழ்வியலாய்த் திகழ்கிறது.

இலக்கியக் கலைத்துறைகளில் கிரேக்சர்களின் படைப்புகளே ஐரோப்பியர்களுக்கு முன் மாதிரிகள். ஐரோப்பிய மெய்ப்பொருள் (Philosophy), விஞ்ஞான அறிவிற்கும் அடிகோலியவர்கள் கிரேக்கர்கள். குடியாட்சி (Democracy) முறையும் அவர்களின் கொடையே யாகும். பல தெய்வ வணக்கத்தை மேற்கொண்டிருந்த மக்களுக்குத் தெய்வம் ஒன்றே என்ற கருத்தைத் தந்து, பின்னர்த் தோன்றிய யூத (Jewish) கிறித்துவச் சமயங்களுக்கும் வழிகோலியவர்கள் ஆடுமேய்த்துத் திரிந்த எபிரேயர்கள் (Hebrews) ஆவார்கள். செயற்படும் அறிவுத் திறனிலும், ஆட்சி வகைகளைத் திட்டமிட்டு அமைக்கும் ஆற்றலிலும் தலைசிறந்த உரோமானியர்கள் ஐரோப்பியச் சட்டத்திட்டத்திற்கு ஊற்றுவார்கள். உழவு, கட்டடம் கட்டும்முறை, நாட்டு ஆட்சிமுறை அமைப்பு, அளவை முறைகள், காலப் பாகுபாடுகள், கணிதக் கலை, வானநூல் யாவும் எகிப்தும், மெசொபொட்டேமியாவும், இந்தியாவும் அளித்த அருஞ்செல்வங்கள். இவ்வாறு பல்வேறு மக்கள் கொடுத்த கொடைகளின் கூட்டு விளைவே ஐரோப்பியப் பண்பாடாடும்.

இன்று ஐரோப்பியர்கள் உலகின் மூலை முடுக்குகளிலெல்லாம் குடியேறி, வாணிபஞ் செய்தும், ஆட்சிபுரிந்தும், தங்கள் மொழிகளையும் கலைகளையும் உலகிற்கு உதவி, மக்கள் வாழ்வைப் பல துறைகளில் உருவாக்கியும், தலைகீழாய் மாற்றியும் உள்ளார்கள். இயற்கையோடு போராடி வெற்றிபெற்று, பல இனங்களோடு போட்டியிட்டு ஆதிக்கம் பெற்று, விஞ்ஞானத் துறையில் வியக்குமளவு முன்னேறி, இன்றைய நாகரிக வாழ்விற்கு அடிகோலியதோடு, உலக அரங்கில் பெரும்பங்கு கொண்டு, 'ஐரோப்பியப் பண்பாடே உலகப் பண்பாடு, அவர்கள் ஆட்சிமுறையே உலகுக்கேற்ற ஆட்சிமுறை' எனக் கணிசமான அளவில் மக்கள் கருதுமாறு செய்துவிட்ட ஐரோப்பியர்களின் வரலாற்றினைக் கற்பது மிக இன்றியமையாததும், மிக்கப் பயனுடையதுமாகும்.

4

வரலாற்றின் தொடர்ச்சிக்குத் தோற்றமோ இறுதியோ இல்லை. ஆயினும், மூன்று காலங்களாய்ப் பிரித்துப் பாகுபாடு செய்து கொண்டு வரலாற்றைக் கற்பது வழக்கமாகிவிட்டது. அதில் தவறொன்றுமில்லை. எந்த ஒரு காலத்தின் தொடக்கத்தையும் முடிவையும் அறுதியிட்டுச் சுட்டிக்காட்ட முடியாது என்ற உணர்வோடு வரலாற்றினைப் பண்டைக்காலம், இடைக்காலம், இக்காலம், (Madern Period) எனப் பாகுபாடு செய்துகொண்டு கற்கலாம்.

வரலாற்றாசிரியர்களும் மாணவர்களும் தங்கள் வசதிக்காகச் செயற்கையாய்ச் சில காலவெல்லைகளை வகுத்துள்ளார்கள். ஒரு காலம் முடிந்து மற்றொன்று தொடங்குவதை அக்காலத்தில் வாழும் மக்கள் உணருவதில்லை. ஒரு நாளிலோ, ஒரு சில ஆண்டுகளிலோ காலவெல்லைக்கோடு அமைத்துக் கொள்ளுமாறு புரட்சிகரமான மாறுதல்கள் உலகில் ஏற்படுவதில்லை. சங்கிலித்தொடர் போன்ற பல நிகழ்ச்சிகளின் விளைவே காலமாற்றம் ஆகும். காலங்களுள் ஒன்றின் ஈறு மற்றொன்றின் தொடக்கமாகவும் அதன் மூலமாகவும் அமையக்கூடும். ஒவ்வொரு காலமும் அதன் முற்காலத்தின் விளைவே, ஒவ்வொரு காலத்திலும் சிறப்பாய் நடைபெறும் சில பல பெருநிகழ்ச்சிகளாலேயே அக் காலம் உருவாவதில்லை, பல்வேறு சிறு நிகழ்ச்சிகளும் தொடர்ந்து ஒரு காலத்தை உருவாக்குகின்றன.

ஐரோப்பிய வரலாற்றின் பண்டைக்காலம் ஏறத்தாழக் கி.பி. 350-ல் முடிந்து, அது முதல் தொடங்குகின்ற இடைக்காலம் கி.பி. 1500 வரை நீடிக்கிறது என்பதைப் பல வரலாற்றாசிரியர்கள் ஏற்றுக்கொண்டுள்ளனர்.

# தோற்றுவாய்

'நம் சட்டங்கள், இலக்கியம், கலை முதலியவற்றிற்குப் பிறப்பிடம் கிரீசு; நாம் யாவரும் கிரேக்கர்கள்' என்று ஆங்கிலக் கவி ஷெல்லி (Shelley) கூறிச் சென்றார். அக் கூற்றின் பொருள், ஐரோப்பியர்கள் கிரேக்கப் பண்பாட்டுப் பரம்பரையில் வந்தவர்கள் என்பதே. கிரேக்கர்களின் இலக்கியத்திலே, கலைகளிலே, அவர்களின் அறிவாராய்ச்சிகளிலே, மேனாட்டாரின் சமுதாய அமைப்பின் தோற்றத்தையும், அரசியல் உலகின் தொடக்கத்தையும் எண்ணங்களின் வளர்ச்சியையும் காணலாம். சென்ற நூற்றாண்டில் புதைபொருள் ஆராய்ச்சியாளர் தோன்றி, கண்டத்தின் பல பகுதிகளில் புதையுண்டு கிடந்த ஐரோப்பிய நாகரிகத்தை வெளிப்படுத்துவதற்கு முன்னர், முதல் கிரேக்கக் கவிஞர் ஓமர் என்பவரின் உன்னதப் பாடல்களே ஐரோப்பிய வரலாற்றுத் தொடக்க விளக்கமாயிருந்தன.

ஐரோப்பாவின் தென்கிழக்கில் ஆசியாக் கண்டத்தையொட்டி அமைந்திருக்கிற கிரேக்கத் தீவக் குறையிலேயே கண்டத்தின் வரலாறு தொடங்கிற்று ஐரோப்பிய வரலாறு பல நூற்றாண்டுக் காலம் கிரேக்கத் தீவக்குறை, அதற்கு மேற்கிலுள்ள இத்தாலியத் தீவக்குறை ஆகிய இரண்டின் வரலாறாகவே உள்ளது. இடைக் காலத்தின் இடைப்பகுதியிலேதான் ஐரோப்பாவின் நடுநாடுகள் வடபகுதிகள் வரலாற்றுச் சிறப்புப் பெற்றன.

ஐரோப்பாவின் தென் கிழக்குப் பகுதியில் சுடர்விடத் தொடங்கிய ஒளி, மத்திய தரைக் கடலை யடுத்த நாடுகளுக்குப் பரவி மேலை ஐரோப்பாவின் இருளைப் போக்கி உலகின் ஏனைய நாடுகளுக்கும் எட்டியது. இன்றைய மனித வாழ்வில் முற்போக்காய்க் கருதுபவைகளில் பல கிரேக்கர்களின் கொடையே யாகும். நாம் பெரிதும் போற்றும் மக்களாட்சிமுறை (Democracy)யும் அதைக் குறிக்குஞ் சொல்லும் கிரேக்கர்களின் அன்பளிப்பாகும். கிரேக்க எழுத்துகள் புத்துருவம் பெற்று ஆங்கில எழுத்துகளாயின. கலைச்சுவைக்கும் அழகுணர்ச்சிக்கும் கிரேக்கர்களுக்கு நாம் பெரிதும் கடன்பட்டுள்ளோம். உண்மை (Truth), உரிமை (Liberty), அழகு (Beauty) முதலியன இன்றைய உலகில் உயர்வாய்க் கருதப்படுவதற்கு அவர்களே பொறுப்பாளர்கள். விளையாட்டுகளில் கூட ஒலிம்பிக் (Olympic) என்ற சொல் அவர்களை என்றும் நினைவு கூறச் செய்துவிட்டது.

நில அமைப்பில் ஐரோப்பா, ஆசியாவுடனும், ஆப்பிரிக்காவுடனும் ஒட்டியிருப்பதால், பண்டைய ஆசிய, எகிப்து நாடுகளின் பண்பாடுகளுடன் ஐரோப்பிய நாகரிகம் பின்னிப் பிணைந்துள்ளது. ஐரோப்பிய நாகரிகத்திற்கு அடிப்படையாய் உள்ள கிரேக்க நாகரிகம், காலத்தால் முற்பட்ட பினிசிய (Phoenician), கிரீட்டானிய (Cretan), எகிப்திய, மெசொபொட்டேமிய மக்களின் நாகரிகங்களை ஏற்று அதனால் வளம் பெற்ற ஒன்றேயாகும். நாம் இன்று சில வாழ்க்கைக் கூறுகளில் எவ்வாறு கிரேக்கர்களாய் வாழ்கிறோமோ, அதே போன்று கிரேக்கர்கள் தொடக்கத்தில் கிரீட்டு மக்களின் பண்பாட்டை அடியொற்றி வாழ்ந்தார்கள் பாலஸ்தீன் கடற்கரையில் வாழ்ந்த கானான் மக்கள் (Canaanites), சிடான் (Sidon) டயர் (Tyre) நகரங்களில் வாழ்ந்த மக்கள் ஆகிய பினிசியர்களிடமிருந்தே நாகரிகக் கூறுகள் பலவற்றையும் சிறப்பாக எழுத்துகளையும் நாணய முறையையும் (coinage)—கிரேக்கர்கள் பெற்றனர்.

கிரேக்கர்களின் வாழ்வும் வரலாறும் அவர்கள் நாட்டின் மலைகளாலும் கடலாலும் உருவாகியவை. குன்றுகள் நாட்டைத் துண்டாடி மக்கள் போக்குவரவைத் தடுத்து நாடு முற்றிலும் ஓரரசு ஏற்படாதவாறு பல நகர—நாடு (City-state)களைத் தோற்றுவித்துள்ளன. அவை தனித்தனியே அரசியல் அமைப்புகளை வகுத்துக்கொண்டன. நாட்டையும் மக்களையும் மலைகள் பிரித்தன. ஆனால், கடல் அவர்களை ஒன்றுபடுத்தியது. கடல் நல்ல போக்கு வரவு சாதனமாயிருந்தது. கிரேக்க நாடு கிழை நாட்டுப் பேரரசுகளுள் ஒன்றின் பகுதியாகாமல் தப்பியதற்கு மலை கடல் அரணகளே காரணமாகும்.

கிரேக்க நாடுகளெல்லாம் நகரங்களை நடுநாயகமாய்க் கொண்டு விளங்கின. ஒவ்வொரு நகரத்திலுமுள்ள குடிமக்கள் எல்லோரும்—வயது வந்த ஆடவர்கள் யாவரும் ஓரிடத்தில் கூடி நாட்டு நடப்புகளைப் பற்றிப் பேசி முடிவெடுத்தனர். நகர நாடுகளில் சுபார்ட்டா (Sparta)வும், ஏதென்சும் (Athens) பல்வகையிலும் தலைசிறந்தவை. சுபார்ட்டா மக்கள் எத்தகைய துன்பங்களையும் பொறுக்கும் சகிப்புத் தன்மைக்கும், சிறந்த கட்டுப்பாட்டிற்கும் பெயர் பெற்றவர்கள். வழிவழியாய் நிலைகுலையாத ஆட்சி முறையையும், போர்த்துறையில் ஈடுஎடுப்புமில்லாத தலைமையையும் பெற்றிருந்த சுபார்ட்டாவைக் கிரேக்கர்கள் உச்சி மேல் வைத்துப் போற்றினார்கள்.

தொடக்கத்திலிருந்தே அதீனிய மக்கள் வாழ்க்கைக்குக் கடல் வழிகோலியது. பிரீயுசு (Peiraeus) துறைமுகம் அவர்களுக்குப்

பெரிதும் உதவியது. ஏதென்சில் அடிமைகள் ஏராளமாய் இருந்தார்கள். ஏதென்சு நகரம் அரசியல் அமைப்புகள், ஆட்சிமுறைகளின் சோதனைக் கூடமாய்த் திகழ்ந்தது. அதீனிய மக்களிடையில் நேரான மக்களாட்சி (Direct Democracy) வளர வழிகோலிய பெரியார்களுள் சோலன் (Solon), பெய்சிஸ்டிராட்டசு (Peisistratus), கிளெய்ஸ்தெனிசு (Cleisthenes), பெரிக்ளிசு (Pericles) முதன்மையானவர்கள். அதீனியப் பெருமகனுர் பெரிக்ளிசு முப்பதாண்டுகளுக்கு மேல் ஆற்றிய அரும்பணியால் மக்களாட்சி நன்கு வளர்ந்து முதிர்ச்சியுற்றது.

அதீனியர்களால் வளர்க்கப்பட்ட மக்களாட்சி இக்கால மக்களாட்சியினின்று பெரிதும் மாறுபட்டிருந்தது. அங்கிருந்த ஏராளமான அடிமைகளின் உரிமைகளைப் பற்றி அவர்களோ, மற்றவர்களோ கவலைப்படவில்லை. தாங்கள் சிறப்பாய் வாழ அடிமைகளை இன்றியமையாதவர்களாகக் கருதினுர்கள்.

இவ்வாறு கிரேக்க மக்கள் சிறப்பாய் வாழ்ந்த காலத்தில் கீழை நாட்டுப் பாரசீகப் பேரரசிற்கும் கிரேக்க நாடுகளுக்கும் போர் மூண்டன. கிரேக்கப் பாரசீகப் போர்கள் பாரசீகப் பேரரசர் கைரஸ் (Cyrus) காலத்தில் தொடங்கி மாசிடோனிய வீரப் பெருமகனுர் அலெக்சாண்டர் வெற்றியோடு முடிவுற்றது. கி. மு. 490-ல் மாரதான் (Marathon) போர்க்களத்தில் கிரேக்கர்களின் சுதந்தரம் காக்கப்பெற்றது; பாரசீகப் பெரும்படை அதீனியர்களிடம் தோல்வியுற்றது. அதீனிய வெற்றி ஐரோப்பிய நாகரிகத்தின் அறிவியல் அடிப்படையை வகுக்க அவர்களுக்கு உதவியது. பாரசீகப் படையெடுப்பச்சம் அகன்றதும் அழுக்காறு காரணமாய் கிரேக்கம் சிதறுண்டது. கிரேக்க நாட்டுத் தலைமைக்குச் சுபார்ட்டாவும், ஏதென்சும் போரிட்டன. ஏனைய கிரேக்க நகர நாடுகள் அவ்விரு நாடுகளுக்கும் பின்னுல் அணிவகுத்துத் துணை செய்தன. பெலொப்பனீசியன் (Peloponnesian) போர் என்ற உள்நாட்டுச் சண்டை மூண்டது. சிதைவுற்ற கிரேக்கம் முதலில் தீபன் (Theban) ஆதிக்கத்திலும், பிறகு மாசிடோனிய படையெடுப்பிலும் சிக்கிச் சுதந்தரம் இழந்தது. கிரேக்க நகர—நாடுகளும் மறைந்தன.

ஆயினும் கிரேக்கக் கருத்துகளும் கலைகளும் அழிந்து படாமல் மாசிடோனிய ஆதிக்கம் பரவிய திசைதோறும் கிரேக்க மொழியும் நாகரிக வாழ்வும் பரவின. ஏதென்சு நகரத்திற்குப் பின் அலெக்சாண்டிரியா நகரம் கிரேக்க அறிவுத்துறைக் கலைகளையெல்லாம் பெற்று, உலகில் பல்வேறு நாடுகளுக்கு வாரி வழங்கும்

திருப்பணியில் ஈடுபட்டது. சிரியா (Syria) நாட்டில் சென்று தங்கிய கிரேக்க அறிவும் கருத்தும் கிறித்துவச் சமயத்தைத் தோற்றுவித்த ஜுடேயா (Judea) நாட்டில் ஊடுருவின. கிழக்கு மத்திய தரைக்கடல் பகுதியில் பரவியிருந்த கிரேக்க நாகரிகம் கிறித்துவிற்கு முந்திய நூற்றாண்டில் வளர்ந்துவந்த உரோமானியக் குடியரசுக்குத் தேவையான கலை, இலக்கியம், சமயம், ஆட்சி பற்றிய கருத்துகளையும் பொருளாதார அடிப்படையையும் அளித்துதவ ஆயத்தமாயிருந்தது

பெரிக்ளீசின் ஆதிக்க நாட்களில் வாழ்ந்த சாக்கிரட்டிசு மனிதனைச் சிந்திக்கச் செய்தார்; அவன் அறிந்திருந்தது மிகக் குறைவுடையதென்று உணர்த்தினார். மற்றும் அவருடைய அறம் மிக்க வாதங்களும், வினாக்களும் மக்கள் உள்ளத்தைத் தூண்டிக் கண்ணீர் வடிக்கவும் செய்தன. இவ்வாறு மக்களிடையில் அறிவைப் பரப்பும் பணியில் அல்லும் பகலும் சாக்கிரட்டிசு ஈடுபட்டிருந்தார். அதீனிய இளைஞர்களைத் தீயவழிகளில் இழுத்துச் செல்கின்றார் என்ற குற்றத்தை அவர்மீது சுமத்தி அவரை நஞ்சூட்டிக் கொன்றனர். அதீனியரின் இச்செய்கை வரலாறு காணாத தீராப்பழிக்கு அவர்களை ஆளாக்கியது.

சாக்கிரட்டிசின் மெய்யறிவு விளக்கத்தை அவர்தம் சிறந்த மாணவரும் பெருஞ்சிந்தனையாளருமான பிளேட்டோவின் எழுத்துகளில் காண்கிறோம். ஐரோப்பியப் பண்பாடும், இக்கால அரசியல் பொருளாதாரக் கருத்தும் பிளேட்டோவிற்குப் பெரிதும் கடன்பட்டிருக்கின்றன. பல்வேறு அறிவுத் துறைகளையும் தமதாக்கிக்கொண்ட அரிஸ்டாட்டில் பிளேட்டோவின் மாணவர்; அலெக்சாண்டரின் ஆசிரியர். அவரால் தெளிவும் விளக்கமும் பெறாத அரசியல்துறை ஏதுமில்லை. இடைக்காலத்திலேதான் அவர் பெருமையை மக்கள் அறிந்து பாராட்டத் தொடங்கினார்கள். பிறப்பினால் மாசிடோனியரான அலெக்சாண்டரைப் பண்பினால் கிரேக்கராக்கி, கிரேக்கப் பண்பாட்டுத் தூதராக்கிய பெருமை அரிஸ்டாட்டிலையே சாரும். ஐரோப்பியப் பண்பாட்டிற்கு அறிவாராய்ச்சி வகையில் அடிகோலியவர்களில் அவருக்கு மிக்காரில்லை.

ஏதென்சு நகரம் எவ்வாறு கிரேக்க உலகிற்கு அறிவுத்துறை ஆசிரியனாகவும், பண்பாட்டுத் திலகமாகவும் திகழ்ந்ததோ, அவ்வாறே கிரேக்க நாடு ஐரோப்பாவின் பேராசிரியனாய் விளங்கிற்று. முடிவாய் மானிடச் சமுதாயத்திற்கு அவர்களின் சிறந்த அன்பளிப்பு யாதென்று கிரேக்கர்களைக் கேட்போமானால்,'நாமார்க்கும்

குடியல்லோம்' என்ற உரிமைக் குரலேதான் அவர்களிடமிருந்து நமக்கு விடையாகக் கிடைக்கும். 'எவரும் எவருக்கும் அடிமையல்லர், எல்லோரும் சட்டத்தின் ஆணைக்குக் கட்டுப்பட்டு வாழ்பவரே' என்ற நிலையே கிரேக்கர்கள் விரும்பிப் பெற்றது.

கி. மு. 31-ல் எகிப்திய எழிலரசி கிளியோபாட்ரா உரோமானிய வீரர் அகஸ்டசிடம் தோற்றார். அத் தோல்வியோடு கிரேக்கப் பண்பாடு முற்றுப் பெற்றது எனக் கருதுவாரும் உண்டு. அரசியலாதிக்கத் துறையில் உரோமானியர்களுக்கு அடிமைப் பட்ட கிரேக்கம், பண்பாட்டுத்துறையில், கருத்துலகில் உரோமானியர்களைப் பின்னர் அடிமைப் படுத்திக் கொண்டது.

## 2

இனவகையிலும் மொழியிலும் கிரேக்கர்களுக்கு நெருக்கமான தொடர்புடையவர்களே உரோமானியர்கள். அவர்களது பண்பாடு, சமயம், ஆட்சிமுறை யாவும் ஒரே மூலத்தில் முளைத்தவை.

அவர்கள் வாழ்ந்த இத்தாலியத் தீவக்குறை கிரேக்கத் தீவக்குறையைப் போன்று நான்கு மடங்கு பெரியது; ஆனல் அவ்வளவு மலைப்பாங்கானது அன்று. இத்தாலியின் நடுவில் தெற்கு வடக்காய் முதுகெலும்பைப் போல் அப்பினைன் மலைத்தொடர்கள் அமைந்துள்ளன. அவை மேலைக்கரையைவிட கீழ்க்கரையை நெருங்கி நீண்டிருக்கின்றன. ஆதலால், போ (Po) ஆற்றைத் தவிர மற்றப் பெரிய ஆறுகள் மேலைக் கடலை நோக்கி ஓடுகின்றன. அத்திசையிலேயே முக்கியமான சமவெளிகள், துறைமுகங்கள், நகரங்கள் எல்லாம் காணப்படுகின்றன. இத்தாலிய ஆறுகளில் பெரியதான டைபர் (Tiber) ஆறு கடலில் கலக்கிற இடத்திலிருந்து பன்னிரண்டு கல் தொலைவில் உரோம் நகரம் உள்ளது. டைபர் ஆற்றின் கரைகளையொட்டிக் கோட்டை அரண்களாய்ப் பயன்பட்ட பல குன்றுகள் இருந்தன. சுற்றிலும் உள்ள லத்தீன் (Latin) சமவெளி மக்களின், வாணிப வளர்ச்சிக்கேற்ற துறைமுகமாயும், நாட்டில் தோன்றி வளரவிருந்த பேரரசிற்குத் தகுந்த தலைநகரமாயும் உரோம் நகரம் அமைந்திருந்தது.

இத்தாலியில் குடியேறி வாழ்ந்த மக்கள் பல்வேறு இனங்களையும், அவற்றின் உட்பிரிவுகளையும் சேர்ந்தவர்கள். போ ஆற்றின் பள்ளத்தாக்கில் கால் (Gaul) மக்களும். அப்பினைன் மலைத் தொடர்களுக்கு இருபுறத்திலும், வடக்கில் சபைன்கள் (Sabines) தெற்கில் சாம்னைட்டுகள் (Samnites) என்ற ஓரின் மக்களும், இத்தாலியில் வாழ்ந்த சில முக்கிய

இனங்களாவார்கள். கிரேக்க நகர-நாடுகளைப் போலவே உரோம் பட்டணமும் நகர-நாடாகவே தோன்றிச் சிறப் படைந்தது. பாலட்டைன் (Palatine) குன்றிலும் அதைச்சுற்றிலு முள்ள குன்றிலும் இருந்த ஏழு குடியேற்றங்கள் ஒன்ருய் இணைந்து கி.மு. 753-ல் உரோம் நகரம் நிறுவப்பட்டதாக மரபு வழக்கு ஒன்றுள்ளது. மக்கள் அவை, பிரபுக்கள் சபையின் துணையோடு ஆட்சி செய்த முடியாட்சியை அங்கு வரலாற்றுத் தொடக்கத்தில் காண்கிருேம். ஏழு அரசர்கள் ஆண்ட முடியாட்சி யின் கதையில் இறுதியாய் ஆண்ட செருக்கு மிக்க டார்குவின் (Tarquin the Proud) என்பார் விரட்டப்பட்டுக் கி.மு. 510 அளவில் குடியரசு நிறுவப்பட்டது. டார்குவின் என்ற மன்னரின் கொடிய ஆட்சியை உரோமானியர்கள் மிகுதியாய் வெறுத்ததால், பல நூற்ருண்டுகள் கழித்தும் முடியாட்சியை அவர்கள் விரும்பவில்லை. ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பின் இத்தாலியில் ஒருவனுடைய ஆதிக்கம் இன்றியமையாதது என்ற நிலை ஏற்பட்ட காலத்திலும், அரசன் என்ற பெயரையே ஒதுக்கிவிட்டனர்.

முடியாட்சி முடிந்த பின்னர் உரோம் நகர ஆதிக்கம் பிரபுக்கள் கைக்குச் சென்றது. நகர மக்கள் பொதுவாய் இரு பிரிவினராயிருந்தனர். பழமையான உயர்குடி மக்கள் பாட்ரி ஷன்கள் (Patricians) என்ற பெயருடன் நாட்டில் ஆதிக்கஞ் செலுத்திஞர்கள். மற்றப் பிரிவினர் பிளெபியன்கள் (Plebains) என்று வழங்கப்பட்டனர். இவர்கள், செல்வராயினும், வறியவ ராயினும், ஆதிக்கமோ, உரிமையோ பெருதவர்கள். குல அவையில் (Comitia Tributa) வாக்குரிமை பெற்றிருந்த. போதிலும், உரோமானியப் படையில் சேர்ந்து போரிட்ட போதிலும், பதவியிலிருந்தும் அதிகாரத்திலிருந்தும் விலக்கப் பட்டிருந்ததால், பிளெபியன்கள் பாட்ரிஷன் மக்களுக்கு அடங்கி வாழ்ந்தார்கள். இவ்விரு சாரார்களுக்குமிடையே நடைபெற்ற உரிமைப் போராட்டமே உரோமாபுரியின் இரு நூற்ருண்டு களின் உள் நாட்டு வரலாருகும். இப் போராட்டப் போக்கு மக்களின் அரசியல் அறிவுத் திறத்தை நன்கு புலப்படுத்துகிறது. இந்த நீண்ட போராட்டத்தைக் கத்தியின்றி, இரத்தமின்றி நல்ல முறையில் முடித்த பெருமை அவர்களுக்கே உரியது. கசப்போ, காழ்ப்போ இன்றி உரிமையில்லாதவர்கள் உரிமை பெற்று இரு பிரிவினரும் ஒன்றுபட்டனர். இந்த உரிமை போராட்டத்தில் வெற்றி கண்டது போலவே, நாடு முழுவதும் வென்று, பல்வேறு மக்களையும் அடக்கி, உரோம் அரியணையில் அமர்ந்தது. வென்ற பகுதிகளையெல்லாம் நிரந்தரமாய் ஒன்றுபடுத்தி ஐரோப்பிய அரசியல் அமைப்பிற்கு அடிகோலிற்று. இந்த உரோ

மானிய வெற்றியின் இரகசியம், கட்டுப்பாடு, பாட்டைகள் (Roads), வீரர்களின் குடியேற்றங்கள் (Colonies) என்ற மூன்று சொற்களில் அடங்கிக் கிடந்தது. தோற்ற மக்கள் மீண்டும் கலவரஞ் செய்து விடுபடவேண்டும் என்ற எண்ணமே தலை காட்டாதவாறு அன்போடும் பண்போடும் நடத்தப்பட்டார்கள். தோல்வியைச் சுவைத்த நாடுகளும் இனங்களும் ஆட்சிக்குட் பட்டவைகளாய்க் (Subject races) கருதப்படாமல், கூட்டாளி களாய் (Allies) ஏற்றுக் கொள்ளப்பட்டன. அவற்றுக்குள் உரிமை, அரசியல் நிலை பற்றிய வேற்றுமைகளைப் புகுத்தி, பிரித் தாளும் சூழ்ச்சியைக் (Divide et impera) கையாண்டு வெற்றி கண்டனர். நம்பிக்கையோடு சேர்ந்த தாராளக் குணமே உரோ மானியர்களின் தலைசிறந்த அரசியல் பண்பாகி அவர்களுக்கு ஏற்பட்ட நெருக்கடியான சோதனைக் காலத்தில் பேராதரவைத் தேடித் தந்தது.

கி.மு. 264-ஆம் ஆண்டு முதல் கி.மு. 201-ஆம் ஆண்டு வரையில் உரோம வரலாற்றில் குறிப்பிடத் தக்கவை உரோமானியருக்கும் கார்த்தேஜ் (Carthage) மக்களுக்கும் நடைபெற்ற போர்களே. கி. மு. 146-ல் கார்த்தேஜை அழித்த பிறகே உரோமானியத் தலை வர்கள் அமைதி பெற்றுர்கள். கார்த்தேஜின் தோல்வியின் பயனாக மத்திய தரைக்கடற் பகுதிகளில் உரோமானிய ஆதிக்கம் ஏற் பட்டது. முதல் பியூனிக்குப் (Punic) போரில் உரோமானியர் முதல் முதலாகக் கடற்படையைத் தயாரித்துக் கடலாதிக்கம் பெற்றனர். சிசிலித் தீவு. உரோம் பேரரசின் பகுதியாயிற்று. இரண்டாவது பியூனிக்குச் சண்டையில் ஐரோப்பா காணுத மாவீரர் ஹானிபல் (Hannibal) பிரனீஸ், ஆல்ப்ஸ் (Alps) என்ற மலைகளைக் கடந்து இத்தாலி நாட்டின்மேல் படையெடுத்தார். அவர் அந்நாட்டில் காட்டுத் தீயெனத் திரிந்து பதினைந்தாண்டுகள் போரிட்டு வெற்றி நடை நடந்தார். ஒரு களத்திலேனும் உரோ மானியர் வெற்றி பெறவில்லை. ஆயினும், உரோம் பகைவருக்கு அடி பணியவில்லை. ஹானிபல் போர்க் கலையில் காட்டிய முதன்மையை உரோமானியர்கள் ஆட்சிக் கலையில் தங்களுக்கிருந்த முதன்மையைக் கொண்டு வென்று வாகை சூடினுர்கள்.

உரோமப் பேரரசின் வளர்ச்சி ஒரு திட்டமிடாத நிகழ்ச்சி. அது தற்செயலாய் ஏற்பட்ட ஒன்று. பேரவாவினுல் உந்தப்பட்டு உரோமானியர் நாடுகளைக் கைப்பற்றவில்லை. சந்தர்ப்பச் சூழ் நிலையால் உரோமானிய ஆதிக்கத்தின்கீழ்ப் புதிய நாடுகள் தொடர்ந்து வந்து சேர்ந்தன. தாக்கப்பட்ட உரோமானியர்கள் தற்காப்புக் காரணமாகப் போரிட்டனர்; ஒரு புதிய நாட்டை வென்ற பின் ஆட்சி செய்ய அங்கே தங்கினுர்கள். மாசிடோனியா,

கிரீஸ், ஆசியா, சிரியா, பாலஸ்தீனம் (Palestine) யாவும் ஒன்றன் பின் ஒன்ருய் உரோமானிய மாகாணங்களாயின. இறுதியாக, கால் நாட்டை ஜூலியஸ் சீசர் வென்ருர். கார்த்தேஜ் வீழ்ச்சிக்குப் பிறகு ஒரு நூற்ருண்டிற்குள் மத்தியதரைக் கடலை ஒட்டிய நாடுகள் எல்லாம் உரோமானிய ஆதிக்கத்திற்குட்பட்டன. அடுத்த ஆயிரமாண்டுகளுக்குப் பின் முஸ்லீம் ஆதிக்கம் ஏற்படும் வரையில், மத்தியதரைக்கடல் உரோமானிய ஏரியாய், ஐரோப்பியக் கடலாய் இருந்தது. உரோமானிய வீரர்கள் ஏட்ரியாட்டிக்குக் (Adriatic) கடலின் கிழக்கே வரத் தொடங்கிய நாள் முதல் கிரேக்கக் கலைக்கும் கருத்திற்கும் அடிமைப் பட்டார்கள். ஐரோப்பாவின் தென்பகுதி, ஆப்பிரிக்காவின் வடபகுதி, ஆசியாவின் மேற்குப் பகுதி ஆகிய மூன்றையும் ஒரு பேரரசாக்கினர். பிறகு அங்கு நிலவிய ஏஜியன் (Aegean), நைல் (Nile), டைக்ரிஸ் (Tigris) என்ற மூன்று வட்டாரங்களின் பண்பாடு களும் கலந்து கலவைப் பண்பாடொன்று உருவாகியது. அதனை இத்தாலியர்களின் பயனுடைய நிறுவனங்களோடு இணைத்துப் பிற்காலத்தில் ஐரோப்பிய நாடுகளுக்கு அளித்துதவியதுதான் உரோமானியரின் அரிய சாதனையும் தொண்டுமாகும்.

உரோமானிய பேரரசு வளர வளர, உரோமக் குடியரசு அமைப்புத் தேய்ந்து ஆட்சிப் பொறுப்பிற்கேற்றவாறு மாற்ற மடைய வேண்டியதாயிற்று. குடியரசின் அரசியல் அமைப்பு இன்னதென்பதையும் அது பேரரசின் பொறுப்புகளை ஏற்று எவ்வாறு மாற்றமடைந்தது என்பதையும் சுருக்கமாகக் காண் போம்.

குடியரசாகையால் அரசருக்குப் பதிலாக இரு கான்சல்கள் (Consul-ஆட்சித் தலைவர்கள்) படைப் பொறுப்பு முழுவதையும் ஏற்றுக் குடியரசின் தலைமை அதிகாரிகளாய்ப் பணியாற்றினர்கள். இருவரும் ஒருவருக்கொருவர் தடையாய் இருந்ததால், தம் விருப் பம் போல அவர்களால் ஒன்றும் செய்ய இயலாது. மேலும், அவர் கள் ஆட்சிக் காலமும் ஓராண்டாகவேயிருந்தது. குடியரசு அமைப் பில் செனட்டு (Senate) என்ற மேலோர் அவைதான் முதலிடம் பெற்றிருந்தது. நாட்டுக் காரியங்களில் பயிற்சியும் பழக்கமும் உடையவர்களே மேலோர் அவையில் ஆயுள் உறுப்பினர்களா யிருந்தார்கள். அதிகாரிகளுக்கு அவ்வப்போது அறிவுரை தருவதற் கென ஏற்பட்ட மேலோர் அவை, நாளாவட்டத்தில் ஒரு சிறந்த ஆட்சி நிறுவனம் ஆயிற்று. படை நிருவாகம், அயல் நாட்டுறவு, அரசாங்கச் செலவு, மாகாண ஆட்சி முதலியன மேலோர் அவையின் கண்காணிப்பில் வந்தன. பெரிக்ளிஸ் மறைந்தபின் ஏதென்சிற்கு ஏற்பட்ட நிலை உரோமக் குடியரசிற்கு ஏற்படாது

வாறு காத்தது அந்த அவையே. இரண்டாவது பியூனிக்குச் சண்டை நடைபெற்றபோது ஏற்பட்ட நெருக்கடியான காலத்தில் அதனைச் சமாளிக்கும் ஆற்றலும், ஹானிபலை எதிர்த்துப் போராடு முணர்ச்சியும் செனட்டுத் தலைமையின்கீழேதான் திரண்டுருவாயின. செனட்டு அவை சீர் குலைந்ததும் குடியரசு சீரழிந்ததென்றால், அந்த அவையின் முக்கியத்தை ஒருவாறு அறியலாம். குடியரசு அமைப்பில் பணியாற்றிய இரண்டு குடிமக்கள் அவைகள் குறிப்பிடத்தக்கன. அவைகளுக்கு ஏராளமான அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்தன. கமிஷியா செஞ்சூரியேட்டா (Comitia Centuriata) கான்சல்களைத் தேர்ந் தெடுத்தது; நாட்டுக்கு வேண்டிய சட்டங்களை இயற்றியது: அன்றியும், கான்சல்களின் முடிவுகளைத் திரும்ப ஆராய்ந்து முடிவு காணும் நீதி மன்றமாய் இறங்கியது. கமிஷியா டிரிபியூட்டா (Comitia Tributa) என்ற பிளெபியன் அவை, பிளெபிய மக்களின் உரிமைக் காவலர்களான டிரைபியூன் (Tribune) என்ற அதிகாரி களைத் தேர்ந்தெடுத்தது; எல்லா மக்களுக்கும் சட்டம் வகுக்கும் உரிமையையும் பெற்றிருந்தது; நீதி மன்றமாயும் பணியாற்றியது

குடியரசில் செனட்டு அவையின் ஆதிக்கமே ஓங்கியிருந்தது. இதனை எதிர்த்த குடிமக்கள் அவை, சிறிது காலம் ஆதிக்கத்தைக் கைப்பற்றிக்கொண்டது. அதன் பின்னரே செயற்குழு ஆதிக்கம் பெற்றுப் பேரரசு ஏற்பட்டது. குடியரசு அமைப்புப் பேரரசாய் வளர்வதற்கு ஏறத்தாழ ஐந்நூறுண்டுகள் சென்றன.

உரோம் நகரில் வீற்றிருந்த செனட்டு அவையோ, மக்கள் அவையோ, மூன்று கண்டங்களிலும் பரந்து கிடந்த பேரரசினை ஆளும் தகுதியும் திறமையும் பெற்றிருக்கவில்லை. மாகாணங்களில் பெயரும் புகழும் பெற்ற மாவீரர்களான மாரியஸ் (Marius), சுல்லா (Sulla), பாம்பே (Pompey), ஜூலியஸ் சீசர் (Julius Caesar) முதலிய யாவருமே, உரோம் நகருக்குத் திரும்பியதும், தலைமைப் பதவியைப் பெற்று ஆதிக்கத்தைக் கைப்பற்ற முயன்று தோல்வியே கண்டனர். அரசராகிவிடுவாரோ என்ற அச்சத் தினாலேயே, சீசர் செனட்டு உறுப்பினர் சிலரால் கொல்லப்பட் டார். சீசரின் உறவினரான அகஸ்டஸ் சீசர் (Augustus Caesar) மார்க்கு ஆண்டனி (Mark Antony)யின் துணையுடன், ஜூலியஸ் சீசரைக் கொன்றவர்களைத் தோற்கடித்து, அவரும் ஆண்டனியும் உரோமப் பேரரசினைப் பங்கிட்டுக்கொண்டனர். சில ஆண்டுகள் கழித்து. கி. மு 31-ல் ஆக்ஷியம் (Actium) என்ற இடத்திற்கருகில் நடந்த கடற்போரில் எகிப்திய அரசி கிளியோபாட்ரா உதவியுடன் போரிட்ட மார்க்கு ஆண்டனியைப் புறமுதுகிட்டு ஓடச்

செய்த அகஸ்டஸ், உரோமானிய உலகிற்குத் தலைவரானார். உரோமானியர்கள் வெறுத்த 'அரச'ப் பட்டத்தை அவர் தாங்க வில்லை. ஆயினும், நாட்டின் முதல்வர் என்று பொருள்படும் பிரின்செப்ஸ் (Princeps) என்ற சொல்லால் அவர் வழங்கப் பட்டார். அகஸ்டஸின் ஆதிக்கம், குடியரசுப் போர்வையில் நன்கு மறைக்கப்பட்டு, நாற்பத்து மூன்று ஆண்டுகள் நடைபெற்றது. அவர் கீழை நாட்டுச் சர்வாதிகாரி போல நடந்துகொள்ளாது, செனட்டுப் பெருமகனார் போல நடித்தார்; தம் சாம்ராச்சியத் திற்குப் போரின் உதவியால் இயற்கையான எல்லைகளை அமைத்துக் கொண்டார்: அதன் பின்னர் அவர் பேரரசின் பரப்பை இனி விரிவு செய்ய வேண்டாம் என்ற தம் விருப்பத்தைப் பின் வந்த மன்னர்களுக்கு அறிவுரையாகக் கொடுக்கத் தவற வில்லை. அவர் காலத்து உரோம சாம்ராச்சியம் டான்யூபு, ரைன் ஆறுகளை வடவெல்லைகளாகவும் சகாரா (Sahara) பாலைவனத் தைத் தென்னெல்லையாகவும் பெற்று, மேற்கில் அட்லாண்டிக்குக் கடலிலிருந்து கிழக்கில் உள்ள கருங்கடல், யூப்ரட்டீஸ் (Euphrates) யாறு, அரேபியாப் பாலைவனம் வரையிற் பரந்து கிடந்தது.

அகஸ்டஸ் ஆதிக்கத்தில் இருந்த நாடுகள் யாவும் மிக அமைதியான வாழ்வைப் பெற்றன. அந்த அமைதி முன்னேற்றத் திற்கும் நாகரிக வளர்ச்சிக்கும் வழி வகுத்தது. அகஸ்டஸ் ஆட்சித் தொடக்கத்தில் செங்கற் கட்டடங்களால் நிறைந்திருந்த உரோம், ஆட்சி முடிவில் சலவைக்கல் கட்டடங்கள் நிறைந்த நகரமாய்க் காட்சியளித்ததாம். இலக்கியத்துறையில் அகஸ்டஸ் காலம் ஒரு பொற்காலம் என்பார்கள். வர்ஜில் (Virgil), ஹோரஸ் (Horace), ஓவிடு ((Ovid), லிவி (Livy), முதலியவர்கள் அவர் காலத்துச் சிறந்த கவிஞரும் எழுத்தாளருமாவர். மேலும், அகஸ்டஸ் ஆட்சியில் பெத்லெகேம் (Bethlehem) என்ற சிற்றூரில் இயேசு கிறித்து (Jesus Christ) பிறந்து வளர்ந்து வந்தார்.

ஐரோப்பிய அரசியல் முன்னேற்றத்தில், வாழ்வியல் வளர்ச்சியில், உரோமப் பேரரசு நிறுவனம் நடுநாயகமாய் விளங்கிற்று. முந்திய ஐரோப்பிய வரலாறெல்லாம் உரோமப் பேரரசின் வளர்ச்சியுடன் கலந்தது. பிந்திய வரலாறு அந்த வளர்ச்சியிலிருந்து மேற்கொண்டு வளர்ந்தது. ஐரோப்பிய வரலாற்றினைக் கிரேக்க வரலாறு, உரோமானிய வரலாறு என்று வேறுபடுத்திக் காண்பது எளிதன்று. ஏனெனில், கிரேக்க வரலாற்றுத் தொடர்ச்சியே உரோமானிய வரலாறாகும். உதாரணத்திற்குக் கிரேக்க மொழி பேசிய பகுதியே உரோமப் பேரரசில் பெரும் பங்கு கொண்டது. சிறந்த உரோம இலக்கியம்

கிரேக்க மொழியிலே வடிக்கப்பட்டது. கிரேக்க நகரங்களைப் போன்ற நகர-நாடுகளின் கூட்டரசே உரோம சாம்ராச்சியமாயிற்று. உரோமானியர் கண்ட பேரரசில், தனித்தனியே வாழ்ந்த ஐரோப்பிய வட்டாரங்கள், (உரோம் சாம்ராச்சியத்தில்) இணைந்து, அதன் பின்னர்ப் பிரிந்து, தனி நாடுகளாய்த் தோன்றியுள்ளன. ஆதலால், உரோமானியர்களை மனத்திற்கொண்டே ஐரோப்பிய வரலாறு பல நூற்றுண்டுகளுக்குத் தீட்டப்பட வேண்டும்.

பேரரசு நிறுவப்பட்டபின், மாகாணங்களில் காணப்பட்ட பல ஆட்சிக் குறைகள் நீங்கின. இரு நூற்றுண்டுகளுக்கு மேலாக கி. மு. 31 முதல் கி. பி. 180 வரையிலும், சாம்ராச்சியமெங்கும் கலவரம், போர் ஏதுமின்றி அமைதி நிலவியது. மாகாணங்களில் வாழ்ந்த மக்கள் உரோமானிய மொழி, சட்டம், கருத்து, நாகரிகம் எல்லாவற்றையும் பெற்று, தங்கள் வாழ்வை வளமாக்கிக் கொண்டு, நல்லதொரு மாற்றமும் சிறப்பும் அடைந்தார்கள். உரோமப் பேரரசின் ஆட்சி உலக ஆட்சியாகிவிட்ட காரணத்தினுல், உலகப் பொதுமைச் சமயம் ஒன்று தேவைப்பட்டது. ஆகவே, உரோமப் பேரரசின் வரலாற்றோடு கிறித்துவச் சமய வளர்ச்சியும் பின்னிக் கிடக்கிறது.

அகஸ்டஸைத் தொடர்ந்து ஆதிக்கஞ் செலுத்திய உரோமப் பேரரசர்களுட் பலர், சிறந்த முறையில் ஆட்சி செய்யவில்லை டைபீரியஸ் (Tiberius) ஆட்சி இரக்கமற்றதாயிருந்தது. கலிகூலா (Caligu'a)விற்குச் சில ஆண்டுகளுக்குப் பின் பைத்தியம் பிடித்தது. கிளாடியஸ் (Claudius) நல்ல புமமை உள்ளவரெனினும், அவருடைய இல்லத்தில் அவர் கீழ் மக்களின் கைப்பாவையாயிருந்தார். ஆயினும், அவர் ஆங்கிலத் தீவுகளுக்குப் படையை அனுப்பி, அந்த நாட்டின் தென்பகுதியைப் பேரரசின் ஆதிக்கத்திற்குட்படுத்தினுர். நீரோ (Nero) இரக்கமற்றவர்; கொடியவர்; எந்தப் பேரரசராலும் முடியாத அளவிற்குத் தம் பதவிக்கு இழிவைத் தேடிக்கொண்டார். படைப் புரட்சியின் மூலம் அவர் ஆட்சியிலிருந்து அகற்றப்பட்டார். கி. பி. 96 முதல் 130 வரை நடைபெற்ற அரசாட்சிதான் பேரரசு வரலாற்றிலேயே சிறந்த காலமாகும். அந்தக் காலத்தில் சிறந்த மன்னர் ஐவர், ஒருவர்பின் ஒருவராய் அரியணையேறினர். டிராஜான் (Trajan), அந்த நாளில் டேசியா (Dacia) என்றும் இந்த நாளில் ருமேனியா (Rumania) என்றும் குறிப்பிடப்படுகிற மாகாணத்தை வென்றவர். ஹேடிரியன் (Hadrian), பிரிட்டனைப் பாதுகாக்க வேண்டியும், பகைவர்கள் தாக்காமல் இருக்கும்

பொருட்டும் அந்நாட்டினைச் சுற்றி ஒரு சுவர் எழுப்பினர்; அன்றியும், சாம்ராச்சியத்தைத் திறம்பட ஆள்வதற்கு ஓரதிகார வர்க்கத்தையும் உருவாக்கினர். அன்டோனைன்ஸ் (Antonines) என்று புகழ் பெற்ற ஐவரில் மிகச் சிறந்தவர், மார்க்கஸ் ஆரிலீயஸ் (Marcus Aurelius) ஆவார். வெள்ளம், பஞ்சம், கொள்ளை நோய், கொடிய அயல் நாட்டார் தாக்குதல்கள் இவைகளுக்கிடையில் சமுதாய அமைப்பைக் காத்த பெருமை அவருக்குரியது. பல நற்செயல்கள் புரிந்த அப்பெரியார், கிறித்துவர்களைத் துன்புறுத்திச் சமயத் துறையிலும் தம் குறுகிய மனப்பான்மையைக் காட்டிக்கொண்டார். அவர் ஒரு ஸ்டாயிக்கு (Stoic) மெய்ப்பொருளறிஞர். 'தொடர் சிந்தனைகள்' (Meditations) என்ற நூல் அவ்வப்போது அவரால் எழுதப் பெற்ற குறிப்புகளைக் கொண்டதாகும். ஸ்டாயிக்குக் கருத்து அவரால் ஓர் உன்னத சமயக் கோட்பாடாயிற்று. ஆரிலீயஸ் ஒரு கடமை வீரராய்த் திகழ்ந்தார்.

அன்டோனைன்ஸ் காலத்தில் மனித இனம் வளமிக்க இன்ப வாழ்வு பெற்றுச் சிறந்திருந்தது என கிப்பன் (Gibbon) என்ற வரலாற்றாசிரியர் எழுதுகிறார். அக்காலத்தை 'இலையுதிர் காலக் கோடை காலம்' (Autumn Summer) என்றும், அதற்குப் பிந்திய காலத்தைக் கடுங்குளிர் காலமென்றும் கூறுவர். மார்க்கஸ் ஆரிலீயஸ் மறைந்த ஆண்டாகிய கி. பி. 180 முதல் உரோமப் பேரரசில் நலிவும் வீழ்ச்சியும் தொடங்கி கி. பி. 476-ல் அந்த சாம்ராச்சியம் அழிந்துபட்டது. அடிக்கடி மாறிக்கொண்டிருந்த அரசர்கள் உள் நாட்டுக் கலவரம்-படையணிகளின் கைப்பாவை யாகிவிட்ட பேரரசர்கள்-சாம்ராச்சியச் சிதைவு ஆகிய இவையே உரோமப் பேரரசின் இடைக்கால வரலாற்றின் சுருக்கமாகும். இடைப்பட்ட முந்நூறு ஆண்டுகளில் (கி. பி. 180-476) அறுபது பேரரசர்களுக்கு மேல் அரசர் பட்டியலில் இடம் பெற்றுள்ளனர். அவர்களுட்பலர் மாகாணவாசிகள், படைப்பலத்துடன் பட்டம் பெற்றவர்கள். போட்டியிட்ட படைத் தலைவர்களின் போர்க் களமாய் அரை நூற்றாண்டிற்கு மேல் உரோமப் பேரரசு விளங்கிற்று. அவர்கள் தாங்கள் வீரர்களுக்குதவ, கொள்ளைக்காரர் களாய் மாறினர்கள். சராசரி ஒன்றே முக்கால் ஆண்டிற்கு ஓர் அரசர் என்றாற்போல் ஐம்பத்து மூன்றாண்டுகளில் (217-270 கி. பி.) முப்பது மன்னர்கள் ஆட்சிப்பீடமேறினர்கள். அவர்களுட்பலர் அயல் நாட்டவர். முப்பது பேரரசர்களுள் ஒருவரே இயற்கையாய் இயற்கையெய்தினர்; ஏனையோரெல்லாம் கொலை செய்யப்பட்ட னர். இத்தகைய உள் நாட்டுப் போர்கள், கலவரங்களின் விளை வாய்ப் படைத்துணை கொண்ட அம்மணமான வல்லாட்சியேற்

பட்டது. உரோமப் பேரரசு வரலாற்றில் கி. பி. மூன்றும் நூற்றுண்டு, குருதி கலந்த கொடிய செயல்கள் நிறைந்த காலமாகும். இந்த நூற்றுண்டின் இடைப்பகுதியில் கொடிய அயல் நாட்டார் உரோமப் பேரரசின் எல்லைப்புறங்களைக் கடந்து வந்து, எல்லை மாகாணங்களில் தொல்லை தரத் தொடங்கினார்கள். சோர்வு, துன்பம், கவலை முதலியன மேலிட்டிருந்த இக்காலத்திலேயே 'இறந்தபின் மனிதன் என்னவாகிறான், அவனுக்கு வாழ்வுண்டா?; என்றெல்லாம் மத்திய தரைக்கடல் உலகம் சிந்திக்கத் தொடங்கியது.

உள் நாட்டுக் கலவரம், அயல் நாட்டாரின் திடீர்த் தாக்குதல் ஆகிய இவ்விரண்டினாலும் நெருக்கப்பட்ட உரோமப் பேரரசின் மத்திய ஆட்சி ஆட்டம் கண்டு அழியத் தொடங்கியது. மாகாணங்களில் நடைபெற்ற ஆட்சியை இத்தாலி கண்காணித்தது போக, இத்தாலி நாடே மாகாணங்களில் ஒன்றாயிற்று. ஆட்சிப் பீடம் உரோம் நகரிலிருந்து பேரரசர்களின் பாசறைக்குச் சென்று விட்டது. 'முப்பது கொடிய மன்னர்களின் காலம்' (The Age of thirty Tyrant) என்ற தொடர் முற்றிலும் உண்மையல்லா திருப்பினும், அதிலும் ஒருண்மை இருந்தது. அக்காலத்தில் பேரரசு அழிந்து, பல்வேறு சர்வாதிகாரிகளின் ஆளுகை யின்கீழ் வந்துவிட்டது என்பதை அத்தொடர் சுட்டிக் காட்டியது. தலைநகரின் ஆணை சாம்ராச்சிய மூலை முடுக்குக்களி லெல்லாம் செல்லவில்லையாதலால், எல்லைகளுக்கப்பால் வாழ்ந்த அயலார், கொள்ளையடிக்கும் நோக்கோடு பேரரசினை ஆங்காங்குத் தாக்கத் தொடங்கினர். உரோமானியத் தலைமை அதிகாரப் பதவியையே தங்கள் பலச் சோதனையின் பரிசாகக் கருதத் தொடங்கிவிட்ட உரோமப் படை அணிகள் (Roman Legions) தங்களுக்குத் தாங்களே அதிகாரிகளாகிவிட்டன. இவற்றோடு பணத் தொல்லையும் சேர்ந்துகொண்டது. செல்லும் வழிகளில் பாதுகாப்பின்மையால் வாணிகம் தடைபட்டது; படைச் செலவு பெருகிற்று. அளவிறந்த வரி விதிப்பு மேலும் வாணிகத்தை ஒடுக்கியது. நாட்டுப் பொருளாதார நிலை கெட்டது; செலாவணி மதிப்பிறக்கத்தால் பல தீங்குகள் முளைத்தன.

இத்தகைய இரங்கத் தக்க நிலையில் பேரரசர் டையோகிளேஷன் (Diocletian) பெரிதும் முயன்று ஒழுங்கையும் அமைதியையும் நிலை நாட்டினார்; நாட்டாட்சியை நல்ல முறையில் நடத்த மூன்று துணை அதிகாரிகளை அமர்த்தினார். பேரரசு 101 மண்டலங்களாகவும், 13 ஆட்சிப் பகுதிகளாகவும், 4 பெரும் பிரிவுகளாகவும் பிரிக்கப்பட்டது. பொருளாதாரத் துறையில்

பொருள்களின் விலைகளையும், தொழிலாளிகளின் ஊதியங்களையும் ஒழுங்கு செய்து, ஆணை பிறப்பிக்கப்பட்டது, விலை குறைந்த அங்காடியில் கொள்முதல் செய்வதையும், விலையுயர்ந்த சந்தையில் விற்பனை செய்வதையும் எந்தச் சட்டமும், எவ்விதத் தண்டமும் தடுக்க முடியவில்லை. கிறித்துவச் சமயத்தைத் திட்டமிட்டு அழிக்க முயன்ற அப்பேரரசர் தோல்வியே கண்டார். ஆகவே, கி.மு 305-ல் டையோகிளேஷன் பேரரசர் பதவியிலிருந்து விலகிக் கொண்டார். வரலாற்றில் இத்தகைய புதுமை அருமையே, உரோமப் பேரரசிற்கு ஒரு புதிய வாழ்வை இவர் தொடங்கி வைத்தார் என்றே சொல்ல வேண்டும். 'இரண்டாம் அகஸ்டஸ்' என்று சொல்கிற அளவுக்கு இவருடைய செயல்களின்முத்திரையை உரோமப் பேரரசின் அமைப்பில் காண்கிறோம். உரோமப் பெருமகனுர் அகஸ்டஸ், குடியாட்சியின் அமைப்பை மதிப்பவர் போன்றும் அதை மாற்ற விரும்பாதவர் போன்றும் எல்லாரையும் நம்பச் செய்து ஆண்டு வந்தார். ஆனல், ஒரடிமையின் மகனுரான டையோகிளேஷன் குடியரசின் தொடர்புகளை அறவே விலக்கிப் பேரரசினைப் பேரரசாகவே ஒளி மறைவின்றி உலகிற்குக் காட்டினர். கான்ஸ்டன்டைன் (Constantine) என்பவர் பலத்த போட்டி போர்களுக்கிடையே மேற்குப் பகுதிக்கு முதலில் தலைவ ரானர்; பத்தாண்டுகளுக்குப் பிறகு முழுப் பேரரசிற்கும் தலைவ ரானர். ஜூலியஸ் சீசர், அகஸ்டஸ் சீசர் ஆகியவர்களுக்குப் பின் இவரே ஐரோப்பிய வரலாற்றில் நிலையான சில சுவடுகளை விட்டுச் சென்றிருக்கிறர். கான்ஸ்டன்டைன் போர்த்திறமும் ஆட்சித் திறமும் ஒருங்கே பெற்றவர். இவர் காலத்தில் எல்லைப் புறங் களில் அச்சமின்மையும் உள் நாட்டில் ஓரளவு பழைய அமைதியும் நிலவின. கான்ஸ்டன்டைன் வரலாற்றில் இடம் பெறுவதற்குக் காரணமாயிருந்த சில சாதனைகளில் இரண்டு குறிப்பிடற்குரியன. உரோம் நகரின் நடுநாயக நிலையை உரோமப் பேரரசின் அரசியல் நிலையானது நீண்ட காலத்திற்கு முன்பாகவே அழித்தொழித்து விட்டது. சாம்ராச்சியப் பாதுகாப்பும், எல்லைப்புறக் கவலையும் வேறொரு தலைநகரைத் தேட வேண்டிய நிலைக்குக் கொண்டு வந்து விட்டன. ஐரோப்பாவும் ஆசியாவும் சந்திக்கும் கூட்டுப் பாதை யிலும் பாஸ்பொரஸி (Bosphorus)ன் ஐரோப்பியக் கரையிலே உள்ள சிறிய தீவக்குறையின் கோடியிலும், அமைந்திருந்தது பைசான்டியம் (Byzantium). அப் பழைய கிரேக்க நகரம் உரோம சாம்ராச்சியத் தலைநகராவதற்கு மிக ஏற்றதாயிருந்தது. இதைத் தேர்ந்து தலைநகராக்கிய கான்ஸ்டன்டைன் பெயரையே இதுவும் பெற்று விளங்கலாயிற்று. கான்ஸ்டான்டிநோப்பிள் அமைப்பிடம் எல்லா வகையிலும் சிறந்து விளங்கியதென்பதை அடுத்த ஆயிர மாண்டுகள் தெளிவுறக்காட்டின, உரோமப் படையணிகளுக்கு

ஓயாத தொல்லையும் தீராத கவலையும் தந்த டான்யூபு, யூப்ரட்டீஸ் என்ற இரு எல்லைகளுக்குமிடைய, இப்புதிய தலைநகர் எழுந்தது. இருபுறத்திலிருந்தும் படையெடுத்துத் தாக்குவாரோடு போரிடு வதற்கு அந்நகர் பொருத்தமாயிருந்தது போலவே, பேரரசின் எல்லாப் பகுதிகளோடும் வாணிபஞ் செய்வதற்கும் வசதியா யிருந்தது. சாம்ராச்சிய ஆட்சிப் பீடமும் சின்னங்களும் டைபர் ஆற்றங்கரையை விடுத்து, பாஸ்பொரஸ் கடற்கரையில் வந்து தங்கின. இந்த மாற்றத்தின் முக்கியத்துவம் கொஞ்சநஞ்சமல்ல. பேரரசின் கிழக்குப் பகுதியின் முக்கியத்துவமும் வாய்ப்பும் எந்த அளவு அதிகரித்தனவோ, அந்த அளவிற்கு மேற்குப் பகுதியில் அவை குறைந்தன. கான்ஸ்டான்டிநோப்பிளில் கிரேக்க மொழி அரசோச்சியது. உரோமச் சக்கரவர்த்தி உரோம் நகரைப் புறக் கணிக்கவே, அந்நகரிலிருந்த கிறித்துவச் சமய வட்டத் தலைவ ராகிய மேற்றிராணியார் (Bishop), பேர,சர் ஆதிக்கத்தினின்று விடுபட்டு, உரோம் நகரப் பெருமகனுரானுர். பிறகு அது காரணமாகப் போப்பின் (Pope) ஆட்சி உரோமாபுரியில் வளர்ந் தோங்க வாய்ப்பேற்பட்டது.

கான்ஸ்டன்டைனின் மற்றொரு பெருஞ்சாதனை அவருடைய சமயக் கொள்கை முறையாகும். கான்ஸ்டன்டைன் கிறித்துவர் களை எந்தக் கண்கொண்டு பார்த்தார் என அறிய முற்படுமுன், உரோமப் பேரரசில் கிறித்துவச் சமயத்தின் நிலை, போக்கு முதலிய வற்றைப் பற்றி நாம் அறியவேண்டும்.

ஐரோப்பா முழுவதும் பரவி, பின்னர் உலகத்தின் சமுதாய, சமய வாழ்வியலையே உருவாக்கிய கிறித்துவச் சமயம், மேற்கு ஆசியாவில் தோன்றி வளர்ந்தது. நான்கே நூற்றுண்டுகளில் அச்சமயம் உரோமப் பேரரசில் நெடுகப் பரவி நிலைத்துவிட்டது. கிறித்துவமும் கிரேக்கமும் கலந்து கிறித்துவ உரோமானியப் பண்பாட்டைத் தோற்றுவித்தன. சாம்ராச்சியத்தில் ஒரு சிலரே முதலில் கிறித்துவக் கொள்கையை ஏற்றுக்கொண்டனர். அவர் களுட்பலர் ஏழைகள்; சிலர் அடிமைகள். உரோமப் பேரரசில் ஏனைய தெய்வ வழிபாடுகளுடன் பேரரசர் வழிபாடும் ஒன்றி, மக்களிடையே வழக்காற்றில் இடம் பெற்றது. பேரரசர் வழி பாட்டை மறுத்து, இயேசுவை மட்டும் கிறித்துவர்கள் வழி பட்டதால், பல் வகையில் துன்புறுத்தலுக்கு ஆளானுர்கள். துன்புறுத்தல் காரணகமாவே பல உயர்குடிமக்களும் கிறித்து வத்தைத் தழுவினுர்கள்.

ஒரு தெய்வ வணக்கத்தையும் ஒழுக்கத்தையும் நிலை நாட்டிய யூத மக்கள் (Hebrews) பாலஸ்தீன நாட்டுத் தென்பகுதியான

ஜூடேயா (Judea) மாகாணத்தில் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் தெய்வம் ஜேஹோவா (Jehovah). யூதர்களிடையிலே புதிய சமய மாகிய கிறித்துவம் தோன்றிப் பரவத் தொடங்கியது. யூதர் சமய மறுப்பாகவே கிறித்துவக் கொள்கைகள் முதலில் கருதப்பட்டன. இயேசுவின் ஆளுமை (Personality)யும், அன்பு நெறியும் மக்கள் மனத்தைக் கவர்ந்தன. யூத சமயத்தைத் திருத்துவதற்காகத் தொடங்கப்பட்ட முயற்சி உலக சமயமாய் வளர்ந்துவிட்டது. கிறித்துவ நெறியை எல்லா இனத்தவரும் நாட்டவரும் கடைப்பிடிக்க வேண்டுமென வீரத் திருத்தொண்ட ராகிய பால் (St. Paul) செய்த முடிவுதான் அச்சமயத்தைப் பெரிதும் வளர்த்தது சமுதாய நல்வாழ்வுக்காக இப்பூமியிலே தோன்றி, அல்லும் பகலும் அரும்பாடு பட்ட இயேசு, இறுதியில் சிலுவையில் ஆணி கொண்டு அறையப்பட்டார். மன்பதைக்காகக் கல்லறையிலிருந்து எழுந்து நம்பிக்கையூட்டி மறைந்த இயேசுவின் கொள்கையை வேறுபாடின்றி அனைவரும் பின்பற்றி நிலைத்த பேறு பெறலாம் எனப் பால் செய்த முடிவு மிகவும் பொருத்த மானது, போற்றற்குரியது.

உரோமப் பேரரசில் சீசரின் தெய்வத்தன்மையை எதிர்த்து, சீசர் வழிபாட்டை மறுத்த காரணத்தால், கிறித்துவச் சமயத்தை உரோமப் பேரரசர்கள் ஒடுக்க விரும்பினர்கள். கிறித்துவர்களைக் காட்டிலும் கிறித்துவச் சமயச் சங்க அமைப்பே அவர்கள் கண்ணை உறுத்தியது; அவர்களுக்கு அச்சத்தையும் ஊட்டியது. எகிப்திய, பாரசீகச் சமயக் கோட்பாடுகளும் ஜூடேயாச் சமயமும் முரண்பட்டு மோதின அளவுக்குக் கிறித்துவம் கிரேக்கத் தெய்வங்களை எதிர்க்க வேண்டிய நிலை ஏற்படவில்லை.

உரோமப் பேரரசில் தங்களுக்குப் பிடித்தமான சமயக் கருத்துகளைக் கடைப்பிடித்தொழுக மக்களுக்கு எவ்விதத் தடையு மில்லை. நாட்டின் ஒற்றுமை உணர்ச்சிக்குத் தீங்கு விளைவிக்காது. பேரரசர்களை வணங்கி வழிபடின் எச்சமயத்தவராயினும் அவர் களுக்கு எவ்விதத் தொல்லையுமேற்படாது. ஆனல், சமயக் கொள்கைக்காக உயிர் நீத்தல் என்ற கிறித்துவ வழக்கமே, புறச் சமயத்தவராகிய உரோமானியர்களுக்கு மாறாகத் தென்பட்டது. அன்றியும், அவர்கள் கொண்ட தேசபக்திக்கும், அரச பக்திக்கும் அவ்வழக்கம் பெருந்தடையாய் இருந்தது. கிறித்துவச் சமய வளர்ச்சியை விரும்பாத நீரோ, மார்க்கஸ் ஆரிலீயஸ், டீசியஸ் (Decius) முதலிய பேரரசர்கள் கிறித்துவர்களுக்குத் தொல்லை கொடுத்தார்கள். பேரரசின் ஆதிக்கமும், கிறித்துவச் சமய ஆதிக்கமும் போட்டியிட்டன. அவை போரிடவும் தயங்கவில்லை,

கிறித்துவ பக்தர்கள் முதலில் யாரும் அறியாமல் மறைவில் கூடி வழிபட்டார்கள். இறந்தவர்கள் புதைக்கப்படும் நகர இடுகாடுகளில் (Catacombs) கூட இரகசியக் கூட்டமும் வழிபாடும் நடைபெற்றன. பாறைகளில் குடையப்பட்ட கல்லறைகள் அவர்கள் புகலிடங்களாயின. கிறித்துவர்களின் எண்ணிக்கை கூடியபோது நிலவறைகள் கட்டப்பட்டன. அந்நிலவறைகள் மூலம் பயன்படாத மணற்குழிகளுக்கு வழியமைத்து, அவ்வழியே நகரத்தை விட்டு வெளியேறித் தப்பிச் செல்லவும் அவர்கள் வழி கண்டார்கள். நிலத்திற்குக் கீழே அமைக்கப்பட்ட கல்லறைகளையும் (Catacombs) துன்புறுத்தப்பட்ட ஆதிக் கிறித்துவர்கள் தங்கள் சமயத்தை வளர்த்த மறைவிடங்களையும், உரோம் நகரில் இன்றும் காணலாம். கிறித்துவர்கள் டையோகிளேஷன் காலத்தில், திட்டமிடப்பட்ட துன்புறுத்தலுக்கு ஆளானார்கள்; ஆயினும் அவர்கள் ஆர்வத்தைச் சிறிதும் டையோகிளேஷனால் குறைக்க முடியவில்லை. அழிக்க முடியாத கிறித்துவத்தோடு இணைந்து அந்த இயக்கத்தையும் தங்கள் ஆதிக்கத்திற்கு ஆக்கமாக்கிக் கொண்டார்கள் பேரரசர்கள். இறுதியாகக் கான்ஸ்டன்டைன் கிறித்துவர்களைத் துன்புறுத்த வேண்டா எனக் கி. பி. 313-ல் முடிவு செய்து, மிலான் ஆணையைப் (Edict of Milan) பிறப்பித்தார். சமயப் பொறை ஒரு பேரரசின் கொள்கையென அறிவிக்கப்பட்டதோடு, அதைக் கடைப்பிடிக்கவும் செய்தது வரலாற்றிலே இதுவே முதல் முறையாகும். ஆகாயத்தில் பட்டப்பகலில் ஒரு நாள் அனற்பிழம்பென ஒளி விட்ட சிலுவையையும், 'இதனால் வெற்றி பெறு' (By this conquer) எனக் கிரேக்க மொழியில் எழுதப்பட்டிருந்த ஒரு தொடரையும் கான்ஸ்டன்டைன் கண்டார்; அதை நம்பித் தம பகைவர்களை எதிர்த்து வெற்றி பெற்றார். அதன் பிறகே கிறித்துவர்களை அன்புடன் நடத்த முடிவு செய்தார் எனக் கூறப்படுகிறது. ஆதலால், கான்ஸ்டன்டைன் வகுத்துக்கொண்ட சமய நெறி அரசியல் திட்டமாகவும் இருக்கக்கூடும். • கிறித்துவச் சமய ஊழியர்கள், தங்கள் சமயக் கொள்கையின் மூலம் கொடிய அயல்நாட்டவரின் மனத்தைக் கவர்ந்ததோடு, அவர்களின் கொடுமைகளைக் கிள்ளியெறியவும் மிகவும் பயன்பட்டார்கள். உரோமானிய வீர அணியொன்று (Roman Legion) சாதிக்கக் கூடியதைச் சமயப் பரப்புக் குழுவினரில் ஒரு சிலர் சாதித்தனர். கி. மு. 331-ல் அரசியலறிஞர் கான்ஸ்டன்டைன் கிறித்துவச் சமயத்தைத் தழுவினார்; இவ்வாறு அச்சமயத்திற்குப் பாதுகாப்பளித்து அதன் துணையைப் பெற்றார். இனிக் கிறித்துவம் பேரரசிற்குப் பேரரண் ஆயிற்று. இன்னும் அது பேரரசின் சமயமாகவில்லையெனினும், கான்ஸ்டன்டைனிடமிருந்து ஆதரவு பெற்று வளர்ந்தது. இரண்டரை நூற்றுண்டுகள் அடக்குமுறை

யினுல் அல்லற்பட்ட கிறித்துவச் சமயம், ஆட்சியின் ஆதரவைப் பெற்று அமைதியான முறையில் பணியாற்றலாயிற்று. பேரரசர் தியோடோஸியஸ் (Theodosius) கிறித்துவத்தை ஆட்சியாளர் ஆதரவுக்குரிய சமயமாய் ஏற்றுக்கொண்டார். கிறித்துவப் பண்பாடு பழைய பேகன் (Pagan) பண்பாட்டை அழிக்காது, அதனை மாற்றியும் திருத்தியும் தன் முத்திரையை அதற்கீந்தது; அதற்குத் தொடர்ந்து கடப்பாடுடையதாகவே இருந்து வரலா லாயிற்று.

கி. மு. 337-ல் கான்ஸ்டன்டைன் இறந்த பின் கிரேக்க உரோமானிய உலகம் முடிவடைந்து, இடைக்காலம் தொடங்கி விட்டதெனலாம். ஐரோப்பியப் பண்பாடு பல நூற்றுண்டு கால மாக இடையீடின்றித் தொடர்ந்து வளர்ச்சியுற்று வந்தது. குறுகிய நகரப்பற்றை மட்டும் வளர்த்துக்கொண்டு வந்த நகர நாடு மறைந்தது. ஆட்சி தனக்குத் தேவையான உரத்தை மக்களிடமிருந்து பெற்று வந்தது மாறி, பேரரசரிடமிருந்து பெறத்தொடங்கியது. ஒழுக்கத்தை ஒதுக்கி, வெளிப்படை யாகவே இன்பத்தைக் குறிக்கோளாய்க் கொண்டு மக்களிடையே பரவியிருந்த 'பேகன்' சமயம் கிறித்துவத்திற்கு இடமளித்துவிட்டு, விலகிக்கொண்டது. கிறித்துவக் கோயில் அமைப்பு (Chirch) ஒன்று புதிதாய் முளைத்து வளரலாயிற்று. அதன் திட்டமும், செல்வாக்கும், அதன் வெற்றிகளும், போராட்டங்களுமே இடைக் கால வரலாற்றின் சிறப்பியல்புகள்.

# அதிகாரம் 1

**[உரோமப் பேரரசின் சிதைவும் வீழ்ச்சியும் : ஜெர்மானியரின் படையெடுப்பு – காத்துகள் (Goths) – ஆஸ்ட்ரோகாத்துகள் – (Ostrogoths) – விசிகாத்துகள் (Visigoths) – வாண்டல்கள் (Vandals)]**

உரோமானியப் பேரரசு நாகரிகமற்ற அயலாரின் படையெடுப்புகளால் அமைதியற்றுக் காணப்பட்டது. அன்றியும், திறமையற்ற பேரரசர்கள் வரிசையாக ஆட்சிப் பீடமேறியதால் மத்திய ஆட்சி வலிமை குறைந்து, பேரரசு சிதறிப் போய்க் கொண்டிருந்தது. அக்காலத்தில் இல்லீரியப் பேரரசர்களான டையோகிளேஷனும் கான்ஸ்டன்டைனும் சிதறிக்கொண்டிருந்த பேரரசுக்குப் புதியதோர் அமைப்பை ஏற்படுத்திப் புத்துயிர் அளித்தனர். அவர்கள் காலமுதல் ஆதிக்கம் மிக்க புதியதோர் ஆட்சி தொடங்கிற்று. இந்தியா, எகிப்து முதலிய கீழை நாடுகளில் பேரரசர்கள் கையாண்ட ஆடம்பரச் சடங்குகளும் செயல்களும் உரோமப் பேரரசிற்கும் இன்றியமையாதவையென டையோகிளேஷன் கருதினார்; அதனால், அரசரைச் சுற்றிலும் மெய்க் காவலர்கள், ஆடம்பர அரசவை, தங்க அணி முடி, செங்கோல், பகட்டான சடங்குகள் போன்ற செல்வச் சிறப்புகள் சூழப் பேரரசர்கள் உலா வரவேண்டுமென எண்ணித் தம் ஆட்சிக்காலத்தில் அவைகளையெல்லாம் புகுத்தினார். மேலும், பேரரசர்கள் தெய்வப் பிறவிகள், அவர்களை அரிதாக அணுக வேண்டும். அணுகும் போது மண்டியிட்டு வணங்கவேண்டும் என்ற வரன்முறையை ஏற்படுத்தினார்; அதிகாரிகளின் ஆட்சி யெல்லைகளின் அளவைக் குறைத்து, ஆட்சித் திறத்தை மிகுதிப் படுத்தத் திட்டமிட்டார். ஏடிரியாட்டிக்குக் கடலை எல்லையாய்க் கொண்டு பேரரசினை இரு கூறுகளாக்கி, ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பேரரசரிடம் (அகஸ்டஸிடம்) ஒப்படைக்கவேண்டும்; அப் பேரரசர்களுக்குத் துணையாக உதவிப் பேரரசர்களை (Caesar)

அமர்த்திக்கொண்டு ஆட்சி புரிவதே அத்திட்டமாகும். இரண்டு அகஸ்டஸ்களுள் ஒருவருக்கு முதன்மை இருக்கும். அவ்விரு வருள் ஒருவர் மிலானிலிருந்தும், (Milan) மற்றொருவர் சிறிய ஆசியாவிலிருந்த நிக்கோமீடியாவிலிருந்தும் (Nicomedia) ஆட்சி செய்ய வேண்டும். அகஸ்டஸ்களுள் யார் இறந்தாலும் அவருக்கு உதவி புரிந்து வந்த சீசர் அவரைத் தொடர்ந்து அகஸ்டஸ் ஆவார். இப்படியே ஒரு பேரரசர் இருந்த இடத்தில் நான்கு பேரரசர்கள் முளைத்தார்கள். இப் புது அமைப்பினால் பேரரசின் பல பகுதிகளும் நன்கு இணைக்கப்பட்டதோடு அந்நியர் படை யெடுப்பினின்றும் காக்கப்பெற்றன. இதனால், பேரரசின் ஆணைக்கு நல்ல செல்வாக்கேற்பட்டது: ஆனால், அதிகாரிகளின் எண்ணிக்கை மிகுதியாலும், படைப் பெருக்கத்தாலும், பொருட் செலவு மிகுந்து, வரி விதிப்பும் வரிப்பளுவும் அதிகமாயின. மேலும், இத்திட்டம் போட்டியையும் பகையையும் வளர்த்ததால், கான்ஸ்டன்டைன் காலத்தில் மீண்டும் பேரரசு ஒன்றுக்கப்பட்டு, ஒரு தலைமையின்கீழ் வந்தது.

**கான்ஸ்டன்டைன்** (கி.பி. 306-337) முதலில் பேரரசின் மேற்குப் பகுதிக்குத் தலைவரானார். போர்த் திறத்தோடு ஆட்சித் திறமும் பெற்றிருந்த அப் பேரரசர் படைப்பலத்தைப் பெருக்கி னார். மாகாண ஆட்சியைச் சிறப்புறச் செய்தார். தோல்வியே அறியாத அந்த வீரப் பெருமகனார், கி. பி. 324-ல் கீழ்ப்பகுதியை யும் தம் ஆதிக்கத்திற்குட்படுத்தினார். கான்ஸ்டன்டைன், மாவீரர் அலெக்ஸாண்டர், அகஸ்டஸ் சீசர் வரிசையில் வைத் தெண்ணத் தக்கவர். அவர் ஆட்சியில் எல்லைப் புறங்கள் நன்கு காக்கப்பெற்றுப் பேரரசெங்கும் அமைதி நிலவிற்று.

கான்ஸ்டன்டைன் எந்த அளவுக்கு உண்மைக் கிறித்துவப் பற்றுள்ளவர் என்று சொல்வது எளிதன்று. ஆனால், அவர் கிறித்துவத்தை ஆதரித்து, அதை ஆட்சியாளர் ஒப்பும் ஒரு சமயமாக்கி, ஐரோப்பிய வரலாற்றின் போக்கையே மாற்றி யமைத்தார். கிறித்துவத்திற்கு அவர் அளித்த ஆதரவு, காட்டிய பரிவு, சமயப் பற்றினாலன்று; அரசியல் கண்ணோட்டத் தோடு என்று அறுதியிடுவதே பொருந்தும். கிறித்துவச் சமயத் தினர் தம் சமயக் கொள்கைகளைக் கடைப்பிடித்தல், பிற சமயத் தெய்வங்களை வணங்க மறுத்தல், வெளிப்படையாக இயேசுவை வழிபடுதல் முதலியன சட்டத்திற்குப் புறம்பானவையல்ல என்பதே அச் சமயத்திற்கு அவர் அளித்த நிலை. புறச்சமயக் கோட்டையான உரோம் நகரிலிருந்து கிறித்துவச் சமயத்தை ஆதரிப்பது பெரிய எதிர்ப்பைத் தேடிக்கொள்வதாக இருக்கும்

என்ற எதிர்கால நோக்கோடும், நாகரிகமற்ற அயல்நாட்டு மக்களின் படையெடுப்புகளைத் தடுத்துச் சமாளிக்கும் பொருட்டும், உரோம் நகரை விடுத்துப் பேரரசின் கிழக்குப் பகுதியில் தலைநகரைத் தேடிச் சென்றார். ஆயிரமாண்டுகளுக்கு மேல் சீரும் சிறப்பும் பெற்றுப் புதிய தலைநகரமாய் விளங்கவிருந்த கான்ஸ்டான்டிநோப்பிள், ஆசியா ஐரோப்பாக் கண்டங்களின் வாயில் வழியில் அமைந்திருந்தது. மேலே கூறிய இரு சாதனைகளுமே அவரை ஓர் அரசியல் அறிஞர் என்று உலகிற்கு அறிவிக்கின்றன. அவர் தமக்குப்பின் தம் மக்கள் மூவருக்கும் பேரரசினைப் பங்கிட்டுக் கொடுத்தார். ஆயினும், அவர் மறைந்த பின் பலரும் போட்டியிட்டு, நாட்டமைதியைக் குலைத்து இறந்து பட்டனர். இறுதியில் கி. பி. 361-ல் ஜூலியான் (Julian) பேரரசர் ஆனார். கால் நாட்டின்மேல் படையெடுத்த முரட்டு அயலாரை (Barbarians) அவர் கடுநடவடிக்கையெடுத்து அப்புறப் படுத்தினார்; புறச்சமயத்தை ஆதரித்துத் தம் சமயத்தைப் புறக்கணித்த ஜூலியானைக் கிறித்துவர்கள் 'கொள்கை துறந்தவர்' என்ற அடைமொழியை அவர் பெயரோடு சேர்த்து வழங்கினார்கள். ஏதென்ஸ் பல்கலைக்கழகத்தில் தங்கியிருந்த போது, கிரேக்க உரோமானியத் தெய்வங்கள், அவர் மனத்தை ஆட்கொண்டன போலும்! ஆதலால், அவர் புறச்சமயத்தை ஆதரித்தார்; ஆயினும், சமயப்பொறைக் கொள்கையைக் கைவிடவில்லை. இறப்பதற்கு முன் இயேசுவை முன்னிலைப்படுத்தி, 'கலீலியரே, நீரே வெற்றி பெற்றீர்,' என்று ஜூலியான் இறுதியாகச் செப்பி மறைந்தாராம். 'இனிக் கிறித்துவத்தை அசைக்க முடியாது,' என்று அவர் கருதியது உண்மையாயிற்று.

பேரரசர்களின் திறமைக் குறைவால் மத்திய ஆட்சி வலியற்றுப் போகவே, கி. பி. 250 முதல் ஜெர்மானியர் பேரரசைத் திடீர் திடீரெனத் தாக்கலாயினர்; அவ்வாறு தாக்கியதோடு உரோமானிய நாடுகளிலும் நுழைந்து குடியேறி வந்தனர். அவர்களைப் பற்றி அறிவோமானால், மேற்கொண்டு ஐரோப்பாவைப் பற்றி அறிவது எளிதாகும். சிறிது சிறிதாய் ஜெர்மானியர் பேரரசிற்குள் நுழைந்தனர்; அவர்களுட் பெரும்பாலார் உரோமானியப் படையிலும் ஆட்சியிலும் பணி புரிந்து, பின்னர்ப் பேரரசின் பகைவராகி, அதை வென்றனர். எல்லைப் புறங்களைத் தாக்கிச் சூறையாடுதல் அவர்களுக்கு எளிதாயிருந்தது. எண்ணிக்கையிலும், போர்க் குணத்திலும், அநாகரிகத்திலும் மிஞ்சிய ஹூணர்கள் பின்னிருந்து தாக்கித் தள்ளியதால், அவர்கள் பேரரசில் புகலிடம் தேட வேண்டியதாயிற்று.

ஜெர்மானியர்களைக் காட்டுமிராண்டிகள் என்று வழங்குவது பொருந்தாது. அவர்கள் உரோமானியர்களினும் நாகரிகத்தில் தாழ்ந்தவர்களாயிருக்கலாம். ஆனால், அவர்களில் சில குலங்கள் உரோமப் பண்பாட்டை மதித்தன; அதை ஏற்க விழைந்தன. அக்குலங்களில் உரோமானியர்களை முதன்முதலில் தோற்கடித்த காத்துகளே (Goths) முதன்மையானவர்கள். டான்யூபு ஆற்றிற் கப்பால் குடியேறியிருந்த அவர்களது நாடு கருங்கடல் முதல் பால்டிக்குக் கடல் வரை நீண்டிருந்தது. கிழக்கு ஜெர்மனியிலும் மேற்கு ரஷ்யாவிலும் வாழ்ந்து வந்த காத்துகள், கிறித்துவச் சமயத்தின் ஒரு பிரிவைத் தழுவினவர்கள். கி. பி. 374-ல் ஹூணர்களால் (Huns) திடீரெனத் தாக்கப்பட்டதால், தெற்கில் உரோமப் பேரரசில் குடியேறித் தப்புவதைத் தவிர வேறு வழி யின்றி அவர்கள் தவித்தார்கள்.

அப்போது டான்யூபு ஆற்றின் தெற்கிலுள்ள பகுதிகளில் குடியேறுவதற்குக் கிழக்குப் பிரிவுப் பேரரசர் வாலென்ஸ் (Valens) இடமளித்தார். ஆயினும், அப்படிக் குடியேறியவர் களின் மிகுதியான எண்ணிக்கை அச்சம் விளைவிப்பதாயிருந்தது. ஐயுற்ற சிறு அதிகாரிகளின் சில்லறைச் செயல்கள் விரைவில் அவர்களைப் பகைவர்களாய் மாற்றியது. இருவருக்கும் மூண்ட போரில் கி. பி. 378-ல் ஏடிரியாநோப்பிள் (Adrianople) போர்க் களத்தில் வாலென்ஸ் படுதோல்வியுற்று, காத்துகளால் கொல்ல வும்பட்டார். இத் தோல்வியிலிருந்து உரோமப் பேரரசு மீளவே இல்லை, மேலும், காத்துகளைத் தடுத்து நிறுத்த வலிவுள்ள படை அணிகள் பேரரசின் கிழக்குப் பிரிவில் இல்லை. பேரரசின் கிழக்குப் பிரிவு அழிவுப் பாதையில் அடியெடுத்து வைத்துவிட்டதோ என்று நினைக்க இடமிருந்தது. ஆனால், அதற்கு நற்காலமாய்க் காத்து களின் தலைவன் இறந்தான். பிளேகு (Plague) என்ற ஒருவகைக் கொள்ளை நோய் காத்துகளைப் பீடித்தது.

முதலாம் தியோடோஸியஸ் (Theodosius I; 379-395) அவர் களைச் சிலவிடங்களில் முறியடித்தபின், கி. பி. 383-ல் அவர் களோடு ஒரு முக்கியமான உடன்படிக்கையைச் செய்துகொண் டார். திரேஸும் (Thrace) சிறிய ஆசியாவும் காத்துகள் குடியேறு வதற்கென ஒதுக்கப்பட்டன. அதற்கீடாக நாற்பதாயிரம் காத்து கள் உரோமானியப் படையில் சேர்ந்து போர்ப் பணியாற்றுவது எனவும் ஏற்பாடாயிற்று. பேரரசின் படையைத் தோற்கடித்து வெற்றி கண்ட காத்துகளிடம் நாட்டின் பாதுகாப்பை ஒப்படைத் தல் நலம் பயக்கக் கூடியதன்று; ஆயினும், ஸ்பானிய வீரரான தியோடோஸியஸ் தம் திறமையால் பாதுகாப்புக்குக் குந்தகமில்

லாமல் காத்தார்; ஜெர்மானிய மக்களோடு நட்புறவை வளர்க்கும் பொருட்டு அவர்களை அரசாங்க அலுவல்களிலும் அமர்த்திக் கொண்டார்.

தியோடோஸியஸ் உண்மையான கிறித்துவர். அவர் புறச் சமயத்திற்கு ஒரு முடிவு கட்டிவிட்டு, கத்தோலிக்கக் கிறித் துவத்தை நாட்டின் சமயமாக்கிச் சிறப்புற்றார். கி. பி. 394-ல் உரோமன் செனட்டு அவை, நகரப் புரவலர் ஜுபிடரா (Jupiter) அல்லது இயேசுவா (Jesus) எனப் பேசி வாதிட்டு, கிறித்து வத்தை முடிவாக ஏற்றது. அதன் பின்னரே பலியிடும் வழக்கம் கட்டாயமாய் நிறுத்தப்பட்டது. கிரேக்க உரோமானியத் தெய்வங்களின் வழிபாடு சட்ட விரோதமாக்கப்பட்டது. விலை மதிக்கவொணாத கலை, கட்டடக் கருவூலங்களுடன் புறச் சமயக் (Pagan) கோயில்கள் அழிக்கப்பட்டன. எஞ்சியவை கிறித்துவக் கோயில்களாய் மாற்றப்பட்டன. ஒலிம்பிக்கு 'விளையாட்டு களுக்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது. கிறித்துவச் சமயத் திற்கு அவர் செய்த அருந்தொண்டைப் பாராட்டி வரலாற்றாசிரி யர்கள் அவரைப் 'பெரியார்' என வழங்கினார்கள். உரோமச் சட்டத்தைத் தொகுத்து உருவாக்கும் அரும்பணியில் அவர் பங்கு மிகவும் போற்றற்குரியது.

அவருக்குப் பின் அவருடைய மூத்த மகனான ஆர்கேடியஸ் (Arcadius) கான்ஸ்டான்டிநோப்பிளிலும், இளைய மகனான ஹோனோரியஸ் (Honorius) இத்தாலியின் கீழ்க்கரைப் பட்டின மாகிய இராவென்னாவிலும் (Ravenna) ஆட்சி புரிந்தனர். கி. பி. 395-க்குப் பின் உரோமப் பேரரசு முழுவதையும் ஓரரசர் ஆளவேயில்லை. சுருங்கிய நிலையிலேதான் அதனைப் பேரரசர் பின்னர் ஆண்டனர். தியோடோஸியஸின் மக்கள் திறமையற் றவர்கள். ஆதிக்கமும் அவர்கள் கைகளை விட்டு நழுவியது.

கி. பி. 395-ல் விசிகாத்துகள் (Visigoths) அலாரிக்கு (Alaric) என்பவரைத் தங்கள் மன்னராகத் தேர்ந்தெடுத்தார்கள். அலாரிக்கு ஒரு பண்பட்ட கிறித்துவர். அவர் படை உரோமப் பேரரசின் பல்வேறு பகுதிகளைத் தாக்கி அமைதியைக் குலைக்க விருந்தது.

கி. பி. 395-ல் உரோமப் பேரரசின் எல்லைப்புற நிலை, நாட்டு நிலை ஆகிய இவ்விரண்டைப் பற்றியும் சிறிது அறிந்த பிறகு ஜெர் மானியர்களின் ஐரோப்பியப் படையெடுப்புகளைப் பற்றிக் காண்போம். ஐரோப்பாக் கண்டத்தை உரோமானியர் ஆட்சி

செய்த பகுதி, நாகரிகம் குறைந்த ஜெர்மானியர் வாழ்ந்த பகுதி என இரு கூறுகளாக்கி, அவ்விரு உலகங்களின் எல்லைகளாய் ரைன், டான்யூபு ஆறுகள் அமைந்திருந்தன.

எல்லைப்புறங்களில் சிறு கோட்டைகள் கட்டப்பட்டு அவைகளில் காவற்படை நிறுத்தப்பட்டிருந்தது. கோட்டைகளை இணைத்துப் பாட்டைகள் அமைத்திருந்தார்கள். அப் பாட்டைகளைப் பேரரசின் பெருவழிகளுடன் இணைத்து, உரோமானிய உலகத்தின் பாதுகாப்பு, வாணிக வளர்ச்சி இரண்டிற்கும் ஒருங்கே வழிகோலப்பட்டிருந்தது. சில சிறந்த பாசறைகளைச் சுற்றி நகரங்கள் எழுந்தன. ரைன் ஆற்றின் மேற்கரையிலும் டான்யூபு ஆற்றின் தென்கரையிலும் நகரங்கள் செழித்தோங்கின. ஜெர்மானியர் படையெடுப்பிலிருந்து நாட்டைக் காக்க நாட்டு வீரர்களை மட்டும் நம்பியிராது, எல்லைப்புறங்களில் கற்சுவர்களையும் எழுப்பவேண்டியிருந்தது. ஏனெனில், படையில் நாகரிகமான உரோமானியர்கள் சேர்ந்து பணிபுரியும் வழக்கம் குறையலாயிற்று. நாகரிகத்தில் தாழ்ந்த அயலாரே படையில் பெருவரரியாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். இந்த நிலையில் ஜெர்மானியர் படையெடுத்து வரின், ஜெர்மானியர்களே நிறைந்திருந்த உரோமானிய அணிகள் எந்த அளவு நாட்டிற்குப் பாதுகாப்பு அளிக்கும் என உறுதியாய்க் கூற இடமில்லாதிருந்தது.

இத்தாலியில் கற்றோரும் மற்றோரும் பேசிய மொழியாகிய இலத்தின் (Latin) ஆட்சிமொழியாய் இருந்தது. அங்கு மேன் மக்கள் கிரேக்க மொழியையும் கற்றிருந்தார்கள். கிழக்கில் கிரேக்கமே பொது மொழியாயிருந்தது. சிரியா, எகிப்து முதலிய நாடுகளில் அந்தந்த வட்டார மொழிகள் வழக்கிலிருந்தன. கிறித்துவச் சமயம் உரோமானியர்களின் ஆதரவுக்குரிய ஒரே சமயமாயிற்று. சமயக் கொள்கைக்காக மக்களைத் துன்புறுத்தும் வழக்கம் மீண்டும் தலைகாட்டத் தொடங்கியது. சமய ஒற்றுமை இல்லையேல், நாட்டொற்றுமை குலையும் என்றும் எண்ணினர்கள். ஏற்கெனவே தொல்லைப்பட்ட கிறித்துவர்கள், தங்கள் கோட்பாடுகளை மறுத்த ஏனையோரைத் (Heretics) துன்புறுத்தத் தலைப்பட்டார்கள். பேரரசின் அமைப்பைப் பின்பற்றிக் கிறித்துவர்கள் தங்கள் திருச்சபை நிறுவனத்தை அமைத்தார்கள். கிறித்துவக் குருவாகிய ஜெரோம் (Jerome) என்பவர், பழைய ஏற்பாட்டை (Old Testament) யூத மொழியிலிருந்தும், புதிய ஏற்பாட்டை (New Testament) கிரேக்க மொழியிலிருந்தும் இலத்தீன் மொழியில் மொழிபெயர்த்து உதவினர். இலத்தீன் மொழியிலிருந்த கிறித்துவமறை நூலுக்கு வல்கேட்டு (Vulgate) எனப் பெயரிட்

டிருந்தனர். இந் நூலே திருச்சபையாரால் ஏற்றுக்கொள்ளப் பட்டு இக்கால மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இத்தாலியக் கிறித்துவக் கோயில்களில் இலத்தீன் மொழியில் வழிபாடு நடைபெற்றது. கிழக்கில் வளர்ந்து வந்த கிறித்துவ நிறுவனம் மேற்கிலிருந்த நிறுவனத்திலிருந்து மாறுபட்டுத் தனிப் பண்புடன் விளங்கியது.

உரோமானிய அணிகளில் போர்ப்பணியாற்றிய ஜெர்மானியர் பேரரசின் கூட்டாளராகி, அதன் வரலாற்றில் பங்கு கொள்ளத் தலைப்பட்டனர். நாட்டின் நலத்திற்காக அவர்களைப் பயன் படுத்திக் கொள்வதற்கெனக் கையாண்ட திட்டமும் அத்திட்டம் வாயிலாக எதிர்பார்த்த வெற்றி வாய்ப்பும் தியோடோஸியஸ் காலத்தோடு மறைந்தன. இனி, உரோமப் பேரரசினைத் தாக்கிய வர்களும் பின்னர் அதனைக் காக்கத் தலைப்பட்டவர்களும் ஜெர்மானிய மிலேச்சர்களேயாவார்கள்.

1

'இரண்டாவது உரோம்' எனப் பெயர் பெற்ற கான்ஸ்டான்டி நோப்பிள் உரோமானியப் பேரரசின் தலைநகரமாகிய நாள் தொட்டு 'உரோமப் பேரரசு ஒன்று' என்ற தத்துவமும் அவாவும் மறையத் தொடங்கின. அப் பேரரசு உரோமானியப் பிரிவு (மேலைப் பகுதி), கிரேக்கப் பிரிவு (கீழைப்பகுதி) எனத் தனித் தியங்கியது. டையோகிளேஷன், கான்ஸ்டன்டைன் என்ற பேரரசர்களால் கிழக்கில் புதிதாய் நிறுவப்பட்ட உரோமானிய ஆட்சி பன்னிரண்டாம் நூற்றுண்டு முடிய நீடித்திருந்தது. கி. பி. 1204-ல் கான்ஸ்டான்டி நோப்பிளை ஃப்ராங்கு மக்கள் கைப்பற்றிய பின்னரே அந்த ஆட்சி நிலைகுலைந்தது. ஆனல், மேற்கிலிருந்த பிரிவு, நூற்றைம்பது ஆண்டுகளில் வலியிழந்து, ஜெர்மானியப் படையெடுப்பிற்கு இரையாயிற்று. மேலைப் பகுதி அழிந்த பின், அங்குப் பண்பாட்டைப் பாதுகாக்கும் பொறுப்பும் பணியும் திருச்சபை நிறுவனத்தையே சார்ந்தன. உரோம் நகர மேற்றி ராணியார் தலைமையில் வளர்ந்து வந்த திருச்சபை, எதையும் சாராது, தனித்த நிறுவனமாய்த் திகழ்ந்தது.

இதுகாறும் கிரேக்க நாகரிகம், உரோமப் பேரரசு, கிறித்துவ சமயம் மூன்றினாலும் உருவாகி வந்த ஐரோப்பிய வரலாறு, இனி ஜெர்மானியப் படையெடுப்பின் வெற்றி தோல்விகளின் அடிப் படையிலேதான் உருவாக்கப்பட வேண்டியிருந்தது. மேலை உரோமப் பேரரசின் ஆட்சி நலிந்து, ஜெர்மானிய ஆதிக்கம் ஏற்பட்டதும், ஐரோப்பிய இடைக்கால வரலாறு தொடங்கிற்று. அப் பேரரசின் சிதைவுகளில் முளைத்து மலர்ந்ததே இடைக்காலப்

பண்பாடாகும். உரோமானிய உலகின் எல்லைகளாகிய ரைன், டான்யூபு ஆறுகளுக்கு வடக்கே இருந்த நிலப்பரப்பு, தெற்கி லிருந்ததைக் காட்டிலும் பெரியது. அவ்வெல்லைப் புறத்தில் நான்காம் நூற்றுண்டினிறுதியில், பண்படாத பல ஜெர்மானியக் குடியேற்றங்கள் இருந்தன. அம் மக்களின் தொகையும் நாகரிகமும் முறையே எண்ணிக்கையிலும் தரத்திலும் குறைந்திருந்தன. 'ஜெர்மானியா' (Germania) என்ற தம் நூலில் ஜெர்மானியக் குலங்களின் நீண்டதொரு பட்டியலைத் தருகிறுர் உரோம வரலாற்றுசிரியர் டாசிடஸ் (Tacitus). வடக்கில் வாழ்ந்தவர்கள் ஜெர்மன் அல்லது டியூட்டானிக்கு (Teutonic), ஸ்லாவிக்கு (Slavic), ஃபின்னிஷ் (Finnish), கெல்டிக்கு (Celtic) முதலிய மொழிகளைப் பேசினுர்கள். கிரேக்க உரோமானிய நாகரிகத் தோன்றல்கள் தங்கள் பழக்கவழக்கங்களிலிருந்து மாறுபட்டவர்களை—தங்கள் மொழிகளைப் பேசாதவர்களை—மிலேச்சர்கள் (Barbarians) எனக் குறிப்பிட்டார்கள். பிற இனத்தைச் சேர்ந்தவர்கள் என்ற காரணத்தால், அவர்களைக் கொடியவர்கள், அநாகரிக மக்கள் எனச் சொல்வதற்கில்லை. ஜெர்மானியர்கள் கொடியவர்கள் எனில், உரோமானியர்கள் அவர்களைவிடக் கொடியவர்களா யிற்றே. ஓரிடத்தில் நிலையாய் வாழ்ந்தவர்கள் நாடோடிகளையும் திடீர்த் தாக்குதல்களில் ஈடுபட்டவர்களையும், ஒரு நாட்டின் மேல் படையெடுத்து வருபவர்கள் வெற்றி பெற்ற பின் அவர்களால் அங்கிருந்து விரட்டப்பட்டவர்களையும், அடிமைப்பட்டவர்களையும் முறையே அநாகரிகர்கள், அடிமைகள் என வழங்குவதும் குறிப்பிடு வதும் வரலாற்றில் பெரு வழக்காயுள்ளன. ஜெர்மானிய வகுப்பு களில் ஒரு சிலவற்றைப்பற்றி அறிதல் இப்போது இன்றியமையாத தாகிறது. ரைன் ஆற்றிற்கு வடபுறத்தில் தென்ஹாலண்டு (Holland), ரைன்லாண்டு (Rhineland) நாடுகளில் ஃப்ராங்குகள் (Franks) வாழ்ந்தார்கள். அவர்களுக்கப்பால் வடகடலின் (North Sea) கரையோரமாயும் ஜட்லாண்டு (டென்மார்க்கு) நாட்டிற்குள்ளும் ஆங்கிலோ-சாக்ஸேனியர்கள் (Anglo-Saxons) குடியேறியிருந்தார்கள். ஆஸ்திரியா (Austria) ஹங்கேரிச் (Hungary) சமவெளிகளிலும், மேல் டான்யூபு (Upper Danube) பிறகு வடக்கே ஓடர் (Oder) ஆற்றேரமாகவும் குடியேறி வாழ்ந்தவர்கள் வாண்டல்கள் (Vandals) ஆவார்கள். விசிகாத்து கள் (மேலைக்காத்துகள்) ருமேனியாவிலும், (Rumania) ஆஸ்ட் ரோகாத்துகள் (கீழைக்காத்துகள்) கருங்கடலிற்கு வடக்கேயிருந்த பரந்த நிலப்பகுதியிலும் பரவியிருந்தார்கள். இந்த மக்கள்

பேரரசின் மேற்குப் பகுதிகளை வென்று அமைத்த இராச்சியங்களி லிருந்தே இக்கால ஐரோப்பிய நாடுகள் வளர்ந்துள்ளன.

கி. பி. 395-ல் முதலாம் தியோடோஸியஸின் இளைய மகனுரான ஹோனோரியஸ் என்பார் மேற்குப் பிரிவின் பேரரசர் ஆனுர். பதினெரு வயது சிறுவருக்காக ஜெர்மானிய ஸ்டிலிக்கோ (Stilicho) என்பார் ஆட்சிப் பொறுப்பேற்றிருந்தார். மேற்கு உரோமானியப் பேரரசைக் கிழக்கு ஜெர்மானிய ஸ்டிலிக்கோ ஆட்சி செய்தது, அக்கால நிலையை அறிந்தோருக்கு அதிர்ச்சி விளைக்காது. ஏனெனில், நான்காம் நூற்றுண்டிலிருந்தே ஜெர் மானியக் குலங்களில் ஒன்றைச் சேர்ந்த காத்துகள் உரோமப் படையணிகளில் சேர்ந்தும் அரசியல் துறைகளில் அமர்ந்தும் அமைதியான முறையில் உரோம இராச்சியத்தில் ஊடுருவிய வண்ணமிருந்தார்கள். பேரரசினைத் தாக்கும் அநநியரைத் தடுத்து நிறுத்த முடியாததால் நாட்டைக் காப்பதற்கு அவர் களையே தியோடோஸியஸ் பயன்படுத்தினுர் என்பதை மேலே கண்டோம். கிழக்கு ஜெர்மானியரைவிட (Ostrogoths), மேற்கு ஜெர்மானியர் (Visigoths) பண்பட்டவர்கள். ஆதலால், அவர்கள் வரவேற்கப்பட்டார்கள். நாகரிகத்தில் தாழ்ந்த விசிகாத்துகள் உரோமானியர் உறவினுல் பண்படலாம் எனத் தியோடோஸியஸ் எதிர்பார்த்தார். ஆனுல், அவர்கள் பண்படுவதற்குப் பதிலாக உரோமானியரின் பண்பாட்டைச் சிதைத்தார்கள்.

தியோடோஸியஸ் இறந்தபின் மேற்குக் காத்துகள் பேரர சினைத் தாக்கிக் கொள்ளையடிக்கும் வாய்ப்பைப் பெற்றுர்கள். அவர்கள் தலைவராகிய அலாரிக்கு (Alaric), துணிகரமுடையவர். அவர் பேரரசினைச் சிதைக்க விரும்பவில்லை. தமக்கும் தம் மக்களுக் கும் பேரரசிற்குள் வளமான வாழ்வையே அவர் தேடி வந்தார். சில ஆண்டுகள் கிரேக்க நாட்டில் சூறையாடிய பின் அவர் இத்தாலிப் பக்கம் திரும்பினுர். இத்தாலியை அவர் மும்முறை படையெடுத்துத் தாக்கினுர்; முதல் முறை (கி. பி. 402) வெறுங் கையோடு விரட்டப்பட்டார். ஸ்டிலிக்கோ ஆட்சிப் பொறுப்பில் இருந்த வரையில் அலாரிக்கு இத்தாலிக்குள் நுழைய முடியவில்லை. பேரரசரால் அவர் கொல்லப்பட்ட பின், கி. பி. 408-ல் அலாரிக்கு நாட்டிற்குள் புகுந்து, உரோம் நகரை முற்றுகையிட் டார். இம் முறை உரோமானியர்கள் பொன்னும், பட்டும், மிளகும் கொடுத்துத் தங்கள் நகரத்தைக் காப்பாற்றிக் கொண் டார்கள். மூன்ருவது முறை கி. பி. 410-ல் அலாரிக்கு உரோம் நகரை முற்றுகையிட்டுக் கைப்பற்றினுர்; நகரைச் சூறையாடினுர்;

காத்துகளுக்கு மிகுதியும் தேவைப்பட்டவை உணவுப் பண்டங்களே. கிறித்துவக் கோயில்களும் மற்றப் பொதுத்துறைக் கட்டடங்களும் காத்துகளின் சூறையிலிருந்து மிஞ்சின. உரோம், பகைவர் வசமாகிக் கொள்ளையிடப்பட்ட செய்தி உலகைத் திகைக்க வைத்தது. இந் நிகழ்ச்சியை நாகரிகக் கால முடிவின் முன்னோடியாகவே கருதி, ஜெரோம் (Jerome) எழுதியுள்ளார். சூறையாடப்பட்ட உரோம் ஆட்சிப்பீடமன்றாயினும், எண்ணூறு ஆண்டுகளாய்ப் பகைவர் யாராலும் கைப்பற்றப்படாது சிறப்புற்றிருந்த பட்டணம் அன்றோ! உரோம் ஓரளவு தன் பழைய நிலையைத் திரும்பிப் பெற்றதாயினும், பத்தாண்டுகளாய்க் காத்துகளின் படையெடுப்புகளால் பாழாக்கப்பட்ட மேற்குப் பகுதி மறுபடியும் தன் பழைய நிலையை அடையவேயில்லை. அடுத்த ஆண்டு ஆப்பிரிக்கா செல்லத் திட்டமிட்டிருந்த அலாரிக்கு, தம் திட்டம் நிறைவேறுவதற்கு முன் இத்தாலியக் காய்ச்சலுக்கு இரையாகி மடிந்தார். மேற்குக் காத்துகள் கால் (Gaul) நாட்டின் தென்பகுதியிலும், ஸ்பெயினின் வடபகுதியிலும் குடியேறுவதற்குப் பேரரசர் இணங்கினர். ஏறக்குறைய நூறாண்டுகளுக்குப் பின்னர், அவர்கள் கால் நாட்டிலிருந்து ஃப்ராங்குகளால் விரட்டப்பட்டார்கள். ஆயினும், ஸ்பெயின் நாட்டில் கி. பி. 711 வரை—முஸ்லிம்கள் அந்த நாட்டை வென்று விசிகாத்துகளின் அரசிற்கு முடிவுகாணும் வரை—அவர்கள் ஆதிக்கம் இருந்து வந்தது.

தம் நாட்டைக் காக்கப் படைகள் தேவைப்பட்டதால், பிரிட்டனிலும் காலிலுமிருந்த உரோமப் படையணிகளை உரோமிற்குத் திரும்புமாறு ஹோனோரியஸ் ஆணையிட்டார். அந் நாடுகளிலிருந்து உரோமானிய வீரர்கள் வெளியேறவே, டியூட்டானிய மக்கள் பிரிட்டனிலும், வாண்டல்கள் காலிலும் குடியேறுவதற்கு வாய்ப்பும் வசதியும் ஏற்பட்டன. உரோம் நகர வீழ்ச்சியினால் உரோமப் பேரரசு அழிந்து போகவில்லை. ஆயினும் கி. பி. 410 முதல் மேற்கு ஐரோப்பாவில் ஆதிக்கம் சிறிது சிறிதாய்ப் பேரரசர்கள் கையை விட்டுப் பல்வேறு ஜெர்மானிய வகுப்புகளுக்குச் செல்லத் தொடங்கிற்று. உரோம் நகரத்தைக் கொள்ளையிட்ட பின், காத்துகள் தெற்கே சென்றார்கள். அவர்களுடைய நோக்கம் தானியக் களஞ்சியமாயிருந்த ஆப்பிரிக்காவைக் கைப்பற்றி, அதன் துணைகொண்டு, உரோம் நகரத்தில் ஆதிக்கஞ் செலுத்த வேண்டுமென்பதே. காத்துகளின் தலைவர் அலாரிக்கு இறந்துபோகவே, கி. பி. 429-ல் காத்து மக்களில் ஒரு கிளையினரான வாண்டல்கள், கால், ஸ்பெயின் நாடுகள் வழியாக ஆப்பிரிக்காவின்மேல் படையெடுத்து வென்றதோடு கார்த்தேஜைத்

(Carthage) தலைநகராய்க் கொண்ட ஓர் இராச்சியத்தையும் கண்டார்கள். ஆப்பிரிக்கா மாகாணம் உரோமானியப் பண்பாட்டை ஏற்றுக்கொண்டதைப் போன்றும் கிறித்துவத்தை வளர்த்தது போன்றும் வேறெந்த உரோமானிய மாகாணமும் செய்யவில்லை. திருச்சபைத் தொண்டர்களில் சிறந்த அகஸ்டின் போன்றவர்கள், ஆப்பிரிக்கர்கள். வாண்டல்களின் திருவிளையாடல்கள் ஆப்பிரிக்கப் பண்பாட்டை அழித்தொழித்து அந்த மாகாணம் மீள முடியாதவாறு செய்துவிட்டன.

வாண்டல்களைவிடக் கொடுமையில் மிஞ்சியவர்கள் ஹூணர்கள். ஆசியாக் கண்டத்தின் நடுப்பகுதியிலிருந்து அவர்கள் ஐரோப்பாவிற்கு வந்தார்கள்; குதிரைப் படையினர்களாகையால், விரைவாய் முன்னேறினார்கள். அவர்களுடைய தலைவர் அட்டிலா (Attila) என்பவர், 'மக்களை ஒறுத்த கடவுட்கருவி' (Scourge of God) எனப் பெயரிடப்பட்டார். 'அட்டிலாவின் குதிரைக்குளம்பு பட்ட இடங்களில் புல்லும் முளையாது,' எனத் தருக்கித் திரிந்தார் அவர். ஹூணர்களில் அவர் பெயர் ஒன்று மட்டுமே மறையாமலிருக்கிறது. காத்துகளைத் தாக்கி இடம் பெயரச் செய்த பின், ஹூணர்கள் உரோமப் பேரரசினைத் தாக்கலானார்கள். அவர்களை அநாகரிக மக்களெனக் கூறலாம். உரோமானியப் பண்பாட்டைச் சிறிதும் மதியாத ஹூணர்கள் கி. பி. 446-ல் கிழக்குப் பேரரசின் மீது படையெடுத்து, கான்ஸ்டான்டிநோப்பிளின் கோட்டைச் சுவர்களை அணுகினார்கள். கி. பி. 451-ல் ஜெர்மனி வழியாக, கால் நாட்டு எல்லைப்புறங்களில் அட்டிலா தம் பார்வையைத் திருப்பினார். ஏட்டியஸ் (Aetius) தலைமையில் உரோமானியர்களும் தியோடோரிக்குத் (Theodoric) தலைமையில் விசிகாத்துகளும் ஒன்றுசேர்ந்து, அவ் வாண்டில் ஷாலன் (Chalon) போர்க்களத்தில் எதிர்த்து நின்ற அட்டிலாவைப் புறமுதுகிட்டோடச் செய்தார்கள். கால் நாடு தப்பிப் பிழைத்தது. கிறித்துவத்தையும் நாகரிகத்தையும் பணயமாக வைத்து நடந்த இப்போர், வரலாற்றில் சிறப்புற்றது. ஆனால், அடுத்த ஆண்டே அட்டிலா ஆல்ப்ஸ் மலையின் கீழ்க்கணவாய்களில் நுழைந்து, இத்தாலியைத் தாக்கி, மிலான் நகரை அடைந்தார். உரோம் நகர மேற்றிராணியாரும் கத்தோலிக்கத் தலைவருமான முதலாம் லியோவின் (Leo I) வேண்டுகோளுக்கு இணங்கி இத்தாலியிலிருந்தே அட்டிலா வெளியேறினார். மீண்டும் உரோம் அவரால் தொல்லையடையவில்லை. கி. பி. 453-ல் அவர் இறந்தார்.

ஷாலன் வெற்றியோ, அட்டிலாவின் இறப்போ, உரோமானியப் பேரரசைக் காப்பாற்றவில்லை. உரோமானியத் தலைவர்

களுக்குள் பொறுமையும், தன்னலமும் மிகுந்திருந்தன. வாண்டல் தலைவர் ஜென்செரிக்கு (Genseric) கார்த்தேஜிலிருந்து மேலும் கொள்ளை அடிப்பதற்கு இடம் பார்த்துக்கொண்டிருந்தார். கடலாதிக்கம் பெற்றிருந்ததால், கி. பி. 455-ல் ஒரு வாண்டல் கடற்படையானது டைபர் ஆறு கடலில் கலக்குமிடத்திற்குச் சென்றது; தரைப்படையோ, உரோம் நகரை நோக்கி முன்னேறியது. எதிர்க்கும் ஆற்றலற்ற உரோம், வாண்டல்கள் கையில் சிக்கிச் சீரழிந்தது. அரிய பொருட்குவைகள் பல உரோமிலிருந்து கார்த்தேஜிற்குக் கடத்தப்பட்டுப் பிறகு மறைந்தன. கி. பி. 477-ல் ஜென்செரிக்கு இறந்துபோவதற்கு முன்னர், வாண்டல்களின் அரசு அதன் உச்சநிலையை எட்டியது. மேற்கு மத்திய தரைக் கடற்பகுதிகளில் உரோமானிய ஆதிக்கம் முடிவுற்றது.

கி. பி. 410-ல் உரோம் நகருக்கு ஏற்பட்ட தீங்கையும் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, அதற்கேற்பட்ட இழிவையும் ஒப்பிடின், அலாரிக்கு எவ்வளவோ நல்லவராக்கப்பட்டுவிட்டார். பியூனிக்குப் போர்களுக்குப் பின் உரோமானியர்கள் முதல் முதலாகத் தங்கள் கடற்படையைக்காட்டிலும் வலி மிக்க வாண்டல் கடற்படையைக் கண்டு அஞ்சினார்கள். பேரரசின் கற்பனைத் தோற்றம் (Illusion) இராவென்னாவைச் சுற்றியிருந்த சதுப்பு நிலங்களின் பாதுகாப்பில் மேலும் இருபத்தோர் ஆண்டுகள் பதுங்கியிருந்துவந்தது. பெயரளவில் ஒருவர் பேரரசர் எனத் தம்மைச் சொல்லிவந்தார். ஆனால், உண்மையில் ஆதிக்கம் அவருடைய படைத்தலைவரான ஒரு மிலேச்சர் கையிலேதானிருந்தது. தியோடோஸியஸ் வரிசையில் மூன்றும் வாலென்டீனியனே (Valentinian) இறுதிப் பேரரசராவர். கி. பி. 476-ல் ஓரிஸ்டிஸ் (Orestes) என்ற மிலேச்சத் தளகர்த்தர், தம்முடைய மகனான உரோமுலஸ் அகஸ்டஸ் (Romulus Augustus) என்பவரை மன்னராக்கி, அவர் பெயரால் ஆட்சி புரியவிருந்தார். தங்கள் ஊதியத்தைக் குறைக்கச் செய்த முயற்சியை எதிர்த்து வீரர்கள் ஓடோசர் (Odoacer) தலைமையில் கிளர்ந்து எழுந்தார்கள். கிளர்ச்சியில் ஓரிஸ்டிஸ் கொல்லப்பட்டு, அவருடைய மகனார் மன்னர் பதவியிலிருந்து இறக்கப்பட்டார். வெற்றி பெற்ற ஓடோசர் விரும்பியிருந்தால், தாமே மன்னர் மன்னராகியிருக்கலாம்; அல்லது, தாம் விரும்பிய ஒருவரை மன்னராக்கியிருக்கலாம். ஆனால், அரசச் சின்னங்கள் கான்ஸ்டான்டிநோப்பிளிலிருந்த கிழக்குப் பேரரசர் ஸீனோவிற்கு (Zeno) அனுப்பப்பட்டன. தம்மிடம் இத்தாலி ஆட்சிப் பொறுப்பைத் தந்து தமக்கு உரோமானிய உயர்தர அதிகாரி (Patrician) எனப் பட்டமும் அளிக்க வேண்டுமென ஓடோசர் கிழக்குப் பேரரசரை

வேண்டி நின்ருர். இத்தாலிய ஆட்சிக்குப் பொறுப்பானவர் கான்ஸ்டான்டிநோப்பிளின் பெருமன்னரே என இவ் வேண்டுகோள் காட்டாநின்றது. ஆயினும், இத்தாலியின் ஆதிக்கம் ஓடோசரிடந்தான் இருந்தது. ஓடோசர் கிழக்குப் பேரரசரை வேண்டி நின்ற நிகழ்ச்சி, பலவற்றைத் தெளிவாக்கியது. இத்தாலியில் பேரரசர் பதவியும் ஆதிக்கமும் மறைந்தன. மேற்குப் பகுதி கிழக்குப் பகுதியோடு மீண்டும் இணைந்துவிட்டது எனச் சொல்லவும் முடிந்தது. அந்தப் பெயரால், கான்ஸ்டான்டிநோப்பிளில் உரோமானிய ஆட்சி மேலும் ஆயிரமாண்டு நீடித்திருந்தது. ஒரு நூற்ருண்டு ஓடி மறைவதற்குள் இத்தாலியை வென்று அதைக் கிழக்குப் பேரரசின் பகுதியாக்கிக்கொண்டனர். ஆனல், அந்த நிலை நீடிக்கவில்லை.

ஏடிரியாட்டிக்குக் கடலிற்கு மேற்கில் இத்தாலி, ஆப்பிரிக்கா, கால், பிரிட்டன் முதலிய நாடுகள் மிலேச்சர்கள் வசமிருந்தன. இந்த நிலை கிழக்குப் பேரரசர்களின் கண்ணை உறுத்தாமலில்லை. அவர்கள் இழந்த நிலங்களை மீட்பதற்கு முயன்று இறுதியில் தோற்ருர்கள். மேற்குப் பகுதி மக்கள், இனம், மொழி, குணவியல்புகள் எல்லாவற்றிலும் வேறுபட்டு, கிழக்குப் பேரரசர்பால் எவ்வகையிலும் பற்றில்லாதவர்களாகிவிட்டார்கள். மேற்கு ஐரோப்பாவின் எதிர்காலமே அங்கு ஆதிக்கம் வகித்த மிலேச்சர்களைப் பொறுத்ததாயிற்று. அவர்களும் நெடுங்காலம் அநாகரிகர்களாய் இருக்கவில்லை. கி. பி. 800இல் உரோமப் பேரரசர் என்ற பட்டத்துடன் ஐரோப்பாவின் மேற்கில் ஒருவர் ஆதிக்கப்பீடமேறினர். ஆனல், கி. பி. 476-ல் ஜூலியஸ் சீசர் அகஸ்டஸ் முதலியவர்களால் தொடங்கப் பெற்ற பேரரசு, ஆரவாரம் எதுவுமின்றி முடிவுற்றது. இதை உலர்ந்த மரத்தில் எஞ்சிய இறுதி இலை தரையை அடைந்ததற்கு ஒப்பிடலாம். ஆரிய இனத்தைச் சார்ந்த ஜெர்மானியர்கள் உரோமப் பேரரசிற்குள் மெதுவாய் ஊடுருவிச் சிறிது சிறிதாய் அதன் பல பகுதிகளிலும் பரவியும் படையெடுத்தும், அதனைத் தாக்கியும் தாங்கியும் வந்தார்கள்; இறுதியாக மேற்குப் பகுதியில் பல புதிய நாடுகளைத் தோற்றுவித்தார்கள். அவர்களையே வரலாற்ருசிரியர்கள் உரோமாபுரியை வென்ற வீரர்களெனக் குறிப்பிடுகிருர்கள். ஜெர்மானியர்கள் முதலில் வடக்கிலும், மேற்கிலும், கிழக்கிலும் குடியேறி வாழ்ந்து வந்தார்கள்; பின்னர்த் தெற்கில் பரவி ஆதிக்கத்தைக் கைப்பற்றினர்கள். அவர்களைப் பற்றி ஜூலியஸ் சீசர் எழுதிய விளக்கக் குறிப்புகள் (Commentaries) என்ற நூல் வாயிலாகவும், உரோமானிய வரலாற்ருசிரியர்

டாசிடஸ் (Tacitus) எழுதியுள்ள ஜெர்மானியா (Germania) என்ற வரலாற்றுப் புத்தகம் வாயிலாகவும் அறியலாம்.

ஃப்ராங்குகளும், பர்கண்டியர்களும் கால் நாட்டின் வட பகுதியிலும், அதன் தென்பாகத்தில் விசிகாத்துகளும் குடியேறினார்கள். வாண்டல்கள் ஸ்பெயினில் தங்கியிருந்தார்கள்; பிறகு விசிகாத்துகளால் ஆப்பிரிக்காவிற்கு விரட்டப்பட்டார்கள். ஸ்பெயினில் பெரும்பகுதிகளில் விசிகாத்துகளே வாழ்ந்தார்கள். இத்தாலியில் ஆஸ்ட்ரோகாத்துகளும் பிரிட்டனில் ஆங்கிலோ–சாக்ஸேனியர்களும் பரவியிருந்தார்கள். இவ்வாறு ஜெர்மானியக் குலங்கள் குடியேறி நிறுவிய இராச்சியங்களில் பல சில காலத்திற்குப் பின் அழிக்கப்பட்டுவிட்டன. ஃபிராங்குகள் கண்ட நாடு (பிரான்ஸ்) அழியாது ஐரோப்பாவில் ஒரு தலைசிறந்த நாடாய்த் திகழ்ந்தது. ஐரோப்பாவைப் பழைமைப் பாதையில் திருப்புவதற்குத் துணைபுரிவது போல மிலேச்சர்கள் பேரரசைச் சிதைத்து அழிக்கும் பணியை மேற்கொண்டார்கள். பண்பட்டவர் எல்லாரையும் உள்ளடக்கிய ஓர் உலக அரசு இருந்த இடத்தில் பல சிறு நாடுகள் தோற்றுவிக்கப்பட்டன. உரோமானியர்கள் செய்யத் தவறிய அந்த அரசியல் ஆக்கவேலையை மிலேச்சர்கள் செய்யவும் வாய்ப்புப் பெற்றார்கள்.

ஐரோப்பாவில் சில நூற்றாண்டுகள் அறியாமை இருள் பரவிற்று; கொலை, கொள்ளை, கொடுமை, போர், குழப்பம், பஞ்சம், நோய் முதலியன நிறைந்திருந்தன; கலை, இலக்கியம், விஞ்ஞானம் எல்லாம் எங்கோ ஓடி ஒளிந்துகொண்டன; பள்ளிகள் மூடப்பட்டன; நகரங்கள் நலிவுற்றன; பாட்டைகள் பழுதுற்றன; அமைதியின்மையால் உணவுப் பண்ட விளைவு குறைந்தது; வாணிகம் பெரிதும் தடைபட்டது, தனிப்பட்டவர்களுக்குப் பாதுகாப்பில்லை; நல்வாழ்வில்லை; இடைக்காலத்தின் முன் பகுதியான ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டு வரை நீடித்த இருண்ட காலத்தில் (Dark Ages) அறிவு குன்றிக் கொடுமை நிறைந்து, மக்கள் மிகத் தாழ்ந்திருந்தார்கள். அதிலும் குறிப்பாக ஆறும் ஏழாம் நூற்றாண்டுகளே உண்மையான இருண்ட காலமாயிருந்தன.

# அதிகாரம் 2

**[ஐரோப்பிய நாடுகளில் கிறித்துவச் சமயம் பரவுதல்–ஆங்கிலோ–சாக்சானியர்களின் சமய மாற்றம்–போப்பாட்சி–மடாலய முறைக் கொள்கை]**

உரோமானியப் பேரரசர் தியோடோசியஸ் காலத்திற்குப் பின் பேரரசில் கிறித்துவ ஆதிக்கம் ஏற்பட்டது. ஜெர்மானியப் படையெடுப்புகளும், அவர்களால் நிறுவப்பட்ட அரசுகளும் கிறித்துவச் சமயத்திற்கு ஒரு கடுஞ்சோதனையை ஏற்படுத்தின. உரோமானியர் கிறித்துவத்தை ஏற்றதுபோல ஜெர்மானியர் ஏற்பார்களா என்ற கேள்வி எழுந்தது. தனிப்பட்ட ஜெர்மானி யர்கள் அச் சமயத்தை ஏற்றுக்கொண்டார்கள். ஆனால், ஜெர்மானிய மக்கள் படிப்படியாகவே அச் சமயத்தைத் தழுவி னார்கள். காத்துகளின் நாட்டில் மேற்றிராணியார் உல்ஃபிலா (Ulfila) நாற்பதாண்டுகள் தொண்டாற்றினார்; மறைநூலைக் கோதிக் (Gothic) மொழியில் பெயர்த்து எழுதி ஜெர்மன் மொழிக்கே முதல் நூலை ஆக்கித் தந்தார். விசிகாத்துகளிடையே பரவிய சமயக் கருத்துகள் ஜெர்மானியக் குலங்களாகிய ஆஸ்ட்ரோகாத்துகள், வாண்டல்கள், பர்கண்டியர், லம்பார்டு களுக்கும் சிறிது சிறிதாகப் பரவின. அக் குலங்களின் அரசுகள் ஐந்தாம் நூற்றுண்டில் ஆப்பிரிக்கா, ஸ்பெயின், இத்தாலி நாடு களில் ஏற்பட்டபோது மன்னர்களும் ஆளுங்கணத்தாரும் கிறித்துவச் சமயத்தினராயிருந்தார்கள். ஜெர்மானியர் அரியான் (Arian) கிறித்துவர்களாகவும், உரோமானியக் குடிமக்கள் கத்தோலிக்கர்களாகவும் இருந்ததால் அவர்களுக்குள் பகை மூண்டது. சமய ஊழியர்கள், பெனிடிக்டைன் துறவிகள் ஆகியோரின் உதவியுடன் மேலே ஐரோப்பாவில் கத்தோலிக்க மேற்றிராணியார்கள் கிறித்துவத்தைப் பரப்பி, ஃப்ராங்கு (Franks) மக்கள் அரியான் கிறித்துவர்களாகாமல் பார்த்துக் கொண்டார்கள்.

கால் (Gaul) நாட்டை ஆண்ட குளோவிஸ் (Clovis) கதோலிக்க அரசிளங்குமரியை மணந்துகொண்டு முதலில் அவர் மக்களும் பிறகு 496இல் அவரும் கிறித்தவர்களானார்கள். அவரைப் பின்பற்றி குடிமக்களும் அச் சமயத்தை ஏற்றுக் கொண்டார்கள். ஃப்ரான்சை (கால் நாட்டை) திருச்சபையின் மூத்த மகள் எனப் போப்புகள் வாழ்த்தினார்கள். ஸ்பெயின் நாட்டில் அரசோச்சிய விசிகாத்து மன்னன் 587இல் அரியான் சமயத்தைத் துறந்து கதோலிக்கச் சமயத்தை ஏற்றான். ஸ்பெயின் கதோலிக்கத் திருச்சபையின் இரண்டாம் மகளாய்க் கருதப்பட்டது.

இங்கிலாந்தில் உரோமானியர் ஆண்ட காலத்திலேயே கிறித்தவம் பரவிற்று. ஆங்கிலோ–சாக்சோனியர்களின் படையெடுப்பால் கிறித்தவச் சமயம் வேல்ஸ், கார்ன்வாலோடு ஒடுங்கி விட்டது. ஐந்து, ஆறும் நூற்றாண்டுகளில் பாட்ரிக், கொலம்பா போன்ற ஆர்வமிக்கச் சமய ஊழியர்கள் முறையே அயர்லாந்திலும், ஸ்காட்லாந்திலும் கிறித்தவத்தைப் பரப்பினார்கள். கெல்ட் மக்கள் இங்கிலாந்தில் சமயப் பணியிலிறங்கி ஆங்கிலோ–சாக்சோனியர்களைச் சமய மாற்றஞ் செய்தார்கள். அரியான் சமயத்தைப் பின்பற்றிய லம்பார்டுகளும் ஏழாம் நூற்றாண்டில் கதோலிக்கர்களானார்கள். அந்த நூற்றாண்டினிறுதியில் ஜெர்மானியரும் உரோமானியரும் ஒரே சமயத்தைப் பின்பற்றி ஆற்றல்மிக்க சமுதாயமாய் விளங்கினார்கள்.

**ஆங்கிலோ - சாக்சோனியர்களின் சமய மாற்றம்.**

இங்கிலாந்தில் கிறித்தவச் சமயத்தைப் பரப்பக் காரணமாயிருந்த கிரெகரி உரோமானிய உயர் குடியில் தோன்றிய செல்வர். சமயப்பற்றுளர். பெனிடிக்டைன் துறவியாய் இருந்தபோது, உரோம் நகரில் சில அழகிய ஜெர்மன் சிறுவர்களைக் கிரெகரி கண்டு பேசினார்; அவர்கள் ஆங்கிலேயர் என அறிந்து இங்கிலாந்திற்குச் சென்று சமயத்தைப் பரப்பவிழைந்தார். அந்த விருப்பம் நிறைவேறுவதற்கு முன் அவர் போப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆயினும், ஆங்கிலச் சிறுவர்களை மறக்காமல் பெனிடிக்டைன் துறவிகளை அகஸ்டின் தலைமையில் இங்கிலாந்திற்கு அனுப்பினார். 597இல் அவர்கள் கெண்டுப் பகுதியில் சமயத் தொண்டைத் தொடங்கினார்கள். கெண்டு மன்னன் எதெல்பெர்ட் கிறித்தவ இளவரசி பெர்தாவை மணந்திருந்தார். கிறித்தவத் தொண்டர்களின் கொள்கைகளும் வாழ்வும் அவர் மனதைக் கவர்ந்தன. ஓராண்டிற்குள் எதெல்பெர்ட் கிறித்தவரானார்; கெண்டு மக்களும் அவரைப் பின்பற்றலானார்கள். பிற்காலத்தில்

அகஸ்டின் வாழ்ந்த காண்டர்பரி சமயத் தலைநகராயிற்று; அகஸ்டின் முதல் தலைமைக் குருவாய்க் கருதப்பட்டார்.

கெண்டிலிருந்து சமய ஊழியர்கள் மற்ற ஆங்கிலோ சாக்சோனிய அரசுகளுக்குச் சென்று மக்களிடத்தில் தங்கள் கிறித்தவக் கருத்துகளைப் பரப்பினார்கள். கெண்டு இளவரசி எதெல்பர்கா வடக்கில் நார்த்தம் பிரியா அரசன் எட்வினை மணந்தாள்; அவளைத் தொடர்ந்து சென்ற சமய ஊழியர் பாலினஸ் மன்னரையும் மக்களையும் தம் கொள்கைக்குத் திருப்பிக் கொண்டிருந்தபோது புறச்சமயத்தைச் சேர்ந்த மெர்சியா நாட்டரசன் பெண்டா எட்வினைப் போரில் தோற்கடித்துக் கொன்றான். பெண்டா இறந்த பின்னரே அப் பகுதியில் கிறித்தவம் வேரூன்ற முடிந்தது.

நார்த்தம்பிரியாவை ஆண்ட ஆஸ்வால்டு 634இல் ஐயோனு மடத் தலைவர் அனுப்பிய கெல்டிக் ஊழியர்களின் துணைகொண்டு மீண்டும் தன் நாட்டில் கிறித்தவத்தைப் பரவச் செய்தார். கெல்டிக் சமயக் கருத்திற்கும் கதோலிக்கக் கொள்கைக்கும் இடையே இருந்த கருத்து வேறுபாட்டிற்குத் தீர்வுகாண 664இல் விட்பி (Whitby)யில் ஆஸ்வி ஓர் அவையைக் கூட்டினான்; இரு சாராரின் வாதங்களையும் கேட்டு இறுதியாக உரோமானியத் திருச்சபையின் மேலாண்மையை ஏற்றான். ஆஸ்வியின் இந்த முடிவு சமயத் துறையில் ஐரோப்பியக் கிறித்தவச் சமுதாயத்தோடு இங்கிலாந்தை இணைத்தது. இவ்வாறு உரோமானியப் பண்பாட்டு வட்டத்திற்குள் இழுக்கப்பட்ட இங்கிலாந்தின் வரலாற்றில் பெரிய மாற்றம் ஏற்பட்டது. கதோலிக்கத் திருச்சபையின் முயற்சியால் நாடு கல்வியிலும் ஆட்சித்துறையிலும் முன்னேறிப் பண்பட்ட ,ஐரோப்பிய நாடுகளில் ஒன்றாகி ஐரோப்பிய வரலாற்று நீரோட்டத்தில் இணைந்துவிட்டது. சமயத்துறையில் ஏற்பட்ட ஐக்கியம் இங்கிலாந்தை அரசியலிலும் ஒன்றுபடுத்தப் பெரிதும் உதவிற்று.

மேற்கில் காத்துகள் நிறுவிய இராச்சியங்கள் நீடித்திருக்கவில்லை. இத்தாலியையும் ஐரோப்பாவின் மேற்குப் பகுதிகளையும் மீண்டும் தங்கள் ஆதிக்கத்திற்குட்படுத்த வேண்டுமெனக் கிழக்குப் பேரரசர்கள் செய்த முயற்சிகள் நிரந்தரமான வெற்றியளிக்கவில்லை. எங்கும் கிரேக்க - உரோமானிய நாகரிகம் நலிந்தும் சிதைந்தும் காணப்பட்டது. இந்த நிலையில் ஒழுங்கையும் அமைதியையும் ஏற்படுத்தப் புதிய அமைப்பு ஒன்றும் தோன்றாது போன்றிருந்தது. ஆனால், தளர்ச்சியும் தோல்வியும் மட்டுமே உள்ள

ஒரு வரலாற்றுக் காலம் இல்லையாகையால், இடைக்காலத்தின் சிறப்புக் கூறுகளைத் தோற்றுவித்த சில சத்திகள் ஆறும் நூற்றுண்டிலும் ஏழாம் நூற்றுண்டிலும் உருவாகி வந்ததைப் பார்க்கிறேம்.

இடைக்காலம் சமயத்தால் ஆக்கப்பட்டது. வேறு எந்த ஒன்றினுலும் ஆக்கப்படவில்லை. பொது நிலை மக்களால் தோற்றுவிக்கப்படுகின்ற சமயத்திற்கு அமைப்பும் ஆதிக்கமும் தேடித்தருபவர்கள் அதன் குருமார்கள். வழிபாடு, அறவுதவி, ஒழுங்குமுறை முதலியவற்றிற்காகச் சேர்ந்திருந்த எளிய மக்களின் கூட்டங்களே தொடக்கக் காலக் கிறித்துவச் சமுகங்களாகும். துன்புறுத்தல், தவருன எண்ணம், எதிர்ப்பு இவையெல்லாம் மீறிக் கிறித்தவச் சமயம் பேரரசில் பரவிக்கொண்டிருந்தது. மூன்ருவது நூற்றுண்டினிறுதியில் பேரரசிலிருந்த கிறித்தவர் சிறுபான்மையோராயினும், சங்க அமைப்புடன், வளர்குறியோடு காணப்பட்டனர். அவர்கள் பெரும்பாலும் நகரங்களிலேதான் இருந்தார்கள். இலத்தீன் மொழியில் 'பேகன்' (Pagar) என்ற சொல்லின் பொருள் 'நாட்டுப்புறவாசி' என்பதாகும். நாட்டுப்புறவாசிகள் பெரும்பாலும் பண்டைச் சமயத்திலேயே திளைத்திருந்தார்கள். அதனுலேயே பண்டைச் சமயத்தைப் பின் பற்றியவர்களைப் 'பேகன்கள்' என்ற ஏளனச் சொல்லால் கிறித்துவர்கள் வழங்கினுர்கள்.

கான்ஸ்டன்டைன் (306-337) காலத்தில் கிறித்துவம் அரசொப்பிய சமயமாயிருந்து, பின்னர்த் தியோடோஸியஸ் (379-395) காலத்தில் பேரரசின் ஒரே சமயமாகி, அதன் அமைப்பு முறைகளில் வளர்ந்து, செல்வாக்குடனிருந்து, உரோமப் பேரரசு கிறித்துவப் பேரரசாய்த் திகழ்ந்தது. கிறித்துவச் சமய அமைப்பு முறை பேரரசின் அமைப்பையே முன் மாதிரியாய்க் கொண்டிருந்தது. கான்ஸ்டன்டைன் சமய மாற்றத்திற்குப் பின், கத்தோலிக்கத் திருச்சபை சமயத் துறையில் ஒரு பேரரசாய் வடிவெடுத்தது. பேரரசிற்குப் பேரரசர் எவ்வாறு இன்றியமையாதவராயிருந்தாரோ, அவ்வாறே கிறித்துவத் திருக்கூட்டத்திற்கும் ஒரு தலைவர் இல்லாமல் சமய அமைப்பும் ஆட்சியும் நன்கு நடைபெறவில்லை. கொள்கை ஒற்றுமை, ஒரே தன்மைத்தான சமயச் சடங்கு ஆகிய இவ்விரண்டும் நிலைக்க வேண்டுமாளுல், ஒரு சமயத் தலைவன் வேண்டப்படுகிறுன். ஐயத்தெளிவுக்கும் நடுவுநிலை நின்று சச்சரவுகளைத் தீர்த்து வைப்பதற்கும், குடும்பத்திற்குத் தந்தை இருப்பது போலத் திருச்சபைக்கும் ஒரு தந்தையார் (Pope) நாளாவட்டத்தில் கிடைத்தார். உரோம் நகர மேற்றிராணி

யாரைப் போப்பென்று வழங்கும் சொல் வழக்கு கி. பி. 280 அளவில் உண்டாயிற்று. போப்பென்பது, தந்தையார் என்றே பொருள்படும். ஜெர்மானியர் படையெடுப்புகளுக்கு முன் உரோமப் பேரரசில் கிறித்துவமே முதன்மையான சமயமாயிருந்தது. மேற்கில் ஜெர்மானியர்கள் பெருங்கூட்டமாய்ப் படையெடுத்து வந்து தங்கள் இராச்சியங்களை நிறுவியதால், கிறித்துவச் சமயம் ஒரு கடுஞ்சோதனைக்குள்ளாயிற்று. இந்த ஜெர்மானியர்களைக் கிறித்துவத் துறவிகளே சமய மாற்றஞ் செய்தார்கள். அறவாழ்வையும் சமயத்தொண்டையும் மேற்கொண்ட ஆடவரும் பெண்டிரும் சமய வரலாற்றின் தொடக்கத்திலிருந்தே அரும்பணியாற்றி வந்தனர். சமய இயக்கங்களுக்கெல்லாம் துறவற வாழ்வு பொதுவானதே. பற்பல ஆசைகளும் நிறைந்த உலகத்தை விடுத்துத் தனித்து வாழ்ந்து, இடையறுது கடவுட் சிந்தனையிலும் வழிபாட்டிலும் ஈடுபடுவதற்கென்றே ஒரு சிலர் முன் வந்தனர். நம் நாட்டில் பன்னெடுங்காலமாய் இருந்து வந்த இந்த வழக்கம், கி.பி. நான்காம் நூற்றுண்டின் தொடக்கத்தில் எகிப்தியக் கிறித்தவரிடையே பரவியது. தனித்து வாழ்ந்த எகிப்தியத் துறவிகள், அளவிறந்த துன்பங்களுக்குத் தங்களை ஆளாக்கிக்கொண்டு, உடலை ஒடுக்குமளவிற்குப் பல வகைச் சித்திரவதைகளுக்குத் தங்களை உட்படுத்தி நடத்தும் வாழ்வே துறவற வாழ்வெனக் கருதினுர்கள். மேற்கிலிருந்த துறவிகள், அத்தகைய வெறிச் செயல்களை மேற்கொள்ளாமல், சமயப் பற்றுள்ள மற்றவர்களோடு சேர்ந்து வாழ்வதே சிறந்ததெனக் கருதினுர்கள். உலகக் கட்டுகளினின்று விடுபடுதற்காகத் துறவற மேற்கொள்வதும், இம்மை மறுமையைப் பற்றிச் சிந்திப்பதற்காகத் தனித்து வாழ்வதும், சமயத் தொண்டும் சமுதாயத் தொண்டும் ஆற்றுவதற்காக மடங்களில் கூடி வாழ்வதும் ஆகிய செயல்களை ஐரோப்பியத் துறவிகள், மடாலய முறைக்கொள்கை மூலம் உருவாக்கி வளர்த்தார்கள். தனித்து வாழ்ந்து, தம் காயத்தை வருத்தித் தவமியற்றி, முத்திக்கு வழி தேடுவது கீழை நாட்டினரின் பழையமுறை. பலருடன் கூடி வாழ்ந்து, மணவாழ்க்கையை மேற்கொள்ளாது, மறை நூலை ஓதுவதிலும், சமயத் தொண்டிலும் உடலுழைப்பிலும், சமூகப் பணியிலும் காலத்தைப் பகிர்ந்து செலவிட்டு வாழ்வது மேலை நாட்டில் பண்டைக் காலந்தொட்டு வளர்ந்து வரும் சிறந்த முறையாகும். இத்தகைய ஒழுக்கத்தோடு ஒழுங்காய்த் தங்கள் அறவாழ்வை வகுத்துக்கொண்ட துறவிகளும் அறநங்கையர்களுமே மடங்களில் காணப்பட்டார்கள். அறவுதவியும் அன்புக் கனிவும் பயின்ற மடாலய வாழ்வே இயேசு கற்பித்த கோட்பாட்டிற்கு ஒத்த வாழ்வாயிருந்தது என்பதில் எட்டுணை ஐயமுமில்லை.

ஆரும் நூற்றாண்டில் கிறித்துவத் திருச்சபை ஆற்றல் மிகுந்த உறுதியான ஓர் அமைப்பை மேற்கொண்டது. பிற்காலத்தில் அதற்கேற்பட்ட செல்வாக்கிற்கும் அது கையாண்ட அதிகாரத்திற்கும் காரணமாய் இருந்தவை மடாலய முறைக்கொள்கையும் (Monasticism), போப்பின் ஆட்சியுமே (Papacy) ஆகும்.

இந்த மடாலய முறைக் கொள்கை, சிறிய ஆசியாவில் வாழ்ந்த பேசில் (Basil) என்ற துறவியார் வகுத்த விதிகளைப் பின் பற்றிக் கிழக்குப் பேரரசில் வளரலாயிற்று; மேற்கிலோ, இத்தாலியத் துறவியார் பெனிடிக்டு (Benedict) கண்ட முறையை ஏற்று வளரலுற்றது. மடாலய முறைக் கொள்கையை வளர்த்து உருவாக்கியவர்களில் தலை சிறந்தவர் பெரியார் பெனிடிக்டு ஆவர். ஐரோப்பிய வரலாற்றை உருவாக்கிய சக்திகளில் ஒன்றாவதற்கான வடிவத்தை அதற்களித்த பெருமை அவருடையதாகும். பெனிடிக்டு மடாலய வாழ்வைத் தோற்றுவிக்கவில்லை; அதற்கான சட்ட திட்டங்களை வகுத்து உறுதியான ஓர் அமைப்பை ஏற்படுத்தினார்; கி.பி. 520இல் மான்டி காசினோ (Monte Cassino) என்ற ஒரு மலையுச்சியில் ஒரு மடத்தை நிறுவினார். அவர் வாய்மொழியிலே அது 'கடவுட்பணி செய்யும் பள்ளியாய்' விளங்கிற்று. மடத்துத் துறவிகள் தாங்கள் தேர்ந்தெடுத்த மடத்துத் தலைவருக்கு எல்லா வகையிலும் கட்டுப்பட்டவர்கள். மடத்திலுள்ள துறவிகள் எல்லோருடைய செயல்களுக்கும் கடவுள் முன்னிலையில் மடத்துத் தலைவரே பொறுப்பேற்றிருந்தார். துறவிகள் பாசுரங்களைப் பாடித் தெய்வ வழிபாடு செய்த நேரம் போக, மற்றக் காலமெல்லாம் உழவுத் தொழில்; மடத்திற்கான உணவு தயாரித்தல் போன்ற பணிகளில் ஈடுபட வேண்டும். ஏனெனில், 'சோம்பல் ஆன்மாவின் பகைவன்' என்பது பெனிடிக்டின் திருவாக்காகும். பெனிடிக்டைன் மடங்களில் உறைந்த துறவிகள் தரிசு நிலங்களை விளைநிலங்களாக்கி, உழவுத் தொழிலுக்கு ஆக்கமளித்தார்கள்; ஏழைகளை ஆதரித்தார்கள்; கையெழுத்து நூல்களைக் காத்ததோடு அவற்றைப் பல படிகள் எடுத்துதவி, ஐரோப்பிய அறிவு வளர்ச்சிக்குப் பெரும் பணியாற்றினார்கள். சுருங்கச் சொன்னால், மடத்து வாழ் துறவிகள் அவர்கள் காலத்து ஆசிரியர்களாயும் பயிர் செய்யும் குடி மக்களாகியும் உழைத்தார்கள் என்னலாம். இத்தாலியப் பயிர்த் தொழிலில் அவர்களால் ஒரு மறுமலர்ச்சியே ஏற்பட்டது என்னலாம். ஒவ்வொரு மடமும் தன்னளவில் உரிமையோடு செயலாற்றித் திருச்சபைத் தந்தையாராகிய போப்பின் நேரடி ஆதிக்கத்தில் இருந்து வந்தது. மிலேச்சன், உரோமானியன். அடிமை, உரிமை பெற்றவன் என்ற வேறுபாடின்றி, மக்கள் மடங்களிற் சேர்ந்தார்கள். முடியாட்சி அமைப்பு முறையில் இயங்கிய

திருச்சபையின் முன்னேற்றத்திற்கும், தற்காப்பிற்கும் எனச் சூள் உரை பகர்ந்து பணியாற்றிய கோட்டைப் படையாய் மடாலயந் தோறும் துறவிகள் காட்சியளித்தார்கள்.

ஐரோப்பாவில் அடுத்த எண்ணூறு ஆண்டுகளுக்கு அறிவியல் சமுதாயத் துறைகள் இரண்டிலும் மடாலயத் துறவிகளே மிகுந்த செல்வாக்குப் பெற்ற சத்திகளாய் விளங்கினர்கள். கல்வியும் இலக்கியமும் மேலும் மேலும் அருகி வந்த அக் காலத்தில், மடங்களிலே அணைந்து போகாது காக்கப்பட்ட அறிவொளி பிற் காலத்தில் ஐரோப்பிய மறுமலர்ச்சியைச் சுடர் விட்டெரியச் செய்தது. கன்னியர் மடங்களிலே அறநங்கையர்கள் ஏற்றுக் கொண்ட பணியும் பொறுப்பும் பெண்களின் நிலையைப் பெரிதும் உயர்த்தின. நாட்டுக் கைத்தொழிலும் பயிர்த்தொழிலும் மடங் களிலிருந்து பெற்ற ஆதரவு அளவிடற்பாலதன்று. எல்லா வற்றையும்விடத் திருச்சபைச் செல்வாக்கைப் பரப்புவதிலும் போப்பின் ஆட்சியைப் பேணுவதிலும் மடங்களின் பங்கு சிறிதன்று.

திருச்சபை அமைப்பு முறையைச் செம்மையாக்கி உரோம் நகர மேற்றிராணியார் பீடத்தை, அதையொத்த பீடங்களுக் கெல்லாம் தலைமைப் பீடமாக்கிப் போப்பின் ஆட்சிக்கு அடி கோலியவர் பெரியார் கிரெகரி (Gregory the Great) என்பவராவர். ஆறும் நூற்றுண்டில் வாழ்ந்த மூன்று பெரியார்கள், பிற்கால ஐரோப்பிய வரலாற்றைப் பெரிதும் செப்பனிட்டவர்கள். ஜஸ்டினியன் சட்டங்களும், பெனிடிக்டின் துறவியர் கூட்டமும், சமுதாயத்தை மாற்றியது போல, போப்பின் ஆதிக்கத்தை வளர்த்தது வழியாக கிரெகரி ஐரோப்பியச் சமுதாயத்தில் ஒரு புரட்சிக்கு வித்திட்டார். அவர் கி.பி. 540இல் செல்வக் குடும்பத்தில் பிறந்து, உயர்கல்வி பயின்று உரோம் நகர ஆட்சியில் ஓர் அதிகாரியாய் அமர்ந்தார். ஆயினும், மக்களுக்கு உதவ முடியாத நிலை கண்டு சமயத் தொண்டராஞர்; தம்முடைய அரண்மனையை ஒரு மடமாக்கியதன்றி, வேறு மடங்கள் நிறுவுவதிலும் தம் சொத்தையெல்லாம் ஈடுபடுத்தினர். செல்வச் சீமானுயிருந்து, உலக இன்பங்களைத் துறந்து, துறவியான அசிசி நகர் ஃபரான்ஸிசை (Francis of Assisi)ப்போல அவரும் துறவற வாழ்க்கையை மேற் கொண்டார்; பெனிடிக்டு நிறுவிய மடங்களில் ஒன்றின் தலைவ ராஞர்; மடாலய வாழ்விலிருந்து போப்பாகிய முதல் துறவியார் அவரேயாவர். பிறப்பு, பயிற்சி, திறமை எல்லா வகையிலும் அப் பதவிக்கு அவர் மிகப் பொருத்தமானவர். அவர் பாட்டனுர் ஒரு போப்பு. அவர் தாயார் கன்னி மாடத்து உறைந்தவர். போப்பின் தூதராய்க் கான்ஸ்டான்டி நோப்பிளில் ஏழாண்டுகள் தங்கியிருந்த

போது, லம்பார்டுகளின் தாக்குதல்களால் தொல்லைப்பட்ட இத்தாலி நாட்டிற்குக் கிழக்குப் பேரரசரால் உதவ முடியாது என்ற உண்மையைக் கிரெகரி கண்டார்; இத்தாலி நாடு சொந்த முயற்சியாலேயே தன் வாழ்வையும் வருங்காலத்தையும் செப்பனிட்டுக் கொள்ளவேண்டும் என்ற உறுதியான உணர்வோடு உரோமிற்குத் திரும்பி வந்தார். பின்னர் போப்பாய் அரியணை யேறிய கிரெகரி, அந்தத் திட நம்பிக்கையைத் தம் கொள்கை முறைக்கு ஆதாரமாய்க் கொண்டார். கிரெகரியின் பதினன்காண்டு ஆட்சிக்காலத்தில், அவருடைய குறிக்கோள்களின் பெருந்தன்மை யும், செயல்வகை அறிவும் சேர்ந்து கொள்கை நிலையிலிருந்த உரோம் நகர மேற்றிராணியாரின் முதன்மையையும் ஆட்சியையும் உண்மையாகச் செய்தன. கிரெகரி காலத்தில் போப்பின் ஆட்சி உலக வல்லரசுகளில் ஒன்றாகி வந்ததெனலாம். இந்தப் போப்பின் ஆட்சியைப் பேரரசின் ஆவியுருவென்று ஹாப்ஸ் (Hobbes) என்ற அரசியல் எழுத்தாளர் வழங்குகிறார்.

கி.பி. 590இல் கிரெகரி போப்பாகிய காலம் குழப்பம் மிக்க கொடிய காலமாகும். அரசியல் அறிஞராகிய கிரெகரிக்கு அதுவே வாய்ப்பாயிற்று. இத்தாலியை லம்பார்டுகள் போரிட்டும் கொள்ளையடித்தும் பாழாக்கிக்கொண்டிருந்தார்கள், மூர்களின் (Moors) கொள்ளை, விசிகாத்துகளின் தளர்ச்சி, பைசான்டைன் மன்னர்களின் வலிமைக் குறைவு இவற்றினல் ஸ்பெயினும் ஆப்பிரிக்காவும் அரசியற்குழப்பத்தில் ஆழ்ந்திருந்தன; ஃப்ரான் சில் தெற்கு-வடக்குச் சண்டைகள் நடைபெற்று வந்தன. உரோ மானியர்கள் காலத்தில் கிறித்துவத்தைத் தழுவியிருந்த பிரிட்டன் சாக்ஸேனியர் படையெடுப்பிற்குப் பிறகு பேகன் சமயத்திற்கே திரும்பிவிட்டது. மேலும், புறச்சமயமும் கொள்கை முரண்பாடும் இல்லாமலில்லை. திருச்சபையிலிருந்த பல மேற்றிராணியார்கள் முறையற்ற முறையில் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். இந்த நிலையை மிகக் கூரிய அறிவுடனும் ஆற்றலுடனும் சமாளிக்கக் கிரெகரி திட்டமிட்டார். அவர் காலத்திற்கு முந்தி, மதிப்பிற் குரிய உரோம் நகர மேற்றிராணியார், அவருடைய ஆட்சிப் பகுதிக்கப்பால் எவ்வித ஆதிக்கமும் பெற்றிருக்கவில்லை. ஆனல், தம்முடைய உயர்குணங்களாலும் அரசியற்குழப்பச் சூழ்நிலை யாலும் மேற்கிலுள்ள எல்லாக் குருமார்களும் தம்முடைய மேலாண்மையை ஏற்குமாறு கிரெகரி செய்து விட்டார். கிழக்கிலும் அவருடைய ஆணைச் சக்கரம் செல்லாமலில்லை. நாடாள்வோருக்கும் மேற்றிராணியார்களுக்கும் அவ்வப்போது எழுதிய கடிதங்கள் வாயிலாகவே தம் ஆட்சியை அவர் நிலை நாட்டிவிட்டார்.

திருச்சபை அமைப்பில், உரோம் நகரும் அதன் மேற்றிராணியாரும் முதன்மை பெறப் பல்வேறு காரணங்களால் வாய்ப்பும் வசதியும் கிடைத்தன, ஆயினும், போப்புகள் கொண்டாடிய உரிமைகளைக் கிறித்துவ உலகம் அவர்களுக்கு அளிக்க நெடுங்காலமாயிற்று. ஆதியில், வெளியுலகத்தால் அறியப் படாதவர்களே போப்புகளாயிருந்தார்கள். மேலும், அவர்கள் தத்துவ வாதிகளாகவோ, சமயச் சித்தாந்திகளாகவோ இல்லை. திருச்சபைக் கோட்பாடும் அவர்களால் உருவாகவில்லை. இந்த நிலையில் கிறித்துவத்தைப் பரப்பும் கட்டத்தைத் தொடங்கியவர் கிரெகரியேயாவார். யாராவது ஒரு போப்பு அக் காலத்தில் மேன்மை பெற்று விளங்கினுரென்றால், அது அரசியலறிவுத்துறையிலிருக்குமேயன்றி, சமயத்துறையிலன்று. ஆனுல், வேறெந்தக் கண்காணித்துவத்திற்கும் இல்லாத பேரும் புகழும் உரோம் நகரத்திற்கு இருந்தன. காரணம் யாதெனில், அப் புனித நகரிலேதான் இயேசுவின் முதல் மாணவர்களான பீட்டரும் (Peter) பாலும் (Paul) கிறித்துவக் கொள்கையைப் பரப்பி. கிறித்துவின்பால் தாங்கள் வைத்திருந்த நம்பிக்கைக்காகத் தங்கள் உயிரையும் கொடுத்தார்கள். அங்குள்ள அவர்கள் கல்லறைகளும் உரோம் நகருக்குத் தனிச்சிறப்பளித்தன. அன்றியும், விவிலிய நூலில் காணப்படும் குறிப்பின்படி, திருச்சபைக் கட்டடத்திற்கு அடிக்கல் போன்று திருத்தொண்டர் பீட்டர் விளங்கினுரென இயேசுவினுல் அவர் பாராட்டப்பட்டுள்ளார். பீட்டர், தாம் பெற்ற இம்மை மறுமைத் திறவுகோல்களை, லீனஸ் (Linus) என்ற முதல் உரோம் நகர மேற்றிராணியாரிடம் தந்து, தம் தெய்வப் பணியையும் அவரிடமே ஒப்படைத்தாராம். இவ்வாறு பீட்டர் அறிந்திருந்த கிறித்துவ உண்மையைப் பாதுகாக்கும் புனிதப் பணி உரோம் நகர மேற்றிராணியாருக்கே உரித்தாகியது.

உரோம் நகரோடு போட்டியிட்ட ஜெருசலம் (Jerusalem) யூதர் கலவரமொன்றின் போது உரோமானியப் படையினுல் கி.பி. 70இல் அழிக்கப்பட்டுவிட்டது. பேரரசர்கள் உரோம் நகரில் தங்கி ஆண்டிருந்தால், உரோம் நகரத் திருச்சபை அவர்களுக்குக் கட்டுப்பட்டே இருந்திருக்கும். பேரரசின் தலைநகர் கான்ஸ்டான்டிநோப்பிளுக்கு மாற்றப்பட்டதாலும், ஜெர்மானிய மிலேச்சர்களின் இத்தாலியப் படையெடுப்புகளினுலும் உரோம் நகரில் போப்பின் ஆட்சி ஏற்பட நல்ல சூழ்நிலை உருவாயிற்று. பேரரசரும் அவருடைய செங்கோலும் விட்டுச் சென்ற வெற்றிடத்தை உரோம் நகரிலிருந்த போப்பும் அவருடைய ஆன்மிக ஆதிக்கமும் நிரப்பின. ஹூணர்கள், சாரசன்கள் (Saracens), லம்பார்டுகள் முதலியோர் இத்தாலியைத் தாக்கிய

போது, அவர்கள் துன்பங்களைப் பகிர்ந்துகொண்டும், பின்னர் அங்கு அமைதி நிலைபெறச் செய்தும், மற்றும் இத்தாலிய நாகரிகத்தின் காவலராயும் மக்கள் தலைவராயும் விளங்கியவர் போப்பாண்டவரேயன்றிப் பேரரசர் அல்லர். உரோம் நகரைத் தாக்காது, ஹூணர் தலைவர் அட்டிலா இத்தாலியிலிருந்து வெளியேறியதும், உரோம் நகரின் பொருள்களைக் கொள்ளையிட்ட வாண்டல் தலைவர் ஜென்செரிக்கு, அந்நகர மக்களை மிகுதியாய்த் துன்புறுத்தாது நகரிலிருந்து நீங்கியதும், முதலாம் போப்பு லியோ துணிந்து அவர்கள் முன் நின்று வேண்டிக்கொண்டதன் விளைவேயாகும். மிலேச்சர்களின் அறியாமை குருமார்களின் உயர்வுக்குக் காரணமாயிற்று. அதே போலத் திருச்சபை ஆட்சிக்கும் செல்வாக்கிற்கும் பேரரசின் குழப்பநிலை வழி கோலியது. லம்பார்டுகளோடு தாற்காலிகப் போர் நிறுத்த ஏற்பாடு ஒன்றைச் செய்து போப்புக் கிரெகரி உரோம் நகரைக் காப்பாற்றினார். இவ்வாறு அரசியலில் தலையிட்டுப் போப்புகள் தங்கள் வலிமையைப் பெருக்கிக் கொண்டார்கள்.

திருச்சபைத் தந்தையாரின் அரசியல் செல்வாக்குடன் பொன்னும் பொருளும் இணைந்து, போப்பின் ஆட்சிக்கு வலுவூட்டின. சமய அன்பர் பலர் தம் நிலங்களையும் ஏனைய பொருள்களையும் திருச்சபைக்குக் கொடுத்தனர். போப்பின் ஆட்சிக்கு ஒரு நல்ல பொருளியல் அடிப்படை தேவையென அறிந்த கிரெகரி, பீட்டரின் (திருச்சபையின்) சொத்தைச் சிக்கனமாயும் திறமையாயும் பராமரித்து, வருமானத்தை வளர்த்துக்கொண்டார்.

உரோம் நகரில் பெரியார் கிரெகரி அரசோச்சினர் என்றே சொல்லலாம். சமயத்தைப் பரப்பும் தொண்டர்களும், மடங்களில் வாழ்ந்த துறவிகளுமே அவருக்கிருந்த ஆன்மிகப் படைகள். அன்பர்களின் காணிக்கையும் திருச்சபைப் பண்ணைகளின் வருமானமும் அவர் பெற்ற அரசிறையாகும். லம்பார்டுகளுடன் உடன்படிக்கை செய்து கொண்டு போரைத்தடுத்து அமைதியை நிலைநாட்டின பெருமையும் அவருக்குண்டு. உரோம் நகரின் பாதுகாப்பு, அதனைச் சுற்றியிருந்த பகுதியின் ஆட்சிப் பொறுப்புப் போன்ற சமயம் சாரா அதிகாரங்களும் அவருடைய சமயப் பணி அலுவல்களுடன் சேர்ந்து போப்பின் ஆட்சியை உருவாக்கின.

ஆங்கிலேயரிடையில் கிறித்துவத்தைப் பரப்பி அவர்கள் நாட்டை மீண்டும் திருச்சபையின் ஆதிக்கத்தில் கொண்டு

வரவேண்டுமென்பது கிரெகரியின் நீண்ட நாள் அவா. அவர் போப்பாவதற்கு முன் உரோம் நகரின் அடிமைச் சந்தையில் ஆங்கிலச் சிறுவர் இருவரைப் பார்த்த நாள் முதல், அவருக்கு அந்த ஆவல் இருந்து வந்தது. ஆதலால், அவர் போப்பாகிய பின் ஆங்கில நாட்டில் கிறித்துவத்தைப் பரப்பும் பொருட்டு, அகஸ்டின் என்ற பெரியாரை இங்கிலாந்திற்கு அனுப்பினார். அங்கிருந்த மிலேச்சர்களின் கோயில்களை அழிக்காமல், அவற்றி லிருந்த தெய்வச் சிலைகளை மட்டும் நீக்கிவிட்டதோடு, கிறித்துவ விழாக்களைக் கொண்டாடுவதில் மிலேச்சரின் சடங்குகளையும் திருத்தி இயலுமளவு சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்தார்; மற்றும் அமைதியான முறையில் இங்கிலாந்தைக் கிறித்துவ நாடாக்கத் திட்டமிட்டு அதை ஓரளவு நிறைவேற்றவும் செய்தார். இவ்வாறு, மேற்குப் பேரரசு அழிவுற்றுக் கிடந்த இடத்தில் ரோமாபுரிக்கென ஒரு புதுப் பேரரசைக் காண முயன்றார் கிரெகரி. இம் முயற்சியில் அவருக்குத் துணை செய்தது சமயத்தைப் பரப்பும் ஆவலேயன்றி, படைவலிமையன்று. உரோமப் படையணிகள் சென்று மிதிக்காத நாடுகளைச் சிப்பியோக்களும் (Scipios) சீசர்களும் (Caesars) சிந்தித்தும் பார்க்கமுடியாத புதிய நாடுகள் பலவற்றை அச் சமயப் பேரரசு சமயத்தொண்டர்களின் துணைகொண்டு தன்னாதிக்கத்தில் கொண்டு வரவிருந்தது.

திருச்சபையின் சடங்கு முறைகளும், வழிபாட்டு முறைகளும் இசையும் கிரெகரியின் கருத்தையும் கவனத்தையும் கவர்ந்தன, கிழக்கில் கிறித்துவம் மங்கி மறைந்து கொண்டிருந்த ஏழாம் நூற்றாண்டினிறுதியில் ஜெர்மானிய மேற்குப் பகுதி கிறித்துவத்தை மேலும் தழுவிக்கொண்டிருந்ததென்றால், அது கிரெகரியின் நுண்ணிய அரசியலறிவினாலும், செயல் திறமையினாலுமே என்பதில் எட்டுணை ஐயமுமில்லை.

# அதிகாரம் 3

**[கிழக்குப் பேரரசு ஐஸ்டினியன் (Justinian) உரோமப் பாரசீகப் போர்கள் கிழக்குப் பேரரசு.]**

ஓரிஸ்டிஸ், ஒடோசர் என்னும் படைவீரர் இருவரும் போரிட்டதில் முன்னவர் தோற்று இறக்கவே, பின்னவர் பெயரளவில் பேரரசராயிருந்த அகஸ்டஸ் உரோமுலஸை விலக்கிவிட்டு கி.பி. 476இல் இத்தாலி நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டதை முன்னரே அறிந்தோம். ஜெர்மானிய வகுப்பைச் சேர்ந்த ஒடோசர், கான்ஸ்டான்டி நோப்பிள் பேரரசர் தலைமையை ஏற்றே ஆட்சிப்பீடத்தமர்ந்திருந்தார். ஆயினும், வேறெந்த மாகாணத்தையும் விட இத்தாலி நாடு மிலேச்சர்கள் கையில் இருப்பதைக் கண்டும் வாளாவிருக்கக் கிழக்குப் பேரரசர்கள் விரும்பவில்லை. ஏனெனில், அந்நாடு மத்தியதரைக்கடற்பகுதியில் நடுநாயகமாய் விளங்கியது. மேலும், பெருமை மிக்க உரோம் நகரத்தைத் தன்னகத்தே கொண்டிருந்தது. ஆதலால், ஜெர்மானிய வீரருடன் மோத மற்றொரு ஜெர்மானியரைத் தேர்ந்தெடுத்தார் பேரரசர் ஸீநோ. அவரே தியோடரிக்கு என்பவர். ஆஸ்ட்ரோகாத்துகளின் தலைவர் தியோடரிக்கு. கிழக்குப் பேரரசிற்கு முதலில் பிணையாகச் சென்றவர்; பின்னர், கான்ஸ்டான்டி நோப்பிளில் கல்வி பயின்று உரோமானியப் பண்பாட்டின் பெருமையை உணர்ந்து, உரோமானியச் சட்ட திட்டங்களையும் அரசாங்க அமைப்புகளையும் காக்கப் பெரிதும் முயன்றார்; படைத்தலைமை தாங்கிப் போர்ப்பயிற்சியும் பெற்றார். ஆஸ்ட்ரோகத்துகளையெல்லாம் ஒன்று சேர்த்து அலாரிக்கைப் போல ஆதிக்கம் பெறப் பெரிதும் விழைந்த தியோடரிக்கை இத்தாலிக்கு அனுப்பிவிடப் பேரரசர் முடிவு செய்தார். மேற்கு ஜெர்மானியரை விரட்டக் கிழக்கு ஜெர்மானியர் பயன்படுத்தப்பட்டனர். கி.பி. 489இல் வடகிழக்குக் கணவாய்கள் வழியாகத் தியோடரிக்கு இத்தாலியில் நுழைந்து, மூன்று களங்களில் ஒடோசரைத்

தோற்கடித்தார். நான்காண்டுகள் தொடர்ந்து நடந்த போரில் இராவென்னுவிலிருந்து சண்டை செய்த ஓடோசரைக் கொன்று தியோடரிக்கு வெற்றி பெற்றுர். பின்பு அவர் இத்தாலி நாட்டுக்கு அரசரானுர்.

அவருடைய ஆட்சியில் (493-526) இத்தாலி பெற்ற அமைதியும் வளமான வாழ்வும் இதற்கு முன்னும் பெற்றதில்லே; பின்னும் பெற்றதில்லே; நெடுங்காலம் வரையிலும் பெறவே இல்லே. அவருடைய ஆதிக்கம், இத்தாலியெங்கும் பரவியிருந்ததோடு பதினுன்கு ஆண்டுகளுக்கு மேல் விசிகாத்துகளின் நாடுகளான கால்ஸ்பெயின் பகுதிகளிலும் நிலவிற்று. அந்நாடுகள் அவர் பேரர் ஆட்சிக்குட்பட்டிருந்தன. அவர் இராவென்னுவைத் தலேநக ராக்கிக்கொண்டார். அங்கே பல அழகிய கட்டடங்கள் கட்டப் பட்டன. அரசப் பணிகளிலெல்லாம் உரோமானியர்களேயும் காத்துகளேயும் வேறுபாடின்றி அவர் அமர்த்திக்கொண்டார். காசியோடோரஸ் (Cassiodorus) என்ற உரோமானியர் அவருக்கு முதல் அமைச்சராய் இருந்தார். அவருடைய முக்கியச் செயலாள ராய் இருந்தவர் போதியஸ் (Bothius) என்ற சிறந்த மெய்ப் பொருளறிஞர். கிழக்குப் பேரரசர் என்னென்ன அரசர் சடங்கு களேயும் ஆட்சி முறைகளேயும் கையாண்டாரோ, அவற்றை யெல்லாம் அவர் அப்படியே கடைப்பிடித்தார். உரோமானியப் பண்பாட்டுடன் காத்திக்கு ;வலிமையை இணேத்துச் சிறந்த உறுதி யான ஓர் அரசை நிறுவுவதில் அவர் பெரிதளவு வெற்றி கண்டார். இத்தாலிய நாட்டுப்புறங்களில் மூன்றிலொரு பாகம் ஆஸ்ட் ரோகத்துகளுக்கு என ஒதுக்கப்பட்டதோடு அவர்களுக்கு அங்கு நிரந்தரக் குடியேற்றமும் ஏற்பட்டது. மற்றப் பகுதிகளில் உரோமானியர்களின் வாழ்க்கை எவ்விதத்திலும் பாதிக்கப்படாம லிருந்தது. அவருடைய சட்டங்களிலோ வேறு பழக்கங்களிலோ எவ்வித மாற்றமுமில்லே. அமைதியும் பாதுகாப்புமிருந்ததால், நலிவுற்றிருந்த வாணிகம் பழைய நிலேக்குத் திரும்பத் தொடங் கியது. கட்டுக்கால்வாய்களும், வழிகளும், பெருவழிகளும் செப்பனிடப்பட்டன; சதுப்பு நிலங்கள் வடித்து வற்றச் செய்யப் பட்டன; சுரங்கங்கள் மீண்டும் தோண்டப்பட்டன. தொடர்ச்சி யான போர்களின் பெருங்கொந்தளிப்பிற்குப் பின் இத்தாலி கவலே யின்றிக் காணப்பட்டது எனப் போப்புக் (Pope) கூறினுராம். ஜெர்மானிய நாடுகளுக்குள் ஒற்றுமை நிலவ அந்நாடுகளின் தலேவர்கள் திருமணம் வாயிலாக இணேக்கப்பட்டார்கள். ஆட்சியில் நீதி நிலவிற்று. உரோமானிய இலக்கியமும், அறிவும் அரசருடைய ஆர்வத்தோடு கூடிய ஆதரவைப் பெற்றன.

சமயப் பொறைக் கொள்கையைக் கடைப்பிடிப்பதில் தியோடரிக் இடைக்காலத்திலேயே தலைசிறந்தவராயும் பிறருக்கு ஓர் எடுத்துக்காட்டாயும் திகழ்ந்தார். தாம் பின்பற்றிய கிறித்துவ முறையைச் சிறிதும் நழுவவிடாமல் கத்தோலிக்கத் திருச்சபையோடு நல்லுறவை ஏற்படுத்திக்கொண்டார். அவர் போப்பை மிகவும் மதித்தார். இத்தகைய சமய உறவும் பொறையும் அவருக்குப் பிறகு ஆயிரமாண்டுகள் வரை காண முடியவில்லை. ஆயினும், அவருடைய சமயக் கொள்கையானது வெற்றி பெறவில்லை. கத்தோலிக்கத் திருச்சபை, வேறு கிறித்துவ முறைகளை நாட்டில் நடமாடவிடச் சிறிதும் விரும்பாமையே இதற்குக் காரணம். சமயச் சத்தியானது இத்தாலியைப் பொறுத்தவரையில் இடைக்காலத்தில் மக்களை இணைக்காமல் இருந்ததோடு, ஒருவரையொருவர் பகைக்கச் செய்து, அவர்களுக்குள் நல்லுறவு ஏற்படாதவாறும் குறுக்கிட்டது. தியோடரிக்கின் திட்டங்கள் பல நிறைவேறாமல் போனதற்குக் காரணம் அவர் தழுவியிருந்த கிறித்துவப் பிரிவே எனலாம்.

தியோடரிக்கின் இறுதி நாள்கள் துன்பம் நிறைந்தவை. ஒரு பக்கம் திருச்சபையின் எதிர்ப்பும், மற்றொரு புறம் தமக்குப் பின் யார் ஆட்சிப் பொறுப்பேற்பது என்ற தீராக் கவலையும் ஏற்பட்டன. கான்ஸ்டான்டிநோப்பிளோடு சேர்ந்து சதி செய்தார் எனக் குற்றஞ்சாட்டி போப்பைச் சிறையிலிட்டார். அச் சிறையிலேயே அவரும் மடிந்தார். தியோடரிக்கு ஆஸ்ட்ரோகாத்து மக்களிடையில் தோன்றிய முதல் அறிஞராவர். அவரே இறுதி அறிஞராயும் இருந்து மறைந்தார். இராவென்னாவில் பல சிறந்த நினைவுச் சின்னங்களுக்கிடையில் அவருடைய கல்லறையை இன்றும் காணலாம்.

தியோடரிக்கு இறந்த பின் அவருடைய பேரர் இத்தாலியை எட்டாண்டுகள் ஆண்டு, இளமையிலேயே இயற்கையெய்தினார். அவருக்குப் பின் இத்தாலிய அரியணையில் அமர்பவர் யாரென முடிவு காணாத நிலையில், பேரரசர் ஜஸ்டினியன், தோல்வியே காணாத தம் படையை ஒரு சிறந்த தளகர்த்தர் தலைமையில் அனுப்பி, இத்தாலியைத் தம் பேரரசில் இணைத்துக்கொள்ள முடிவு செய்தார். கி. பி. 536இல் பெலிசேரியஸ் (Belisarius) என்பவரைத் தலைவராய்க் கொண்ட கிழக்குப் பேரரசர் படை சிசிலியிலிருந்து இத்தாலியின் தென்பகுதியில் வந்திறங்கியது. ஏறத்தாழப் பதினெட்டாண்டுகள் (கி. பி. 536-553) போரிட்டு, அவர்கள் காத்துகளின் நாடாயிருந்த இத்தாலியை மீண்டும் பேரரசின் மாகாணமாக்கிக்கொண்டார்கள்.

மேற்கொண்டு இத்தாலிய வரலாற்றை அறிய வேண்டுமானால், கான்ஸ்டான்டிநோப்பிள் பக்கம் திரும்ப வேண்டும். ஐரோப்பாவின் தென்கிழக்குப் பகுதியில் இருக்கின்ற மலைத்தொடர்களைக் கடந்து வந்து தாக்குதல், அவ்வளவு எளிதாய் இல்லை. ஆகையால் பேரரசின் மேற்குப் பகுதியில் மிலேச்சர்களின் படையெடுப்புத் தொல்லைகளும் குழப்பங்களும் இருந்த அளவு கிழக்குப் பேரரசில் இல்லை எனலாம். அங்கே சிதைவின் அறிகுறி ஏதும் புலனாகவில்லை. மிலேச்சர்களால் ஏற்பட்ட அச்சமும் திகிலும் அற்றுப் போகவே, கிழக்குப் பேரரசு தன் வலிமையைத் திரும்பப் பெற்றுக் கொண்டிருந்தது. கான்ஸ்டான்டிநோப்பிள் நகர அமைப்பு அளித்த அரிய பலனை அரசும் மக்களும் நுகரலானார்கள். சிரியாவும் எகிப்தும், நகரத்திற்கு வேண்டிய கூலத்தையும் செல்வ வாழ்விற்குத் தேவையான சாதனங்களையும் தந்துதவின. ஆசிய மாகாணங்களிலிருந்து பொன்னும் பொருளும் கான்ஸ்டான்டிநோப்பிளில் வந்து குவிந்தன. பேரரசு மேற்குப் பகுதியை இழந்த பின் பரப்பில் குறைந்தது; அதனாலேயே அதன் ஆற்றல் ஓங்கியது.

கான்ஸ்டான்டிநோப்பிளைத் தலைநகராய்க் கொண்ட கிழக்குப் பேரரசு, பெயரளவிலேதான் உரோமப் பேரரசின் கிளையாய் இருந்தது. உண்மையில் கிழக்குப் பேரரசானது, வரலாற்றாசிரியர் ஹெரோடோட்டஸ் (Herodotus)கனுக் கண்ட—மாவீரர் அலெக்ஸாண்டர் நிறுவிய—கிரேக்கப் பேரரசே. ஆகவே, கிழக்குப் பேரரசின் மரபு மேற்கிலிருந்த உரோமப் பேரரசின் மரபினும் மிகப் பழைமையானது. கிரேக்கமே அங்கு ஆட்சி மொழியாயிருந்தது. ஜெர்மானியப் படையெடுப்புகளால் மேற்குப் பகுதி படாத பாடு பட்டுக் கசங்கிச் சுருங்கியது. ஆனால், கிழக்குப் பகுதியானது கான்ஸ்டன்டைன் காலந்தொட்டு அவர் பெயரைத் தாங்கி நின்ற தலைநகரம், ஆட்டோமன் துருக்கியரால் கைப்பற்றப்பட்டு வீழும் வரையிலும் (312-1453) பதினொரு நூற்றாண்டுகளுக்கு மேல் எப்படியோ தன் நிலைமையைச் சமாளித்துத் தலை நிமிர்ந்து நின்றது.

## ஜஸ்டினியன்

தியோடரிக்கு இறந்த ஆண்டிற்கு மறு ஆண்டில் பேரரசு வரலாற்றில் தலைமையிடம் பெற்றுள்ள ஜஸ்டினியன் (527-565) கான்ஸ்டான்டிநோப்பிள் அரசு கட்டிலேறினார்: கி. பி. 518 முதலே ஆட்சியில் பங்கு கொண்டு தம் அரசியல் நுண்ணறிவால் பேரரசர் ஜஸ்டின் (Justin) என்பவருக்குத் துணையாயிருந்து அவர் பொறுப்பைப் பகிர்ந்துகொண்டார். ஆகவே, உரோமானிய உலகம் ஏறத்தாழ அரை நூற்றாண்டுக் காலம் (518-565)

ஜஸ்டினியன் ஆதிக்கத்திலிருந்தது. பேரரசைத் திரும்பப் பழைய அளவிற்கும் நிலைக்கும் கொண்டு வரவேண்டும் என்பதே அவருடைய பேரவா. அவருடைய வெற்றிக்குப் பெரிதும் துணை செய்தவர் திறமையும் துணிவும் ஒருங்கே பெற்ற அவருடைய மனைவியார் தியோடோரா (Theodora) என்பவர். ஆவார்: அவர் சாக்கடையில் கிடைத்த நல் முத்தாவார். அவ்வம்மையார் ஏழைக்குடும்பத்தில் பிறந்து, நாட்டிய மேடையில் வளர்ந்து, வாழ்க்கையைப் பல தரத்திலும் சுவைத்த பின்னரே பேரரசரின் வாழ்க்கைத் துணைவியாரானார். தியோடோராவும் ஜஸ்டினியனும் உழுவலன்பிற்கு உயற்மேற்கோளாய் விளங்கினார் களென அவர்கள் பகைவர்களே ஒப்புக்கொண்டார்கள். அரச அவையிலும் ஆட்சியிலும் முதலிடம் வகித்த தியோடோரா, ஜஸ்டினியனுக்கு உறுதுணையாயிருந்தார். கி.பி, 532இல் தலைநகரில் பெருங்குழப்பம் ஏற்பட்டு மூன்று நாள்வரை நகரின் பெரும் பகுதி எரியுண்டது. அரண்மனையில் ஜஸ்டினியன் முற்றுகை யிடப்பட்டு வேறொருவர் பேரரசர் எனப் பறைசாற்றப்பட்டார். கடல் வழியே நகரத்தை விட்டு வெளியேறுவதற்குத் திட்டமிட்டுக் கொண்டிருந்த தம் கணவரைத் தடுத்து நிறுத்தியதோடு, ஆட்சிக் குழுவினரையும் இடித்துரைத்து ஜஸ்டினியன் ஆட்சி அகால முடிவுக்கு வாராமல் காத்த பெருமை தியோடோரா அம்மை யாருக்கே உரியது. பேரரசியாரின் துணிவால் கலவரம் அடங்கி விட்டாதல், பல அரிய செயல்களைச் செய்யவிருந்த ஜஸ்டியனின் ஆட்சியானது நீடித்தது. கிழக்கில் தம் பேரரசினைப் பாதுகாப்பதும் மேற்கில் பகைவர்களைத் தாக்கி இழந்த பகுதிகளை மீட்பதும் ஜஸ்டினியன் கையாண்ட போர்க்கொள்கை முறையாகும். அந்தப் பாரசீகத்தோடு போரிடவேண்டி வந்த இரு நேரங்களிலும் போர் முயற்சியைக் குறைத்துக்கொண்டு, பொருள் கொடுத்து அமைதியை விலைக்கு வாங்கினார். இச் செயல் பிற்காலத் தொல்லைக்கு அழைப்பாயிருந்தது. பால்கன் தீவக் குறையிலும் தீங்கு நேரவிருந்ததைப் பற்றிப் பேரரசர் பொருட்படுத்தவில்லை. படைகளை வேறு பக்கம் திருப்பிவிட்டதால், அவை டான்யூபு ஆற்றிற்கு அப்பால் தங்கி நாடோடிக் கூட்டத்தைத் தாக்கிய வண்ணமிருந்தன. பேரரசர் ஏற்கெனவே இருந்த பகுதிகளைப் புறக்கணித்து, மேற்குப் பகுதிகளைப் புதியனவாய்ச் சேர்க் கத் திட்டமிட்டார்; தம்மிடமிருந்த குறைந்த படைத் துறை வளத் தைக் கொண்டு அவரடைந்த வெற்றி வியப்பிற்குரியதே.

பேரரசின் கூலிப்பட்டாளம் தன் தலைவரிடத்திலேதான் உண்மையாய் நடந்துகொண்டன. இரும்புக் கவசமணிந்த குதி ரைப்படை வில், அம்பு, வாள் ஈட்டி கொண்டும் தாக்கி முன்

னேறிச் சென்றது. இந்தப் புதிய போர் முறையை உரோமானியர் பார்த்தியர்களிடம் கற்றனர். வளமிக்க மெசொபொட்டேமியா வின் மேய்ச்சல் நிலங்களிலிருந்து படைக்குத் தேவையான குதிரைகள் வந்தன. ஐரோப்பியப் போர் முறையே அக் குதிரை களின் வருகையால் புரட்சிகரமான மாற்றமடைந்தது. அக் குதி ரைப்படைகொண்டு அக்கால மிலேச்சப் படையை எவ்வளவு பெரியதாயினும் சமாளிக்கலாம் என்ற நிலே ஏற்பட்டது. பின்னர் மேற்குப் படைகள் நில மானிய முறையில் அமைக்கப்படவும் அப்படிப்பினே வழி வகுத்துத் தந்தது.

பேரரசு இழந்த மாகாணங்களில் ஆப்பிரிக்காவே எளிதில் மீட்கும் வாய்ப்போடிருந்தது. அங்கு ஆதிக்கஞ் செலுத்திய வாண்டல்கள் நலிந்து போயிருந்தார்கள். மேலும், ஆப்பிரிக்கா வைக் கைப்பற்றிஞல், அந்த மூலதனத்திலிருந்து போர் நடவடிக் கைகளே மற்றப் பகுதிகளிலும் மேற்கொள்வதற்கு வாய்ப் பிருந்தது. பெலிசேரியஸ் (Belisarius) என்ற சிறந்த வீரர் தலேமை யில் வந்திறங்கிய படையானது கார்த்தேஜைப் பிடித்துக் கொண்டது. இரண்டே களங்களில், ஆறு மாதங்களே நடை பெற்ற போரில் வாண்டல் இராச்சியத்தை அப் படை வென்று உரோமானிய மாகாணம் ஆக்கிற்று. ஆயினும், பாலேவன எல்லேப் புறங்களில் இருந்த பெர்பர் (Berber) மக்கள், எந்த அந்நிய ஆதிக்கத்தையும் விரும்பாதவர்களாகையால், ஆப்பிரிக்காவை அமைதிப்படுத்தப் பல ஆண்டுகளாயின. ஆப்பிரிக்காவிலிருந்து பெலிசேரியஸ், சிசிலிக்குத் தாவினுர். எளிதாய் அதை உறைவிட மாக்கிக்கொண்டு, இத்தாலியின் தென்பகுதியில் உரோமானியப் படை வந்து இறங்கியது. ஆஸ்ட்ரோகாத்துகள் பழைய வலிமை யைப் பெற்றிருக்கவில்லே. திருச்சபையும் உரோமானியர்களும் காத்துகள்மேல் கொண்டிருந்த காழ்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு பெலிசேரியஸ் முன்னேறினுர். அவர் திறமைக்கு முன் ஞல் ஆஸ்ட்ரோகத்துத் தலேவர்கள் பின்வாங்குவதைத் தவிர வேறு வழியில்லே. நேப்பிள்ஸ், உரோம், இராவென்ஞ முதலிய வற்றை ஒன்றன் பின் ஒன்ருக உரோமானியர் பிடித்துக்கொண் டனர். இத்தாலி உரோம இராச்சியத்தோடு இணைக்கப்பட்ட பின்னர், ஜஸ்டினியனுடைய பெயரும் புகழும் உச்சக்கட்டத்தை எட்டின. கி. பி. 550-ல் ஸ்பெயின் நாட்டின் தென்கிழக்குப் பகுதியும் பேரரசில் சேர்ந்தது. மீண்டும் மத்திய தரைக்கடல் உரோமானிய ஏரியாகிவிட்டதென்பதைக் கண்டு ஜஸ்டினியன் மகிழ்ச்சியும் பெருமையும் அடைந்தார்.

ஜஸ்டினியன் அரிதிற்பெற்ற வெற்றிகளால் பேரரசிற்கு உடனடியாய் ஏற்பட்ட நலத்தைக்காட்டிலும் நாளாவட்டத்தில்

விளைந்த தீமையே மிகுதி. வென்ற மத்திய தரைக்கடற் பகுதிகள் பேரரசில் நிலைத்தோ, நீடித்தோ இருக்கவில்லை. இழந்த பகுதிகளை மீட்டு மறுபடியும் ஓர் ஆதிக்கத்திற்குட்படுத்துதல் என்ற அரசியல் திட்டம் நிறைவேற்ற முடியாததொன்று. அன்றியும், அதற்குக் கொடுத்த விலை பேரரசையே வலிவற்றுப் போகுமாறு செய்வதாயிற்று. அவர் செய்த போர்கள் படைச் செலவை அதிகரிப்பித்து, அது காரணமாய் வரிப்பளுவை அளவிறந்ததாக்கிற்று. இத்தாலியைப் பேரரசு மீட்டுக்கொண்டதால், இத்தாலியர்கள் மகிழவில்லை. காத்துகளாலும் வாண்டல்களாலும் கொள்ளையடிக்கப்பட்ட உரோம் நகரம் பின்னர்த் தழைத்தது. ஆனால், ஆறும் நூற்றாண்டின் கொடிய போர்களில் ஐந்து முறை முற்றுகையிடப்பட்டு அந் நகரம் அழிந்தது. உரோம் நகரில் வழக்கமாய் இருந்து வந்த இலவசக் கூலப்பங்கீடு ஜஸ்டினியன் ஆட்சியில் நிறுத்தப்பட்டது. அதனால், மக்கள் துயர்மிகுந்து அவர்கள் தொகையும் பெரிதும் குறைந்தது. செனட்டு அவையும் கான்சல்கள் என்ற அதிகாரிகளும் மறைந்தார்கள். பழமையும் பண்பாடும் ஒருங்கே பெற்று முதல் தரமான நாடாய்த் திகழ்ந்த இத்தாலி மறைந்தே போயிற்று.

ஜஸ்டினியன் ஆட்சியின் முன் பகுதியில் நம்பகமாய் எதிர் பார்த்த நலங்கள் அதன் இறுதியில் நிறைவேறாமல் போயின. பேரரசில் பணத்தொல்லை ஏற்பட்டது. இத் தொல்லைக்குக் காரணம், பலபோர்களுடன் ஜஸ்டினியன் கட்டடங்கள் கட்டுவதில் காட்டிய பேரார்வமுமாகும். அவர் காலத்துக் கட்டடக் கலைஞர்களின் திறமைக்குச் சான்றாய்க் கான்ஸ்டான்டிநோப்பிளில் சாண்டாசோஃபியா (Santasophia) என்ற தலைக்கோயிலும் (Cathedral) இராவென்னா முதலிய இடங்களில் எழுப்பப்பட்ட ஏனைய கோயில்களும் இன்றும் நின்று நிலவுகின்றன. பேரரசின் கருவூலம் வற்றிவிட்டது. ஆதலால், மற்றெல்லாவற்றையும் விட மேலே விவரிக்கப்பட்ட இத்தாலி நாட்டின் நிலைமையே ஜஸ்டினியன் ஆட்சியின் வெற்றி தோல்விகளைத் தீர்மானித்தது. ஆஸ்ட்ரோகாத்துகளை வெறுத்த இத்தாலியக் கத்தோலிக்கர்கள் உரோமானிய வீரர்களை வரவேற்றார்கள். ஆனால், போர்க்காலத்திலும் பேரரசின் ஆதிக்கத்திலும், நாடு பாழாயிற்று. மக்கள் பஞ்சம் நோய் முதலியவற்றால் பீடிக்கப்பட்டார்கள். இத்தாலியர் அப்போது அடைந்த துன்பத்தைப் போல இடைக்காலத்தில் வேறெப்போதும் அடைந்ததில்லை. காத்திக்கு ஆட்சியை ஓட்டி விட்டுத் திரும்பவும் ஆதிக்கத்திற்கு வந்த உரோமானியரால் நாட்டிற்கு நல்லாட்சி ஏற்படவில்லை. அதற்கு மாறாக அரசாங்கச் சுமையினாலும், வரி வசூலிக்கும் அதிகாரிகளின் தொல்லையாலும்

மக்கள் படாத பாடு பட்டார்கள். மக்களின் மனக் கசப்பும், சலிப்பும் காத்துகளின் புதுப் போர் முயற்சியைத் தூண்டின. கி. பி. 541-ல் காத்துகளின் தலைவராய் டோட்டிலா (Totila) என்ற ஒரு கிறித்துவ வீரர் தோன்றினர். அக் காலத்தில் சாதாரணமாய்க் காணப்படாத கடவுட்பத்தியும், நீதியுணர்ச்சியும், மக்களன்பும் அவரிடம் குடிகொண்டிருந்தன. காத்திக்கு வரலாற்றில் தியோடோரிக்கு, அலாரிக்குப் போன்ற பெருந்தலைவர்கள் வரிசையில் அவரும் ஒருவர். உரோம் நகரைப்பிடித்த பின், இராவென்னை நீங்கலாக, இத்தாலி முழுவதும் டோட்டிலா கைவசமாயிற்று. கடற்படை உதவி கொண்டு சிசிலி, சார்டினியா, கார்சிகாத் தீவுகள் கைப்பற்றப்பட்டன. வெற்றிப் பாதையில் வீறுற்றுச் சென்று கொண்டிருந்த காத்துகளைப் பேரரசுப் படைத் தலைவர் பெலிசேரியஸாலும் தடுத்து நிறுத்த முடியவில்லை. இத்தாலியை இழக்க விரும்பாத பேரரசர், மீண்டும் ஒரு பெரும்படையை நார்சிஸ் (Narses) என்பவர் தலைமையில் கி. பி. 552-ல் அனுப்பி வைத்தார். போர்த்திறமும் தந்திரமும் படைத்த அத் தலைவர், தரை வழியாய் இராவென்னவை அடைந்து, உரோம் நகரை நோக்கி அணி வகுத்துச் சென்றார். கி. பி. 552-ல் டாகினே (Taginae) என்ற இடத்தில் இரு படைகளும் சந்தித்தன. அங்கு நிகழ்ந்த போரில் காத்துகள் தங்கள் தலைவர் டோட்டிலாவை இழந்து தோற்றார்கள். அதன் பிறகு நடந்த போர்களிலும் காத்துகளின் பெருமுயற்சி பயன் தாராததால் அவர்கள் நாட்டை விட்டே வெளியேறினார்கள்; ஐரோப்பிய வரலாற்றிலிருந்தும் மறைந்தார்கள். இவ்வாறு ஜஸ்டினியன் போர்கள் வெற்றியாய் முடிந்தன. ஆயினும்; அவருக்குப் பின் வந்த பேரரசர்களால் பேரரசின் மேற்குப் பகுதியைக் காத்துக் கொள்ள முடியவில்லை. சில ஆண்டுகளுக்குப் பின் அப் பணியை ஜஸ்டினியனாலேயே நிறைவேற்ற முடிந்திராது. இப் போர்களால் பேரரசும் இத்தாலியும் வலியிழந்து, தம் பகைவர்களை எதிர்த்து நிற்கும் ஆற்றலை இழந்தன. மேலும், இத்தாலி சிறந்த காத்திக்கு ஆட்சியை இழந்து, சீரழிந்து நின்றது. ஆல்ப்ஸ் மலைக்கு அப்பாலிருந்த மிலேச்சர்களின் கொடிய தாக்குதல்களிலிருந்து இத்தாலிய மக்களைக் காக்க விரும்பியிருந்தால், ஆஸ்ட்ரோகாத்துகளை நாட்டை விட்டு வெளியேற்றியிருக்கலாகாது. ஏனெனில், காத்துகள் பேரரசின் சட்டங்களை மாற்றவில்லை; உரோம அரசியல் அமைப்பு, வேறாயினும், உரோமானியச் சமய முறையை நன்கு மதித்தார்கள்; ஆட்சித் துறைகளில் இத்தாலியர்களையே அமர்த்திக்கொண்டார்கள். அவர்கள் இத்தாலியிலிருந்து விரட்டப்படாமலிருந்தால், பிற்காலத்தில் நிகழ்ந்த படையெடுப்புகள் உள் நாட்டுப் போர்கள் எல்லாவற்றிலிருந்தும் அந் நாட்டைக் காப்பாற்றியிருப்பார்கள்.

இத்தாலியில் காத்துகளின் ஆட்சி நீடித்திருந்தால், லம்பார்டுகளின் (Lombard) படையெடுப்புகள் ஏற்பட்டிரா; மற்றும், போப்பு களின் ஆட்சியும் வந்திராது. அதோடு; இத்தாலி தேசத்தின் அரசியல் ஒற்றுமை குலைந்தும், தொடர்ந்து பல நூற்றுண்டுகள் அளவிறந்த தொல்லைக்குள்ளாகியும் மீண்டும் அது ஒன்றுபடப் பத்தொன்பதாவது நூற்றுண்டு வரை காத்திருக்க வேண்டியும் இருந்திராது. ஜஸ்டினியன் தம் ஆட்சியின் சத்திக்கு மீறிய மேற்குப் பேரரசினைப் புதுப்பிக்கும் செயலில் இறங்கி, இத்தாலிக்குத் தீராத தொல்லையை விளைவித்து மறைந்தார்.

ஆனுல், போர்த்துறையை விடுத்து ஆட்சித் துறைக்குச் செல்வோமானுல், ஜஸ்டினியன் ஆற்றிய ஆக்கப்பணியைக் காண லாம். அவர் பல்கலைக்கழகமொன்றை நிறுவினுர். மேலும் பல நூற்றுண்டுகளாய் நடைபெற்று வந்த சட்டத் தொகுப்பு வேலையும் அவருடைய ஆட்சிக் காலத்தில் முற்றுப்பெற்றது. சட்டத் தொகுப்பின் ஒழுங்கு முறைக்கும் அதன் இறுதியமைப்பிற்கும் அவரே பொறுப்பாளராவர். தெளிவு பெறுவதற்கும் மேற்கோள் காண்பதற்கும் ஏற்ற வகையில் மூன்று சட்ட நூல்கள் (Code, Digest and Institutes) வெவ்வேறு அளவிலும் பல தரத்தவரும் படித்துப் பயன்பெறும் வகையிலும் வெளி வந்தன. இடைக்கால உலகத்தை மட்டுமின்றி, பிற்கால உலகத்தைச் சிறப்பாக ஐரோப்பிய அறிவுலகத்தை—இயக்கிய சத்திகளில் உரோமானியர் களின் சட்டம் மிக முக்கியமானது. சட்டப் பொழிப்பை (Digest) வெளியிடப் பதினுறு சட்ட அறிஞர்கள் மூன்றுண்டுகள் அரும்பாடு பட்டார்கள். அவர்கள் இரண்டாயிரம் சட்டப் புத்தகங்களைப் புரட்டி, அவற்றில் முப்பத்தொன்பது ஆசிரியர்கள் எழுதிய சிறந்த நூல்களைத் தெர்ந்தெடுத்தார்கள். அந்நூல்களிலிருந்து ஒன்பதி ஞயிரத்திற்கு மேற்பட்ட பகுதிகளைத் திரட்டி, அப்பொறுக்கு மணிகளைப் பொருத்தமான தலைப்புகளின் கீழ் ஒழுங்கு செய்தார்கள். இவ்வெளியீட்டுப் பணி மிகவும் போற்றற்குரியது. அச் சட்டப் பொழிப்பே இறுதியானது எனவும், வேறு சட்ட விரிவுரைகள் செல்லா எனவும், யாரும் விளக்கவுரைகளோ கருத் துரைகளோ தரலாகாதெனவும் ஜஸ்டினியன் ஆணை பிறப்பித்தார். தனியார் சொத்துரிமை, குடும்ப உரிமைகள், ஒப்பந்தத்தின் புனிதத் தன்மை, சட்டத்தின் முன்னிலையில் மக்கள் சமத்துவம், அடிமைகளின் உரிமைகள், இவை யாவும் உரோமானியர்களின் சட்ட உணர்ச்சியில் தோன்றி வளர்ந்தவையாகும். அச்சட்டங்களை ஆய்ந்தறிந்தவர்கள், அவற்றின் நேர்மை, நீதி, மக்கள்பால் அன்பு முதலியவற்றைக் கண்டு மக்கள் வாழ்விற்கு வழி காட்டும் இரண்டாவது தெய்வீக அறிவிப்பாக (Revelation) அவற்றைக்

கொண்டார்கள். உண்மை காண விழையாது மரபு முறைகளுக்கே மதிப்பளித்து வழங்கிய இடைக்கால நீதியைப் பட்டறிந்த பன்னிரண்டு பதின்மூன்றாம் நூற்றாண்டு மக்கள், சமன் செய்து சீர் தூக்கிப் பார்த்த சான்றினைக் கொண்டு உண்மை காணமுயன்ற உரோமானியச் சட்டத்தை அவ்வாறு கொண்டதில் வியப்பொன்றுமில்லை.

சமயத் துறையில் ஜஸ்டினியன் கையாண்ட கொள்கைமுறை வெற்றி பெறவில்லை. அவர் பழமையில் மிகுந்த பற்றுள்ளவர். கி. மு. நான்காம் நூற்றாண்டிலிருந்து நற்பணியாற்றி வந்த அதீனியப் பள்ளிகள் மூடப்பட்டன. திருச்சபைக் கொள்கையை மறுத்தவர்கள், அதற்கு மாறுபட்டவர்கள் யாவரும் சமூக உரிமைகள் பறிக்கப்பட்டுக் கடுந்தண்டனைகளுக்காளானார்கள். எல்லோரையும் தம் ஆதிக்கத்திற்குட்பட்ட ஒரு திருச்சபையின் கீழ்க்கொண்டு வந்து வேறுபாடில்லாத ஒரே மாதிரியான சமய முறையை நடை முறைக்குக் கொண்டுவருவதே அவர் நோக்கமாகும். அவர் சமயக் கோட்பாடுகளை உறுதி செய்யும் பொறுப்பும் தம்முடையதே எனக் கருதினார்கள். சமயத்துறையில் கடுங்கோன்மையும், அரசியலில் வரம்பின்மையும் இணைந்த ஒரு வடிவாய் ஜஸ்டினியன் காட்சியளித்தார். போப்புகளைத் தமக்கு அடங்கிய அதிகாரிகளாகவே அவர் நடத்தினர்; ஒரு போப்பைப் பதவியிலிருந்து விலக்கினார். மற்றொருவரைக் கட்டாயப்படுத்தித் தம் ஆணையை ஏற்கச் செய்தார். இந்தக் கடுங்கோன்மையால் போப்புகளின் பகைமை நிரந்தரமாயிற்று. ஜஸ்டினியன் ஆதிக்கத்திற்குப் பொருத்தமான பதிலாகப் பெரியார் கிரேகரி (Gregory the Great) யின் மடத்தின் தலைமை எழுந்து வளர்ந்தது. ஜஸ்டினியன் ஊக்கமும் உழைப்பும் மிக்கவர்; சிறந்த ஆட்சித் திறமும் அறிவும் அற்றவர். கதிரவன் மறைந்து கொண்டிருந்த உரோமப் பேரரசின் செவ்வானத்தில் இரவின் இருள் சூழ்ந்து கொண்டிருந்ததை ஜஸ்டினியன் ஆட்சியிலே காண்கிறோம். ஜஸ்டினியன் ஆட்சி மறைந்து பல நூற்றாண்டுகள் ஆகிவிட்டன. ஆனால், ஐரோப்பிய நாடுகளிலும் ஏனைய தேசங்களிலும் வழக்கறிஞர்கள் ஜஸ்டினிய சட்டத் தொகுப்புகளைக் கற்றுப் பயிற்சியும் தேர்ச்சியும் பெறுவதை இன்றைக்கும் காண்கிறோம். சோஃபியா (Sophia) என்ற திருத்தொண்டர் பெயரால் கட்டப்பட்ட ஆண்டகைக் கோயில் (Cathedral) கிறித்துவக் கோயிலாய் இல்லாவிடினும் கோயிற்கட்டடக் கலையின் சிறப்பை உணர்த்தும் சின்னமாய் இன்றளவில் காட்சியளித்து வருகிறது.

ஜஸ்டினியன் மறைவிற்குப் பின் இத்தாலிய வரலாற்றைச் சற்றுத் திரும்பிப் பார்ப்போம். இத்தாலியை நார்சீஸ் வென்ற

பின், அங்கு அமைதி நிலவவில்லை; வளம் திரும்பவில்லை; வரிச் சுமை அதிகரித்தது. பேரரசுப் படைகள் அங்கிருந்து சென்ற பின் நாட்டில் நல்ல பாதுகாப்பில்லை. இந்த நிலையைக் கண்டு வேறொரு ஜெர்மானிய வகுப்பு நாட்டில் நுழைந்தது. அந்த வகுப்பார் இடைடான் யூப் பகுதியிலிருந்து தியோடோரிக்கு வந்த வழியைப் பின்பற்றி வந்தனர். அவ்வாறு வந்த லம்பார்டுகள் (Lombards) ஆஸ்ட்ரோகத்துகளிலும் நாகரிகத்தில் குறைந்தவர்கள்; மேலும் கொடியவர்கள். டாகினேப் போர்க்களத்தில் நார்சிசுக்கு உறுதுணையாய் நின்றவர்களில் லம்பார்டுகளும் இருந்தார்கள். அவர்கள் அப்போதே நாட்டின் வளத்தைக் கண்டு சென்றார்கள். பதினைந்து ஆண்டுகள் கழித்து, கி. பி. 568-ல் அவர்கள் படையெடுத்து வந்தபோது 'இத்தாலி நாடு சுடுகாடாயிருந்தது.' என்று லம்பார்டு வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள். கிழக்கிலிருந்து எவ்விதப்படையும் வந்து லம்பார்டு படையெடுப்பைத் தடுக்கவில்லை. சிறிது சிறிதாய் நாட்டின் பல்வேறு பகுதிகளை லம்பார்டுகள் பிடித்துக்கொண்டு சிறு சிறு இராச்சியங்களை ஏற்படுத்தினார்கள்; பேரரசின் ஆதிக்கம் குறையக் குறைய, படையெடுத்து வந்தவர்களின் ஆதிக்கம் வளர்ந்தது. இத்தாலியில் காத்துகளின் ஆதிக்கத்தைவிட லம்பார்டு ஆதிக்கம் நிரந்தரமாயிருந்து. வடக்கேயுள்ள பேவியா (Pavia) அவர்களது தலைநகரமாகும். அங்கே ஆட்சி புரிந்த அரசர் லம்பார்டு மாகாணங்களையெல்லாம் தம் ஆதிக்கத்தில் வைத்திருந்தார் என்று சொல்வதற்கில்லை. இராவென்னு, உரோம், சிசிலி, சார்னியா, கார்சிகா, இத்தாலியின் தென்பகுதியில் சில முக்கியமான கோட்டைகள் முதலியன கிழக்குப் பேரரசர்களின் ஆதிக்கத்திலும், இத்தாலியின் ஏனைய பகுதிகள் லம்பார்டுகள் வசத்திலும் இருந்தன. வடக்கிலுள்ள லம்பார்டி சமவெளிகளில் இன்றைக்கும் அவர்கள் பெயரையே தாங்கியுள்ளன. பைசான்டைன் (Byzantine) கடலாதிக்கத்தால் இத்தாலியக் கடற்கரையின் முக்கியப் பகுதிகள் பேரரசின் ஆதிக்கத்தில் வந்தன. இவ்வாறு பைசான்டைன் அரசர்கள் இத்தாலியைக் கைப்பற்றிக்கொண்டிருந்தார்கள்: அதனால், தெற்கிலிருந்த லம்பார்டு தேயங்கள், அவர்களாதிக்க நாட்டிலிருந்து பிரிக்கப்பட்டன. இப்பிரிவு காரணமாக அவற்றுக்குள் நிரந்தரப் பகைமை வளரலாயிற்று.

லம்பார்டுகள் தாங்கள் வென்ற நாட்டினரை ஆளும் திறம் பெற்றிருந்தார்கள்; இலத்தீன் மொழியைத் தங்களுடையதாக்கிக் கொண்டார்கள்; தாங்கள் பின்பற்றி வந்த கிறித்துவ முறையை விடுத்து, கத்தோலிக்க முறையை ஏற்றுக்கொண்டார்கள். இந்தச் சமய மாற்றம் லம்பார்டுகளை இத்தாலியர்களோடு இணைந்து

இரண்டறக் கலக்கச் செய்தது; அன்றியும், இத்தாலிய இனம், அவர்களது நாகரிகம் ஆகிய இரண்டிற்கும் அழியாத மூலக் கூறுகளை அளிக்கும் வாய்ப்பை லம்பார்டுகள் பெற்றார்கள். ஏனைய தகுதிகளிலிருந்தும் எந்தச் சமயமுறை வேறுபாடு காத்துகளையும் இத்தாலியர்களையும் பகைவர்களாக வைத்திருந்ததோ அந்த முறை வேறுபாட்டைத் தொடக்கத்திலேயே துடைத்தெறிந்த துணிவு, லம்பார்டுகளின் அரசியல் நுண்ணறிவைப் புலப்படுத்துகிறது. லம்பார்டுகள் நகர வாழ்வை ஏற்று, இத்தாலியக் கலை, கைத்தொழில் முதலியவற்றை ஆதரித்தார்கள். அவர்கள் இராச்சியம் இருநூற்றாண்டுகளுக்குமேல் (கி. பி. 568-774) நீடித்திருந்தது. ஆறாம் நூற்றாண்டினிறுதியில் இத்தாலி நாட்டை லம்பார்டுகளும் பைசான்டைன் பேரரசர்களும் பகிர்ந்துகொண்டு ஆட்சி புரிந்தார்கள். பைசான்டைன் ஆட்சியைவிடச் சிறந்திராவிடினும், லம்பார்டு ஆட்சி அதற்கு எந்த வகையிலும் தாழ்ந்துவிடவில்லை.

### உரோமப் பாரசீகப் போர்கள்

பாரசீகப் பேரரசர் கைரஸ் காலத்தில் தொடங்கி நடைபெற்ற கிரேக்கப் பாரசீகப் போர்கள் கி.மு. 490-ல் மாரதான் போர்க்களத்தில் பாரசீகரின் படுதோல்வியுடன் முடிவுற்றன. பின்னர் மாசிடோனிய மன்னன் அலெக்சாண்டர் கி.மு. 331-ல் பாரசீகப் படையை அர்பேலா (Arbela) என்னுமிடத்தில் முறியடித்துப் பாரசீகப் பேரரசினைக் கைப்பற்றினர். காஸ்பியன் கடல் முதல், ஆப்கானிஸ்தானம் வடமேற்கு இந்தியாவரை பரவிக்கிடந்த பாரசீகப் பேரரசு கிரேக்கர் ஆதிக்கத்திற்குட்பட்டது. கி.மு. 170 அளவில் பாரசீகம் கிரேக்க ஆதிக்கத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டது.

கி.மு. முதல் நூற்றாண்டு முதல் உரோமானியர்களின் ஆதிக்கப்பார்வை பாரசீகத்தின் பால் திரும்பியது. சீனத்துப் பட்டைப் பெரிதும் விரும்பி வாங்கிவந்த உரோமானியர், அவ் வாணிகத்தில் பாரசீகர்கள் இடைப்பட்ட வணிகராயிருந்து ஆதாயம் பெறுவதை விரும்பவில்லை. உரோமானியக் காலாட்படை பார்த்தியர்களை அடிக்கடி தாக்கிப் போரிட்டது. சசனீடு (Sassanid) பேரரசர்கள் உரோமானியர்களுக்குச் சொந்தமான சிரியாவின் மீது பன்முறைப் படையெடுத்துத் தாக்கினர்கள்; அர்மீனியாவிலும் உரோமானியரை எதிர்த்தனர். நீடித்த இவ்வாதிக்கப் போர் உரோமானியரின் கிறித்துவத்திற்கும், பாரசீகரின் மஸ்தா (Mazda) வழிபாட்டிற்கும் இடையே நிகழ்ந்த சமயப் போராய் மாறிற்று. பேரரசர் ஜூலியன் பாரசீகருடன் போராடி

கி.பி. 363-ல் மடிந்தார். கான்ஸ்டாண்டிநோப்பிளின் இட அமைப்பு டான்யூப் பகுதியில் காத்துகளோடும், யூப்ரடீஸ் பகுதியில் பாரசீகரோடும் போராடுவதற்கு ஏற்றதாயிருந்தது. கி.பி. ஆரும் நூற்ருண்டில் தாங்கள் இழந்த பேரரசுப் பகுதிகளை மீட்டு பகைவர்களை ஒடுக்கும் பணியை உரோமானியர் மேற் கொண்டனர். ஜஸ்டினியன் மேற்கில் ஜெர்மானியரோடும் கிழக்கில் பாரசீகரோடும் போரிட்டு வெற்றிவாகை சூடினர். உரோமானியத் தளகர்த்தர் பெலிசேரியிஸ் என்பார் பாரசீகரை முறியடித்தார். அப்போரில் அடைந்த பெயரும் புகழும் பின்னர் ஆப்பிரிக்காவையும் இத்தாலியையும் மீட்கும் பணியில் அவருக்குப் பெரிதும் உதவியது.

ஏழாம் நூற்ருண்டின் தொடக்கத்தில், உரோமானியப் பேரரசு மேற்கு ஐரோப்பாவில் ஜெர்மானியராலும், கிழக்கில் ஸ்லாவ் (Slavs) மக்களாலும் நாடோடிகளாலும் நெருக்கப் படுவதைப் பயன்படுத்திக்கொண்டு, பாரசீக மன்னன் இரண்டாம் கோஸ்ரோஸ் (Chosroes II) பேரரசினைத் தாக்கி வெற்றிமேல் வெற்றி அடைந்தார்; மெசொபொட்டேமியாவையும் அர்மீனி யாவையும் வென்று சிரியா நாட்டிற்குள் படையுடன் நுழைந்தார். ஆண்டியோக், டமஸ்கஸ் நகரங்களைப் பிடித்துக் கொண்டு கி. பி. 614-ல் ஜெருசலத்தையும் கைப்பற்றியது பாரசீகப்படை. அடுத்த ஆண்டு அப்படை சிறிய ஆசியா வழியாகச் சென்று கான்ஸ்டாண்டிநோபிளுக்கு முன்னல் முகாமிட்டது. கி.பி. 619-ல் கோஸ்ரோஸ் எகிப்தைப் படையெடுத்து 25 அலெக்சாண் டிரியாவை உறைவிடமாக்கிக் கொண்டார்.

கிழக்கு உரோமானியப் பேரரசர் ஹெறராக்ளியஸ் (Heraclius) போர்ப்பயிற்சியும் துணிச்சலும் மிக்க வீரராயினும் தோல்விமேல் தோல்வியைக் கண்டு மனமுடைந்து தலை நகரைவிட்டு விட்டு கார்தேஜில் புகலிடம்பெற எண்ணினர்; கான்ஸ்டாண்டிநோபிள் சமயத் தலைவர் அளித்த ஊக்கமும், திருச்சபை தந்த பொருளும், ஸ்லாவ் மக்களும், நாடோடிகளும் உதவிய வீரர்களும் இழந்த சிற்ருசியா, அர்மீனியாவை மீட்கவும் மெசொபொட்டேமியாவில் பெரும் வெற்றி பெறவும் பேரரசருக்குத் துணைசெய்தன. அக் காலத்தில் பாரசீகத்தில் ஏற்பட்ட புரட்சியில் கோஸ்ரோஸ் அரச பதவியை இழந்தார். புதிதாய் முடிசூடிய பாரசீக அரசர், போருக்கு முன்னலிருந்த எல்லைகளை ஏற்றுக்கொண்டு உரோமானியருடன் போரை முடித்துக்கொண்டார். சிற்ருசியா, சிரியா, எகிப்து நாடுகள் மீண்டும் உரோமப் பேரரசில் இணைந்தன.

பாரசீகர்கள் மங்கோலிய நாடோடிகளைப் போல் கடு முரடர் களுமல்லர், ஜெர்மானியர்கள், சுலாவ் மக்களைப்போன்று அநாகரிகரும் அல்லர். உரோமானிய ஆதிக்க வரலாற்றில் பாரசீகம் ஒன்றே நாகரிகம் மிக்க நாடு, உரோமப் பேரரசில் இணைக்கப்படாததுமாகும். பாரசீக நாகரிகமும் வரலாறும் உரோமானியர்கள் நாகரிகத்திற்கும் முந்தியது. வாணிகத்தை முன்னிட்டும். ஆதிக்கத்திற்காகவும் ஏற்பட்ட உரோமப் பாரசீகப் போர்கள் சமயத் தொடர்பான சண்டைகளாகவும் வளர்ந்தன. அவை அடிக்கடி நிகழ்ந்தன; வெற்றி, தோல்வி மாறி மாறி ஏற்பட்டு இரு அரசுகளுக்கும் பெரும் இழப்பையும் துன்பத்தையும் விளைத்தன. நீடித்த போராட்டத்தில் வலிமை குன்றிய இரு நாடுகளும் அராபியத் தாக்குதல்களுக்கு ஈடுகொடுக்க முடியாமல் அராபியர்களுக்கு அடிபணிந்தன. கி.பி. 635-ல் உரோமப் பேரரசரின் படை அராபியரிடம் தோல்வி கண்டது. அதனைத் தொடர்ந்து சிரியா, அர்மீனியா, எகிப்து நாடுகள் அராபியர் வசமாயின. கி பி. 637-ல் டைக்ரிஸ்-யூப்ரடீஸ் ஆற்றுவெளிகளைக் கைப்பற்றிய அராபியர்கள் சசனீடு அரச பரம்பரையை வீழத்தி கி.பி. 650 அளவில் பாரசீக அரசு முழுவதிலும் ஆதிக்கஞ் செலுத்தினர்கள்.

# அதிகாரம் 4

## [ஃப்ராங்குகள்—ஷார்லேமேன்—கரோலிங்கிய மறுமலர்ச்சி]

### ஃப்ராங்குகள்

ஜெர்மானியர்களில் ஒரு குலத்தினர் ஃப்ராங்குகள். பல சிறு ஜெர்மானிய வகுப்பினர்கள் ஒன்று சேர்ந்து ஃப்ராங்குகள் என்ற பெயரால் வரலாற்றில் அறிமுகமானார்கள். ஃப்ராங்கு வீரர்கள் பலமுறை மிகத் துணிவாய் உரோமப் பேரரசைத் தாக்கி வந்துள்ளார்கள். காத்துகளைவிட மிகக் கொடுமையானவர்களாகவே அவர்கள் காணப்பட்டார்கள். உரோமானிய நாகரிகத்தை ஏற்றுக் கொள்ளும் எண்ணமும் அவர்களுக்கு அவ்வளவாக இல்லை. கால் நாட்டின் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு ஆட்சிகள் நடைபெற்றன. சீன் ஆற்றங்கரைப் பகுதியில் உரோமானிய ஆட்சியும் ரோன் ஆற்று நிலங்களில் பர்கண்டியர் ஆதிக்கமும், லோயர் ஆற்றிற்குத் தெற்கில் விசிகாத்துகளின் இராச்சியமும் இருந்தன. ரைன் ஆற்றங்கரைகளும் அவற்றின் அண்மையிலுள்ள நிலங்களும் ஃப்ராங்கியர் வசமிருந்தன. அவர்கள் அங்கு இரு பிரிவுகளாய் வாழ்ந்தார்கள். அவர்கள் அரசரான மெரோவெக்கு (Merovech), கி. பி. 451-ல் ஹூணர்களோடு போரிட்டு, அவர்களைத் தோற்கடித்து, உரோமானியர்களுக்கு உதவினார்; அதனால், போப்பின் நன்மதிப்பையும் பெற்றார். அவர் மெரோவிங்கிய மன்னர் (Meroviniglans) மரபைச் சார்ந்தவர். அந்த மரபின் தோன்றலாகிய குளோவிஸ் (Clovis) என்பார், கி. பி. 481-ல் ஃப்ராங்கியர் மன்னரானார். அவர் பெயரை 'லட்விக்' (Ludwig) எனவும், லூயி (Louis) எனவும் ஃப்ரெஞ்சு மொழியில் வழங்கினார்கள். குளோவிஸ் பட்டமெய்திய நாள் முதல், ஃப்ராங்கியரின் தெளிவான வரலாறு தொடங்கிற்று எனலாம். குளோவிஸ் (481-511) தம் முப்பதாண்டு ஆட்சியில் ஃப்ராங்கு மக்களை ஒற்றுமைப் படுத்தி, அவர்கள் அரசை ஒரு வல்லரசாக்கினார். அந்நிலையை நிரந்தரமாகவே, அவர்கள் பெற்றார்கள். ஃப்ராங்கு மக்கள்

அனைவருக்கும் தலைவரான குளோவிஸ், கி. பி. 486-ல் ஆல்ப்ஸ் மலைக்கப்பால் சிறிதே எஞ்சியிருந்த உரோமானிய ஆதிக்கத்தை அழித்தார். விசிகாத்துகள் அவரிடம் தோற்று ஒடுங்கினார்கள். அவர் பர்கண்டியரின் அரசிளங்குமரியை மணந்து, அவர்கள் நாட்டிலும் மிகுந்த செல்வாக்கைப் பெற்றார். இத்தாலியில் சிறப்பாய் ஆண்டு வந்த தியோடரிக்கு (489-526) ஒருவரே, கால் நாட்டில் தலைமை பெற்ற குளோவிசுக்கு மேற்கு ஐரோப்பாவில் போட்டியாயிருந்தார்.

போர்த்துறையில் அவர் பெற்ற வெற்றிகளைவிட, ஃப்ராங்கியர்களின் வருங்காலத்தை உருவாக்கியது அவரது சமய மாற்றமே. அவருடைய பர்கண்டிய மனைவியார் கிறித்துவர். அவ்வம்மையார் தம் கணவரையும் கிறித்துவத்தைத் தழுவுமாறு வேண்டினார், பகைவருடன் செய்த போரில் வெற்றி கிட்டியதும் அவர் 496-ல் கிறித்துவச் சமயத்தில் சேர்ந்தார். கத்தோலிக்கச் சமயத்தைத் தழுவிய முதல் ஜெர்மானிய மன்னர் அவரே. எந்தத் திருச்சபையின் அமைப்பும் ஆற்றலும் காத்துகளுக்கும் வாண்டல்களுக்கும் எதிர்ப்பாயிருந்தனவோ, அதே கத்தோலிக்கத் திருச்சபையின் செல்வாக்கும் வலிமையும் குளோவிசுக்குத் துணைசெய்தன. போரில் மன்னரைப் பின்பற்றியது போல அவரது புதிய சமயத்தையும் மக்கள் ஏற்றுக் கிறித்துவத்திற்கும் நாட்டுக்கும் ஆக்கமளித்தார்கள். பின்னர் ஃப்ராங்கியப் பேரரசர்களின் அருஞ்செயல்களுக்குத் திருச்சபைத் தொண்டர்களின் அரசியலறிவும் ஆதரவும் உறுதுணையாய் நின்றன. இரண்டாம் கான்ஸ்டன்டைன் என்று பாராட்டப் பெற்ற குளோவிஸ், உரோம் நகர மேற்றிராணியாரோடு தொடங்கிய நட்புறவு, பலகாலும் நீடித்து வரலாற்றினையே பெரிதும் மாற்றி அமைத்தது. சாலிக்குச் சட்டங்களையெல்லாம் (Salic Laws) தொகுத்து, ஃப்ராங்கியர் நாடு முழுவதற்கும் அச் சட்டத் தொகுப்பே அமுல் செய்யப்படும் எனக் குளோவிஸ் அறிவித்தார்; தம் அரசவையைப் பாரிஸ் (Paris) நகரில் அமைத்துக் கொண்டார். 511-ல் குளோவிஸ் இறப்பதற்கு முன், தம் இராச்சியத்தைத் தம் புதல்வர் நால்வருக்கும் பங்கிட்டுத் தந்திருந்தார். அவர்கள் ஒருவரையொருவர் பகைத்துக் கொண்டு உள்நாட்டுப் போர்களில் ஈடுபட்டிருந்த போதிலும், பல நாடுகளை வென்று, நாட்டெல்லைகளை விரிவடையச் செய்தார்கள். ஆயினும் நாடு பிளவுபட்டும், கலவரமும் குழப்பமும் நிறைந்தும் அமைதியற்றும், நல்லாட்சி இழந்தும் தொல்லையுற்றது. இதைவிடக் குணம் குறைந்த—குற்றம் நிறைந்த—வேறொரு காலத்தைக் காண்பது அரிதென்று வரலாற்றாசிரியர் கிப்பன் கூறிச் சென்றுள்ளார் அது முற்றிலும் உண்மையே. ஃப்ராங்கியர் நாடு ஆறும்

நூற்றாண்டின் பிற்பகுதியில் இரு பிரிவுகளாய் இருந்தது. அவற்றுள் ஒன்றின் ஜெர்மானியக் கருத்துகள் மற்றொன்றின் உரோமானியப் பண்பாட்டுப் போக்குடன் முரண்பட்டு மோதிய வண்ணமிருந்தன. குளோவிஸ் காலம் முதலே, அரச குடும்பக் காரியங்களைக் கவனித்துக்கொள்ள அரண்மனை அதிகாரியொருவர், மேயர் (Mayor) என்ற பெயருடன் அமர்த்தப்பட்டிருந்தார். நாளாவட்டத்தில் மேயரின் அதிகாரமும்•செல்வாக்கும் வளர்ந்து வந்தன. அரசருக்கு அறிவுரை கூறும் பணியை மேயர் மேற்கொள்ளலானார். ஒரு சிறுவர் அரியணையேறியபோது அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்ட அக்காலத்து மேயர், அரச அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டார். அதுமுதல் அரசர் தம் அதிகாரம் இழந்து பெயரளவில் மன்னராயிருந்தார். ஆட்சித் தலைவரான மேயரும், வழி வழியாக அதிகாரியாய் ஆட்சியிலிருந்து வந்தனர். இவ்வாறு அதிகாரமிழந்த பரம்பரை மன்னர்களும், அவர்களுக்குத் தலைவர்களாய் இருந்து ஆற்றலும் பேரவாவும் படைத்த பரம்பரை மேயர்களும் ஒருசேர நாட்டில் காட்சி தந்தார்கள்.

மேயர்கள் வரிசையில் குறிப்பிடத்தக்க முதல் மேயர், ஹெரிஸ்டாலைச் சேர்ந்த பிப்பின் (Pippin of Heristal) என்பவர் ஆவர். 687-ல் ஆட்சிக்கு வந்த பிப்பின், போரிட்டு, மெரோவிங்கியன் இராச்சியத்தின் பிரிவுகளை வென்று, ஃப்ராங்குகளின் நாடு முழுவதற்கும் அதிகாரியானார்; வென்ற பகுதியில் நல்லாட்சியேற்படுத்தி, நாடு முழுவதிலும் வல்லாட்சியைக் கண்டார்; மக்களின் வேறுபாடுகளைக் குறைத்து, ஒற்றுமை காணவும் முயன்றார். 714-ல் அவருடைய மைந்தரான சார்லஸ் மார்ட்டெல் (Charles Martel) அவரைத் தொடர்ந்து பட்டமெய்தினார்.

## சார்லஸ் மார்ட்டெல் – 714-741

சார்லஸ் மார்ட்டெல், இடைக்கால வரலாற்றில் சிறப்புற்றிருந்த ஒரு பெரியார். வாழ்நாளெல்லாம் பெயரளவிலேனும் ஓரரசருக்குப் பணிந்து ஆட்சி செய்த மேயர் என்று இவரைக் கருத முடியவில்லை. உண்மையில் இவர் ஃப்ராங்கியர்களின் மன்னரே. மெரோவிங்கிய வமிசத்தை முடித்து இவர் கரோலீங்கிய (Carolingian) அரச மரபினைத் தோற்றுவித்தார். அந்தக் கால் வழியின் ஆட்சி இவர் காலத்திலிருந்தே தொடங்கிவிட்டது எனக் கருதலாம். குளோவிஸ் காலத்திலிருந்து நாடு காணாத அளவிற்கு ஆட்சியை ஒருமுகப்படுத்திப் பிரபுக்களை அடக்கி சார்லஸ் அரச அதிகாரத்தைப் பெருக்கிக்கொண்டார். இப் பணிதான் மீண்டும் மேற்கு ஐரோப்பாவில் ஒரு பேரரசு முளைப்பதற்கு வழிகோலியது. சுருங்கக் கூறின் ஃப்ராங்கியர் நாட்டின் வருங்கால

வாழ்வும் தாழ்வும் சார்லஸ் மார்ட்டெல் என்ற தூய ஃப்ராங்கியர் கைகளிலே இருந்தன எனலாம்.

இவர் ரைன் ஆற்றிற்கப்பாலுள்ள சாக்ஸேனியர்களோடும் பவேரியர்களோடும் போரிட்டு, அவ்வாற்றின் வடக்கிலும் கிழக்கிலும் தம் நாட்டெல்லேகளை விரிவாக்கினர். இவருக்குப் பின் வந்தவர்களுக்கு அது வழி காட்டுவதாய் அமைந்தது. இவர் கத்தோலிக்கத் திருச்சபையை ஆதரித்துத் தம் மரபுப் பண்பைக் காட்டிக்கொண்டார். ஆங்கிலத் துறவிகளும் திருச்சபைத் தொண்டர்களும் அரண்மனே மேயர்களின் துணைகொண்டு வடக்கிலிருந்த ஜெர்மானியரைக் கிறித்துவக் கொள்கையைத் தழுவுமாறு செய்து வந்தார்கள். அவர்களுக்கு ஆதரவளித்ததால் மேயர்களுடைய பெருமையும் வலிமையும் வளர்ந்தன. கிறித்துவத்திற்குச் செய்ய இருந்த பெருந்தொண்டிற்கு முன்னரே போப்பின் ஆட்சிக்கு உறுதுணையாயிருந்து ஃப்ராங்கியர்களுக்கும் திருச்சபைக்கும் இடையே நல்லெண்ணத்தையும் நல்லுறவையும் சார்லஸ் வளர்த்தார்.

மகம்மதுநபி மறைந்த நூற்றுண்டு முடிவதற்குள்ளேயே அவர் சமயத்தைத் தழுவியர்கள், மூன்று கண்டங்களிலும் சென்று, பல நாடுகளையும் வென்று, இஸ்லாம் சமயத்தின் மகத்தான தொண்டையும் சாதனையையும் உலகினர்க்கு அறிவித்து வந்தார்கள். ஐரோப்பாக் கண்டத்திற்கு இஸ்லாம் சமயத்தைத் தடுத்துக் கிறித்துவச் சமயத்தைக் காக்கவும், கிழக்கிலும் மேற்கிலும் மகம்மதிய முன்னேற்றத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கவும் உரிய கட்டாயமும் நிலைமையும் ஏற்பட்டன. கான்ஸ்டான்டிநோப்பிளை முஸ்லிம்கள் கைப்பற்றுமல் இருக்கப் பேரரசர் லியோ, கி. பி. 718-ல் இஸ்லாமியப் படையை அடித்து விரட்டினர். அதற்குப் பதினன்கு ஆண்டுகளுக்குப் பிறகு அந்தப் பொறுப்பும் பெருமையும் மேற்கில் சார்லெஸ் மார்ட்டெலுக்குக் கிடைத்தன. மூர்கள் ஸ்பெயின் நாடு முழுவதிலும் தங்கள் ஆதிக்கத்தை நிறுவிய பின், பிரன்னீஸ் மலையைக் கடந்து, கால் நாட்டின் தென் பகுதியிலிருந்த பல உரோமானிய நகரங்களைக் கைப்பற்றலானுர்கள். கிறித்துவ நாகரிகம் அழிந்துவிடும்போன்றிருந்தது. அக்விட்டைன் நாட்டை ஆண்ட கோமகனுர் மூர்களால் ஒருமுறை தோற்கடிக்கப்பட்டார். மீண்டும் மூர்கள் பெருவாரியாகப் படையெடுத்து வந்தபோது சார்லஸ் மார்ட்டெலின் உதவியை அவர் நாடினர். பாய்ட்டியர்சுக்கு (Poitiers) அண்மையில் ஃப்ராங்கியர் படையும் மகம்மதியப் படையும் மோதின. டூர்ஸ் (Tours) போர்க்களம் எனக் குறிப்பிடப்படும் இடத்தில், கி. பி. 732-ல் நடை

பெற்ற கடும்போரில் வெற்றியைக் கிறித்துவர்களுக்கே உரிமை யாக்கிவிட்டு முஸ்லிம்கள் பின் வாங்கினுர்கள்; ஒவ்வொரு நகர மாய் தங்கள் வசமிருந்த நகரங்கள் யாவற்றையும் இழந்தார்கள். பிரன்னீஸ் மலைதான் மேற்கு ஐரோப்பாவில் முஸ்லிம் இராச்சி யத்தின் எல்லையென டூர்ஸ் சண்டை முடிவு கட்டியது. ஐரோப்பிய நாகரிகத்தையும் கிறித்துவத்தையும் ஒருங்கே காத்து, முஸ்லிம் ஆதிக்கம் மேலும் மேற்கில் பரவாதபடி தடுத்து நிறுத்திய அச் சண்டை, வரலாற்றில் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது.

பிரனீசிற்கு அப்பால் இனியும் தலை நீட்ட முடியாதவாறு முஸ்லிம் படையைத் தோற்கடித்து விரட்டிய சார்லஸிற்குச் சம்மட்டி (Hammer) என்னும் பொருளுடைய மார்ட்டெல் (Martel) என்ற சிறப்புப் பெயர் அக்காலத்தில் கிடைத்தது. மேலை உலகக் கிறித்துவத்துக்குக் காவலர் ஆன பின் தம் நாட்டிற்கு நல்லதொரு குதிரைப் படையைத் தோற்றுவிக்கத் திட்டமிட்டார். இதுகாறும் குடிமக்கள் தங்கள் சொந்தச் செலவிலேயே போர்க்கருவிகளுடன் வந்து போர் முடிந்தபின் வீடு திரும்பிச் சென்றுர்கள். அவர்கள் பெரும்பாலும் காலாட்படையினர்களே. அராபியர்களை எதிர்க்க அவர்களிடமிருந்த குதிரைப் படை போன்ற ஒன்று தம் மக்களுக் கும் வேண்டுமெனச் சார்லஸ் மார்ட்டெல் முடிவு செய்தார்; நம் பிக்கையான தம் பண்ணை மக்களுக்குத் தாராளமாய் மானியங்கள் அளித்து, போர்க் குதிரைகளை வளர்த்துக் குதிரை வீரர்களாய்ப் போர்ப்பணி செய்யச் சிறந்த ஏற்பாடு செய்தார். திருச்சபை நிலங்களும் இப்பணிக்கு மானியங்களாய் வழங்கப்பட்டன. இவ் வாறு நிலமானியப் படை நாடெங்கும் நிறுவப்பட்டு வந்தது. போர்ப்படை அமைப்பில் ஏற்பட்ட இந்தச் சீர்திருத்தத்தால், பின்னர் ஐரோப்பியச் சமுதாயமும் அரசாங்கமும் பெரிதளவு மாற்றமடைந்தன.

ஃப்ராங்கியர் நாட்டு மன்னரின் உதவியைப் போப்புகள் நாட வேண்டிய நிலைமை இத்தாலியில் உருவாகியது. லம்பார்டு மன்னர் இத்தாலியின் சில பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டு வடக்கில் இராவென்னுவில் பேரரசரின் பிரதிநிதியாயிருந்து ஆட்சிசெய்த அதிகாரியைத் தாக்கவும் தெற்கில் உரோம் நகரை அச்சுறுத்தவும் தொடங்கினுர். பைசான்டைன் பேரரசரிடமிருந்து எவ்வித உதவியையும் எதிர்பார்ப்பதற்கில்லை. மேலும், உரோம் நகரத் திருச்சபைக்கும் அவருக்கும் தெய்வச் சிலைகளையும் படங் களையும் பற்றிக் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. கிறித்துவ வழி பாட்டில் சிலைகளையும் படங்களையும் பயன்படுத்தும் வழக்கம் உருவ வழிபாட்டின்பாற்படும் எனப் பேரரசர் லியோ கருதி,

அவற்றை அகற்ற வேண்டுமெனத் தீவிர நடவடிக்கை எடுக்க லானுர். இது பின்னுல் ஏற்பட்ட சமயச் சீர்திருத்த இயக்கத்தை முன் கூட்டியே எதிர்பார்ப்பது போன்றிருந்தது. போப்புப் பண்டைய வழக்கத்தை ஆதரித்தார். இக் கொள்கை வேறு பாட்டிற்கிடையில், சார்லஸ் மார்ட்டெல் உதவியை நாடுவதைத் தவிரத் திருச்சபைக்கு வேறு வழியில்லை. ஆனுல், அவர் திருச் சபையின் அழைப்பை ஏற்று இத்தாலிக்கு வந்து உதவ இயல வில்லை.

கி. பி. 741-ல் சார்லஸ் மார்ட்டெல் இறந்த பின் அந்நாட்டு மரபுரிமைச் சட்டப்படி (Salic Law) அவருடைய மைந்தர் இரு வரும் இராச்சியத்தைப் பகிர்ந்துகொண்டனர். ஆனுல், மூத்த மைந்தர் மடத்து வாழ்வை மேற்கொள்ளவே, அவர் தம்பியாரான மூன்றும் பிப்பின் 747-ல் நாடு முழுவதற்கும் அரசரானுர்.

ஃப்ராங்கியர் நாடு பலவகையிலும் வரலாற்றில் இடம் பெறத் தொடங்கியதும், கால் என்ற அதன் பழைய பெயர் மறைந்து, ஃப்ரான்ஸ் என்ற பெயர் பெருவழக்காயிற்று. ஃப்ரெஞ்சு மக்கள் இலத்தின் மொழியைக் கற்று, உரோமானியப் பண்பாட்டின் அடிப்படையை ஏற்றுக்கொள்ளலானுர்கள். ஆகவே, மொழியிலும் நாகரிகத்திலும் ஃப்ரெஞ்சு நாட்டினர் வேறெந்த இனத்தையும் விட உரோமானியர்களுக்கு நெருக்கமானவர்களானுர்கள்.

ஃப்ரான்ஸ் மேலும் வலிவுற்று ஐரோப்பாவில் முன்னணி நாடாக வேண்டும்; அந்நாட்டை உண்மையில் அரசாண்டு வந்த அரண்மனை மேயர் பெயரளவிலும் அரசராகி, பிறகு பேரரசர் ஆக வேண்டும்; அதே போன்று இத்தாலியில் போப்பின் ஆட்சி அதனை அச்சுறுத்திக்கொண்டிருந்த லம்பார்டுகளின் தாக்குதல் களினின்று பிழைத்து அவர்களின் ஆதிக்கத்திற்குள் சிக்காமல், உரிமையோடும் பெருமையோடும் வளர வேண்டும்; ஆகவே, போப்பின் ஆதரவு ஃப்ராங்கிய மன்னருக்கும், அம்மன்னரின் படைப்பலம் போப்பிற்கும் தேவைப்பட்டன. திருச்சபைக் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் மறுத்து, பழிச்செயல்களும் குற்றமும் மலிந்திருந்த கிழைப் பேரரசரின் உதவியை நெருக்கடிக் காலத்திலும் போப்பு நாடவில்லை. அவ்விருவர் உறவும் மெலிந்து ஒழிந்தது.

ஃப்ராங்கியர் நாட்டில் அரச பதவி மெரோவிங்கிய மன்னர் களிடமும், அதிகாரமும் ஆட்சியும் மேயர்களிடமும் இருந்து வந்தன. பதவியிலுள்ளவரிடம் அதிகாரம் இல்லையெனில், அதிகார

முள்ளவரிடம் பதவி போய்ச் சேருவதுதான் நாட்டிற்கும், அதை உண்மையில் ஆள்வோருக்கும் நல்லது. மூன்றும் பிப்பின் மிக எளிதாக அரசருடைய முடியைப் பறித்துக்கொண்டிருக்கலாம். ஆனால், அவர் அவ்வாறு செய்யாது, போப்பிற்குத் தூதனுப்பினர். அதிகாரமுள்ள ஒருவரே பட்டத்தையும் அடைய வேண்டும் எனப் போப்புத் தம் கருத்தைத் தெரிவிக்கவே, அந்நாட்டில் நீண்ட காலம் நடைபெற்றுவந்த கேலிக் கூத்து (rois faineants) முடிவுற்றது. பிப்பினுக்கு ஆங்கிலத் திருத்தொண்டரால் கி.பி. 751-ல் முடிசூட்டு விழா நடைபெற்றது. ஈராண்டுகளுக்குப் பின் போப்பாண்டவரே ஆல்ப்ஸ் மலையைக் கடந்து பிப்பின் தலை நகருக்கேகி, தம் கைகளாலேயே அம்மன்னருக்கு முடி புனைந்தார். மேலும், அவரை ஓர் உரோமானிய அதிகாரியுமாக்கினர். இந் நிகழ்ச்சியோடு மெரோவிங்கிய வமிசம் முடிந்து, கரோலிங்கிய வமிசம் பிறந்தது. மாமன்னர் சார்லஸிடமிருந்தே இம்மரபு அப் பெயரைப் பெற்றது. கி. பி. 768-ல் ஆட்சிக்கு வந்த ஷார்லே மேன் மூன்றும் பிப்பினுடைய மைந்தரே.

போப்பிடமிருந்து பெற்ற இப்பேருதவிக்குக் கைம்மாறாகப் பிப்பின் இத்தாலியின்மேல் இருமுறை படையெத்துச் சென்று, கி.பி. 754-ல் லம்பார்டுகளை வென்று, இராவென்னாப் பகுதியைக் கைப்பற்றி, போப்பினிடம் அப்பகுதியைத் தம் காணிக்கையாகத் தந்தார். உரோம் நகரிலிருந்து இராவென்னா வரையிலுள்ள நிலப் பகுதி, போப்பின் நாடுகள் (Papal states) என்ற பெயருடன் போப்பின் ஆதிக்கத்திற்குட்பட்டன. ஆனால், அந்தப் பகுதியைப் போப்புச் சொந்த உரிமையோடு ஆளவில்லை; பிப்பின் சார் பாகவே ஆதிக்கஞ்செலுத்தினர், மூன்றும் பிப்பினே போப்பின் நாடுகளைத் தோற்றுவித்தவர். போப்பின் நாடுகளும் ஆட்சியும் பதினொரு நூற்றாண்டுக் காலம் ஐரோப்பிய வரலாற்றைக் குழப் பிக்கொண்டிருந்தன. இதனால், தூய உரோமப் பேரரசிற்கும் போப்பின் ஆட்சிக்கும் நீண்ட கொடிய போராட்டம் ஏற்பட்டது. மேலும், இது இத்தாலி நாட்டின் ஒற்றுமைக்கும் பெருந்தடையா யிருந்தது. எஞ்சியிருந்த பதினான்கு ஆண்டுகளில் பிப்பின் தம் இராச்சியத்தின் பரப்பைப் பெருக்கினர்; மக்களுக்கு நல்லாட்சி நல்கினர். திருச்சபையின் ஆதரவுடன் தொடங்கிய கரோலிங்கிய வமிசம் தனது முதற்போரைத் திருச்சபைக்காகச் செய்து, அதன் போக்கிற்கும் கொள்கைக்கும் இணங்கத் தன் ஆட்சியின் தன்மையைச் செப்பனிட்டுக்கொண்டது. கிறித்துவச் சமுதா யத்தைச் சேர்ந்தவர்கள் மட்டுமே நாட்டுக் குடிமக்களாகக் கருதப்படுவார்கள் என்று வற்புறுத்தும் அளவுக்குச் சமயம் நாட்டுடன் தொடர்புற்றது.


மூன்று பேரரசுகள்
கி. பி. 800 அளவில்
கரோலிங்கியப் பேரரசு
பைசாண்டைன் பேரரசு
முஸ்லிம் பேரரசு
செங்கடல்
எகிப்து
அரேபியா
மக்கா
ஏமென்
இந்திய மாகடல்

## ஷார்லேமேன்

மூன்றும் பிப்பினுடைய மைந்தராய்க் கி.பி. 742-ல் பிறந்த சார்லஸ் (பின்னர் ஷார்லேமேன் எனப் பெயர் பெற்றவர்) ஐரோப்பிய இருண்ட கால (Dark Ages) வரலாற்றிலே தலை சிறந்த ஓர் அரசியலறிஞர். பிப்பினும் அவர் தந்தையார் சார்லஸ் மார்ட்டெலும் ஆட்சித் திறமும் போர்த் திறமும் ஒருங்கே பெற்றுத் திகழ்ந்தார்கள். பெரியார் சார்லஸ் தம் அரிய பெரிய சாதனைகளால் அவர்களையும் மிஞ்சிவிட்டார். ஆர்தரையும் அவருடைய வட்டமேசை வீரத் தொண்டர்களையும் (Arthur and his Knights of the Round Table) பாட்டுடைத் தலைவர்களாக்கி ஆங்கிலக் கவிஞர் டென்னிசன் பாராட்டியிருப்பது போன்று, ஷார்லேமேனையும் அன்னாருடைய வீரப்படைத் தலைவர்களையும் காப்பியத் தலைவர்களாக்கி இடைக்கால ஆசிரியர்கள் வீரக் கதைகள் பல தீட்டியுள்ளார்கள். மாவீரர் அலெக்சாண்டர், ஜூலியஸ்சீசர் வரிசையிலே அவரையும் சேர்த்து, அவரது வாழ்க்கைப் பெருமையையும் வரலாற்றுச் சிறப்பையும் உயர்வு நவிற்சியாகப் பாராட்டிய பின் தலைமுறைகள், அன்னாரை ஒரு புனைகதை உருவமாக்கிவிட்டன.

கி.பி. 768-ல் அரசு கட்டிலேறிய சார்லஸ், மூன்றாண்டுகளில் ஃப்ராங்கு மக்களின் தனிப்பெரு மன்னரானார். அவர் தம் வாழ் நாளெல்லாம் போர் செய்வதிலேயே கழித்தார். பெரும்பாலும் அவர் காலத்தில் நிகழ்ந்த போர்களெல்லாம் சமயப் போர்களே. அவர் ஒரு சிறந்த வீரரல்லர். எனினும், படைகளைச் செவ்வையாக அமைத்து அவை வெற்றிபெறும் வழி வகைகளை வகுத்துப் பகைவர்களைப் புறங்காணுமாறு இயக்குவதிலே தனித்திறம் படைத்திருந்தார். முதலில் அவர் பார்வை இத்தாலியிலாண்ட லம்பார்டுகளின் பக்கம் திரும்பியது. லம்பார்டுகளின் தலைமை நகரான பேவியாவை வளைத்துக்கொண்டு அங்கிருந்த மன்னரைச் சிறைபிடித்துத் துறவிகளுடன் மடவாசஞ் செய்ய அனுப்பினார். ஃப்ராங்குகளின் மன்னராய் விளங்கிய சார்லஸ் 'உரோமானியத் தலைவர்', 'லம்பார்டுகளின் அரசர்' என்ற பட்டங்களையும் 774-ல் பெற்று, பேரரசர் பதவி என்ற குறிக்கோளை நோக்கிச் செல்லத் தொடங்கினார். லம்பார்டுகளின் மன்னராகிவிட்டதால் இத்தாலியோடும் போப்பின் ஆட்சியோடும் அவருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. மேலும், போப்பின் அதிகாரமும் அவரது ஆட்சிக் குட்பட்ட நிலப்பரப்பும் பெருகின. வட பகுதியில் ஆதிக்கம் பெற்ற சார்லஸ், இத்தாலியின் தென் மாகாணங்களைக் கைப்பற்ற விரும்பவில்லை.

சார்லஸின் மனமெல்லாம் ஜெர்மானிய மக்களாகிய கொடிய சாக்ஸேனியரை அடிபணியச் செய்து அவர்களைக் கிறித்துவச் சமயத்தைத் தழுவச் செய்யும் திருப்பணியிலும் திட்டங்களிலுமே திளைத்திருந்தது. சாக்ஸேனியப் போர் ஒரு சாதாரணப் போர் அன்று. அது முப்பதாண்டு நடைபெற்ற முதல் ஐரோப்பியச் சமயப் போர். இதுகாறும் ஜெர்மானியரிடையிலே மிக அமைதியாகப் பரப்பப்பட்ட கிறித்துவம் இப்போது சாக்ஸேனியர்மீது வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்டது. அதனால், சாக்ஸேனியர்களும் கடுமையாகவும் தொடர்ந்தும் போரிட்டுப் புதிய சமயத்தை ஒரே மூச்சாக எதிர்த்து நின்றார்கள். ஒவ்வோர் ஆண்டும் சார்லஸ் சாக்ஸேனிய நாட்டின்மீது படையெடுத்துச் சென்று சாக்ஸேனியர்களை முறியடித்துத் திரும்புவார். சாக்ஸேனியரும் கிறித்துவத்தை ஏற்பதாகக் கூறுவார்கள். ஆயினும் ஃப்ராங்கியப் படை வெளியேறியதும் மக்கள் கிளர்ந்து எழுந்து கிறித்துவக் கோயில்களை அழிப்பார்கள்; குருமார்களைக் கொல்வார்கள்; நாட்டு அமைதியைக் குலைப்பார்கள்; மீண்டும் மீண்டும் ஃப்ராங்கியப் படை கொடுமையாகத் தாக்கும். இறுதியாகக் கிறித்துவத்தையேற்று சார்லஸிற்கு அடி பணிவதன்றி, சாக்ஸேனியருக்கு வேறு வழியில்லை. இவ்வாறு பண்டைய ஜெர்மனி பண்பட்ட ஐரோப்பிய சமுதாயத்தின் வட்டத்திற்குள் வந்தது. ஷார்லே மேனின் பின் சந்ததியார் அவருடைய பேரரசுப் பணியைக் கைவிட்ட காலத்தில் அதைத் தொடர்ந்து செய்தவர்கள் சாக்ஸேனியர்களே. போர் முடிவில் சாக்ஸேனிய நாடு மேற்றிராணியார்களின் ஆட்சிப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, மடங்களும் நிறுவப்பட்டன. அங்கு முறையாகக் கிறித்துவம் பரவியது. மேற்றிராணியார்கள் தங்கிப் பணியாற்றிய இடங்கள் யாவும் பண்பட்ட வாழ்வு மலர்ந்து நகரங்களாயின. அந் நகரங்கள் பின்னர்ப் பாட்டைகளால் இணைக்கப்பட்டு வாணிகத்திற்கும் மக்கள் பயணத்திற்கும் வசதி செய்யப்பட்டது.

சார்லஸ் தம் இராச்சிய எல்லைகளை விரிவுபடுத்துவதிலும் முனைந்தார்; பவேரியாவில் நுழைந்து அங்கிருந்த கோமகனை நீக்கிவிட்டு வேறொருவரை அமர்த்தினர். ஜெர்மானிய ஆதிக்கத்தோடு அவர் மண்ணாசை நின்றுவிடவில்லை. அவர் எல்பு (Elbs) ஆற்றிற்கப்பாலிருந்த ஸ்லாவ் மக்களையும் (Slavs) பொஹீமியா (Bohemia) நாட்டிற்குள் புகுந்து அங்கு வாழ்ந்த ஸெக்கு (Czechs) மக்களையும் தம் ஆதிக்கத்திற்குட்படுத்தினர். இப்போது ஆஸ்திரியா, ஹங்கேரி என்று வழங்கப்படுகிற பகுதிகளில் வாழ்ந்த அவார்ஸ் (Avars) மக்களுடைய அரண்களில் ஹூணர் தலைவர் அட்டிலாவின் பொருட்குவைகள் நிறைந்துள்ளன எனக் கேட்ட

சார்லஸ், அக் கோட்டைகளைக் கைப்பற்றிக் கருவூலத்தையும் தம தாக்கிக்கொள்ள விழைந்தார். பண்பட்ட ஜெர்மானியர் வாழ் விற்குத் தொல்லை தந்த அந்த மக்களை அடக்க வேண்டியிருந்தது. கோட்டைகளைத் தகர்த்து, கருவூலத்தைக் கைப்பற்றி, அம் மக்களின் தலைவரைக் கிறித்துவத்தையேற்குமாறு செய்தது ஷார்லேமேனின் அரிய செயல்களுள் ஒன்ருகும்.

ஸ்பெயினில் ஆதிக்கஞ்செலுத்திய முஸ்லிம்களும் சார்லஸின் படையெடுப்புகளிலிருந்து தப்பவில்லை. அவர் பிரன்னீஸ் மலைகளைப் பலமுறை கடந்து சென்று ஸ்பெயின் நாட்டின் வட பகுதியைத் தாக்கி, முஸ்லிம்களுக்குள் இருந்த பிளவுகளையும் உள் நாட்டுப் போர்களையும் பயன்படுத்திக்கொண்டு, அவர்கள் நாட்டின் வடகிழக்குப் பகுதியைத் தம் இராச்சியத்தோடு இணைத்துக் கொண்டார். இந்த இணைப்பும் கி.பி. 797-ல் பார்சிலோனுவை அவர் தம் வசமாக்கிக்கொண்டதும் ஸ்பெயின் நாட்டின் பிற்கால வரலாற்றை உருவாக்கின எனச் சொல்லலாம். நாட்டின் ஒரு மூலையிலேனும் கிறித்துவம் இடம் பெற்றிருந்தது. அது பின்னுல் சிறிது சிறிதாக ஆனுல், இடையருது வளர்ந்து, நாடு முழுவதும் பரவுவதற்கு ஏதுவாயிற்று.

இங்கிலாந்தில் கோட்டமான வெசெக்ஸ் (Wessex) பகுதியிலிருந்து ஓடி வந்து தஞ்சம் புகுந்த எக்பெர்ட்டுக்கு (Egbert) அடைக்கலம் தந்து மீண்டும் இங்கிலாந்தின் அரசராவதற்கும் உதவியவர் பெரியார் சார்லஸே (Charles the Great) ஆவர். ஷார்லேமேனின் கிறித்துவப் பணி வடகடலையும் பால்டிக்குக் கடலையும் எட்டியதால் புறச்சமயத்தினர் கடலுக்கு விரட்டப் பட்டனர். பழிவாங்கும் வகையில் அவர்கள் கிறித்துவ இங்கிலாந்தையும் ஃப்ரான்சின் வடகடற்கரைகளையும் பன்முறை தாக்கிச் சூறையாடினுர்கள். அவர்களே வரலாற்றில் பேசப் படுகிற வடவர் (Northmen) அல்லது விக்கிங்குகள் (Vikings) டென்மார்க்கு, நார்வே நாடுகளிலிருந்து வந்த அக்கடற்கொள் ளைக்காரர்கள், குறிப்பாகத் துறவிகள் உறைந்திருந்த மடங்களைக் கொளுத்தி, துறவு மேற்கொண்டிருந்த ஆடவர்களையும் பெண்டிரையும் கொன்று, கிறித்துவத்தைப் பழி வாங்குவதில் தங்கள் ஆர்வத்தைக் காட்டி வந்தார்கள்.

பல போர்களின் விளைவாகக் கிறித்துவம் பரவியது; சார்லஸின் இராச்சியமும் கிழக்கு ஜெர்மானியிலும், வட இத் தாலியிலும் வடகிழக்கு ஸ்பெயினிலும் நீண்டு விரிவடைந்தது. நாடுகளை வெல்வதைவிட அவற்றை ஆள்வதிலும், நல்லாட்சிக்கு

வேண்டிய அமைப்பு முறைகளை வகுப்பதிலும். மன்னரின் திறம் நன்கு புலனாயிற்று. நாடு பல கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு கோட்டத் தலைவரும் அவருடைய பகுதியின் அமைதிக்கும் ஆட்சிக்கும் பொறுப்பாக்கப்பட்டிருந்தார். பரந்து கிடந்த ஆதிக்க எல்லைக்குள் கலவரம் ஏற்படாமல் தடுக்கவும், மத்திய ஆட்சியின் ஆணையை நாடெங்கும் அமுல் செய்யவும் பேரரசரின் அதிகாரிகள் இராச்சியத்தில் சுற்றித் திரிந்தார்கள். வரி வசூல், நீதி பரிபாலனம் போன்ற அரசக் கடமைகள் சரிவர நடைபெறுகின்றனவா என்று கண்காணிப்பதும் அவர்களின் பணியே. அரசரும் இடைவிடாது தம் படையினருடன் நாட்டை ஓயாது வலம் வந்து கொண்டிருந்தார். மேலும், திருச்சபைத் தொண்டர்களிடம் சில நாட்டுப் பணிகள் ஒப்படைக்கப்பட்டன.

எல்லைப்புற மாகாணங்களில் கலவரங்களும் போர்களும் அடிக்கடி ஏற்பட்டமையால் அங்கெல்லாம் திறம்படைத்த படைத் தலைவர்கள் ஆட்சித் தலைவர்களாய் அமர்த்தப்பட்டார்கள். மத்திய ஆட்சியின் ஆதிக்கத்தை வலுப்படுத்தும் பொருட்டு, பரம்பரை நிலப் பிரபுக்களின் ஆதிக்கம் குறைக்கப்பட்டு, நம்பிக்கையுள்ள அரசவதிகாரிகளைக் கொண்டே ஆட்சி நடைபெற்றது. நிலமானிய முறையின் தொடக்கத்தை மன்னருடன் இணைத்துப் பேசுவதுண்டு. ஆனால், தம்மாலியன்ற வரையில் அதன் வளர்ச்சியைத் தடுக்கவே அவர் முற்பட்டார். நாட்டவைகள் ஆண்டிற்கு இருமுறை கூடி, மன்னர் செய்த சட்ட திட்டங்களுக்கு இணக்கம் தெரிவித்தன அவ்வப்போது ஷார்லேமேன் தம் அதிகாரிகளுக்கு அனுப்பிய ஆட்சித் தொடர்பான கட்டளைகள் **(Capitularies)** தொகுக்கப்பட்டு நாட்டுச் சட்டமாயின. இந்த வகையிலேதான் அக்காலத்தில் சட்டமியற்றப்பட்டது. கிறித்துவ மறை நூலுக்கு மாறுபடாத வகையில் அரச ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. பழைய ஜெர்மானியப் பழக்கங்களையும் விதிகளையும் நாட்டுக்குப் பயன்படும் வகையில் தொகுத்து எழுதி வைத்துக்கொண்டார்கள். தோற்றுப் போன மக்களின் சட்டங்களில் ஆட்சியாளர் தலையிட்டு அவற்றை மாற்றவில்லை.

நிலக்கிழார்கள் நாட்டிற்குத் தேவையான காலாட்படையையும் குதிரைப் படையையும் தத்தம் பொருளாதார வசதிக்கேற்றவாறு அரசருக்குப் போர்க்காலத்தில் உதவினார்கள். அவர்கள் நாட்டவைகளுக்கு வரும்போது அளித்த நன்கொடைகளே நாட்டின் வருமானமாய் அமைந்தன. ஷார்லேமேனின் வருமானத்தில் பெரும்பகுதி அவருக்குச் சொந்தமாயிருந்த ஏராளமான பண்ணை நிலங்களிலிருந்தே கிடைத்தது. திருச்சபையும் ஷார்லே

மேனின் நிலைமையிலேதான் இயங்கியது. சமயக் குருமார்களின் அவைகள் அவர் தலைமையில் கூடிச் சமயச் சிக்கல்களை ஆய்ந்து முடிவு செய்தன. திருச்சபையமைப்புகள் யாவும் அவராலேயே செய்யப்பட்டன. அரசரிடமிருந்து உரிமைகளும் சலுகைகளும் பெற்றுத் தம்முடைய சமயச் சார்பற்ற அதிகாரங்களைப் பெருக்கிக் கொண்டு தலைமைக் குருமார் எல்லோரும் ஆட்சித் துறையில் பெரும்பங்கு கொண்டனர்; அவ்வகையில் ஏனைய பெரிய அரச அதிகாரிகளுடனும் போட்டியிட்டனர்.

ஷார்லேமேன் படிக்க மட்டும் அறிந்திருந்தாரேயன்றி, எழுதத் தெரியாதவர் என வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றார்கள். அவர் செயலாளரும் அவர் வாழ்க்கை வரலாற்றை எழுதியவருமான எகின்ஹார்டு (Eginhard) என்பவர், தம்முடைய தலைவர் படிக்கக் கற்றிருந்தார் என்றும், எழுதவும் கற்க முயன்றார் ஆயினும், அம் முயற்சியில் வெற்றி பெறவில்லையென்றும் எழுதியுள்ளனர். கிரேக்கம் முதல் பல மொழிகளைப் பேசும் ஆற்றலுடையவர் என்பது, எகின்ஹார்டு எழுதிய 'பெரியார் சார்லஸின் வாழ்க்கை வரலாறு' என்னும் நூலில் காணப்படுகிறது. எழுதக்கூடப் பயிலாத ஷார்லேமேன், அறிவை மிக மதித்தார்; கல்வித் துறையில் மிக்க ஆர்வம் காட்டினார் என்பது மறுக்க முடியாத வொன்று. அகஸ்டின் எழுதிய 'கடவுளின் நகரம்' (The City of God) என்னும் நூல் அவருக்கு மிக விருப்பமானது. பைசா நகரத்திலிருந்தும், லம்பார்டியிலிருந்தும் இங்கிலாந்திலிருந்தும், புலவர் பெருமக்கள் அவர் அவையைத் தேடி வந்தார்கள். பல பள்ளிகள் நிறுவப்பட்டன. சமயக் கல்வியே அவற்றில் இடம் பெற்றது. நாட்டையாள்வோரும் திருச்சபைக் குருமார்களும் அப் பள்ளிகளில் கல்வி பயின்று தங்கள் கடமைகளை ஒழுங்காய் நிறைவேற்ற வாய்ப்பளிக்கப்பட்டார்கள். திருச்சபை மொழியா யிருந்த இலத்தீன் மொழி, பள்ளிகளில் கற்பிக்கும் மொழி யாகவும், எல்பு ஆற்றங்கரையிலிருந்து பிரன்னீஸ் மலைவரையில் பரந்து கிடந்த பேரரசின் பல நாட்டவர்களுக்கும் பொதுவான ஆட்சி மொழியாகவும் விளங்கலாயிற்று. ஆகவே மீண்டும் ஐரோப்பாவில் இலத்தீனே இலக்கிய மொழியாகவும் வளரத் தொடங்கியது. பல அரிய நூல்கள் திருத்தமாய்ப் படி செய்யப் பட்டன. தெளிவாய்ப் படி செய்வதற்கு உதவும் பொருட்டுப் பள்ளிகளில் கையெழுத்துக் கலைக்குச் சிறப்பிடம் கொடுத்திருந் தார்கள்.

கல்வித் துறையில் புகழுற்றது போலக் கட்டடத் துறையிலும் ஷார்லேமேன் சிறப்புற்றார். இத்தாலியக் கட்டடக் கலைஞர்களைக் கொண்டு நாட்டில் பலவிடங்களில் கிறித்துவக் கோயில்களை

இத்தாலிய முறையில் கட்டுவித்தார். ஏக்கன் (Aachen), நிம்வீகென் (Nimwegan) போன்ற நகரங்களில் எழுப்பிய அரண் மனைகளும், ரைன் ஆற்றின் மேல் கட்டப்பட்ட பாலமும், ஆங்காங்கு விளங்கும் மடத்துப் பள்ளிகளும் ஏனைய கட்டடங் களும், வேர்ம்ஸ் (Worms) கொலோன் (Cologne) முதலிய இடங்களில் இன்றும் வழிப்போக்கர்களுக்கு மகிழ்ச்சியூட்டும் காட்சிப் பொருள்களாய்க் காணப்படுகின்றன.

உரோம் நகர வீழ்ச்சிக்குப் பின் மேற்கு ஐரோப்பா காணாத அமைதியும் நல்லாட்சியும் ஷார்லேமேன் பேரரசில் நிலவின. எல்லா ஜெர்மானிய மக்களையும் ஒரு கிறித்துவப் பேரரசிற்குள் கொண்டுவர வேண்டுமென்பதே அவரது குறிக்கோள். அவரிடத் திலே இடைக்கால ஆக்கச் சக்திகள் ஒன்று சேர்ந்திருப்பதையும் அவர் காலத்தில் ஒவ்வொரு துறையிலும் ஒரு புதிய வரலாற்றுக் கட்டம் தொடங்குவதையும் பார்க்கிறோம். அவரது முயற்சியால் கல்வியும் இலக்கியமும் புத்துயிர் பெற்றுச் செழிக்கத் தொடங்கிய தால், இடைக்கால இருளும் அறியாமையும் விலகியோடின. இக்கால ஐரோப்பிய வாழ்வின் அடிப்படைகள் அவருடைய பெயரின் முத்திரையைப் பெற்று விளங்குகின்றன. அவரது அரிய சாதனைகளின் விளைவாய்த் தந்தையாரிடமிருந்து பெற்ற இராச்சியப் பரப்பு இரு மடங்காயிற்று. சாக்ஸேனியர்கள் கிறித்துவப் பட்டியலில் வந்து சேர்ந்தார்கள். அவார்ஸ் மக்கள் ஐரோப்பா நிலப் படத்திலிருந்தே மறைந்தார்கள். கிறித்துவப் பண்பாடு, இலத்தீன் நாகரீகம் என்ற வித்துக்களைத் தாங்கிய ஃப்ராங்கியச் செல்வாக்கு, கிழக்கிலுள்ள ஆஸ்திரியா, ஹங்கேரி, பொஹீமியா, போலண்டு என்னும் நாடுகளில் மெதுவாய்ப் பரவிக் கொண்டிருந்தது. ஷார்லேமேனின் ஆட்சியின் அடிப்படை அவருடைய தனிச் செல்வாக்கும் அதிகாரமுமே அன்றி வல்லாட்சி யன்று. ஆகவே, அவர் தோற்றுவித்த பேரரசும் ஆட்சியமைப்பும் அவருக்குப் பின் சிதைந்து மறைந்து போயின.

கி பி. 476-ல் அழிந்த உரோமப் பேரரசும், மறைந்த உரோ மானியச் சீசர்களின் பேரும் புகழும் ஷார்லேமேன் வழியாய் மீண் டும் உயிரூட்டப் பெற்றன. சிதைந்து அழிந்துவிட்ட—அல்லது அழிந்து கொண்டிருந்த – அப் பேரரசு கொள்கையையன்றி, வேறோர் அரசியல் அமைப்பு முறையைப் பற்றி எண்ணிப் பார்ப்பதற்கு அக்கால ஐரோப்பிய மனப்பாங்கும் அறிவு நிலையும் இடம் தரவில்லை. ஐரோப்பிய ஒற்றுமைக்கு இயற்கையான வழி உரோமானியப் பேரரசைப் புதுப்பித்தலே என்ற கொள்கையைத் திருச்சபை விடாப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டிருந்தது. ஆதலால், இயேசு கூறிய வானுலக அரசை நிறுவுவதில் காட்டாத ஓர்

அக்கறையைப் பூவுலகில் உரோமானிய ஆதிக்கத்தைப் பிழைத்தெழச் செய்வதில் திருச்சபை காட்டியது. அதிலே முழு ஈடுபாடு உடையதாயிருந்தது.

ஷார்லேமேனுக்கும் பழைய பேரரசின் மீட்டுயிர்ப்புக் கருத்து எழாமலில்லை. ஃப்ராங்கிய மன்னராயிருந்த சார்லஸ் லம்பார்டுகளின் மன்னரும், உரோமானியத் தலைவரும் ஆகிவிட்ட பின் பேரரசர் பட்டம் அடுத்த கட்டந்தானே!

உரோமானியப் பேரரசின் மேற்கு மாகாணங்கள் எவர் ஆட்சியிலிருந்த போதிலும் சட்டப்படி (dejure) கான்ஸ்டான்டிநோப்பிளில் இருந்த பேரரசின் ஆதிக்கத்திற்குள் அடங்கியிருந்ததாகவே இடைக்கால மக்கள் எண்ணி வந்தார்கள். சட்டவுலகில் நிலவிய கற்பனைக் கருத்துப்படி பேரரசின் மேற்குப் பகுதிகளில் அரசோச்சிய ஷார்லேமேன் கான்ஸ்டான்டிநோப்பிள் பேரரசர் சார்பில் ஆட்சி புரிந்தார் என்றாகிலும், அன்றி அம் மாகாணங்களைக் கைப்பற்றிய கலகக்காரர் என்றாகிலும் கருதப்படவேண்டும். இம் மரபுகளை நன்கறிந்திருந்த ஷார்லேமேன் அப்போது அரியணையில் அமர்ந்து ஆட்சி செய்த ஐரின் (Irene) எனும் அம்மையாரைப் பேரரசியாராய் ஏற்றுக்கொள்ள மறுத்தார். ஏனெனில், பெண்பாலார் ஒருவர் பேரரசியாராய் இருக்கவியலாது என்பது அக்காலக் கருத்து. சார்லஸ் தம் ஆதிக்க உரிமையைப் போப்பினிடமிருந்து பெற்றிருந்தார். ஆகவே, போப்பின் ஆதரவு சார்லஸுக்கும், சார்லஸின் துணை போப்பிற்கும் தேவைப்பட்டன. பேரரசர் போப்பினால் முடிசூட்டப்பட வேண்டும். ஆனால், போப்புகளைப் பதவியிலமர்த்தவும் விலக்கவும் உரிய உரிமை சில நூற்றாண்டுகள் பேரரசர்களுக்கிருந்து வந்தது. இவ்வாறு இடைக்கால உலகில், முறைப்படி அதிகாரம் போப்பையும் பேரரசையும் சார்ந்தே இருந்தது. இந்நிலையை இருவரும் விரும்பாவிடினும் இதினின்று பல நூற்றாண்டுகளுக்கு ஒருவராலும் தப்ப முடியவில்லை. அவர்களிடையில் இருந்த கசப்பும் வெறுப்பும் வளர்ந்து பதின்மூன்றாம் நூற்றாண்டில் நீண்ட சச்சரவாய் உருவெடுத்தன. இது நிற்க.

கிறித்துவத்தைத் தாங்கி நிற்கவும், உரோமானிய மரபு வழக்கைக் காக்கவும், ஐரோப்பியப் பண்பாட்டைச் சிதைந்து விடாமல் பேணவும், முஸ்லிம் உலகத் தலைவரும் அறிஞருமான பாக்தாது காலிஃப் அப்துர் ரஹமான் அச்சுறுத்தலைச் சமாளிக்கவும் அக்காலத்தில் ஓரதிகாரி இன்றியமையாத வகையில் தேவைப்பட்டார். கிழக்குப் பகுதியில் ஆட்சி செய்த ஐரீன், பழிப்பிற்குரிய பெண்பாலாராகையால் பேரரசராயிருக்க வியலாது. பேரரசர் நிலை அவ்வாறிருக்க, போப்பின் நிலை அதைவிட வருந்தத் தக்க

தாயிருந்தது. போப்பு மூன்றும் லியோவின் (Leo-III) அரசியற் பகைவர்கள், உரோம் நகரத் தெருக்களில் ஊர்வலமாய் வந்த போப்பினைத் தாக்கி, நாட்டைவிட்டே ஓடச் செய்தார்கள். தம் பதவியிலும் வாழ்க்கையிலும் ஒழுக்கக் குறைவாய் நடந்து கொண்டாரெனப் போப்புக் குற்றஞ்சாட்டப்பட்டார். மீண்டும் தம்மைப் போப்பின் பீடத்தில் அமர்த்தவேண்டுமெனச் சார்லஸை மூன்றும் லியோ இறைஞ்சி நின்றார். கி.பி.800-ல் ஐரோப்பாவில் முறையாக அதிகாரம் பெற்ற பேரரசர் ஒருவருமில்லை; போப்பும் ஒருவருமில்லை. மேலும், போப்பின்மீது சுமத்தப்பட்ட குற்றங்களை ஆய்ந்து யார் முடிவு காண்பது? மீண்டும் அவரைப் பதவியிலமர்த்துவது யாரால் இயலும்? பேரரசர் பதவிக்குத் தகுதி யாருக்கிருந்தது? இவ் வினாக்களுக்கெல்லாம் விடையாக விளங்கியவர் பெரியார் சார்லஸ் ஒருவரே. ஜெருசலத்திலிருந்த தலைமைக் கிறித்துவக் குரு ஷார்லேமேனை மதித்தாரேயன்றிக் கான்ஸ்டான்டிநோப்பிள் பேரரசை நம்பவில்லை.

கி.பி. 800-ல் சார்லஸ் போப்புடன் இத்தாலிக்குச் சென்றார் மூன்றும் லியோ. தாம் குற்றமற்றவர் என மறை நூலின் மீது ஆணையிட்டுக் கூறினார். குருமார் திருக்கூட்டத்தின் இசைவுடன் போப்பின் மாசு துடைக்கப்பட்ட நிகழ்ச்சிக்கு இரு நாள்களுக்குப் பின்னர்க் கிறித்துப் பிறந்த நாள் விழாவைப் பீட்டர் கோயிலில் கொண்டாடினார்கள். அன்று நன்றி மறவாத லியோ, சார்லஸின் முடியில் பேரரசு மகுடத்தைச் சூட்டினார். அங்கிருந்த சமயத் திருக்கூட்டம் ஷார்லேமேனைச் சீசர் என்றும் அகஸ்டஸ் என்றும் விளித்து வாழ்த்தியது எதிர்பாராது நடைபெற்ற முடிசூட்டல் ஷார்லேமேனுக்கு மகிழ்ச்சி தரவில்லையென அவர் வாழ்க்கை நூலாசிரியர் எகின்ஹார்டு எழுதியுள்ளார். அது உண்மையாய் இருக்கலாம். பேரரசர் ஆகவேண்டும் என அவர் எண்ணியும் பேசியும் வந்தார். ஆனால், போப்பினால் பேரரசராகவோ, அவர் கையினால் முடிசூட்டிக்கொள்ளவோ விரும்பவில்லை. கிழக்குப் பகுதியில் ஆண்டுகொண்டிருந்த ஐரீனை மணந்துகொண்டால் பேரரசின் கிழக்குமேற்குப் பகுதிகள் இரண்டிற்குமே தலைவராகி விடலாமென்ற எண்ணமும் சார்லஸின் மனத்தில் ஊசலாடியது துண்டு.

கி. பி. 800-ல் கிறித்துப் பிறந்த நாள் விழாவன்று நடைபெற்ற நிகழ்ச்சியின் விளைவு யாதெனில், பேரரசர் பட்டத்தையும் மகுடத்தையும் போப்பின் கொடையாய்ச் சார்லஸ் பெற்றார். மேலும், கான்ஸ்டான்டிநோப்பிளின் பகையைத் தேடிக்கொண்டு, பைசான்டைன் திருச்சபையிலிருந்து உரோம் பிரிந்துகொண்டது.

முதலில் பைசான்டியம் ஷார்லேமேனைப் பேரரசராய் ஏற்க வில்லை. ஆனால், கி. பி. 811-ல் பல்கேரிய மக்கள் பைசான்டியப் பேரரசரின் படைகளைத் தோற்கடித்து அழித்தார்கள். அதன் பின்னர், பைசான்டியத் தூதர்கள் ஷார்லேமேனை அகஸ்டஸ் என வழங்க இசைந்தார்கள். கி. பி. 476-ல் ஒடாசரோடு (Odoacer) முடிவடைந்த உரோமப் பேரரசு மீண்டும் கி. பி. 800-ல் தூய உரோமப் பேரரசாய் (Holy Roman Empire) முளைத் தெழுந்தது.

பேரரசர் பட்டம் ஷார்லேமேனின் இராச்சியத்தின் பரப் பையோ, வருமானத்தையோ, அதிகாரத்தையோ அணுவள வேனும் அதிகப்படுத்தவில்லை. ஆனால், பேரரசர்களுக்கு மேற்கு ஐரோப்பாவில் முதன்மை இடம் அதனால் கிடைத்தது. இப்பேரர சின் மீட்டுயிர்ப்பு இடைக்கால வரலாற்றுப் போக்கையே வரை யறுத்தது. ஜெர்மனியும் இத்தாலியும் இவ்வாறு இணைக்கப்பட்ட தால், அடுத்த எழுநூறு ஆண்டுகளுக்கு ஜெர்மானிய மன்னர்கள் தங்கள் ஆதிக்கத்திலிருந்து இத்தாலியை விடுவிக்கும் எண்ணத் தையே ஏற்க மறுத்தார்கள். கீழ்த்திசையில் தங்கள் இராச்சியத் தைப் பரப்புவதை விடுத்து, இத்தாலியில் போரிடுவதிலேயே தங்கள் காலத்தையும் ஆற்றலையும் வீணாக்கி வந்தார்கள். இத்தா லியப் போர்களில் இடையறாது ஈடுபட்டுத் தேய்ந்தார்களேயன்றி, ஜெர்மானிய ஒற்றுமையைக் காண முடியவில்லை. மேற்கில் பேரர சின் மீட்டுயிர்ப்பு ஜெர்மனி நாடு ஒன்றுபடுவதற்குப் பெருந்தடை யாய் இருந்தது.

உரோம் திருச்சபையின் ஆசியுடன் நிறுவப்பட்ட தூய உரோ மப் பேரரசு, மேற்கு ஐரோப்பாவிலும் மத்திய ஐரோப்பாவிலும் பரவி, ஆயிரமாண்டுகளுக்குமேல் 1806-ல் நெப்போலியனால் அழிக்கப்படுகிற வரையில் நீடித்திருந்தது. ஐரோப்பியக் குழப் பங்களினிடையிலேயும் நிலைத்திருந்த ஒற்றுமையுணர்வு, தூய உரோமப் பேரரசு வழியாக வெளிப்பட்டதுபோல, பிற்காலத் தில் ஐரோப்பிய ஒருமைப்பாட்டுத் திட்டம், சர்வதேச சங்கம் முதலிய நிறுவனங்கள் வாயிலாகவும் வடிவெடுத்தது.

## 3

ஷார்லேமேன் அரசினை உரோமப் பேரரசு எனக் குறிப்பிட் டாலும், உண்மையில் அது விரிந்த ஒரு ஃப்ராங்கிய இராச்சியமே. அதற்குக் கரோலிங்கியப் பேரரசெனவே வரலாற்றாசிரியர்கள் பொருத்தமாய்ப் பெயரிட்டார்கள். கரோலிங்கிய வமிசத்தைத் தொடங்கியவர் அரண்மனை மேயராயிருந்த மூன்றாம் பிப்பின்

ஆவர். நாற்பத்தாறு ஆ... ல் அமர்ந்து ஆட்சி செய்த காலத்தில் ஸ்லாவ், சாக்ஸென, அவார்ஸ், லம்பார்டு, ஸ்பானிஷ், டேனிஷ் முதலிய பலதிறப்பட்ட மக்களுடன் ஐம்பத்து மூன்று இடங்களில் பொருது தம் இராச்சியப் பரப்பை ஷார்லே மேன் இரு மடங்காக்கினர் என்பதைக் கண்டோம். இனம், குலம், குணம், பழக்கம், மொழி ஆகிய இவற்றால் மாறுபட்ட மக்கள் வாழ்ந்த ஒரு பெரும்பரப்பினை இடைக்காலத்தில் ஆட்சி புரிவது எளிதன்று. ஊக்கமும் ஆற்றலும் நிறைந்த ஷார்லேமேன் இறந்த பின் கரோலிங்கியப் பேரரசினை ஆளும் திறம் படைத்த அரசன் அரியணையேறவில்லை. போக்குவரவு வசதிகளே இல்லாத அந்தக் காலத்தில் ஓரிடத்திலிருந்து எல்லா மக்களையும் அடக்கி ஆதிக்கஞ் செலுத்துவது எல்லாவரசர்களுக்கும் இயலாதவொன்று. ஆதலால், ஷார்லேமேனுக்குப் பிறகு அவரது பேரரசின் சிதைவு தவிர்க்க முடியாதது. மேலும், அச் சிதைவு ஐரோப்பாவைப் பொறுத்த வரையில் நலம் பயப்பதாயும் இருந்தது.

கரோலிங்கியப் பேரரசு சிதைந்து போனதற்குப் பல காரணங்களிருந்தன. ஒரு பெரிய இராச்சியப் பொறுப்பைப் பல வகைகளில் பிரிவினை செய்துகொள்ளலாம். அதிகாரத்தைப் பங்கிட்டுப் பலருக்கு உரிமையாக்கலாம். ஆனால், சார்லஸுக்குப் பிறகு ஆட்சிப் பொறுப்பையேற்றவர்கள் இராச்சியத்தைப் பிரிவினை செய்வதில் கையாண்ட வகையைவிட மோசமான முறை வேறொன்று இருக்க முடியாது. ஃப்ராங்கியர்கள் தங்கள் இராச்சியத்தைக் குடும்பச் சொத்தெனக் கருதி, ஒவ்வொருவரும் அவரவர் விருப்பம், வசதிக்கேற்றவாறு அதைப் பிரிவினை செய்து, தத்தம் மக்களுக்கு விட்டுச் சென்றனர். உடன் பிறந்தவர்கள் பாகப்பிரிவினை செய்துகொண்டபோதும், இறந்த கால வரலாற்றுப் படிப்பினையைப் புறக்கணித்தே வந்தார்கள். மேலும், ஷார்லேமேனுக்குப் பின் பட்டம் எய்தியவர்கள் வலுவற்றவர்கள்; அவர்களுடைய அதிகாரிகள் விருப்பம்போலப் பதவியையும், பண்ணைகளையும் கைப்பற்றிக்கொண்டார்கள். அந்தக் காலத்தில் ஆற்றலும் ஆவலுமுள்ளவர்கள் போர்செய்து முன்னுக்கு வருவதைத் தவிர வேறு வழியே இல்லை. படை வலிமை எதையும் வரையறுத்தது! எல்லாவற்றையும் நேர்மையாக்கியது. நாடாள்வது படைப் பலத்தின் பரிசாகிவிட்டது. இதுமட்டுமன்றி, மீண்டும் புறச்சமயத்தினரும், பண்படா மக்களுமாகிய சாரஸேனியர்கள், ஸ்லாவ் மக்கள், விக்கிங்குகள் (Vikings) என்ற வடவர் (Northmen) போன்றவர்களின் படையெடுப்புகள் ஐரோப்பாவை அலக்கழித்தன. நான்காம், ஐந்தாம் நூற்றாண்டுகளில் உரோமப் பேரரசைச் சிதைத்த ஜெர்மானியப் படையெடுப்புகளுடன் இவற்றை

ஒப்பிடலாம். இவற்றால் கரோலிங்கியப் பேரரசு சிதைந்து, இன அடிப்படையிலும் மொழியடிப்படையிலும் பல புதிய நாடுகள் முளைத்தெழுந்தன.

கி. பி. 814-ல் பேரரசரான ஷார்லேமேனின் மைந்தரான லூயி கடவுட்பற்று மிக்கவராய்த் திருச்சபைக்கும் குருமார் கூட்டத்திற்கும் அடிமைபோல அடங்கி வாழ்ந்தார்; துறவியாகி மடத்தில் வாழவேண்டியவர் வழிதவறி ஆட்சியிலமர்ந்து விட்டார்: ஊக்கமும் மனவுறுதியுமற்ற அவர் காலத்தில் பேரரசில் உள் நாட்டுப் போர்கள் மலிந்தன. அவர்செய்த பல பெருந்தவறுகளால் அவர் பெற்ற மக்களே அவரையெதிர்த்துப் போராடினார்கள். அவர் தம் வாழ்நாளிலேயே இராச்சியத்தைத் தம் மக்களுக்குப் பகிர்ந்து கொடுத்து ஆட்சியில் அவர்களையும் கூட்டாளிகளாக்கிக் கொண்டு மிகத் தொல்லைப்பட்டார். திருச்சபைக்கு அவர் அளித்த சலுகைகளால் அரசாங்க வருமானம் குறைந்தது; அரசருடைய மதிப்பு மங்கியது; சுதந்தரமாய் வாழும் எண்ணத்தைத் திருச்சபை வளர்த்துக்கொண்டது. போப்பின் ஆட்சியும் அரசராட்சியும் கூட்டாய் இருந்தது மாறி, முதல் ஆட்சி இரண்டாவதைத் தனக்குக் கீழ்ப்படுத்திக்கொண்டது 840-ல் அவர் இறந்த பின் அவருடைய மைந்தர் மூவரும் இராச்சியப் பிரிவினைக்காக மூன்றாண்டுகள் போரிட்டு, நாட்டின் ஒழுங்கைச் சின்னபின்னப் படுத்தினர். 843-ல் வெர்டுன் ஒப்பந்தப்படி (Treaty of Verdun) தற்காலிகமாய்ப் பங்கீடு செய்யப்பட்டது. மூத்த மைந்தரான லோத்தேர் (Lothair) பேரரசின் பட்டப் பெயரையும், அதன் மத்தியப் பகுதியையும் பெற்றார். ரைன் ஆற்றின் இரு கரைகளையொட்டிய நிலங்களாகிய ஸ்விட்சர்லாந்தும் வடக்கு இத்தாலியும் அவர் ஆதிக்கத்திற்குள் வந்தன. அந்தப் பகுதிக்குக் கிழக்கிலிருந்தவை லூயிக்கும் (Lewis) மேற்கிலிருந்த நாடுகள் சார்லஸுக்கும் கிடைத்தன. பேரரசு ஃப்ராங்கிஷ் நாட்டுடன் இணைந்து ஒன்றாயிருந்த நிலை மறைந்தது. இந்த ஒப்பந்தத்திற்குமுன், கி. பி. 842-ல் லோத்தேரின் இளவல்களிருவரும் தம் தமையனார் கட்டளைக்குக் கீழ்ப்படிவதில்லையென ஸ்டிராஸ்பர்கு என்ற இடத்தில் சூளுரைத்தனர். மாற்றுக் கட்சிக்காரர் புரிந்துகொள்வதற்காக லூயி ஃப்ரெஞ்சு மொழியிலும் சார்லஸ் ஜெர்மன் மொழியிலும் உறுதிமொழி பகர்ந்து, இரு மொழிகள் பேசிய இரு வேறு இனங்கள் பேரரசிலிருந்தன என்ற உண்மையை வெளிப்படுத்தினார்கள்; வெர்டுன் உடன்படிக்கை நிரந்தர ஏற்பாட்டினைத் தரவில்லை. ஆயினும், வருங்கால வரலாற்றினை நிழலிட்டுக் காட்டியது. லோத்தேர் பெற்ற பகுதி ஃப்ரான்சிற்கும் ஜெர்மனிக்கும் இடையில் சிக்கியதால், அவ்விரு நாடுகளும் அப்போதிருந்தே அவ்விடைப்

பகுதியைக் கைப்பற்றப் பெரும் போராட்டத்தில் இறங்கின. சார்லஸுக்கும் லூயிக்கும் கிடைத்த பகுதிகளுள் ஒவ்வொன்றும் ஓரின அடிப்படையிலே அமைந்திருந்தது. ஜெர்மனி, ஃப்ரான்ஸ் இவ்விரு நாடுகளுக்கும் தனித்தனியான வரலாறு 843-ல் தொடங்கிற்று எனலாம். லோத்தேர் பகுதியில் பல இன மக்கள் வாழ்ந்தார்கள். மேலும், அவருடைய ஆதிக்கவெல்லைகளைப் பகைவர்களிடமிருந்து காப்பது எளிதாயில்லை. மேலும், அவருடைய இராச்சியத்தில் ஆல்ப்ஸ் மலை வேறு குறுக்கிட்டது. அமைதியான ஆட்சிக்கு வழி வகுக்காமல், வெர்டுன் ஒப்பந்தம் புதிய பிரிவினைகளுக்கும் அண்ணன் தம்பிகள் சண்டைகளுக்கும் வழிகோலி, ஃப்ராங்கிஷ் மன்னர்களின் வலிமையைக் குறைத்து, நிலப் பிரபுக்களின் வலிவை மிகுதியாக்கிற்று.

கரோலிங்கியப் பேரரசு சிதையத் தொடங்கி 843-ல் முதல் கட்டத்தை எட்டியது. லோத்தேர் தம் இராச்சியத்தை மூன்று மைந்தருக்கும் பகிர்ந்து கொடுத்துவிட்டுத் துறவியாகி, 855-ல் இறந்தார். அம்மைந்தருள் ஒருவரான இரண்டாம் லோத்தேர் பெயரால் அவருடைய நாடு லோத்தேரிங்கியா (Lotharingia) என்றும், பின்னர் லோரெயின் (Lorraine) என்றும் குறிக்கப் பெற்றது. உடன் பிறந்தவர்கள் தங்களுக்குள் சண்டையிட்டார்கள்; 869-ல் இரண்டாம் லோத்தேர் இறந்ததும் அவருடைய சிறிய தந்தைமார் அவருடைய நாட்டைக் கைப்பற்றிப் பங்கிட்டுக் கொண்டனர். போட்டிக்கிடையில் வழுக்கைத்தலையர் சார்லஸ் (Charles the Bald) இத்தாலிக்குச் சென்று லம்பார்டுகளின் மன்னராகவும், பிறகு பேரரசராகவும் போப்பின் கையால் முடி சூட்டிக்கொண்டார். இந்த நிகழ்ச்சி, பேரரசினைவிடப் போப்பின் ஆட்சி உயர்ந்தது, ஆற்றல் மிக்கது என உலகிற்கு அறிவித்தது. போப்பு தாம் விரும்பிய ஒருவரை அழைத்துப் பேரரசுப் பட்டம் அளிப்பதைத் தம் தனிச் சிறப்புரிமையெனக் கருதினர்.

பேரரசருக்குரிய மதிப்பும் சத்தியும் ஓரளவேனும் பெற்றிருந்த கடைசிப் பேரரசர் வழுக்கைத்தலையர் சார்லஸாவர். அதன் பின்னர்ப் பல்வேறு பண்படா இனங்களின் படையெடுப்புகளால் கரோலிங்கியப் பேரரசு சிறுத்துச் சிதைந்தது. 881-ல் போப்பை மிரட்டி அவரைக்கொண்டு 'பருத்த சார்லஸ்' (Charls the Fat) பேரரசராய் முடிசூட்டிக்கொண்டார். சில ஆண்டுகளிலே போப்பும் பேரரசரும் ஒரே காலத்தில் இழிவுபடுத்தப்பட்டனர்–கோழையாகிய 'பருத்த சார்லஸ், 887-ல் அரியணையிலிருந்து இறக்கப்பட்டார். அதனுடன் கரோலிங்கியப் பேரரசும் முடிவுற்றது. 888-ல் பாரிஸ் பெருமகனுரான (Count of Paris) ஒடோ

(Odo) என்பவர் ஃப்ரெஞ்சு அரசரானார், ஜெர்மனியில் 919-ல் சாக்ஸன் கோமகனார் ஹென்றி மன்னரானார்.

பழைய உரோமப் பேரரசு, ஃப்ராங்கு மக்கள் நிறுவிய மெரோவிங்கியப் பேரரசு ஆகிய இவ்விரண்டையும்விட விரைவில் கரோலிங்கியப் பேரரசு கரைந்தது. 843-ல் வெர்டுன் ஒப்பந்தத்தால் ஏற்பட்ட பிரிவினையும் 870-ல் மெர்சென் (Mersen) உடன்படிக்கையால் ஏற்பட்ட பிரிவினையும் பேரரசினைச் சிதைத்துச் சின்னபின்னப்படுத்தின. இப் பிரிவினைகளால் பேரரசு நலிந்து கொண்டிருந்தபோதே புறச்சமயத்தினராகிய வடவர் படையெடுத்து, கிறித்துவக் கோயில்களையும் மடங்களையும் கொளுத்தி, மக்களின் பொருளைக் கொள்ளையடித்து, பேரரசின் அமைதியைக் குலைக்கலாயினர்.

ஷார்லேமேன் மைந்தரான பத்த லூயி (Louis the Pious) காலத்திலே புலப்பட்ட சிதைவு, அவருக்குப் பின் பட்டமெய்திய வலிவற்ற அரசர்கள் காலத்தில் மேலும் அதிகரித்தது. நார்ஸ் மக்கள் (Norsemen) டென்மார்க், ஸ்வீடன், நார்வே என்னும் நாடுகளில் வாழ்ந்த ஜெர்மானியர்களே. அவர்கள் நாட்டில் அவர்களுக்குத் தேவையான உணவு கிடைக்கவில்லை, உணவுப்பொருள் விளைவிக்கக்கூடிய விளைநிலங்களும் போதிய அளவில்லை. ஜெர்மானியர்கள் கடலிற் கலஞ்செலுத்திச் செல்வதில் நல்ல பயிற்சி பெற்றிருந்தார்கள். ஷார்லேமேன் பேரரசராயிருந்தபோதே நார்ஸ் மக்கள் அவருடைய நாடுகளில் உள்ள ஆறுகளில் திடீரென்று நீண்ட படகுகளில் வந்து சூறையாடிச் சென்றார்கள். இத் தாக்குதல்கள் பத்த லூயி காலத்திலும் அவருக்குப் பின் வந்த கரோலிங்கிய மன்னர்கள் காலத்திலும் பன்மடங்கு அதிகரித்தன. திடீர்த் தாக்குதல்களைக் கரோலிங்கிய மன்னர்களால் தடுத்து நிறுத்த முடியவே இல்லை. நிலக்கிழார்களின் கோட்டைகளைத் தவிர, பேரரசின் எப்பகுதியிலும் மக்களுக்குப் பாதுகாப்பான புகலிடம் கிடைப்பதரிதாயிற்று. ஆதலால், பாதுகாப்பற்ற பாமர மக்கள் பிரபுக்களை அண்டித் தங்கள் உயிரையும் சொத்தையும் காத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. இந்த நிலை நிலமானிய அமைப்பிற்கு அழைத்துச் சென்றது.

787-ல் இங்கிலாந்தை விக்கிங்குகள் தாக்கத் தொடங்கினார்கள். ஃப்ராங்கிய அரசு வீழ்ச்சியடையத் தொடங்கியதும் விக்கிங்குகளில், பலர் இங்கிலாந்திலிருந்து ஃப்ரான்ஸ் பக்கம் தமது கவனத்தைத் திருப்பினர். 836-ல் ஆன்ட்வெர்ப்பு (Antwerp) கொளுத்தப்பட்டது; 845-ல் பாரிஸ் நகரம் கொள்ளையிடப்

பட்டது. நார்ஸ் மக்கள் ஜிப்ரால்டர் வழியாக மத்தியதரைக் கடலிற் புகுந்து ஸ்பெயினைத் தாக்கி, 860-ல் இத்தாலியில் பைசா நகரத்தை அடைந்தார்கள். 881-ல் ஜெர்மனி மிகக் கடுமையாய்த் தாக்கப்பட்டு அய்-லா ஷாப்பேல் (Aix-la-chapelle), கொலோன் (Cologne) என்னும் நகரங்கள் அவர்களால் அழிக்கப்பட்டன, வடவர் கூட்டங்கள் சில கிழக்கில் பால்டிக்குக் கடலைக் கடந்து ஃபின்லாண்டு வளைகுடாவில் நுழைந்து, ரஷிய ஆறுகளில் தெற்கு நோக்கிச் சென்று, கருங்கடலில் உள்ள கான்ஸ்டான்டி நோப்பிளைத் தாக்கின. 862-ல் வட ரஷியாவில் ஸ்வீடிஷ் தலைவர் ரூரிக்கு (Rurik) என்பவர், ஸ்லாவிக்கு மக்களைத் தோற்கடித்து ஒரு நார்ஸ் வமிசத்தைத் தொடங்கினர். ரஷிய நாடு அவர்களிடமிருந்தே தன் பெயரைப் பெற்றுள்ளது. வடவர் ஒரு சிலர் இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து, கிரீன்லாந்து வழியாகக் கி.பி. 1000 அளவில் வடஅமெரிக்காவின் கரைகளை அடைந்தார்கள்.

நார்ஸ் மக்கள் பல நாடுகளைத் தாக்கிக் கொள்ளையடித்ததோடு சில நாடுகளில் குடியேறவும் செய்தார்கள்; இங்கிலாந்தில் பெருவாரியாகக் குடியேறி, 885-ல் ஆல்ஃப்ரெடு (Alfred) என்பவருடன் ஒப்பந்தஞ்செய்துகொண்டு, தேம்ஸ் ஆற்றிற்கு வடக்கிலிருந்த கடற்கரைப் பகுதிகளைத் தங்கள் நாடு (Danelaw) ஆக்கிக் கொண்டார்கள். அதேபோன்று 912-ல் ரோலோ (Rollo) தலைமையில் நார்ஸ் மக்கள் 'சிம்பிள்' சார்லஸ் (Charles the Simple) என்பவரின் இணக்கத்துடன் ஃப்ரான்சின் வடபகுதியில் குடியேறினர்கள். அம் மக்களாலேயே அக்கோட்டம் நார்மண்டி (Normandy) எனப் பெயர் பெற்றது. நார்மண்டியில் குடியேறிய வடவர் ஃப்ரெஞ்சு மன்னரின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ளவும், கிறித்துவத்தைத் தழுவவும் இசைந்தனர். துணிவுமிக்க நார்மானியர்கள் பதினோராவது நூற்றுண்டில் இங்கிலாந்தை வென்று ஆண்டார்கள்; தென்னித்தாலியிலும் சிசிலியிலும் நார்மானிய வீரர்கள் ஆட்சியைக் கைப்பற்றினர்கள்.

நார்ஸ் மக்கள் திடீரென்று அரசியல் வானில் தோன்றி இரண்டு நூற்றுண்டுகளுக்குமேல் நாடோடி வீர வாழ்வை மேற்கொண்டார்கள். போரையும் பெண்களையும், கொள்ளையையும் கொலையையும் அம் மக்கள் பெரிதும் விரும்பினர்கள். தார் (Thor) என்பதும், ஓடின் (Odin) என்பதும் அவர்கள் வணங்கிய தெய்வங்கள். போரில் இறந்த வீரர்கள் வானுலகில் (Valhalla) காலமெல்லாம் சண்டையிடுவதிலும் விருந்துண்பதிலும் 'கழித்தார்கள் என அவர்கள் நினைத்தார்கள். அம் மக்களின் தலைவர்கள்

செய்த வீரச் செயல்களைப் பற்றிய கதைகளின் தொகுப்பிற்கு வீர காப்பியம் (Sagas) என்னும் பெயர் வழங்கி வந்தது. மேலே ஐரோப்பாவின் வளர்ச்சிக்குத் தடையாயிருந்த நார்ஸ் மக்கள், பண்பட்ட கிறித்தவர்களான பின் வாழ்க்கையின் கலைகளை வளர்த்தார்கள்; அரசாங்கத்திற்கு நல்ல அமைப்பு முறையை நல்கினார்கள்.

கரோலிங்கியப் பேரரசைத் தாக்கியவர் வடவர் மட்டுமல்லர். ஸ்பெயினிலும் ஆப்பிரிக்காவிலுமிருந்து முஸ்லிம்கள் மத்திய தரைக்கடலில் உள்ள தீவுகளையும் தீவக் குறைகளையும் தாக்கினார்கள். ஆப்பிரிக்காவிலிருந்த டூனிஸ் நாடு சிசிலித் தீவைக் கைப்பற்ற விரும்பியது. ஐரோப்பாவும் ஆப்பிரிக்காவும் வரலாற்றுக் காலமெல்லாம் சிசிலித் தீவிற்காகப் போட்டியிட்டும் போரிட்டும் வந்துள்ளன. பைசான்டைன்களால் சிசிலித் தீவைக் காப்பாற்ற முடியவில்லை: மேற்கு மத்தியதரைக் கடல் தீவுகளைக் கைப்பற்றிய பின் அரபு மக்கள் ஐரோப்பாக் கண்டத்தின் கரைகளைத் தாக்கத் தொடங்கினார்கள். 846-ல் பீட்டரின் கோயிலில் அவர்கள் பாடி வீடு அமைத்துக் கொண்டார்கள். பிறகு மான்டி காசினோ மட்டும் எரியூட்டப்பட்டது. கிழக்கில் மாக்யார்கள் (Magyars) என்பவர்களின் குழு, ஜெர்மனி, இத்தாலி நாடுகளைத் தாக்கி அழித்த மற்றோர் இனமாகும். அவர்கள் ஹங்கேரிய மக்களின் முன்னோர்கள். மாக்யாரின் குதிரைப்படை, பவேரியா, வெனிஷியா, லம்பார்டி முதலிய நாடுகளைச் சூறையாடிய பின் வடக்கே திரும்பி, சாக்ஸனியையும் ரைன் பள்ளத்தாக்கையும் பாழ்படுத்திற்று.

கரோலிங்கியப் பேரரசு, கான்ஸ்டன்டைன் பேரரசும் ஏனைய பேரரசுகளும் அடைந்த முடிவையே இறுதியில் அடைந்து, பழைய அரச மரபு நீடிக்கவில்லை. கரோலிங்கியர்களின் உயர்ந்த குறிக்கோளின்படி திருச்சபையும், அரசும் (State) ஒரே ஆட்சியின் இரு தோற்றங்களாகும். ஆகவே, ஒன்பதாவது நூற்றாண்டின் அழிவுச் சக்திகளால் ஒன்று சீர்கேடடைந்த போது மற்றொன்று மட்டும் எவ்வாறு தப்ப முடியும்? பேரரசு நலிந்து தேய்ந்து மறைவதற்கு முன் அதன் சிதைவுகளில் பல சிறு நாடுகள் முளைத்தெழுந்தன.

கரோலிங்கியப் பேரரசு அழிந்ததாலும், வடவர் படையெடுப்புகளாலும் மேற்கு ஐரோப்பா தற்காப்பின்றித் தடுமாறியது. இதனால் நிலக்கிழார்கள் தங்களையும் பண்ணைக் குடிகளையும் காத்துக் கொள்ளச் சமுதாய அரசியல் முறையொன்றை வகுத்துக் கொள்ள வேண்டி நேர்ந்தது. அரசர்களின் வலிமை குறைந்து நிலக்கிழார்களின் வலிமை அதிகரிக்கவே, நிலமானிய முறை தோன்றலாயிற்று.

**கரோலிங்கிய மறுமலர்ச்சி :**

கரோலிங்கியப் பேரரசில் ஷார்லேமேன் காலத்திலும் அதற்குப் பிறகும் கல்வி, இலக்கியம், அறிவு, இசை, சிற்பம் முதலிய துறைகளில் ஏற்பட்ட எழுச்சியையும் வளர்ச்சியையும் மறுமலர்ச்சி எனக் குறிப்பிடுகிருர்கள். பேரரசருக்குக் கல்வியின் பாலிருந்த ஆர்வமும், மதிப்பும். அவருக்கிருந்த அறிவுத் தினவும், அவற்றின் காரணமாய் அரசவையில் கல்விக்கும், புலமைக்கும் கிடைத்த உயர்வு, பன்னாட்டு அறிஞர்கள் அரசரைச் சூழ்ந்திருந்த காட்சி, அரசர் கற்றறிந்தாரோடு சமத்துவமாய்ப் பழகிய பண்பாடு, அரசர் செல்லுமிடந்தோறும்—ஏன் போர்க்களத்திற்கும்—உடன் செல்லும் அரண்மனைக் கல்விச்சாலை, சமய குருமார் பதவிக்கும், அத் துறையில் பணி உயர்விற்கும் எழுதப்படிக்கத் தெரிய வேண்டும் என்ற கட்டாயம்—இவையே மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தன. ஆனால், அறுநூறு ஆண்டுகளுக்குப் பின்னல் ஏற்பட்ட மறுமலர்ச்சியிலிருந்த துணிவு, சுதந்தரம், கவர்ச்சிக் கரோலிங்கிய மறுமலர்ச்சியில் இல்லை. காரணம் விஞ்ஞான எண்ணமோ, புறவுலகக் காட்சியறிவோ, புதிய உண்மைகளைக் கண்டு மனித சமுதாயத்தை உயர்த்த வேண்டுமென்ற இயல் புணர்ச்சியோ அப்போதில்லை. இழந்த கிரேக்க உரோமப் பண்பாட்டைத் திரும்பப் பெற்று, அதனைப் போற்றிப் பாதுகாத்து, மிலேச்சர்களிடையே ஒரு கற்றறிந்த சமுதாயத்தை உருவாக்க வேண்டுமென்பதே அக்காலத் தேவையாயிருந்தது. மானிட வாழ்விற்கு வழிகாட்டியாய் அமைந்த திருமறை புகட்டிய உண்மைகளை உணர்ந்து சீடர்களுக்கு விளக்குவதையே கற்றறிந்தோர் தலையாய கடமையாய்க் கொண்டனர். இலக்கியம் கடவுள் பற்றை வளர்க்கத் துணைசெய்யவேண்டுமென்றே ஷார்லேமேன் விழைந்தார்.

ஷார்லேமேனின் புகழுக்குரிய சாதனைகளில் மிகச் சிறந்தது அறியாமை இருள்சூழ்ந்த தம் அரசில் அறிவு ஒளியைப் பரப்பிய பணியேயாகும். அவருடைய அவையில் ஆங்கில அறிஞர் ஆல்க்வின் (Alcuin) லம்பார்டுகுரு பாலஸ்டையகோனஸ் (Paulus Diaconus), பைசா நகரப் புல்வர் பீடர் போன்றோர் இருந்தார்கள். அரண்மனையில் ஒரு கல்விக்கூடத்தை அமைத்து, அறிஞர்கள் சொற்பொழிவாற்றினர், எடுத்துக்கொண்ட பொருளை வாதிட்டு ஆய்ந்தனர். அவ்வறிஞர்கள் திருமறையிலிருந்தும் பண்டைய இலக்கியத்திலிருந்தும் தங்கட்குப் புதுப் பெயர்களைப் பொறுக்கிக்கொண்டனர்; அரசரை டேவிட் (David) எனச் செல்லமாக அழைத்தனர். கல்விக்கூடத் தொடர் கூட்டங்கள் குளிர்காலத்தில் நடைபெற்றன.

மேற்கு ஐரோப்பாவில் பிரிட்டன், அயர்லாந்து தீவுகளில் மட்டுமே கல்வி மணம்வீசிற்று. மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்பட்ட இன்னல்கள் அத் தீவுகளை அணுகவில்லை. அயோனு (Iora) அர்மாக் (Armagh) ஜாரோ, யார்க் போன்ற இடங்களில் பத்தியும்; அறிவும் தனிச்சிறப்புடன் இடம்பெற்றிருந்தன. இலத்தீன், சிறிதளவு கிரேக்கம், எபிரேயம் அறிந்தவர்கள் அவ்விருநாடுகளிலும் வாழ்ந்தார்கள். இங்கிலாந்தில் நார்த்தம் பிரியா கோட்டத்தில் இலக்கிய மணம் கமழ்ந்தது. ஆல்ப்ஸ் மலைக்கு வடக்கே வேறெங்குமில்லாத சிறந்த நூலகம் யார்க் நகரில் இருந்தது. அவ்வறிவொளியைக் கொண்டே ஃப்ராங்கிஷ் அரசினைச் சூழ்ந்திருந்த அறியாமை இருள் அகற்றப்பட்டது.

யார்க் புலவர் ஆல்க்வின் தம்முடைய எழுத்தாற்றலையும், பிறரை ஊக்குவிக்கும் திறமையையும். தூய்மையான பண்பையுங் கொண்டு ஷார்லேமேன் அரசில் கல்வி, சமயத் துறைகளில் அரும் பணியாற்றினார். ஆசிரியர்களுக்கு வேண்டிய நூல்களும், இலத்தீன் மொழியில் பாடல்களும்; தர்க்கவாத சமயக் கட்டுரைகளும் எழுதி அறிவு வளர்ச்சிக்கான ஒரு சூழ்நிலையைத் தோற்றுவித்தார். அவர் நிறுவிய அரண்மனைக் கல்விக்கூடம் கல்வித்துறையில் முன்னோடியாகவும் முன்மாதிரியாகவும் அமைந்தது. ஆல்க்வின் காட்டிய ஆர்வத்தின் விளைவாகக் கல்விப் பொறுப்பினை திருச்சபை ஏற்று ஆங்காங்கு பள்ளிகளை அமைத்துக் கல்வித்திட்டமும் வகுத்தது.

ரீம்ஸ் (Rheims) ஆர்லீன்ஸ் முதலிய நகரங்களில் தலைக் கோயில் (cathedrals) பள்ளிகளும். டூர்ஸ் (Tours), ஹெர்ஸ்ஃபெல்டு (Hersfeld), கார்வே (Corvey) போன்ற ஊர்களில் மடங்களால் நிறுவப்பட்ட பள்ளிகளும் சிறப்பாகக் குருமார்களுக்குக் கல்வி புகட்டின. மற்றோரும் அவற்றில் கல்வி பயின்றனர். கல்வி கற்பதில் குடிமக்கள் காட்டிய ஆர்வத்தைப் பாராட்டியும், கல்வியில் கருத்தைச் செலுத்தாது, விளையாட்டுகளில் காலங்கழித்துச் சோம்பித்திரிந்த உயர்குடி மாணவர்களைச் சாடியும் பேரரசர் கல்வியை ஊக்குவித்தார். திருச்சபையில் உயர் பதவிகள் படித்தவர்களுக்கே என அறிவித்தார். பேரரசர் தம் தாய்மொழியாகிய ஜெர்மன் மொழியை வளர்க்க அம் மொழியில் ஓர் இலக்கண நூல் எழுதச் செய்து தாய்மொழியை இலக்கியச் செம்மொழியாக்க முயன்றார். ஜெர்மானியக் கதைகளையும் பாடல்களையும் தொகுக்கச் செய்தார். அவை புறச் சமயத்தைப் பற்றியவை என்பதால் அவர் மகன் பக்த லூயி அத் தொகுப்பை அழித்து விட்டார். ஷார்லேமேன் வரலாற்றையும் வான நூல்களையும்

படிக்க விரும்பினார்; வழிப் போக்கர்களிடமிருந்து நிலநூல் விவரங்களைக் கேட்டறிந்தார்.

ஷார்லேமேன் ஐரோப்பாவில் ஆண்டபோது பாக்தாது நகரில் காலிஃப் (Caliph) ஹரூன்-அல்- ராஷிட் இஸ்லாமிய உலகத் தலைவராய் இருந்தார். அவர் அவையில் புலவர்களும் விஞ்ஞானிகளும், இருந்தார்கள். கிறித்துவ மன்னரும் முஸ்லிம் தலைவரும் கடிதவாயிலாகத் தொடர்புகொண்டிருந்தார்கள். தூதர்கள்மூலம் ஒரு யானை, ஓர் அழகிய கூடாரம், நீரினால் இயக்கப் பட்ட காலப்பொறி (Water clock) இயேசுவின் கல்லறைச் சாவிகள் முதலியவற்றைக் காணிக்கையாகக் காலிப்ஃப்ஹரூன் ஷார்லே மேனுக்கு அனுப்பினார் என்று அறிகிறோம்.

ஃப்ரான்சிற்குக் கலையும் இலக்கியமும் உரோம் நகரிலிருந்தே சென்றன. போப்பாண்டவர் ஷார்லேமேனின் பாட்டன் பெப்பின் மன்னருக்குக் கிரேக்க நூல்களை அனுப்பினார். அவற்றில் அரிஸ்டாட்டில் எழுதிய புத்தங்களும், தோத்திரப் பாடல் தொகுப்புகளும், இலக்கண, கணித நூல்களும் இருந்தன. எகின்ஹார்டு எழுதிய சார்லசின் வாழ்க்கை வரலாற்றுநூல் நீங்கலாக அக் காலத்தில் எழுதப்பட்ட நூல்களை உயர்ந்த இலக்கிய மெனச் சொல்வதற்கில்லை. அக் காலநூல்கள் கையெழுத்துப் படிகளாகவே இருந்ததால் அச் சுவடிகளைப் பிழைத்திருத்திப் பாடத் திருத்தஞ்செய்து, படியெடுத்துப் படிகளின் எண்ணிக்கை யைப் பெருக்குவதும், அவற்றைப் பாதுகாப்பதும் அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாதனவாகிவிட்டன. படிசெய்யப்பட்ட நூல்கள் ஒப்பிடப்பட்டுத் திருத்தப்பெற்று, ஆராயப்பட்டன.

ஷார்லேமேன் அவையில் கூடியிருந்த அறிஞர்கள் திருச்சபை குருமார்களாகையால் அவர்களோடு பழகிய அரசர் நிரம்பச் சமய அறிவைப் பெற்றிருந்தார். சமயக் கொள்கையோடு அவர் கூட்டிய இரு சொற்களே (Fillo que) இலத்தீன் திருச்சபையையும், கிரேக்கத் திருச்சபையையும் பின்னர் பிளவுபடுத்தின. வழி பாட்டிசையில் வல்லுநராயிருந்த ஷார்லேமேன் இத்தாலியில் பாடிவந்தமுறையில் இசைப்பயிற்சி அளிக்கப் போப்பின் உதவியை நாடி மெட்ஸ் (Metz). சாய்சன்ஸ் (soissons) நகரங்களில் இரு இசைப்பள்ளிகளை அமைத்தார். திருச்சமயத் தொண்டர்கள் கிறித்துவச் சமயத்தைப் பரப்புவதற்கான சமய அறிவோ, பேச்சாற்றலோ பெற்றிருக்கவில்லை. அறிஞர்கள் சமயவிளக்கப் பேருரை (Sermon)களை எழுதி அவர்களுக்கு அளித்தார்கள். கிரேக்க உரோமப் பண்பாட்டின் எஞ்சிய சின்னங்களைப் பாது

காக்கப் பேரரசர் போப்பிற்கு உதவினர். உரோமனெஸ்க் (Romanesque) என்ற உரோம மரபுவழிச் சிற்பவகையை ஷார்லேமேன் ஆதரித்தார். இவ்வகைச் சிற்பத்தை ஐலாச் ஷாப்பெல் (Aix-la-Chapelle) தலைக்கோயிலில் சிறப்பாய்க் காணலாம். ரைன்லாண்டில் (Rhineland) வோர்ம்ஸ் (Worms), கலோன் முதலிய ஊர்களில் உள்ள அழகிய கட்டிடங்கள் இன்றும் சுற்றுலாப் பயணிகளை மகிழ்விக்கின்றன. அவை இராவென்னு (Ravenna)விலிருந்து வந்த இத்தாலியச் சிற்பிகளால் கட்டப் பட்டவை. துறவிகளுக்குப் பள்ளிகளும் தலைக்கோயில்களும் ஆங்காங்கு கட்டப்பட்டன.

ஒன்பதாம் நூற்றுண்டின் இலக்கியத்திலும், அடிப்படைச் சமயக்கொள்கை பற்றிய வாத எதிர்வாதங்களிலும், அறிவுத்துறை மறுமலர்ச்சியின் பயனைக் காணலாம். கையெழுத்துப்படிகளாயிருந்த இலத்தீன் நூல்களைப் பாதுகாக்கும் பொருட்டுப் படிசெய்த பெரும் உழைப்பே மன்பதைக்கு மறுமலர்ச்சி செய்த பெரும் பணியாகும். கரோலிங்கிய எழுத்தர்கள் பன்னிரண்டு சிறந்த இலத்தீன் நூல்களைப் படிசெய்து பாதுகாத்து அறிவுலகத்திற்கு அளித்துள்ளார்கள். ஐரோப்பாவின் பெரும் பகுதியில் இலக்கிய மொழியாக இலத்தீன் தன் பழைய நிலையை எய்தியது. சொல்லின் எழுத்தாக்கம் (Spelling) திருத்தப் பெற்றது; எழுதும் முறையும் செம்மைப்பட்டது. இலத்தீன் வாயிலாகக் கல்வி கற்பிக்கிற வழக்கு உறுதியாயிற்று. திருச்சபை கையாண்ட இலத்தீனுக்கும் சாதாரண மக்கள் பேசிய மொழிக்கும் வேறுபாடு மிகுந்து பேச்சு மொழி, எழுத்து மொழியெனப் பிரிவு ஏற்பட்டது. ஃப்ரெஞ்சு மொழி பாமரப் பேச்சு வழக்கில் தோன்றிற்று.

# அதிகாரம் 5

## இஸ்லாமும் ஐரோப்பாவும்

கிறித்துவ ஊழியின் முதல் ஆறு நூற்றுண்டுகளில் அரேபியா நாட்டைப்பற்றி நினைப்பதற்கு ஐரோப்பிய அரசியல் வல்லுநர்களுக்கு வாய்ப்பில்லை. ஆயினும், ஏழாம் நூற்றுண்டில் இஸ்லாமியர்களின் போர்க்கள வெற்றிகள் ஐரோப்பிய வரலாற்றைச் சிக்கலாக்கிப் பல நாடுகளில் புதிய சமுதாயச் சமயக் கருத்துகளைப் புகுத்துவதைப் பார்க்கிறேம். உலக அரங்கில் ஏற்பட்ட மாற்றங்களிலும், உடனடியான விளைவுகளிலும், ஏழாம் நூற்றுண்டில் ஏற்பட்ட இஸ்லாமியச் சமய ஆதிக்க விரிவிற்கு ஒப்பாக, உலக வரலாறு முழுவதிலுமே ஒன்றைக்காண முடியாது. உரோமப் பேரரசைப் பொறுத்தமட்டில் வடக்கிலிருந்து வந்த மிலேச்சர்கள் மேற்குப் பகுதியை அழித்தார்கள். ஆயினும், அவர்கள் அங்கே நிலைத்துக் கிறித்துவர்களானூர்கள். முஸ்லிம்களோ, பேரரசின் கிழக்குப் பகுதியைத் தாக்கி அதனை உடனடியாக அழிக்காவிடினும், வெற்றி பெற்று ஆதிக்கம் செலுத்திய நாடுகளிலெல்லாம் ஒரு புதிய பண்பாட்டை வளர்த்தார்கள்.

ஆசியாக் கண்டத்தின் தென்மேற்கில் அமைந்துள்ள அரேபியா, ஆப்பிரிக்காக் கண்டத்திலிருந்து செங்கடலால் பிரிக்கப்பட்டுள்ளது. அதன் பெரும்பகுதி பாலைவனம். செமிட்டிக்குச் சாதி அராபியர் பாலைவனப் பகுதியில் ஆடுகளை மேய்த்துத் திரிந்த நாடோடிகளாவர். ஆனல், பல்வேறு செமிட்டிக்குக் குலத்தினர்கள் (அசிரியர்கள், சால்டியர்கள், ஹீப்ருமங்கள், பினீஷியர்கள், கானுன் மக்கள், அரமேயர்கள்), முப்பது நூற்றுண் டுகளுக்குமேல் மேற்கு ஆசியாவில் ஆட்சி புரிந்து நாகரிகத்தை வளர்த்து வந்துள்ளார்கள். அவர்களை மேற்கிலிருந்து கிரேக்க ஆரியர்களும், கிழக்கிலிருந்து பாரசீக ஆரியர்களும் தாக்கி வென்றூர்கள். மத்திய தரைக்கடற் பகுதியில் ஆதிக்கம் பெறுவதற்காக, செமிட்டிக்குப் பினீஷியர்களால் (Phoenicians) ஆப்பிரிக்காவில் நிறுவப்பட்ட

கார்த்தேஜ் இராச்சியம், உரோமானியர்களால் அழிக்கப்பட்டது. ஆதலால், ஆதி நாள்தொட்டு ஆதிக்க ஆசையின்றி வாழ்ந்த பாலை வன மக்கள், ஏழாம் நூற்றுண்டில் அரேபியாவில் கிளர்ந்து எழுந்த நிகழ்ச்சி, எண்ணூறாண்டு உரோமானிய ஆதிக்கத்திற்கு அறை கூவல் போன்றிருந்தது.

பிடுயின்கள் (Bedouin) என்ற பாலைவன மக்கள் ஓரிடத்தில் நிலையாய் வாழாது, மந்தைகளை மேய்த்தும் வழிபறி செய்தும் நாடோடிகளாய்த் திரிந்தார்கள். ஆயினும், அரபு மக்கள் இயற்கையறிவும் நினைவாற்றலும் விருந்தோம்பும் பண்பும் உடையவர்கள்; போர்ப்பாடல்களையும் காதற்கீதங்களையும் பாடித் திளைத்தார்கள். பயனற்ற முதியோரையும் வேண்டாத பெண் குழந்தைகளையும் கொன்றுவிடும் கொடிய வழக்கம் அரபு நாட்டில் மலிந்திருந்தது. பல தெய்வ வணக்கச் சமயம் அவர்களை ஒன்று படுத்தவில்லை. அரேபியத் தீவக்குறையில் பரந்த அளவில் ஆட்சி முறையே அமையவில்லை. அவர்கள் பேசிய அரபு மொழி ஹீப்ரு மொழியோடு நெருங்கிய தொடர்புடையது.

அரேபியாவின் மேலைக் கடற்கரைப் பகுதி, நாட்டின் ஏனைய பகுதிகளைவிட அதிக மழையைப் பெற்று, மக்கள் வாழ்வு செழிக்க வாய்ப்பளித்தது. அங்கிருந்த எமென் (Yemen), ஹெஜாஸ் (Hejaz), பெட்ரேயா (Petraea), முதலிய இடங்கள் ஒட்டகப் பாதைகளால் இணைக்கப்பட்டு, சிரியா, எகிப்து முதலிய நாடுகளு டன் சிறு வாணிகம் செய்து வந்தன. உள் நாட்டில் ஐம்பது மைல் தொலைவில் சிரியா நாட்டை நோக்கிச் செல்லும் பெருவழி யில் அமைந்திருந்த மெக்காப் பட்டணம் பாலைவன மக்களுடன் வாணிபஞ் செய்யவும் வசதி பெற்றிருந்தது. ஏறத்தாழ இருநூறு மைல் தொலைவில் மெக்காவிற்கு வடக்கில் பேரீச்ச மரங்கள் செறிந்த பகுதியான மதீனு (Medina) இருந்தது. வாணிகத்தில் சிறந்திருந்த மெக்கா (Mecca), சமயத்துறையிலும் புனித நகர மாய்த் திகழ்ந்தது. அங்கிருந்த காபா (Kaaba) என்ற ஆலயம், மிகப் பழைமையானது. கருங்கற்களாலான அச்சதுர வடிவக் கோயில், ஒரு விண் கல்லைத் தலைக் கல்லாய்ப் பெற்றிருந்தது. விண்ணிலிருந்து இப் பூவுலகை அடைந்த அக்கல், வழிபாட்டிற் குரியதாகி, முந்நூறு சிறு தெய்வங்களுக்கும் தலையாய கடவுளாய் விளங்கிற்று. மெக்காவில் நடைபெற்ற பெருஞ்சந்தைக்கும் காபாவில் தொழுவதற்கும், மக்கள் பெருந்திரளாய் அரபு நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து அங்கு ஆண்டுதோறும் வந்தார்கள். ஆனால், யூதர் சமயச் சார்புடைய மதீனுவிற்கும் பல தெய்வ வணக்கம் மலிந்த மெக்காவிற்கும் இடையே போட்டியும் பகையும் வளர்ந்திருந்தன.

அரபு மக்களைச் சமயத் துறையில் ஒன்றுபடுத்தி அரசியல் துறையிலும் ஆட்சித் துறையிலும் ஊக்கிய நபிகள் நாயகம் மகம் மது, மெக்காவில் ஓர் ஏழைக் குடும்பத்தில் கி.பி. 570-ல் தோன்றினர். அவருடைய பெற்றோர்களான அப்தல்லாவும், (Abdallah) அமீனாவும் (Aminah) தங்கள் அரும்பெறல் மகம்மதுவை இளமையிலேயே அநாதையாக்கிவிட்டு இவ்வுலகி லிருந்து மறைந்தார்கள். மந்தை மேய்த்த சிறுவர் மகம்மது ஒட்டகவோட்டியாகி, வணிகக் குழுவினருடன் பலவிடங்களுக்கும் அயல்நாடுகளுக்கும் சென்ற பொது மக்களோடு பேசிப் பழகி, உலகமாகிய பல்கலைக்கழகத்தில் பயின்று வந்தார். கதீஜா என்ற செல்வச் சீமாட்டியாரிடம் வேலைக்கமர்ந்து, அவருடைய நன்மதிப்பைப் பெற்ற முகம்மது, படிப்படியாய் உயர்ந்து, இறுதியில் அவரை மணந்து செல்வராஞர். இந்த இன்பத் திருமணத்தால் வாழ்க்கை வசதியும் சிந்திக்க ஓய்வும் பெற்ற மகம்மது, சமயத்தைப் பற்றி ஆராயத் தொடங்கினர். யூதர்களோடும் கிறித்துவர்களோடும் பழகிய காரணத்தால், அரபு மக்களின் பல தெய்வ வணக்கமும் சிறு தெய்வ வழிபாடும் அவருக்குப் பிடிக்கவில்லை. உலகத்தையும் கடவுளையும் பற்றிய உண்மையைத் தலைமைத் தூதர் கேபிரியல் (Archangel Gabriel) வாயிலாக அறிந்துகொள்ளும் அரிய வாய்ப்பை மகம்மது தமது நாற்பதாவது வயதில் பெற்றார். கடவுட் காட்சிகளைக்கண்டு மெய்மறந்த நிலையில் மகம்மது கூறிய வாசகங்களையும் செய்யுள் களையும் அவருடைய நண்பர்கள் அவ்வப்போது கிடைத்த ஓலை யிலும், கல்லிலும், தோலிலும், எலும்புகளிலும் எழுதி உலகுக் குதவியுள்ளார்கள். அவற்றின் தொகுப்பே குர்-ஆன் என்ற முகம்மதிய மறைநூலாகும்.

மகம்மதுவின் சமயக் கருத்துகளையும், மகம்மதியர்களின் வாழ்க்கை நெறிகளையும் அவர்களின் மறைநூலில் காண்கிரும். அல்லாவன்றி வேறு கடவுள் இல்லை; மகம்மது அவருடைய நபி நாயகம் (Prophet) ஆவார். 'ஆண்டவன் ஆணைக்கு உட்படுதல்' என்ற பொருளுடையது இஸ்லாம் என்ற சொல். அல்லாவிடம் தம்மை ஒப்படைத்து 'முகம்மதுவே நபிகள் நாயகம்' என்ற உறுதி யுடையவர்களே உண்மை முஸ்லிம்களாவார்கள். மெக்காவுள்ள திசையை நோக்கி நாடோறும் ஆண்டவனை முஸ்லிம்கள் ஐந்து முறை தொழவேண்டும். ஆயுட்காலத்தில் ஒரு முறையேனும் மெக்காவிற்குச் சென்று காபாவில் வழிபடவேண்டும். முஸ்லிம்கள் தங்கள் வருவாயில் நாற்பதில் ஒரு பங்கை இரவலர்க்களித்து தூய இராமதான் மாதத்தில் பகலில் உண்ணு நோன்பு நோற்க வேண்டும். களவு, கள் இரண்டையும் விடுத்து, பிறர் மனை

நயவாது, அவதூறு பேசாது இருப்பதே சிறந்த இஸ்லாமிய வாழ்வாகும்.

முஸ்லிம்கள் இறந்த பின் அவரவர்கள் வினைக்கு ஏற்ப இன்ப உலகினிற்காயினும் துன்ப உலகினிற்காயினும் செல்கிறார்கள் என்பதே மகம்மதுவின் கருத்தாகும். 'கடவுள் ஒருவர்; அவர் அல்லா ஆவார்,' என்று உறுதியாய் நினைப்போரும், 'இறந்த பின்னும் வாழ்வுண்டு.' என்று எண்ணுவோரும் வானுலகம் செல்கின்றனர். பொன்னுலகில் பாலைவன வாசிகள். அழகிய ஆரணங்குகள் பணிவிடை புரிய. பீறிட்டு வரும் நீருற்றுகளும், குளிர்தருக்களும் நிறைந்த இன்பச் சோலையில் இருந்து. சிறந்த உண்டி வகைகளையும் தீங்கனிகளையும் உண்டு களிப்பார்கள். நேர்மையிலிருந்தும் கடமையிலிருந்தும் தவறியவர்கள், 'கரிய புகை' பொசுக்கும் காற்று. சுடுநீர் இன்ன பிறவற்றால் அளப்பரிய இன்னலுறுவார்கள். இச் சமயக் கருத்துகளெல்லாம் அக்கால மக்களுக்கு ஒன்றும் புதியவையல்ல. ஆயினும், இவை நாட்டின் நிலைமையைத் தலைகீழாக்கி, மக்களிடையில் குழப்பம் விளைவித்தன. நபியினுடைய சமய விளக்கப் பேச்சினைக் கேட்டுக் கை கொட்டிச் சிரித்த மெக்கா வாசிகள் பின்னர் அவர் செல்வாக்குப் பெருகுவதைக் கண்டு அச்சம் கொண்டார்கள். அவரை இரவோடிரவாய்க் கொல்லச் சதி செய்தார்கள்.

தாம் ஒரு நபிகளென்றும், தமக்கு முன்னால் தோன்றிய தீர்க்க தரிசிகளாகிய ஆபிரஹாம் (Abraham). மோசஸ் (Moses), இயேசு (Jesus) மூவரும் அருளிச் சென்ற கோட்பாடுகளை நிறைவாக்கி முடிப்பதற்கே தாம் கடவுளின் இறுதித் தூதராய்த்தோன்றி யிருப்பதாகவும் மகம்மது அறிவித்தார். வணக்கத்திற்குரிய தெய்வீகச் சமயாசாரியர்களாய் அவர் கொடுத்த பட்டியலில் கௌதம புத்தர் இடம் பெறவில்லை. ஏனெனில், இறையியலில். பின் தங்கிக்கிடந்த அராபிய மக்கள் புத்தரை அறியமாட்டார்கள்

நபிகள் நாயகத்தின் சமயக் கருத்துகளை அவருடைய மனைவி யாரான கதீஜா, வளர்ப்பு மைந்தர் ஆலி (Ali), அடிமையான ஸெய்யது [Zeid) அவரிடம் தனி ஈடுபாடுடைய நண்பர் அபுபக்கர் (Abu Bekr) ஆகிய நால்வரும் ஏற்றுக்கொண்டு முதற்சீடர் ஆயினர். பின்னர்ச் சில ஆண்டுகளுக்குச் சில குடும்பங்களே புதிய சமயத்தைப் பின் பற்றின. அம் மதம் மக்களிடையில் பரவிச் செல்வாக்குப் பெறத் தொடங்கியதும், ஆதிக்கம் பெறும் நோக்குடன் முகம்மது மக்கள் மனத்தைக் கவர்ந்து வருகின்றாரெனப் பலர் எண்ணினர். நபிகள் உருவ வணக்கத்தை மிகவும் வன்மையாகத் தாக்கத்

தொடங்கவே, எதிர்ப்பு வலுத்தது; இனி மெக்காவில் வாழ முடியாதென்ற நிலையும் ஏற்பட்டது. தம் சீடர்களை மதீனாவிற்கு அனுப்பி அங்குள்ளவர்களின் சமயப் பற்றைச் சோதித்த பின், மதீனா மக்களின் அழைப்பையேற்று நபிகள் நாயகம் கி பி. 622-ஆம் ஆண்டு, செப்டெம்பர்த் திங்கள், இருபதாம் நாள் அங்குப் போய்ச் சேர்ந்தார்.

முஸ்லிம்கள் தங்கள் ஊழியினை, மகம்மது நபிகள் மெக்காவிலிருந்து வெளியேறி மதீனா அடைந்த கால முதல் கணக்கிடுகிறார்கள். மகம்மதுவை ஆதரித்த நகரம் மகம்மதுவின் பட்டணம் அல்லது மதினா என்னும் பெயர் பெற்றது. அவர் அங்கு வாழ்ந்த ஏழெட்டாண்டுகளில் இஸ்லாமிய சமயம் உருப்பெற்றது. மகம்மது வாழ்ந்த உலக வட்டாரத்தில் யூதர்கள் சமயம், ஸொராஸ்டிரியக் ( Zoroastrian ) கோட்பாடு, கிறித்துவக் கொள்கை மூன்றுமே மக்களிடையில் செல்வாக்குப் பெற்ற தலைசிறந்த சமயங்களாயிருந்தன. இச் சமயங்களை ஆராய்ந்த பின்னரே நபிகள் தம் சமயக் கருத்தை உருவாக்கினார். ஒன்றில் மூன்று (three-in-one) என்ற கிறித்துவக் கடவுட்டன்மையை ஏற்காது. யூதர்கள் கடவுள் தத்துவத்தையே இஸ்லாம் உலகிற்களித்தது. தம் காலச் சமயங்களிலிருந்த சில பழக்க வழக்கங்களைத் திட்டமிட்டே நபிகள் நாயகம் நீக்கிவிட்டார். ஒரு வகுப்பாருக்கு மட்டும் பொருத்தமான ஒழுக்கத்தைக் காணாது, உலக சமயத்திற்கான ஒழுக்க முறைகளை முகம்மதிய மறையிற் காணலாம். மனிதருக்கிடையே ஏற்றத்தாழ்வுகள் இல்லையென்பதை இஸ்லாம் வற்புறுத்தியது. ஆண்டவன் திருமுன் அரசனுக்கும் அடிமைக்கும் சமத்துவம் கண்டது இஸ்லாம். அந்த ஆண்டவனுக்கும் வழிபடுவோருக்கும் இடையில் தரகரை அனுமதிக்கவில்லை. பள்ளி வாசலில் நடைபெறும் பொது வழிபாட்டினை முன்னின்று நடத்த ஒரு தலைவர் உண்டு. ஆனால், குருமார் கூட்டம் அங்கு இடம் பெறவில்லை. தனியாய் வழிபாட்டுச் சுவடியும் இல்லை. விரிவான வெற்றுச்சடங்கு எதனையும் இஸ்லாம் ஏற்கவில்லை; படையல் மேடையைப் பலி மேடையாக்கும் அநாகரிகம் தலைகாட்டவில்லை. அரேபியாவில் பெண்கள் நிலையும் அடிமைகள் நிலையும் ஓரளவு உயர்த்தப்பட்டன. அடிமை வாழ்வும் பல பெண்களை மணக்கும் உரிமையும் ஒப்புக்கொள்ளப் பட்டன.

நபிகள் நாயகத்தின் வாழ்க்கையில் இரண்டாவது கட்டத்தையே மதீனாவில் காண்கிறோம். பல சமயத்தினர் வாழ்ந்து வாணிகஞ்செய்த அந்த நகரில் தம் சமயத்தை முதன்மையாக்குவதிலும், அதனைப் பரப்புவதற்கு அமைப்பு முறைகளைக் காண

பதிலும், நபிகள் கண்ணும் கருத்துமாயிருந்தார். நாடு முழுவதி லும் ஓர் அரசு இல்லையாகையால், அவருடைய சமய அமைப்புப் பெரிதளவு அரசியலமைப்பாயுமிருந்தது. அவருடைய சமயப்பணி மும்முனைகளில் செயற்பட்டது. அவர் யூதர்களின் எதிர்ப்பைச் சமாளித்தார்; உள் நாட்டுப் பிடுயின்களைத் தம் சமயத்தைத் தழுவச் செய்தார். மெக்காவிலிருந்து வந்த ஒட்டக வணிகக் குழுவினரைத் தாக்கித் தேவைப்பட்ட பொருள் வருவாயைத் தேடிக்கொண்டார். முதலிலிருந்தே முஸ்லிம்கள் வீரப் பணிபுரிய வாய்ப்புப் பெற்றனர்கள். கி. பி. 624-ல் செங்கடலுக்கருகில் பாதர் (Badr) என்ற போர்க்களத்தில் தம் பகைவருடன் மகம்மது போரிட்டார்; கடும்போருக்குப் பின் மும்மடங்கு பெரிய படை யைத் தோற்கடித்து. இஸ்லாம் சமயத்திற்கு முதல் வெற்றியைத் தேடினர். பகைவர்கள் மதீனாவை முற்றுகையிட்டபோது 627-ல் மகம்மதுவின் சமயத்தார் இரண்டாவது வெற்றியைப் பெற்றனர். புதிய சமயத்தை எதிர்த்த யூதர்கள் மதீனாவிலிருந்து விரட்டப் பட்டதோடு அவர்களுடைய நிலங்களும் பறிமுதல் செய்யப் பட்டன நபிகள் நாயகத்தைப் பின்பற்ற மறுத்த வணிகக் கூட்டங்கள் சூறையாடப்பட்டுப் பல இன்னல்களுக்குள்ளாயின. கி.பி. 630-ல் ஒரு பெரும்படையுடன் சென்று போரின்றியே நபிகள் மெக்காவைக் கைப்பற்றினர். மெக்காவிலிருந்து வெளியேறியவர் வெற்றி வீரராய்த் திரும்பினர்; தமக்குக் கிடைத்த ஆதிக்க வாய்ப்பை மிகச் சிறப்பாய் அரசியல் திறத்தோடு பயன்படுத்திக் கொண்டார்; மெக்கா மக்களின் நல்லாதரவைப் பெறக் காபா வழிபாட்டை ஏற்றுக்கொண்டு, அக் கோயிலையும் அங்கிருந்த விண் கல்லையும் பேணிக் காக்க இசைந்தார். அவருடைய சீடர்களுட் சிலர் அவரது இக் கருத்து மாற்றத்தைக் கண்டு மருண்டனர். ஆனால், காபாவிலிருந்த சிறு தெய்வச் சிலைகள் அப்புறப்படுத்தப் பட்டன. இந்த விட்டுக்கொடுத்தல் மூலம் உருவான ஒரே தெய்வ வணக்கக் கோட்பாடு எளிதாய் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டு மகம்மது மறைவதற்குள் அரேபியாவில் இஸ்லாம் வேரூன்றி நிலைக்கலாயிற்று. சமயத் தலைவராய்த் தோன்றிய மகம்மது போர்த் துறையிலும், அரசியல் துறையிலும் சிறந்த அறிஞராய் விளங்கிய தால், அரேபியாவில் புதிய சமயத்தோடு புதிய நாடும் அரசும் ஏற்பட்டன. ஒரே கடவுட் கொள்கையுடன் ஆதிபத்தியக் கொள் கையும் கிழக்கில் இந்தியா, சீனம் முதல், வடக்கே யூரேஷியப் புல்வெளிகள், மேற்கே அட்லான்டிக்கு மாக்கடல் ஈறுகப் பரவி, மக்களை ஆட்கொண்டது. எளிதில் புரிந்துகொண்டு பாமரர் களும் பின்பற்றும் வகையிலே சமய விளக்கங்கள் இருந்தன. மகம் மதுவின் கோட்பாடுகள் காலத்திற்கு ஏற்றவையாயிருந்ததால், மக்கள் மனத்தைக் கவர்ந்து, தெளிவும் திட நம்பிக்கையுழ்

அளித்தன. இறையியல் விரிவுரைகளால் கிறித்துவர்கள் மனம் குழம்பிப் பிளவுபட்டது போல, முஸ்லிம்கள் மயங்கி மாறுபட்டுப் பிரிவதற்கான நிலையை இஸ்லாம் உண்டாக்கவில்லை. இதுவோ, அதுவோ எனத் திகைக்கச் செய்யும் குறிப்பு அடையாள முறைமைக்கு (Symbolism) இஸ்லாம் இடம் தரவில்லை.

மகம்மது மறைந்த பின் அவர் விட்டுச் சென்ற சமய, அரசியற் பணிகளை ஏற்று நடத்த முன்வந்த அபுபக்கர் (Abu Bekr), பின்னர்ப் பதவிக்கு வந்தவர் என்ற பொருளுடைய காலிஃப் (Caliph) என்ற பட்டத்தையும் தாங்கினார். அவர் சமய மக்களால் தெரிந்தெடுக்கப்பட்ட தலைவர். மலையையும் அசைக்கும் ஆற்றல் பெற்ற அவருடைய திட நம்பிக்கையும், கோட்பாட்டுத் தெளிவும், அவருக்குப் பெருந் துணையாயிருந்தன. சுருங்கச் சொன்னால் அவர் இஸ்லாமிய எழுச்சியின் திருவுருவாய்த் திகழ்ந்தார் என லாம். அவரைத் தொடர்ந்து முஸ்லிம் உலகத் தலைவரானவர் ஓமார் (Omar) என்பவர். அரபு நாட்டுத் தந்தையராய் விளங்கிய அவருடைய பத்தாண்டு (634-643) ஆட்சிக் காலத்தில் பல நாடு கள் முஸ்லிம் ஆதிக்கத்திற்குள் கொண்டு வரப்பட்டன. முஸ்லிம் ஆட்சியை டிரிப்பொலி (Tripoly)யோடு நிறுத்திவிட வேண்டுமென அவர் எண்ணினார். ஆனால், அவருக்குப் பின் வந்தவர்கள் அந்த ஆதிக்கவெல்லைக் கட்டுப்பாட்டை ஏற்க மறுத்தார்கள். முற்று கைத் தளவாடம் ஒன்றுமில்லாத முஸ்லிம் படையினர், பன்னிரண் டாண்டுகளில் சிரியா நாட்டையும் எகிப்து நாட்டையும் உரோமப் பேரரசிலிருந்து பறித்துக்கொண்டு, பாரசீக அரசையும் அழித் தனர். இது வரலாற்றில் ஓர் அரிய சாதனையாகும். முஸ்லிம் வீரர்கள் பல நாடுகளுக்கும் சென்று வெற்றி வாகை சூடித் தங்கள் ஆதிக்கத்தை நிறுவிய விரைவு வரலாற்றில் வேறெந்தச் சமயத் திற்கும் கிட்டாத ஒரு பேறாகும். சமயத் தொண்டில் உயிர் நீத்த வர்கள் வானுலக வாழ்வைப் பெறுவார்கள் என்ற நபிகள் கூற்றும், கட்குடியைத் தடுத்த சமயக் கோட்பாடும் முஸ்லிம் களின் வெற்றிக்கு உறுதுணையாயிருந்தன. பாலைவனச் சமயம் அக்காலத்தில் ஆசியா, ஆப்பிரிக்கா நாடுகளிலிருந்த ஆடவர் பெண்டிர் ஆகிய இரு பாலாருக்கும் மன நிறைவு அளிப்பதாய் அமைந்திருந்ததானது இஸ்லாம் விரைவில் பரவியதற்கு மற்றொரு காரணமாகும். நபிகள் நாயகம் காட்டிய பாதையில் சென்று, அவர் தீட்டிய திட்டங்களை நிறைவேற்றவும் அரபு மக்களுக்கு வழி காட்டி நடத்திச் செல்லவும் பல சிறந்த தலைவர்கள் தோன்றி னார்கள்.

'சமய வெறியர்களால் கத்தியைக் கொண்டு இஸ்லாம் பரப்பப் பட்டது,' என்னும் கருத்து, வரலாற்றைத் தவறான முறையில்

படித்ததன் விளைவே. தொடக்க காலத்தில் நிகழ்ந்த படையெடுப்புகளும் பெற்ற வெற்றிகளும் அரசியல் முயற்சிகளேயன்றி, சமயச் சார்புடையனவாயில்லை. புறச்சமயத்தினர் என்ற காரணத்தால் தோற்ற மக்களைத் துன்புறுத்திக் கட்டாயமாய்ச் சமய மாற்றமும் செய்யவில்லை; கொல்லவுமில்லை. உருவ வணக்கத்தில் நம்பிக்கையுடையவர்கள், முகம்மதிய சமயத்தை ஏற்க விரும்பாவிடில், கப்பங்கட்டினார்கள். ஆட்சியில் பங்குபெற விரும்பியவர்களும், தலை வரி (Poll tax) கொடுக்க விரும்பாதவர்களும் முஸ்லிம்களானார்கள். சமய மாறுபாட்டைப் பயன்படுத்தி நாட்டின் வருவாயைக் கூட்டிக்கொண்டார்களேயன்றி, புறச்சமயத்தினரைச் சமயங் காரணமாகத் துன்புறுத்திப் பகையை வளர்த்துத்தீராத் தொல்லையை வரவழைத்துக்கொள்ள முஸ்லிம் தலைவர்கள் விரும்பவில்லை. இவ்வாறு நல்ல அரசியல் அறிவோடும் திறமையோடும் ஓமார் ஆட்சி நடைபெற்றது.

ஓமாருடைய ஆட்சிக்காலம் முடிந்தபின் முஸ்லிம் மக்களுக்குள் குழப்பங்களும் கலவரங்களும் ஏற்பட்டன. ஆத்மன் (Othman) என்ற காலிஃப், மதீனு தெருக்களில் கல்லடிகளுக்காளாகிக் கொல்லப்பட்டார். அதன் பின்னர் நபிகளின் மருகரான ஆலி, முஸ்லிம்களின் தலைவரானார். அவரும் கொல்லப்பட்டார். அவருடைய மக்கள் ஹசன், ஹுசெயின் இருவரும் தந்தையார் வழியே செல்ல நேரிட்டது. இவ்வாறு முஸ்லிம் குழுவினரிடையே போர் நிகழ்ந்துகொண்டிருந்தபோது, பழைய 'காபா' எரியுண்டு அழிந்தது. இக் கொலைகளும் கலவரங்களும் காலிஃப் மரபுவழியுரிமைப் போட்டிப் போராட்டங்களால் விளைந்தன. மகம்மதுவிற்குப் பின் அவர் மருகர் ஆலி என்பவருக்கே காலிஃப் ஆவதற்கு மரபுரிமை உண்டென வாதிட்டோர் ஷியாக்கள் (Shiahs) என்றும், அவ்வுரிமையை மறுத்தவர்கள் சன்னிகள் (Sunnis) என்றும் பிளவுபட்டுப் பிரிந்து நின்றார்கள். இப் பிரிவு முஸ்லிம் உலகில் இன்றுமுளது, ஷியாக்கள் பெரும்பாலும் இந்தியாவிலும் பாரசீகத்திலும் வாழ்கின்றார்கள்.

தேர்ந்தெடுத்த காலிஃப்களின் ஆட்சி முற்றுப்பெற்று வழிவழியாக வந்த காலிஃப்களின் ஆட்சி தொடங்கிற்று. மக்களாட்சிக் கட்டத்திலிருந்து காலிஃபின் ஆட்சி முடியாட்சி நிலையை அடைந்தது. கி. பி. 661-ல் காலிஃப்பின் தலைநகரம் மதீனுவிலிருந்து சிரியா நாட்டிலுள்ள டமாஸ்கஸிற்குச் (Damascus) சென்றது. இதுகாறும் சமயத் தலைவராயிருந்த காலிஃப், இனி அரசிற்கும் தலைவரானார். காலிஃப்கள் கிறித்துவர்களையும் அமைச்சர்களாக்கிக் கொண்டார்கள். உள் நாட்டுக் கலவரங்களால் முஸ்லிம்களுடைய ஆதிக்க விரிவு தடைபட்டு நின்றது.

முஸ்லிம் உலகத் தலைவரின் ஆட்சிப்பீடம் கி.பி. 750 அளவில் மேலும் கிழக்கே மெசொபொட்டேமியாவில் பாக்தாது (Baghdad) நகருக்கு நகர்ந்தது. இத் தலைநகர் மாற்றம் அரபுப் பேரரசைச் சிதைத்தது. பாக்தாது நகரிலிருந்து ஸ்பெயின் நாட்டையோ, ஆப்பிரிக்க நாடுகளையோ ஆள்வதும் ஆதிக்கஞ் செலுத்துவதும் இயலாமற் போய்விட்டன. மேலும், எகிப்தில் கெய்ரோ (Cairo) விலும் ஸ்பெயினில் கார்டோவா (Cordova)விலும் இரு காலிஃப்கள் ஆட்சிப் பீடம் அமைத்துக்கொண்டார்கள். ஆகவே, கி.பி. 755-ல் பிளவுபட்ட அரபுப் பேரரசு மீண்டும் ஒன்றுபடவில்லை.

மகம்மது நபிகள் மறைந்தபின் அரபு மக்கள் தங்கள் சமய ஆதிக்கத்தை நிலைநாட்ட அண்டை நாடுகளின்மீதும் அயல் நாடுகளின்மீதும் படையெடுத்துச்சென்று வெற்றிபெற்ற வீர வரலாற்றினைச் சுருக்கமாகக் காண்போம்: பல நாடுகள் ஒன்றன் பின் ஒன்றாய் மிக விரைவில் முஸ்லிம் ஆதிக்க நாடுகளாயின. கி.பி. 636-ல் சிரியாவும், 642-ல் எகிப்தும், 650-ல் பாரசீகமும் 697-ல் கார்த்தேஜும் அவர்கள் வசமாயின. கி.பி. 664-ல் முஸ்லிம்கள் இந்தியாவைத் தாக்கினார்கள்; 669-ல் கான்ஸ்டான்டிநோப்பிளை முற்றுகையிட்டார்கள். உலகில் முஸ்லிம் ஆதிக்கம் பரவிய விரைவு, கிறித்துவ உலகினை முஸ்லிம் உலகாய் அரபு மக்கள் மாற்றிவிடுவார்களோ என்ற அச்சத்தை ஊட்டியது. சிறிய ஆசியாவைக் கைப்பற்றிய பின், 717-ல் இரண்டாவது முறையாக, கான்ஸ்டான்டிநோப்பிளைத் தரை வழியாகவும் அரபு மக்கள் முற்றுகை செய்தார்கள். பேரரசர் லியோ (Leo) புதிதாய்க் கண்டுபிடித்திருந்ததும் எளிதில் தீப்பற்றக்கூடியதுமான நீரியற்பொருளால்-கிரேக்க நெருப்பினால் (Greek Fire)—முஸ்லிம் கலங்களை எரியூட்டி அழித்து, கான்ஸ்டான்டிநோப்பிளைக் காத்துக் கொண்டார். இந்த வெற்றியால் கிறித்துவமும் ஐரோப்பிய நாகரிகமும் ஒருங்கே காக்கப்பட்டன. இத் தோல்வியால் இஸ்லாம் ஐரோப்பாவில் பல பகுதிகளில் பரவி ஆதிக்கஞ் செலுத்தும் வாய்ப்பை இழந்தது.

ஆப்பிரிக்காவில் எகிப்து நாடு அரபு மக்களாதிக்கத்திற்கு வந்தபின், கி.பி. 649-ல் அராபியர்களின் கப்பற்படை சைப்பிரஸ் தீவைக் கைப்பற்றி முதற்கடல் வெற்றியைக் கண்டது. தரைப் படை மேற்கில் ஆப்பிரிக்காவின் வட கடற்கரையில் உள்ள டிரிப்பொலி, டூனிஸ், அல்ஜீரியா, மொராக்கோ என்னும் நாடுகளை ஒவ்வொன்றாகப் பிடித்துக்கொண்டு முன்னேறியது. உரோமானிய ஆட்சியும் கிறித்துவ ஆதிக்கமும் ஆப்பிரிக்காவில் முடிவடைந்தன.

முஸ்லிம் மக்களுள் ஒரு பிரிவினரான, மூர்கள் (Moors) என்ற குழுவினர், அரபுத் தலைவர் டாரிக்கு (Tarik) என்பார் தலைமையில் கி.பி. 711-ல் ஜிப்ரால்டர் இடைகழியைத் தாண்டி, ஐரோப்பாக் கண்டத்தின் மேற்குக் கோடியை அடைந்தனர்; விசிகாத்து இராச்சியமான ஸ்பெயின் நாட்டை வென்று, அந் நாட்டின் வட மேற்கிலிருந்த மலைப்பகுதி நீங்கலாக, நாடு முழுவதிலும் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்திக்கொண்டனர். ஹெர்குலிஸ் இடைகழி யெனப் (Straits of Hercules) பெயர் பெற்றிருந்த அக் கடற்கால், டாரிக்குப் பெயரைத் தாங்கி, ஜிப்ரால்டர் (டாரிக்குப் பாறை) என்ற அரபுப் பெயரால் குறிப்பிடப்பட்டது.

ஸ்பெயின் நாடு முற்றிலும் ஆதிக்கமேற்பட்ட பின் பிரன்னீஸ் மலையைக் கடந்து தென்ஃப்ரான்சில் அரபுப் படை நுழைந்தது. ஃப்ராங்கிய மன்னர் சார்லஸ் மார்ட்டெல் (Charles Martel) தலைமையில் கிறித்துவப் படை கி.பி. 732-ல் டூர்ஸ் (Tours) என்ற போர்களத்தில அரபுப் படையைச் சந்தித்தது. அங்கு நடை பெற்ற கொடிய போரில் அரபு வீரர்கள் தோற்று, ஸ்பெயின் நாட்டிற்குள் விரட்டப்பட்டார்கள். நபிகள் நாயகம் மறைந்து ஒரு நூற்றுண்டிற்குப் பின் இத் தோல்வி நிகழ்ந்தது. டூர்ஸ் களத்திலேற்பட்ட தோல்வியால் மேற்கில் அராபியர் ஆதிக்க எல்லை பிரன்னீஸ் மலையென்பது முடிவாயிற்று. முஸ்லிம் ஆதிக்கத்திலிருந்து மேற்கு ஐரோப்பா தப்பிப் பிழைத்தது.

கி.பி. 717-ல் அரபுப் படையினர் நிகழ்த்திய கான்ஸ்டான்டி நோப்பிள் முற்றுகையும் 732-ல் ஃப்ரான்சின்மீது நிகழ்ந்த அரபுப் படையெடுப்பும் வெற்றி பெற்றிருந்தால். அரபு மக்கள் நிறைவேற்ற நினைத்திருந்த இடுக்கி முறைப் படை பெயர்ச்சித் (Pincer movement) திட்டம் நனவாகியிருக்கும்; வாகை சூட இரு முஸ்லிம் படைகளும் மத்திய ஐரோப்பாவில் எங்காவது சந்திதது அக் கண்டத்தை முஸ்லிம் ஆதிக்கக் கண்டமாய் மாற்றியிருக்கும்.

மத்தியதரைக்கடலில் வளர்ந்த முஸ்லிம் கடலாதிக்க, கி.பி. 655-ல் பைசான்டைன் கடற்படையை அழித்த பின், ஏறத் தாழ ஐந்நூறுண்டுகள் அப் பகுதியில் நிலைத்திருந்தது. எட்டாம் நூற்றுண்டில் அரபுப் பேரரசு அட்லான்டிக்கு மாக்கடலிலிருந்து சிந்து ஆறு ஈருகவும், எகிப்திலிருந்து சீன வெல்லையிலிருந்த காஷ்கர் வரையிலும், பரந்து விரிந்திருந்தது.

வென்ற நாடுகளில் ஆட்சி முறைகளை மாற்றுமல், பெரும் பான்மையான மக்களுக்கு யாதொரு தொல்லையும ஏற்படாமல், அராபியர் அரசு ஆதிக்கஞ் செலுத்தியது. இஸ்லாமியச் சமயத் தைத் தழுவாதவர்கள் மேல் வரி கொடுத்தார்களேயன்றிச் சாவை

அணைக்குமாறு வற்புறுத்தப்படவில்லை. உரோமானிய, சசேனியப் (Sassanian) பேரரசுகளில் காண முடியாத சமயப் பொறையை அரபுப் பேரரசில் காண முடிந்தது. இறுதியில் குறிப்பிடப்பட்ட பேரரசில் பல்வேறு சமயங்களைப் பின்பற்றி, பற்பல பழக்க வழக்கங்களைக் கையாண்ட பல இனங்களைச் சேர்ந்த கிரேக்கர்கள், உரோமானியர்கள், பாரசீக மக்கள், இந்துக்கள், சீனர்கள் எல்லோரும் சேர்ந்தே வாழ்ந்து அரபுப் பண்பாட்டை உருவாக்கி வந்தார்கள். அவரவர்கள் அளித்த கொடையினாலாகிய கலவையாயினும், அரபு நாகரிகம் தனக்கென்று ஒரு தனிப்பண்பும் சிறப்பும் பெற்று மிகச் சிறந்த பண்பாடுகளில் தானும் ஒன்றாய் விளங்கியது.

மகம்மதுவின் சமய, அரசியற்பணியின் பயனாய் அரபு மக்கள் ஒற்றுமைப்பட்டு, ஒரு நாட்டினராகி, வரலாற்றில் தங்கள் பங்கைப் பெற முன் வந்தார்கள். ஏழாம் நூற்றாண்டில் தூய்மையற்றுக் கிடந்த கிறித்துவத்தோடும், சிதைந்து போய்க்கொண்டிருந்த சொராஸ்டிரியச் சமயத்தோடும் மோதி, எளிய இஸ்லாம் ஆதிக்கப் பாதையில் முன்னேறியது. உலகச் சூழ்நிலையும் அதற்கு ஆதரவாயிருந்தது. பாரசீக நாடும் கிழக்குப் பேரரசும் பல போர்களில் ஈடுபட்டு வலிவற்றிருந்தன. சிரியா மக்கள் கத்தோலிக்கக் கிறித்துவர்களிடம் துன்புற்றுக்கொண்டிருந்தார்கள். முஸ்லிம்களோ, கப்பங்கட்டும் மக்களைச் சமயத்துறையில் கட்டாயப்படுத்துவதில்லை. ஆதலால், சிரியா முஸ்லிம் ஆட்சியை விரும்பியது. எகிப்து நாட்டினரும் இஸ்லாம் சமயத்தை வரவேற்றனர். அரபு மக்களுடன் ஆப்பிரிக்காவிலிருந்த பெர்பெர்களும் (Berbers) சேர்ந்துகொண்டார்கள். இவ்வாறு இணைந்த இரு குழுவினரும் ஸ்பெயின் நாட்டில் புகுந்தனர். அங்கு விசிகாத்துகளின் துன்புறுத்தல்களுக்காளாகியிருந்த யூதர்கள், படையெடுத்து வந்தவர்களுக்கு ஆதரவு தந்தார்கள். மத்திய தரைக்கடலுக்குத் தெற்கிலுள்ள நாடுகளிலும், அதன் கிழக்கு மேற்குக் கோடியில் உள்ள நாடுகளும் மகம்மதிய நெறியைப் பின்பற்றின. மத்தியதரைக் கடலுக்கு வடக்கிலுள்ள நாடுகள் கிறித்துவச் சமயத்தைத் தழுவி நின்றன. முஸ்லிம் உலகில் அரபு மொழி ஆட்சி மொழியாகவும் கற்றவர்களின் மொழியாகவும் பரவிச் செல்வாக்குப் பெற்று, கிரேக்க மொழியை விரட்டிவிட்டு, அந்த இடத்தைப் பற்றிக் கொண்டது. மறைநூலாகிய குர்-ஆன் அரபு இலக்கியத்தைத் தோற்றுவித்தது. சொல் வளமும் கற்பனைத் திறனும் ஒருங்கே அமைந்திருந்த இலக்கிய அரபு அரமேயர்களின் (Armaeans) எழுத்துகளைக்கொண்டு வடபுலத்திலிருந்த பிடூயின்களால் உருவாக்கப்பட்ட ஒன்று.

பாக்தாது காலிஃப்களில் தலைசிறந்தவர் ஹாரூன் – அல்– ராஷிது (Haroun-al-Raschid, 786-809) என்பவர். அவர் வளமிக்க அரபுப் பேரரசுத் தலைவர் மட்டுமன்றி, அரேபிய இரவுகள் (Arbian Nights) என்ற கற்பனைக் கதையுலகில் என்றும் இடம் பெற்றுள்ளவர். கரோலிங்கியப் பேரரசர் ஷார்லேமேனுக்கு ஒரு நல்ல கூடாரம், தண்ணீர் மணிப்பொறி (water clock), யானை முதலிய அரிய அன்பளிப்புகளை அவர் கொடுத்தனுப்பினாரென்று வரலாற்றாசிரியர் கிப்பன் (Gibbon) எழுதுகிறார்.

ஹாரூன்–அல்–ராஷிதுக்குப்பின், காலிஃப்கள் சமயத் தலைவர்களாய் மட்டுமிருந்தார்கள். கி. பி. 1058-ல் அரசியலாதிக்கம் ஸெல்ஜூக்குத் (Seljuks) துருக்கியர் கைகளுக்கு மாறி, அவர்கள் தலைவர் டொக்ரூல் பெகு (Togrul Beg) என்பார் முஸ்லிம் உலகத் தலைவரானார். புறச்சமயத்தினராகிய ஜெர்மானியர், ஹூணர்கள், ஸ்லாவ் மக்கள், பாரசீகர்கள் முதலியோர், மூன்று நூற்றாண்டுகளாய்க் கிறித்துவச் சமயத்தைத் தழுவியிருந்த உரோமப் பேரரசினைப் படையெடுத்துத் தாக்கியும், பின்னர்க் குடியேறியும், சிதைத்தும் வந்தனர். பேரரசின்மீது படையெடுத்த இனங்கள் வரிசையில் இறுதியாக அரபு மக்களும் சேர்ந்தார்கள். இத்தாலி, கால், பிரிட்டன், ஸ்பெயின் என்னும் நாடுகளில் உரோமானிய ஆட்சிக்கு முடிவு கண்டவர் ஜெர்மானியர். சிரியா, மெசொபொட்டேமியா, அர்மீனியா, எகிப்து, ஆப்பிரிக்கா என்னும் நாடுகளில் உரோமானியர் ஆதிக்கத்தை அழித்தவர்கள் அரபு மக்கள். புறச்சமய ஆதிக்கத்திலும் அதன் பின்னர்க் கிறித்துவ ஆதிக்கத்திலும் ஒன்றுபட்டிருந்த மத்தியதரை உலகம், முகம்மதிய சமயமும் நாகரிகமும் பரவியதால், கிறித்துவ மேற்கு உலகம்; முஸ்லிம் கிழக்கு உலகம் என இரு உலகங்களாய்ப் பிரிந்து காட்சியளிக்கத் தொடங்கியது. அறியாமையிலும் சோம்பலிலும் ஐரோப்பியர்கள் மூழ்கிக் கிடந்தபோது, அரபு மக்கள் தங்கள் கலை, விஞ்ஞானம், இலக்கியம் முதலியவற்றைச் சிறந்த முறையில் வளர்த்து, நான்கு நூற்றாண்டுகள் உலகில் அறிவுத் துறையில் தலைசிறந்து விளங்கினார்கள்.

# அதிகாரம் 6

## நிலமானிய அமைப்பு
## (Feudalism)

ஐரோப்பாவின் பெரும்பகுதியில் பல நூற்றுண்டுகளாய் இருந்து வந்த சமுதாய ஒழுங்கு நிலமானிய முறையின் அடிப்படையில் கட்டப்பட்டதாகும். அதன் வேரினைக் காண உரோமானியப் பேரரசிற்குச் செல்ல வேண்டும். பேரரசர் அளித்த மானியங்களைப் பெற்றவர்கள் அவருக்குப் படைப்பணி புரிய வேண்டும். இந்த மானியத் திட்டத்தில் ஒருவரோடொருவர்க்கு எவ்வகைத் தனிப்பட்ட உறவுமில்லை. மக்கள் ஒரு தலைவரைத் தங்களுடைய தனிப்பட்ட ஆண்டையாகப் பின் பற்றுகிற டியூட்டானிக்கு வழக்கத்தோடு அந்த உரோமானியப் பழக்கமும் இணைந்து புதிய ஓர் உறவு முறையினை உண்டாக்கியது. ஓர் ஆண்டை தம்முடைய கீழாளுக்கு மானியம் வழங்கினுல், அக் கீழாள் ஆண்டையின் நம்பிக்கைக்கு உரியவராயிருப்பதுடன், அவருக்குப் போர்க் காலத்தில் உதவி செய்யவும் வேண்டும். அவ்வாறு அளிக்கப்படும் நிலத்திற்கு மானியம் என்றும், அதனை உரியதாக்கிக் கொள்ளும் ஒழுங்கினை மானியக் கட்டுப்பாட்டு முறை என்றும் சொல்வதுண்டு. இறையிலி (Allodial) நிலங்களை மானியக் கட்டுப்பாட்டு (Feudal) நிலங்களாய் மாற்றி, அவற்றை ஒரு பிரபுவினிடமிருந்து பெறுவது வாயிலாக அவருடைய பாதுகாப்பைப் பெற முயன்றுர்கள். ஒரு பேரரசரிடம் தம் நாடுகளை இழந்து நிற்பதைவிட, அவரளித்த மானியங்களாய் அவற்றை ஆட்சி செய்து தம் நாடுகளுக்குப் பாதுகாப்புத் தேடிக்கொள்ளச் சிற்றரசர் சிலர் விழைந்தனர்.

நிலமானியக் கட்டுப்பாடுகள் அரசியலிலும் சமுதாயத்திலும் சில பெரிய மாற்றங்களைத் தோற்றுவித்தன. மானியதார்கள் சமுதாயத்திலே எல்லாரையும்விட மேலானவராய்க் கருதப் பட்டார்கள். அத்தகைய மானிய நிலங்களைப் பெருத ஏழைகள்

கீழே தள்ளப்பட்டார்கள். அவர்கள் அடிமை ஊழியர்களாகவோ (Serfs), உட்குடிகளாகவோ (Villeins) மாறினர்கள். நிலத்தோடு இணைக்கப்பட்ட அம் மக்கள் அதனுடனே கைம்மாறவும் வேண்டியிருந்தது. இத்தகைய சமுதாய நிலை மேற்கு ஐரோப்பா முழுவதும் பரவலாய்க் காணப்பட்ட போதிலும், சில நாடுகளில், மற்ற நாடுகளைவிட சற்று விரைவாயும் நிறைவாயும் உருவாகியிருந்தது. நிலமானிய முறை பிரான்ஸ் நாட்டின் வடபகுதியில் ஒன்பதாவது நூற்றுண்டினிறுதியில் வழுக்கைத் தலையர் சார்லஸ் (Charles the Bald) மன்னர் இறந்த பின் (கி.பி. 877) தோன்றியது. கரோலிங்கியப் பேரரசு சிதைந்த பின் மன்னர்கள் வலிவிழந்ததும் பிரபுக்கள் ஆதிக்கம் ஏற்பட்டது. அதுவே நிலமானிய முறைக்கு ஏற்ற சூழ்நிலையாயிற்று. நிலமானியச் சமுதாய அமைப்பு அந்நாடு முழுவதும் பரவிப் பிறகு மேற்கு ஐரோப்பாவெங்கும் நிலவியது. அதன் பின்னரே அது இங்கிலாந்தில் பரவிற்று. இங்கிலாந்திற்கு இறுதியாய் வந்த அந்த நிலமானியக் கொள்கை மற்ற நாடுகளைக் காட்டிலும், அங்கிருந்து முந்தி மறைந்தது. பிரான்சில் புரட்சிக் காலம் (1789) வரையிலும், ஜெர்மனியில் பத்தொன்பதாவது நூற்றுண்டு வரையிலும் அது நீடித்தது. இவ்வாறு நிலமானிய அமைப்பு ஏறத்தாழ ஆயிரமாண்டுகள் ஐரோப்பா வாழ்க்கையின் சிறப்புக் கூறுய் அமைந்திருந்தது.

ஷார்லேமேன் இராச்சியம் பல்வேறு காரணங்களால் சிதைந்து போகவே, உள்நாட்டுப் போர்கள் மலிந்தன. அதனால் ஐரோப்பாவில் அரசியல் ஒழுங்கும் அமைதியும் குலைந்தன. வலிவுள்ளவர்கள் வலிவற்றவர்களைத் துன்புறுத்தினர்கள். அவர்கள் நிலங்கள் பறிக்கப்பட்டு அடிமையாக்கப்பட்டார்கள், ஆட்சிச் சக்கரங்கள் சுழலவில்லை; நாட்டில் அரசியல் குழப்பம் மிகுந்தது; மக்கள் பாதுகாப்பாரின்றி மிகத் துன்புற்ருர்கள். நாட்டுத் தலைவர் கொடுக்கத் தவறிய ஏனைய ஆட்சிப் பொறுப்புகளையும், மேற்றிராணியார்கள், கோமகனர்கள், கோட்டத் தலைவர்கள் ஆகியோரிடமிருந்து மக்கள் எதிர்பார்த்து நின்ருர்கள். மக்கள் தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ளச் செய்த முயற்சிகளின் பயனாய் ஏற்பட்ட வழக்கங்களும் வாடிக்கைகளுமே நிலமானியக் கொள்கையை உருவாக்கின. வலிவற்றவன், தன் உடைமையெல்லாவற்றையும் ஒரு கோமகனரிடமோ, மேற்றிராணியாரிடமோ ஒப்படைத்துவிட்டு, அவருடைய பாதுகாபபைப் பெற்று, அவருக்குக் கீழாளாகிவிடுவான். ஒன்பதாம், பத்தாம் நூற்றுண்டுகளில் நாட்டில் நிலவிய குழப்பமும் வல்லந்தமும், வலிவற்றவனை அவ்வாறு செய்யுமாறு வற்புறுத்தின. ஒன்பதாம் நூற்றுண்டிற்கு முன்னரிருந்த பழக்கங்களும் நிலமானியச் சமுதாயத்தின் மூலக்

கூறுகளை அளித்துதவின. பத்தாம் நூற்றுண்டு முதல் பதின் மூன்றும் நூற்றுண்டு வரை, ஐரோப்பாவில் நிலவிய பொருளா தார, சமுதாய, அரசியல் நிலைமைக்கும் உறவுத் தொடர்பு களுக்கும் சேர்த்து அளிக்கப்பட்ட பெயரே நிலமானியச் சமுதாய அமைப்பாகும். நிலத்தை ஆண்டவரிடமிருந்து அரசர் பெற்றுர். அரசர் தாம் பெற்ற நிலத்தில் தமக்குப்போக மிஞ்சியவற்றை, நிலமானியக் கட்டுப்பாட்டு முறையில் பகிர்ந்து, மானியங்களாய் மற்றவர்களுக்குக் கொடுத்தார். மானியதார், நிலத்தைப் பயன் படுத்திக்கொண்டார். ஆனுல், நிலம் அவருடைய தன்று. மானிய தார்கள் தங்கள் நிலங்களின் பெரும்பகுதியை மற்றவர்களுக்குப் பிரித்து வழங்கினுர்கள். மானியதாரர்களிடம் நிலம் பெற்றவர்கள் கீழாள்களாவார்கள். மேலும், நிலத்தைக் கீழாள்கள் உட் குடிகளுக்குப் பகிர்ந்தளித்தார்கள். நிலத்தில் உழைத்தவர்களை அடிமை ஊழியர்கள் (serfs) என வழங்கினுர்கள். அவர்கள் நிலத்தை விட்டு விலக முடியாது. நிலம் கைம்மாறினுல் அவர் களும் அதனுடன் மாறவேண்டும். சமுதாய மட்டத்தில கீழாள்கள் மானியதாருக்குக் கட்டுப்பட்டவர்கள்; அதோடு அவருக்குப் பலவகைப் பணிகளைப் புரியவும் கடமைப்பட்டவர்கள். பண்ணைக் காரர் தம்முடைய பண்ணை ஆட்சியைப் பொறுத்தவரை உரிமை பெற்றிருந்தனர். பண்ணையில அரசாங்கத்தின் முப்பணிகளையும் சட்டமியற்றல், ஆளுதல், நீதி வழங்குதல் மூன்றினையும், ஆற்றும் உரிமையை மானியதாரிடமிருந்து நிலத்துடனே பண்ணைககாரர் பெற்றிருந்தார். அவருடைய பண்ணைக் காரியங்களில் மானியதார் தலையிடுவதில்லை. பண்ணையில் அவர் ஓரளவு சுதந்தரமுடையவர் என்றே சொல்லலாம். ஏனெனில், பண்ணை இறைமை அவரிடமே இருந்தது.

இருண்ட காலத்தில் தோன்றிய நிலமானியச் சமுதாயம், இடைககாலத்தில் மேற்கு ஐரோப்பாவெங்கும் செழித்தோங்கி யது. நாடுதோறும் காணப்படினும், அது ஒரு முறையாயில்லை. நாட்டுக்கு நாடு, மானியதாருக்கு மானியதார், பண்ணைக்குப் பண்ணை அந்த அமைப்பின் நுணுக்கய விவரங்கள் வேறுபட்டன. ஆட்சி குலைந்து அரசியற்குழப்பம் நிறைந்த சூழ்நிலையில், நிலமானியக் கொள்கையும் அமைப்பும் உருவாகியதால், அவை சீராய் இருக்க இயலவில்லை. அவை தோன்றிய நாட்டு நிலைமைக் கேற்றவாறு மானியதாரும் அவருடைய கீழாளும் பேரம் பேசி ஒப்பந்தம் செய்துகொணடனர். ஒவ்வொரு பொது விதிக்கும் விலக்குகள் இருந்தன. பல்வேறு ஒப்பந்த மாறுதல்களாலும், புறனடைகளாலும் அவைகளை வகைப்படுத்த முடியவில்லை. நிலமானியக் கொள்கை ஒழுங்கான, ஒரே தன்மையான வழக்கங்

களையும் விதிகளையும் கொண்டது என்று எண்ணுமாறு, நிலமானிய முறை (System) என்று அதனைப் பேசுவது, தவறான வழக்காகும்.

நிலமானியக் கொள்கை இங்கிலாந்தில் முழு வளர்ச்சி பெற வில்லை. ஏனெனில், அங்கு வலிவுள்ள முடியரசு இருந்தது. ஆயினும், ஆங்கில வாழ்க்கை, ஆங்கில நிறுவனங்கள் இரண்டின் அடிப்படையிலும் அதன் செல்வாக்கைக் காண்கிறோம். ஃப்ரான்ஸ், ஜெர்மனி முதலிய நாடுகளிலே அக்கொள்கை தன்னிச்சை போல வளர்ந்து வளம் பெற வாய்ப்புப் பெற்றிருந்தது. ஸ்பெயின் இத்தாலி நாடுகளில் அதன் சிறப்பைக் காணலாம். போலண்டு, பொஹீமியா, ஹங்கேரி, ரஷியாப் போன்ற நாடுகளை நிலமானிய நாடுகள் என்று சொல்லாவிடினும், அவை நிலமானியக் கொள்கையின் சில தனிப்பட்ட இயல்புகளைப் பெற்று விளங்கின. ஐரோப்பாவின் மற்றப் பகுதிகளில் அவை மறைந்த பின்பும் அங்கே நிலைத்திருந்தன. நிலமானியச் சமுதாய மாதிரிநாடாய் விளங்கிய ஃப்ரான்சில், பதின் மூன்றாவது நூற்றாண்டில் நிலவிய அமைப்பைக் கொண்டே அதன் முக்கியக் கூறுகளைக் காணலாம்.

கட்டுப்பாடில்லாத நில உரிமை அரசர் ஒருவருக்கே உண்டு. ஒரு பெரிய நிலமானியதாரின் கீழாளாகவே ஒவ்வொரு மானியதாரும் இருந்தார்; சிறிய மானியதார் அல்லது கீழாள் பெரிய மானியதாருக்கு மண்டியிட்டு அவருடைய ஆளாகத் தம்மை ஒப்படைத்துக் கொண்டதோடு அவருக்கு என்றும் உண்மையாயிருப்பதாக வாக்குறுதியும் அளித்தனர். அவர் ஊழியத்தை ஏற்ற பெரிய மானியதார், அதற்கடையாளமாய் அவருக்கு ஒரு சின்னத்தை—கையுறை (glove), கொடி, கோல், ஈட்டி, அல்லது ஒரு பிடி மண்ணை—அளித்து அவரை மானியதாராக்கினர். அவர்களுக்குள் ஆண்டை, கீழாள் என்ற உறவு ஏற்பட்டது. தான் பெற்ற நிலத்திற்காக, கீழாள் ஆண்டைக்குப் போர்ப்பணி செய்ய வேண்டும். அவ்வூழியம் ஆண்டிற்கு நாற்பது நாள்களுக்கு மேல் நீடிக்கக் கூடாது. இத்தகைய துணைப்படைகளாலாகியவையே இடைக்காலப் படைகள். ஆதலால், அவை திறமையற்று, கட்டுப்பாடில்லாது இருந்தன. எங்கெல்லாம் நாட்டுப்படை அவற்றை யெதிர்த்துப் போராடினவோ, அங்கெல்லாம் அது எளிதில் வெற்றி பெற முடிந்தது. ஃப்ரான்சோடு நிகழ்ந்த நூற்றாண்டுப் போரில் ஆங்கிலேயர்கள் வெற்றிமேல் வெற்றி பெற்றதற்கு இதுவே காரணம்.

நிலமானிய அமைப்பில் போர்ப்பணியுடன் கீழாளின் கடமைகள் முடிந்துவிடவில்லை. பல்வேறு காலங்களில் அவர் ஆண்டைக்கு உதவ வேண்டும். புதிய கீழாள் தம் தந்தையார் இறந்த பின் மானியதாராய்ப் பதவியேற்றால் அப்போது அவருடைய

ஆண்டைக்கு அவர் வாரிசுக் கட்டணம் தரவேண்டும். புதிய மானியதார் பழைய நில உரிமையாளரின் நேர் வழியில் வாராதவரெனின், பிரபுவிற்கு மிகுதியான பொருள் கொடுக்க வேண்டும். பயணம் செய்யும் போதும், வேட்டைக்குச் செல்லும் போதும் பிரபுவிற்கு உறையுளும் உண்டியும் அளித்துக் கீழாள் விருந்தோம்புவதும் வழக்கிலிருந்தது. பிரபு சிறைப்படுத்தப்பட்டால், அவருடைய விடுதலைப் பணத்திற்குக் கீழாள் தம்முடைய பங்கைச் செலுத்தவேண்டும்; அவர் சிலுவைப் போருக்குச் சென்றால், அவருடைய செலவிற்குக் கீழாள் ஒவ்வொருவரிடமிருந்தும் நன்கொடை வசூலிக்கப்பட்டது. மானியதாரின் மூத்த மைந்தர் நைட்டு (Knight) என்னும் வீரராகும் போதும், அவர் மூத்த மகளார் திருமணக் காலத்திலும், பொருள் தருவது வழக்காறாயிருந்தது. பொருள் உதவிகளன்றி, பிரபுக்களுக்கு வேறு வருமானங்களும் இருந்தன. கீழாள் ஒருவர் வாரிசின்றி இறப்பாராயின், அவருடைய மானியத்தை வேறொருவருக்கு அளிக்கும் உரிமை, பிரபுவிற்கு உண்டு. விட்டுச் சென்ற வாரிசு வயது வந்து உரிமையாளர் ஆகிற வரையில், அவரது மானியத்தைப் பிரபுவே பராமரித்து அதன் வருமானத்தை அடைந்து வந்தார்.

கீழ் மான்யதார் பொருள் உதவிகளையளித்ததன்றி மேல் மானியதார் அழைத்த போதெல்லாம் சென்று, போர், அமைதி முதலியவற்றைப் பற்றி அன்னாருக்கு அறிவுரை தந்ததுடன், வழக்குக்களைக் கேட்டு நீதி வழங்குவதிலும் அவருக்கு உதவினர். இத்தகைய உதவிகளைப் பெற்ற ஆண்டை அல்லது பிரபு, தம்முடைய கீழாள்களைக் காப்பாற்றக் கடமைப்பட்டிருந்தார். பிரபு தம்முடைய கடமையைச் சரிவர நிறைவேற்றவில்லையெனில், கீழாள்கள் அல்லது சிறு மானியதார்கள் மானியக் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டவர்களாய்க் கருதப்படுவார்கள். அவர்கள் அரசரிடம் முறையிட்டுக் கொள்ளவும் இடமிருந்தது. ஆகவே, மேல் மானியதார் கீழ் மானியதார் உறவு ஒரு சட்ட ஒப்பந்தமாகவே வளர்ந்தது. கீழ் மானிய உழைப்பில் கீழ் மட்டத்தில் இருந்த உட்குடிகளும் ஊழியர்களும் தத்தம் ஆண்டையின் நிலத்தில் ஒரு வாரத்தில் அல்லது திங்களில் குறிப்பிட்ட சில நாள்கள் பண்ணை வேலை செய்தார்கள். நிலமானியச் சமுதாயத்தில் முக்கியமான கீழாள்கள் வீரர்களே. இரும்புக் கவசமும் எஃகுத் தலையணியும் அணிந்த குதிரை வீரர்கள் (Knights) சில ஆண்டு பயிற்சிக்குப் பின், சமயச் சடங்குகளுடன் வீரர்கள் ஆவார்கள். அவர்கள் திருச்சபைக்கும், எளியோருக்கும், பெண்களுக்கும் உதவும் பெருந்தன்மையும் ஆண்மையும் பெற்ற ஒரு கூட்டமாய், நிலமானியச் சமுதாயத்தின் சத்துப் பகுதியாய், இடைக்காலத்தில் உருவானர்

கள். அக்காலப் போர்கள் கொடுமையிலும் கொள்ளேயிலும் முடிந்துவிடாதவாறு அவற்றின் பண்பை உயர்த்த முயன்றவர்கள் அவ் வீரக் குழாத்தினர்களே. கிறித்துவச் சமயமே அவர்களே இவ்வழியில் தூண்டிற்று எனலாம். 'துணிவு, நாட்டுப்பற்று, வாய்மை, வள்ளன்மை, பற்றுறுதி, இன்னோரன்ன நற்பண்புகளுக்குச் சான்ருய் விளங்கியது அந்த வீரச் சமுதாயம். அவ் வீரக் கூட்டம் மனித வாழ்க்கை முறைகளே உயர்த்துவதற்கு முயன்றதோடு, சமுதாயத்தில் பெண்கள் நிலேயை மதிப்புக்குரியதாக்கவும் பணியாற்றியது. அதன் குறிக்கோள் மிக உயர்வாயிருந்ததால், நடைமுறை மிகப் பின் தங்கிவிட்டது. எடுத்துக்காட்டாக, கறுப்பங்கி இளவரசரும் (The Black Prince), வீரக்குழாத்தில் தலேசிறந்தவருமாய் இருந்த ஆங்கில நாட்டு எட்வர்டு என்பார் நிகழ்த்திய பெருவாரியான கொலேயிஜனக் (Massacre of Limoges) குறிப்பிடலாம்.

நிலமானிய அமைப்பில் அரசருக்கு அடுத்தபடியாக, அவரிடம் மானியம் பெற்ற பெரிய மானியதார்கள், அவருக்குக் கீழே சிறிய மானியதார்கள், கீழாள்கள், உட்குடிகள், நில அடிமைகள் எனச் சமுதாயப் படிகளில் மரபு முறை ஏற்பட்டது. இதிலே இறுதியாக, அடிமட்டத்தில் வாழ்ந்த நில ஊழியர்கள், ஒரு முக்கியமான பெரும்பிரிவினராவர்; அவர்களுடைய நிலே, இடத்திற்கு இடம்-காலத்திற்குக் காலம்-வேறுபட்டிருந்தது. நிலத்திலிருந்து கொண்டு வழி வழியாய் ஊழியஞ்செய்வதை மானியதார் தடுக்கமுடியாது; அவர்களும் நிலத்தினின்று நீங்க முடியாது. மானிய நிலத்தோடு நீங்க முடியாதபடி இணேக்கப்பட்ட நில அடிமைகள் பிரபுக்களுக்குச் செய்யவேண்டிய பணிகள் வரையறுக்கப்படவில்லே. அவர்கள் அடிமை வாழ்விலிருந்து விடுபட இரண்டே வழிகளிருந்தன. சமயக் குருமாராகிவிட்டால் உரிமையோடு வாழலாம்; இல்லேயேல், ஆண்டைக்குப் பொருள் தந்து அவர் இசைவுடன் பண்ணேயிலிருந்து விடுபட்டவராய் வெளியேறலாம்.

பத்தாம் நூற்ருண்டிலிருந்து பதின்மூன்ரும் நூற்ருண்டு முடிய நன்கு வளர்ந்து உச்ச நிலேயெய்திய நிலமானிய அமைப்பு, தல ஆட்சி முறை, நீதி வழங்கல், சட்டமியற்றல், படை, செயற்குழு அதிகாரம், எல்லாவற்றிற்குமே அடிப்படையாகிவிட்டது. நிலமானியச் சமுதாயத்தில் சட்டம், அறிவு, பயன் யாவும் புறக்கணிக்கப்பட்டு, வழக்கமும் சம்பிரதாயமும் மேலோங்கி அதைக் கட்டுப்படுத்திக்கொண்டிருந்தன. இறைமையோடு இணேந்துள்ள இக்கால உரிமைகள் பலவற்றையும் இடைக்காலத்தில் நில உடைமை அளித்தது; மானிய நிலத்தில் வாழ்ந்த மக்களேத்

கட்டுப்படுத்துவதில் மானியதாருக்கு இறைமை உரிமைகள் இல்லை யானால், நிலமானிய அமைப்பே இருந்திருக்க முடியாது.

நிலமானிய அமைப்பு ஒரு நோயன்று. அது சமுதாய வளர்ச்சியில் இயற்கையாக ஏற்பட்ட ஒரு படியாகும். அச்சமும் ஒழுங்கீனமும் நிலவியபோது அரசாங்கங்களால் அமைதியை நிலை நாட்ட முடியாத காலத்தில் பேராசை பிடித்த தலைவர்கள் மக்களை அடிமைப்படுத்திக் கொடுங்கோன்மையினை நிறுவிய நேரத்தில், மிலேச்சர்களின் படையெடுப்புகளால் ஆட்சிகள் கவிழ்ந்து கொண்டிருந்த சமயத்தில் அந்த அமைப்புத் தோன்றியது. முத லாவதாக, அது ஒருவருக்கொருவர் காப்புறுதி தரும் மிகப் பெரிய சமூகசாதனமாயிருந்தது; மிலேச்சர்களின் படையெடுப்பினால் ஏற்பட்ட தொல்லைகளை ஓரளவு குறைத்து, போர்க்காலத்தில் சிறந்த பாதுகாப்பளித்தது; அமைதியை நிலைநாட்டும் திட்ட மாயும் இருந்தது. அரசர்களுடைய அவாவினையும், கொடுங் கோலர்களுடைய செயல்களையும் கட்டுப்படுத்தியது. ஒப்பந்த அடிப்படையில் வளர்ந்த கொள்கையாகையால், ஒவ்வொருவ ருடைய உரிமைகளும் கடமைகளும் தெளிவாக்கப்பட்டு, அடிமைத் தனம் வளராமல் தடுக்கப்பட்டது. ஐரோப்பாவில் எஞ்சியிருந்த அடிமைச் சின்னங்கள் ஒழிக்கப்பட்டு, மனிதனின் மேன்மையும் சிறப்பும் வற்புறுத்தப்பட்டன. இக்கால எண்ணங்களாகிய தனி யாள் உரிமை, பிரதிநிதித்துவ ஆட்சி இரண்டிற்கும் அது வழி காட்டியாய் அமைந்தது.

இருண்ட காலத்தின் தேவையை நிறைவேற்றத் தோன்றி வளர்ந்த நிலமானிய அமைப்பு இல்லையேல், ஐரோப்பா அழிந்து பட்டிருக்கும். பன்னிரண்டாம், பதின்மூன்றாம் நூற்றாண்டிலிருந்த பிரபுக்களின் ஆட்சித் திறத்தால் சமுதாயம் முன்னேறியது. நில மானியச் சமுதாயத்தில் வாழ்ந்த வீரர்கள், துறவிகள் ஆகியோ ரால் நாகரிகம் வளர்க்கப்பட்டது. சமுதாய இயந்திரப் பகுதிகள் சிறப்பாய் இயங்குவதற்கு எண்ணெய் போலிருந்த நல்லொழுக் கத்தை மக்கள் வீரத்தொண்டர்களின் பள்ளியிலே பயின்றார்கள்.

ஐரோப்பியச் சமுதாயம் ஒரு நிலையிலில்லாமல் வளர்ந்து கொண்டிருந்தது. அதற்கேற்றாற்போல, நிலமானிய அமைப்புப் போதுமான அளவு மாறக்கூடியதாயில்லை. நில ஊழியர்கள் தாம் கட்டுண்டு கிடந்த நிலங்களை விடுத்து வெளியேற விரும்பியதாலும் நகர மக்கள் வாணிக நிமித்தம் நாட்டின் பல்வேறு பகுதிகளுக்குப் பயணம் செல்ல நேரிட்டதாலும் நிலமானிய அமைப்புக் குலையத் தொடங்கியது. மிலேச்சப் படையெடுப்புத் தொல்லை குறைந்த தும், சிறிய நிலமானியச்/சர்வாதிகாரி சமுதாயத்திற்குத் தேவைப் படவில்லை. காப்பாளராயிருந்த பிரபு சீர்கெட்டுச் சமுதாயத்தைப்

பிடித்த பீடையாகிவிட்டார். அம்மானியதாரால் தீங்கு விளையாது தடுப்பது எவ்வாறு என்பது அரசியலில் சிக்கலான செய்தியாகி விட்டது. நிலமானிய முடியரசின் வெற்றி தோல்விகள், அரசருடைய திறமை, குணவியல்பைப் பொறுத்தனவாயிருந்ததே அதன் குறையாகும். மேல் மானியதாரின் செயல் திட்டத்தைப் பொறுத்தே, மானிய அமைப்புச் செயற்பட்டது. கீழாள்கள் தங்கள் கடமைகளைச் சரிவர நிறைவேற்றுகிறார்களா என்று பார்க்கத் தவறிவிட்டால். அவர்கள் கட்டுக்கடங்காது போய்விடுவார்கள், ஆங்கில நாட்டு மன்னர் ஸ்டீபன் போன்ற வலிவற்ற அரசர்கள் காலத்தில். ஆட்சி குலைந்து, அரசியற் குழப்பம் ஏற்பட்டது. பதின்மூன்றாம் நூற்றாண்டு முதல் இதே நிலைதான் ஜெர்மனியிலும், பைசான்டைன் இராச்சியம் நீங்கலாகத் தென் கிழக்கு ஐரோப்பாவிலும் காணக்கிடக்கிறது. போப்பாட்சியோடு பேரரசர்கள் நிகழ்த்திய நீண்ட கடும் போராட்டம் காரணமாக, ஜெர்மனி நாட்டில் இருந்த நிலமானியப் பிரபுக்கள் கட்டுப்பட்டிருக்கவில்லை. இங்கிலாந்திலும் ஃப்ரான்சிலும் நிலமானிய முடியரசுகள் மேலும் சில காலம் ஆதிக்கம் செலுத்தியபோதிலும், இறுதியில் அவை வலிவற்ற அரசுக்கும், வாரிசுப் போராட்டத்திற்கும் பலியாயின.

தனியார் போர்களே நிலமானிய உலகத்தின் சட்டமாய் இருந்தது. அமைதி காண நிறுவப்பட்ட அமைப்பு, பல போர்களுக்கு வாய்ப்பளிக்கும் அமைப்பாகியது. கீழாள்களுக்குள் போர், மானியதார்களுக்கும் அரசருக்கும் போர், மானியத்தைக் காப்பதற்கும் விரிவாக்குவதற்கும் போர் எனில், அமைதி எப்படியிருக்கும்? போரினில் ஈடுபட்டவர்களின் எண்ணிக்கை குறைவாயிருக்கலாம். அதனால், இறந்தவர்களின் தொகையும் பொருள் அழிவும் அதிகமில்லாமலிருக்கலாம். ஆனால், எதற்கெடுத்தாலும் போர் என்ற நிலை வளரலாயிற்று. உழவு, கைத்தொழில், வாணிகம் எல்லாமே இத்தகைய போர்களால் நலிவுற்றன. போரினால் விளைந்த இன்னல்களைக் குறைக்கப் பத்தாம் நூற்றாண்டினிறுதியில் திருச்சபை முனைந்தது. சமயக் குருமார்கள், வணிகர்கள், உழவர்கள், பெண்கள், திருத்தலஞ்சுற்றுவோர் முதலியவர்கள், போர்களினால் துன்புறாதவாறு விலக்கு (Peace of God) அளிக்க வேண்டுமெனத் திருச்சபை முடிவு செய்து போரூக்கத்தைக் குறைக்க முயன்றது. இதன்றி, திருச்சபை கடவுள் பெயரால் போரிடை ஓய்வு (Truce of God) ஏற்பாடு ஒன்றினைக் கி. பி. 1025 அளவில் செய்தது. இதன் நோக்கம் போர்க்காலத்தைச் சமயத்தின் பெயரால் குறைப்பதே. வாரத்தில் நான்கு நாள்கள் (வியாழன் முதல் ஞாயிறு முடிய) போர்த்தடை விதிக்கப்பட்டிருந்தது. சமய

விழாக் கொண்டாட்ட நாள்களில் (Advent, Lent) போரிடுவதைச் சமயக் குற்றமாக்கித் திருச்சபை குற்றவாளிகளை ஒறுக்கவும் தலைப்பட்டது. ஆயினும், இத்தடை அடிக்கடி மீறப்பட்டது. ப்ஃரான்ஸ், ஸ்பெயின், ஜெர்மனி போன்ற நாடுகளின் முடியரசுகள் தனியார் போர்களைத் தடுக்க முடியாது போய்விட்டதால், திருச்சபை அப் பணியை மேற்கொண்டது.

நிலமானியச் சமுதாயத்தில் ஒழுங்கையும் அமைதியையும் நிலைநிறுத்துவது அருமையாகிவிட்டது போல, நீதி நிருவாகமும் குறைவற நடைபெறவில்லை. வழக்கு விசாரணையில் நேர்மையும் நீதியும், மரபு முறைகளுக்கே இடமளித்து, ஒதுங்கிக்கொண்டன. விளையாட்டுகளில் விதிகளையொட்டி வெற்றி தோல்வி முடிவு செய்யப்பட்டதுபோல, நீதிமன்றங்களில் வழக்குகள் மரபொழுங்கிற்கேற்பத் தீர்த்து வைக்கப்பட்டன. விதிகளுக்கு மாறான ஒரு சிறு உடலசைவினாலும், சொல்லினாலுங்கூட, வழக்காடுகிறவர்கள் அக்காலத்தில் தோல்வியுற்றார்கள். நாட்டை மேற்றிராசனங்களாகவும் (Bishopric), கோமகனார் நாடுகளாகவும் (Duchy), கோட்டங்களாகவும் (County) துண்டாடிய நிலமானிய அமைப்பு, நாட்டு ஒற்றுமைக்குப் பேரிடராயிருந்தது; நாட்டின் வளர்ச்சிக்குப் பெருந்தடையாயுமிருந்தது. நாட்டு மக்கள் அரசரைப் பெயரளவிலேயே அறிந்திருந்தார்கள். அவர்களுக்கு அந்தந்த நாட்டுப் பகுதிகள்பால் பற்றிருந்ததேயன்றி, நாட்டுப் பற்றினைப் பற்றிய எண்ணமே இல்லை. இடைக்கால நிலமானிய நாடு, வழி வழியாக வந்த தலைவரைப் பெற்ற ஒரு கூட்டாட்சியாய் விளங்கியது. நாடு, குடிமை என்ற அரசியல் கருத்துகளில் உள்ள சிறப்பிற்கு மறுப்பாகவேயிருந்தது நிலமானியச் சமுதாயம். தேசியப் பாதுகாவல் அரச ஆதிக்கம் இரண்டுமே, மரபாய் வந்த ஒரு சிறிய சாதியினராகிய நில உடைமையாளர்களின் பொறுப்புகளாகிவிட்டன. நாட்டலுவலர்களாய்ப் பணிபுரிந்த மானியதார்கள், மரபு வழி வந்தவர்களாயும் எளிதிற்கட்டுப்படுத்தவோ நீக்கவோ முடியாதவர்களாயும் இருந்தார்கள். ஆதலால், அப்பதவிகளில் ஆள்களை அமர்த்துவதில் அரசர்களும் பேரரசர்களும் மிகுந்த அக்கறை காட்டினார்கள். தங்கள் நண்பர்களையும் உறவினர்களையும், கையாள்களையும் தகுதி பாராமல் அப் பதவிகளில் அமர்த்துவதில் கண்ணும் கருத்துமாயிருந்தார்கள். திருச்சபை, மானியதார்களுக்கும் அரசர்களுக்கும் கீழ்ப்பட்டு விடாமல் தடுப்பதற்காகவே போப்புகள் அவர்களோடு மாறுபட்டுப் போராடினார்கள். அரசுக்கும் திருச்சபைக்கும் ஏற்பட்ட கடும்போராட்டத்திற்குக் காரணமாயிருந்தது நிலமானிய அமைப்பே.

திருச்சபை நிலமானிய அமைப்பின் ஒரு பகுதியாயினும் பெரும்பாலும் மானியதார்களுடன் கைகோத்துக்கொண்டிருந்த போதிலும், அந்த அமைப்பிற்கு எதிர்ப்புச் சக்தியாகவே இயங்கியது. நிலமானிய அமைப்பு. சில நிலப்பரப்புகளில் இயங்கி. இடவேறுபாட்டுடன் நாட்டுக்கொரு தனித்தன்மை பெற்றுத் திகழ்ந்தது. திருச்சபையோ. பெருநிலப்பாப்பில் ஒரே தன்மைத்தாய், பல நாடுகளையும் தன்னுள் அடக்கி இயங்கிய, அல்லது இயங்க விரும்பிய, நிறுவனமாகும். அதன் ஆதிக்கம் நில உடைமையோடு தொடர்பு கொள்ளவில்லை. ஐரோப்பிய முடியரசுகளும் தத்தம் வலிவுக்கேற்ப நிலமானிய அமைப்பினைக் குலைத்து வந்தன. இம்முயற்சியில் ஃப்ரான்ஸ் வெற்றி பெற்றது; ஜெர்மனி தோல்வியுற்றது. ஜெர்மானியப் பேரரசர் செய்யத் தவறியதை அவர் ஆதிக்கத்தின் கீழிருந்த தேர்வாளர்களும் 'Electors' ஆள்வோரும் தம் தம் மானியங்களில் செய்து முடித்தார்கள். அவர்கள் கீழ் மானியதார்களைக் கட்டுப்படுத்தித் தங்கள் ஆட்சியை வலுப்படுத்திக் கொண்டார்கள்.

பதினொன்றும், பன்னிரண்டாம் நூற்றுண்டுகளில் ஐரோப்பா எங்கும் வளர்ந்த நகரங்கள், நிலமானிய அமைப்பைக் குலைத்த மற்றொரு சக்தியாகும். நகரங்களில் செல்வ வளம் செழிக்கத் தொடங்கியதும், மக்கள் உரிமைப் பத்திரங்கள் வாயிலாகச் சுதந்தரம் பெற விரும்பினார்கள். நிலமானிய ஆதிக்கத்திலிருந்து வல்லந்தமாய் விலைகொடுத்துப் பெற்ற பேறுபெற்றவர்களுமுண்டு. நகர வாழ்வில், மலர்ந்த உரிமை வேட்கை. மக்களாட்சி, கூட்டுறவு. வாணிகம், கலை போன்ற எண்ணங்கள் நிலமானிய அமைப்பிற்கு உலை வைத்தன.

வெடி மருந்து கண்டுபிடிப்பால். போர் முறைகள் புரட்சிகரமான மாற்றமடைந்தன. துப்பாக்கி, பீரங்கிகளுக்கு முன். நிலமானிய வீரர்களின் கவசமும் கோட்டையும் பயனற்றுப் போயின. அரசர்களின் கையோங்கியது. பிரபுக்கள் ஆதிக்கமிழந்தார்கள். நிலமானிய அமைப்பின் அழிவுகளின்மேல் வரம்பிலா முடியரசு எழுந்தது. அத்தகைய ஆட்சிக்கு முன், கதிரவனைக் கண்ட மூடு பனி போல மானிய அமைப்பு வலிவற்று மறைந்தது. மேலும், சிலுவைப் போர்களினாலும், பெரிய தொத்து நோய்களாலும் நில ஊழியர்களின் தொகை மிகக் குறைந்துவிட்டது. மானியக் கட்டுப்பாடுகளில்லாத சுதந்தர ஊழியர்களைக் கொண்டே பிரபுக்கள் தங்கள் நிலச் சாகுபடியைச் செய்ய வேண்டி வந்தது. சிறிது சிறிதாக மானியக் கட்டுப்பாட்டு நிலங்கள் இறையிலி நிலங்களாயின. பதினைந்தாம் நூற்றுண்டு நில மானிய அமைப்பின் முறிவைக் கண்ட போதிலும் இன்றளவில் ஐரோப்பியச் சமுதாய அமைப்பு, அடிப்படை எண்ணங்களைப் பொறுத்த வரையில், நில மானிய அமைப்பினையே பின்பற்றி வந்துள்ளது.

# அதிகாரம் 7

## ஒன்பதாம் பத்தாம் நூற்றுண்டுகளில் ஐரோப்பா

ஷார்லேமேனுல் நிறுவப்பட்ட கரோலிங்கியப் பேரரசு ஒரு நூற்றுண்டுகூட நீடித்து நிலைத்திருக்கவில்லை. ஒன்பதாம் நூற்றுண்டிலேயே கரோலிங்கிய மன்னர்கள் தங்கள் இராச்சியத்தை மூன்று பாகங்களாக்கினுர்கள். அன்றியும், மேலும் அவற்றைப் பல சிறு பகுதிகளாகவும் பிரித்தார்கள். இவ்வாறு கரோலிங்கியப் பேரரசு சிதைந்து அழியத் தொடங்கியதும், தனியரசுகள் அதிலிருந்து முளைத்தன. மேற்கு ஐரோப்பாவில் ஆற்றல் மிக்க அரசு ஒன்றுமில்லை. நார்ஸ் மக்கள் வேறு பல பகுதிகளையும் தாக்கிச் சூறையாடி அச்சத்தையும் அமைதியின்மையையும் வளர்த்தார்கள். இன்னும் ஹங்கேரிய மக்கள் ஜெர்மனிக்கும் இத்தாலிக்கும் பெருந்தொல்லை தந்தார்கள். ஒன்பதாம், பத்தாம் நூற்றுண்டுகளில் ஐரோப்பிய நிலை ஐந்தாம் நூற்றுண்டில் இருந்த உரோமானியப் பேரரசின் நிலையை ஒத்திருந்தது. உயிருக்கும் பொருளுக்கும் பாதுகாப்பில்லாமல் திண்டாடிய மக்கள், தங்கள் இடங்களிலிருந்த பெரிய பிரபுக்களை அண்டி அவர்களுடைய கோட்டை கொத்தளங்களையும் ஆட் பலத்தையும் நம்பியே வாழ வேண்டியதாயிற்று. ஆதலால், நிலமானிய அடிப்படையில் சமுதாயமும் அரசாங்கமும் அமையலாயின. குறிப்பிட்ட ஓர் எல்லைக்குள்; பல மானியங்களில் வாழ்ந்துகொண்டிருந்த மக்கள், இவ்வகையில் ஒன்றுபட்டு, ஒரு பெரிய நாட்டினத்தைத் தோற்றுவித்தார்கள். இவ்வாறு ஒன்றுபட்ட மானியங்களின் தொகுதியே ஒவ்வோர் ஐரோப்பிய நாட்டினமும் ஆகும்.

அரசியல் உலகில் ஒன்பதாம், பத்தாம் நூற்றுண்டுகளில் இங்கிலாந்து, ஃப்ரான்ஸ், ஜெர்மனி இத்தாலி ஆகிய நாடுகளில் பல நாட்டினங்கள் வளரத் தொடங்கின. அதற்குமுன் ஒரு நாடாவது தனக்குத் தேவையான அரசியல் அமைப்பு முறையையோ,

விழிப்போடு கூடிய தனிப் பண்பையோ பெறவில்லை. மேற்கில் வாழ்ந்த ஃப்ராங்கியர்களுக்குத் தனியாக அரசரிருந்தார். ஆனால், ஃப்ரான்ஸ் இன்னும் பிறக்கவில்லை. கிழக்கு ஃபராங்கியர்களுக்கும் ஒரு மன்னர் இருந்தார்; ஆனால், ஜெர்மனி இன்னும் தனி வடிவெடுக்கவில்லை. இத்தாலியின் வடபகுதியில் லம்பார்டு மன்னர் ஆதிக்கஞ் செலுத்தினர்: ஆயினும், வர்ஜில் காலத்து ஐக்கிய இத்தாலி பழைய நினைவாகவே இருந்துவந்தது. மேற்கு ஐரோப்பாவில் இன்னும் இலக்கிய மொழி இலத்தீனாகவே இருந்தது. ஆனால், வெவ்வேறு பகுதிகளில் வாழ்ந்த மக்கள் பேசிய பேச்சு வகை வளர்ந்து, இத்தாலிய, ஜெர்மானிய, ஃப்ரெஞ்சு, ஆங்கில மொழிகளாய் ஆங்காங்கு இடம் பெற்றன. நாட்டினத்தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் பிறகு, தேசியப் போர்களும்-ஏன்-தேசியத் திருச்சபைகளும் தவிர்க்க முடியாத விளைவுகளாகும்!

ஐரோப்பியச் சமுதாயத்தை உருவாக்கவிருந்த சத்திகளில் திருச்சபையும் ஒன்று. ஒன்பதாம் நூற்றாண்டினிறுதியில் அது பல தொல்லைச் சமாளிக்க வேண்டியிருந்தது. உரோமானியத் திருச்சபைக்கும் கிழக்குப் பேரரசின் திருச்சபைக்கும் இறையியல் வேறுபாடுகளிருந்தன. அவைமட்டும் சமயப் பிளவைத் (schism) தோற்றுவித்திருக்க முடியாது. உரோமிற்கும் கான்ஸ்டான்டிநோபிளுக்கும் இடையே இருந்த ஆதிக்கபோட்டி, 866-ல் இரண்டு திருச்சபைகளும் இணைய முடியாதபடி பிரித்துவிட்டது. உரோம் நகரில் போப்பின் ஆட்சியையும் பிரபுக்கள் ஆட்டிப் படைக்கலானார்கள். போப்புகளின் ஒழுக்கக் கேடுகளால் அவர்களது ஆட்சி வலிவிழந்து நின்றது. ஆயினும், அவர்களது ஆதிக்க ஆசைக்கு அளவேயில்லை. திருச்சபைக் காரியங்களைப் பொறுத்த வரையில் தாங்களே முழு அதிகாரம் உடையவர்களென்றும், அவற்றில் தலையிட யாருக்கும் உரிமை இல்லையென்றும் போப்புகள் தெரிவித்தார்கள்; மேலும், மேற்கு ஐரோப்பிய ஆட்சியின் பொறுப்பும் அவர்களையே சார்ந்தது எனவும் வாதிட்டார்கள். திருச்சபை கொண்டாடிய உரிமைகளுக்குச் சான்றாகச் சில ஆவணங்களைக் கி. பி. 860 அளவில் வெளியிட்டார்கள்; முன்னாள் போப்புகளும் திருச்சபை அவைகளும், பேசிய பேச்சுக்கள், செய்த முடிவுகளின் தொகுப்பே அந்த ஆவணங்கள் என்பதையும் விளக்கினார்கள். அவற்றுள் ஒன்று கான்ஸ்டன்டைன் அன்பளிப்புப் பத்திரம் ஆகும். தீராத குட்ட நோயிலிருந்து தூய பீட்டர், தூய பால் முதலியவர்களின் அருளால் குணமடைந்த கான்ஸ்டன்டைன், தம் நன்றியறிதலைக் காட்டும் வகையில் உரோம் நகரிலிருந்த போப்புகளுக்குப் பல உரிமைகளை வழங்கினார். உலகம் உள்ளளவும் உரோம் நகரமும், இத்தாலி நாடும்,

பேரரசின் மேற்குப் பகுதிகளும் போப்பின் ஆதிக்கத்திற்குட்பட்டவை என அந்த அன்பளிப்புப் பத்திரம் (Donation of Constantine) அறிவித்தது. பின்னர் அந்த ஆவணத்தைக் காட்டியே சமயச் சார்பில்லாத அதிகாரம் தங்களுக்குரியது என்பதைப் போப்புகள் வற்புறுத்தியதோடு, அதற்காகப் போரிடவும் செய்தார்கள். ஒன்பதாம், பத்தாம் நூற்றுண்டுகளில் ஆவணங்களின் உண்மையைப்பற்றி ஐயுறுவாரில்லே. அவற்றுள் பல போலியானவை, ஆதாரமற்றவை என்பதைப் பின்னரே மக்கள் உணர்ந்தார்கள்.

கிறித்துவ உலகத்தைப் போன்றே, முஸ்லிம் உலகமும் ஒன்பதாம் நூற்றுண்டில் பிளவுபட்டு, மூன்று பெருஞ்சமயக் குருமார்கள் தலைமையில் இயங்கியது. முஸ்லிம் தலைவர்களாகிய காலிஃபுகள் பாக்தாதிலும், கெய்ரோவிலும், கார்டோவாவிலும் இருந்து ஆதிக்கஞ் செலுத்திஞர்கள். ஐரோப்பாவின் தென்மேற்குக் கோடியில் ஸ்பெயின் நாட்டில் ஆண்டு வந்த மூர்கள் சிறந்த முறையில் அரபு நாகரிகத்தையும் அறிவையும் வளர்த்து வந்தார்கள். அங்குக் கலையும் விஞ்ஞானமும், பேராதரவுடன் முன்னேறிக் கொண்டிருந்தன. கிறித்துவர்கள் நாட்டில் காண முடியாத சமயப் பொறையைக் கடைப்பிடித்து அதில் மூர் மக்கள் முன் மாதிரியாய் விளங்கிஞர்கள். அரபுப் பேரரசிலும் அழிவுச் சக்திகள் ஆக்கம் பெற்று வந்தன. தலைமைப் பீடத்திற்குப் போட்டியிட்டவர்கள் போரிட்டார்கள் ; மேற்கு ஐரோப்பாவில் உருவாகி வந்த நில மானிய முறையின் சில கூறுகள் முஸ்லிம் உலகிலும் தலைகாட்டின. மேலும், சமய உட்பிரிவுகளின் வெறியும், கீழ் படியாத படைகளும், முஸ்லிம் இராச்சியத்தின் அமைதியைக் குலைத்தன. ஆதலால், முஸ்லிம் உலகு ஐரோப்பாவிற்கு அச்சந் தருவதாயில்லை. ஆயினும், அவர்களிடையில் ஏற்பட்ட புது முயற்சி காரணமாய் இரு நூற்றுண்டுகளுக்குப் பின் இஸ்லாமியச் சக்தி கிறித்துவத்திற்குப் பெரும்பகையாய் வளர்ந்தது. பிறகு கிறித்துவம் தன் சக்திகளையெல்லாம் பயன்படுத்தி அதனை எதிர்த்துப் போராடியது.

## தூய உரோமப் பேரரசு

பத்தாம் நூற்றுண்டின் தொடக்கத்தில், ஷார்லேமேன் இராச்சியம் பல இராச்சியங்களாகவும் கோமகஞர் நாடுகளாகவும் பிரிந்து சிதறிப் போய்விட்டது. கலையும் கல்வியும் அழிந்து விட்டன. மிலேச்சர்களின் படையெடுப்பு ஐரோப்பாவில் மீண்டும் அமைதி இல்லாதபடி செய்துவிட்டது. ஆனுல், ஷார்லேமேனுடைய நினைவும் முன் மாதிரியும் வீண் போகவில்லை. அவர்

வகுத்த பாதையில் சென்றவர், அவர் தொடங்கிய பணியைத் தொடர்ந்து நிறைவேற்றியவர், அவருடைய இனத்தாரோ, ஜெர்மானியரோ அல்லர். வாழ்நாளெல்லாம் அவருக்குப் பகைவர்களாய் இருந்த சாக்ஸேனியரே அவருடைய கால் வழியினர்.

அக் காலத்தில் ஜெர்மனி ஆறு கோமகனுர் நாடுகளாய்ப் பிரிந்திருந்தது. அந் நாடுகள் ஒரு ஜெர்மானிய அரசரைக் கி.பி. 843இலிருந்து ஒப்புக்கொண்டு வந்திருந்தபோதிலும் தத்தம் கோமகனுர் நாட்டு ஆட்சியில் அரசர் தலையிடச் சம்மதித்ததில்லை. சாக்ஸனி (Saxony), ஃப்ராங்கோனியா (Franconia), துரிங்கியா (Thuringia), சுவாபியா (Swabia), பவேரியா (Bavaria), லொரைன் (Lorraine) என்னும் ஆறும் சுதந்தர நாடுகளாகவே இருந்தன.

ஷார்லேமேன் மரபைச் சேர்ந்த 'குழந்தை' லூயி (Louis the Child) கி.பி. 911-ல் இறந்தார். அந்த மரபில் அவரே இறுதி ஜெர்மானிய மன்னர். கோமகனுர் நாடுகளின் தலைவர்களாகிய பிரபுக்களும், திருச்சபைப் பெருமக்களும் நகரப் பிரதிநிதிகளும் கூடி, ஃப்ராங்கோனியாக் கோமகனுர் கான்ராடு (Conrad) என்பவரைத் தங்கள் அரசரெனத் தேர்ந்தெடுத்தார்கள். திருச்சபை உதவி கொண்டு கோமகனுர் நாடுகளைத் தம் ஆதிக்கத்தில் கொண்டுவர அவர் செய்த முயற்சி பலிக்கவில்லை. அவருடைய துணிவும் திறமையும் இப் பயனற்ற பணியிலே வீணுயின. அவர் இறந்தபின் 919-ல் சாக்ஸனிக் கோமகனுர் ஹென்றி, ஜெர்மானிய மன்னராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## ஹென்றி ஃபௌலர் (Henry the Fowler)—916—936

ஊக்கமும் உரமும் ஒருங்கே பெற்ற சாக்ஸேனிய இனத் தோன்றலாகிய முதலாம் ஹென்றி ஆட்சித் திறம் படைத்தவர். அவர் கால முதல் ஜெர்மனி ஒன்றுபட்டு அடுத்த முந்நூறுண்டுகளில் வளமும் வலிவும் அடைந்து சிறப்புற்றோங்கியது. கிழக்கெல்லைக்கு அப்பாலிருந்த மாக்யார்கள் (Magyars) அல்லது ஹங்கேரியர்கள் (Hungarians) என்ற கூட்டத்தார்கள் அவருடைய நாட்டைத் தாக்கினுர்கள். அவர்களுடைய தாக்குதல்களைச் சமாளிக்கும் சக்தி ஜெர்மானிய மன்னருக்கில்லை. அவர் எல்லைப் புறங்களில் பாதுகாப்பு அரண்மனை எழுப்பியும், படைப்பலத்தைப் பல வழிகளிலும் பெருக்கியும், நாட்டின் தற்காப்பிற்கு வழி வகை செய்தார். நாட்டுப்புறங்களில் வாழ்ந்த மக்கள் நகர வாழ்க்கையை மேற்கொள்ள ஊக்கப்பட்டார்கள். இதனுல், வாணிகம் வளர்ந்தது. குதிரைப் படையொன்று புதிதாய் நிறுவப்பட்டது. போர்க்கலங்களையும் குதிரைகளையும் வைத்துக்கொள்

ளக்கூடிய செல்வர்களே படைப்பணி செய்யும் வாய்ப்புப் பெற்ருர்கள். ஏழைகள் அடிமை ஊழியர்களாகிப் படையில் இடம் பெறவில்லை.

வடக்கிலும் கிழக்கிலும் புதிய நாடுகள் கைப்பற்றப்பட்டு இராச்சிய எல்லைகள் விரிவடைந்தன. ஹங்கேரியர்கள் கடும் போருக்குப் பின் 933-ல் முறியடிக்கப்பட்டார்கள். ஹென்றி தோற்ற ஸ்லாவ் மக்களைக் (Slavs) கிறித்துவத்தைத் தழுவுமாறு செய்தார். இச் சமயமாற்றம் அவர்களை நண்பர்களாக்கி அமைதியாய் வாழச் செய்தது. பொஹீமியா (Bohemia) மன்னரும் அவரிடம் தோற்றுக் கப்பம் கட்டினுர். லொரைன் (Lorraine) கோமகனுர் ஃப்ரெஞ்சு ஆதிபத்தியத்தை விடுத்து, ஜெர்மன் ஆதிபத்தியத்தையேற்று, முதலாம் ஹென்றியின் மருகர் ஆனுர். ஏனைய கோமகனுர் நாடுகளில் ஹென்றி தலையிடவில்லை. அவைகளும் அரசருக்குச் செய்ய வேண்டிய படை மானியக் கடமைகளைச் செய்யத் தவறவில்லை. நட்பு முறையில் அப் பிரபுக்களோடு பழகிய காரணத்தால் ஹென்றிக்குப் பின் அவர் மைந்தரான ஆட்டோ ஜெர்மானிய அரசராவதற்கு யாதோர் எதிர்ப்புமில்லை. பின்னர்ப் பேரரசராய்ப் போப்பினுல் முடிசூட்டப்பட்ட ஆட்டோவின் தந்தையாரான ஹென்றி செய்த அரும்பணி நிலையானது. டேனிய மக்களை ஆல்ஃபிரெடு தடுத்து நிறுத்தியதுபோல, ஹென்றி ஹங்கேரியர்களைத் தடை செய்தார். 933-ல் ஹென்றி அன்ஸ்டு ருட்டு (Unstrut) ஆற்றங்கரையில் ஹங்கேரியர்களைத் தோற்கடித்துத் தம் மரபிற்கே பெரும் புகழும் தேடிக்கொண்டார்.

## முதலாம் ஆட்டோ—936-973

தந்தையார் தொடங்கிய பணியைத் தனயர் தொடர்ந்து செய்தார்; எல்லையைத் தாண்டி ஹாரல்டு (Harold Blue Tooth) தலைமையில் தம் நாட்டின்மீது படையெடுத்து வந்த டேனியர்களைப் புறமுதுகிட்டோடச் செய்தார். ஹங்கேரியர்களே நாட்டின் பெரும்பகைவர்களாயிருந்தார்கள். 955-ல் லெக்ஃபீல்டு (Lechfield) போர்க்களத்தில் அவர்கள் படுதோல்வியடைந்தார்கள். அதன் பிறகு மத்திய ஐரோப்பா அவர்களைக் கண்டு அஞ்சுவது குறைந்துவிட்டது. அத் தோல்விக்குப் பின்னர் ஹங்கேரியர்கள் கிறித்துவத்தைத் தழுவி, டான்யூபு பகுதியில் குடியேறி, ஹங்கேரி (Hungary) நாட்டிற்கு வித்திட்டார்கள். நாட்டைப் பகைவர்களிடமிருந்து காக்க எல்லைப்புறங்களின் மேற்குப் பகுதியில் பாலட்டினேட்டுகளையும் (Palatinates) கிழக்கிலும் தெற்கிலும் மார்க்குகளையும் (Marks or Marches) ஏற்படுத்தினுர்கள். அவ்வாறு

புதியனவாய் ஏற்பட்ட நாடுகளிற் சிறந்தவை இத்தாலிக்கு வடக்கே வெரோனுவும் (Verona) அதற்கு வட கிழக்கே ஆஸ்திரியாவுமாகும். எல்லைப்புற நாடுகளில் ஆட்சி புரிந்தவர்களுக்கு அதிகாரமும் சுதந்தரமும் அதிகமாய் வழங்கப்பட்டிருந்தன. இவ் வெல்லைப்புற ஆட்சிகள் நிருவாகத்தில் ஒரு புதுமையாகும். இந்த வகையில் ஆட்டோ ஷார்லேமேனை ஒத்திருந்தார். ஆட்சித்துறையில் சமயக் குருமார்கள் அவருக்குப் பெரிதும் உதவினுர்கள். திருச்சபைக் கூட்டத்தார் மட்டுமே அக்காலத்தில் கற்றுத் தேர்ந்திருந்தார்கள். அவர்களுக்குக் கொடுக்கும் பதவிகள் மரபுரிமையாகா. ஏனெனில், அவர்கள் மணம் முடிக்காதவர்களாயிருந்தார்கள். மேலும், அவர்கள் பெருநிலக்கிழார்களோடு தொடர்பு கொள்ளாது வாழக்கூடியவர்களாயுமிருந்தார்கள். ஆகவே, அவர்களைத் தம் அலுவலாளர்களாக முதலாம் ஆட்டோ அமர்த்திக் கொண்டார். இதனுல் திருச்சபைக்கும் முடியரசிற்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டாயிற்று. அரச ஆதிக்கத்திற்கும் வலிமைக்கும் மேற்றிராணியார்கள் ஆதாரமானுர்கள். திருச்சபைப் பெரு மக்கள் போப்பின் ஊழியர்களாயில்லாமல், அரசாங்க அலுவலாளர்களாகவும் மன்னர்களின் ஊழியர்களாகவுமே இருந்தார்கள். சமயக் குருமார்களை நாட்டுப் பணிகளில் மிகுதியாகப் பயன் படுத்திய ஆட்டோவிற்கு இத்தாலி நாட்டில் அக்கறையேற்பட்டதில் வியப்பில்லை. இத்தாலியில் ஆர்வம் காட்டியதால் அவருக்குப் பேரரசர் பட்டமும் கிட்டியது.

கோமகனுர் நாட்டுப் பிரபுக்களை ஒடுக்கி அவர்களைப் பேரரசின் பரம்பரை அதிகாரிகளாக்கிவிட வேண்டுமென்று ஆட்டோ விரும்பினுர். அவர்களுடைய கலகங்கள் அடக்கப்பட்டன. இடைக்கால ஜெர்மானிய வரலாற்றில் பிரபுக்களுக்கும் அரசர்களுக்குமிடையே போராட்டம் இல்லாத ஆட்சியே மிக அரிது. பெருநிலக்கிழார்களின் பேராசை காரணமாகவே ஆட்சித் துறையில் சமயக் குருமார்கள் இடம் பெறலானுர்கள். ஜெர்மானிய மேற்றிராணியார்கள் செய்யாத அரசாங்க அலுவலில்லை; அவர்கள் வரி வசூலித்தார்கள். வழக்குகளைக் கேட்டுத் தீர்த்து வைத்தார்கள்; படை அமைப்பில் பங்கு கொண்டார்கள்; ஏனைய அரசாங்க அலுவல்களையும் கவனித்தார்கள்.

முதலாம் ஹென்றி சமயக் குருமார்களுடைய உதவியை நாடவில்லை. ஆனுல், அவர் மைந்தரான முதலாம் ஆட்டோ அவர்கள் உதவியை நாடினுர்; அதைக்கொண்டு ஆட்சியில் பிரபுக்களின் பங்கையும் அதிகாரத்தையும் குறைத்தார். இவ்வாறு ஆட்சியின் நோக்கத்திலும் முறையிலும் தந்தையாரும் மைந்தரும் முற்றிலும்

குருமார்களை ஆதரித்து, பட்டமும் பதவியும் அளித்து உயர்த்திய தன் பயன், முடியரசிற்கே தீங்காய் முடிந்தது. பின்னர் பேரரசுக்கும் போப்பின் ஆட்சிக்கும் ஏற்பட்ட போராட்டத்தில், குருமார்கள் தங்களை அணைத்து ஆதரித்தவர்களுக்கு எதிரிகளாய் மாறி அவர்களை அழிக்க உதவினார்கள்.

ஸ்லாவ் மக்களைக் கிறித்துவர்களாக்குவதற்காகப் பல மேற்றிராசனங்கள் நிறுவப்பட்டன. புது மடங்கள் எழுந்தன. துறவிகள் சமயத்தைப் பரப்பியதோடு மிலேச்சர்களையும் கல்வி வாயிலாக நாகரிக மக்களாக்கினார்கள். நாளாவட்டத்தில் ஸ்லாவ் மக்கள் ஜெர்மானியர்களானதுடன், அவர்கள் நாடும் ஜெர்மனியின் ஒரு பகுதியாயிற்று. ஜெர்மனி விரிவடைவதற்குக் கிழக்கிலே தான் இடமிருந்தது. எல்பு ஆற்றிற்குக் கிழக்கே இருந்த பிரஷியா ஜெர்மானிய நாடாயிற்று. ஆனால், பொஹீமியாவும் ஹங்கேரியும் தம் நாட்டினத்தைக் காத்துக் கொண்டன.

இனி, இத்தாலியின் நிலையைப் பார்ப்போம்: அமைதியும் ஒழுங்குமே இத்தாலியர்களின் முதல் தேவையும் இறுதித் தேவையுமாகும். அந்த நாட்டின் வடபகுதியில் ஷார்லேமேனின் மரபினர் ஆட்சி புரிந்து வந்தனர். ஹங்கேரியர்களின் தாக்குதல்களினால் அப் பகுதி அமைதியற்றிருந்தது. இத்தாலியின் இடைப் பகுதி நீண்ட காலமாய் முஸ்லீம் படையெடுப்பிற்கு இரையாகியிருந்தது. பைசான்டைன் ஆதிக்கத்திலிருந்த தென் பகுதியும் முஸ்லிம் கடற் கொள்ளைக்காரர்களிடமிருந்து தப்பவில்லை. ஆனால், வலிவுள்ள, பொது நல உணர்ச்சியுடைய போப்புகள் நாட்டிற்கு ஓரளவு நற்கதி அளித்தார்கள். பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் போப்பின் ஆட்சியும் கெட்டு, ஒழுங்கற்றுப் போயிற்று. போப்பாட்சியின் வரலாற்றில் அதுவே மிக இருண்ட காலம். போப்பாட்சியை மையமாய்க்கொண்டு உரோம் நகர அரங்கில் கட்சிச் சண்டைகள் வலுத்துவிட்டன. போப்பு ஓர் இத்தாலியச் சீமாட்டியின் கைப்பாவையாகிவிட்டார் என்ற அளவுக்குப் போப்பாட்சியினைப்பற்றி அவதூறுகள் மலிந்து, அந்த ஆட்சி பழிப்பிற்கு உள்ளாகிவிட்டது. சான்றாக, அறுபத்தேழாண்டுகளில் (கி.பி. 896-963) இருபது போப்புகள் ஆட்சிக்கு வந்தார்கள். அவர்களுட் பலர், ஒன்று கொல்லப்பட்டனர், அல்லது பதவியிலிருந்து அகற்றப்பட்டனர். தியோடோரா (Theodora, the notorious wife of Theophylactus) என்ற சீமாட்டியார், போப்பின் ஆட்சியைத் தம் அடிப்படுத்திக்கொண்டார். அவருடைய மகளாரான மாரோஸியா (Marozia) என்பவர், ஒரு போப்பின் (John-XI) காமக்கிழத்தியரும், மற்றொரு போப்பின் (John-XII) தாயாரும்

ஆவார். பன்னிரண்டாம் போப்பு ஜான் ஆட்டோவின் உதவியை நாடித் தூதனுப்பினுர். தூது சென்ற பிரபுக்கள் போப்பாட்சியை ஒழுங்கு செய்யவேண்டுமென வேண்டி நின்றுர்கள். ஆட்டோவும் 951-ல் முதல் முறையாக இத்தாலிக்குச் சென்றுர். இத்தாலியில் லம்பார்டு அரசிற்காக உள்நாட்டுப் போர் நிகழ்ந்தது. அப்பதவிப் போராட்டத்தில் ஜெர்மானியக் கோமகஞர் நாடுகளாகிய சுவாபி யாவும் பவேரியாவும் எதிரெதிராய் ஈடுபட்டன. ஜெர்மனி நாட்டு அமைதியைக் காக்க அவர் தலையிட்டார். லம்பார்டியை வென்று, பழைய அரசருடைய கைம்பெண்ணை மணந்த பின் இத்தாலிய அரசராய் முடி சூட்டிக்கொண்டு ஆட்டோ தம் நாடு திரும்பினுர்.

962-ல் ஆட்டோ இரண்டாம் முறையாக இத்தாலி சென்ற போதுதான் பேரரசு மீண்டும் உயிர் பெற்றது. அம் முறையும் போப்பின் வேண்டுகோளையேற்றே அவர் சென்றுர். ஆட்டோ விற்கும் அவருடைய லம்பார்டித் துணைவியாரான அடிலெய்டிற் கும் (Adelaide) பேரரசர், பேரரசியாரெனப் போப்புப் பன்னி ரண்டாம் ஜான் முடிசூட்டினுர். அதன் பிறகே இடைக்கால ஜெர் மானியப் பேரரசு, தூய உரோமனியப் பேரரசு (Holy Roman Empire) ஆயிற்று. எண்ணூருண்டுகளுக்குமேலாக வரலாற்றில் பெரும்பங்கு கொண்டு, பின்னர் 1806-ல் அப் பேரரசு நெப்போலி யனுல் கலைக்கப்பட்டது.

ஷார்லேமேனேடு ஆட்டோவை ஒப்பிட்டுப் பார்த்தால், அக் கால ஐரோப்பிய நிலைமை தெளிவுபெறும். இருவரும் பெரும் வெற்றி வீரர். இருவரும் ஐரோப்பியப் பகைவர்களாகிய மிலேச் சர்களோடு வெற்றிகரமாய்ப் போரிட்டு அவர்களை ஒடுக்கியவர் கள். திருச்சபையின் முன்னேற்றத்திற்கும் ஒன்றிப்பிற்கும் பெருந் தொண்டாற்றியவர்கள். இருவரும் தம் அரும்பணியின் பயனுய்ப் போப்பிடம் பேரரசப்பட்டமென்ற பரிசைப் பெற்றனர். அவர் களுக்கிடையில் இருந்த வேறுபாடுகளும் பல. ஜெர்மானிய ஷார்லேமேனின் இராச்சியம் பல இன மக்களைக்கொண்டு பரந் திருந்தது. ஆனுல், இத்தாலிய ஆதிக்கம் ஏற்படும்வரை, ஜெர் மானிய மக்களை மட்டும் கொண்ட ஜெர்மனி நாட்டை ஆண்டு வந்தார் ஆட்டோ. இத்தாலியத் தொடர்பும், ஆட்சியும், பேரரசர் பட்டமும், அவருடைய மரபினருக்குத் தீராத் தொல் லையாய் முடிந்தன. ஜெர்மனியோடு அவர்களாதிக்கம் நின்றிருந் தால், அந்த நாடு நல்ல ஆக்கமும் உரமும் பெற்று நிலைத்திருக்கும். இத்தாலியின் தொடர்பினுல் போப்பாட்சியோடு மோதிக் கொண்டு, ஜெர்மானிய இராச்சியம் அழிந்து பல சிறு நாடுகளாய்ப் பிளவுண்டு சீரழிந்தது. பன்னிரண்டாம் ஜான், ஆட்டோவிற்குத்

கீழ்ப்படியவில்லை. அவர்மேல் சாட்டப்பட்ட குற்ற விசாரணையின் பேரில்—கொலை, தெய்வம் பழித்தல், நெறி தவறுதல் ஆகிய குற்றங்களுக்காக—பதவியிலிருந்து நீக்கப்பட்டார். ஆட்டோவின் செயலாளராயிருந்த கையாள் ஒருவர் போப்பாக அமர்த்தப் பட்டார். 'இனிப்பேரரசர் இசைவுபெறாத எவரையும் போப்பாக ஏற்றுக் கொள்ளோம்', என்று உரோமாபுரி மக்கள் ஆட்டோ விற்கு வாக்குறுதி அளித்தார்கள். ஆனால், அவ்வாக்குறுதியை அவர்கள் மீறினார்கள். உரோம் நகரிலும் இத்தாலியிலும் ஆதிக்கம் செலுத்த விரும்பினால், அடிக்கடி போராட்டங்களில் ஈடுபடவேண்டி வரும் என்பதை ஆட்டோ உணர்ந்தார்.

ஷார்லேமேனும் போப்பும் நண்பர்களாய்ப் பழகினர். ஆட்டோ போப்புக்குக் காவலராயிருந்தார். பேரரசர்கள் பெரும் புகழ் எய்திய போதிலும், அப் புகழுக்கு அவர்கள் கொடுத்த விலை பெருந்தொல்லையும் இறுதியில் அழிவுமாகும். அடிக்கடி இத்தாலி யின் பக்கம் அவர்கள் கவனம் இழுக்கப்பட்டதால், ஜெர்மனியில் படைமானிய முறையின் தீமைகளும் ஒழுங்கீனங்களும் தலைவிரித் தாடியதைத் தடுக்கமுடியாமற் போய்விட்டது. ஜெர்மானியப் பேரரசர்களின் கருத்தும் கவலையும் ஜெர்மனி இத்தாலி ஆகிய இரு நாடுகளுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டன. அதன் விளைவு, இரு நாடுகளும் ஒற்றுமையின்றிப் பல நாடுகளின் கூட்டாட்சி யாகவே பத்தொன்பதாம் நூற்றாண்டின் முன் பகுதி முடிய இருந்துவிட்டன.

ஆட்டோவின் ஆட்சியில் ஜெர்மனி ஐரோப்பாவில் முதலிடம் பெற்றிருந்தது. 973-ல் ஈஸ்டர் (Easter) விழாவைக் கொண்டாடிய போது முதலாம் ஆட்டோ ஒரு பேரவையைக் கூட்டினார். அப் போது உரோம், கான்ஸ்டான்டிநோப்பிள் என்ற இரு தலைநகரங் களிலிருந்தும் ஹங்கேரியர்கள், பல்கேரியர்கள், ரஷியர்கள், ஸ்லாவ் மக்கள், டேனியர்கள் முதலிய பல்வேறு நாட்டினர்கள் சார்பிலும் தூதுக் குழுக்கள் வந்து பேரரசரைப் பெருமைப் படுத்தின. பொஹீமியா, போலண்டு, கோமக நாட்டுத் தலை வர்கள் நேரில் வந்து ஆட்டோவிற்கு இறை வணக்கஞ் செய் தார்கள். சில நாள்களுக்குப் பின் ஆட்டோ இயற்கை யெய்தினார்.

ஜெர்மானியப் பண்பாட்டு வரலாற்றில் ஆட்டோவின் ஆட்சி மிகச் சிறந்த ஒன்றாகும். அவர் காலத்தில் சமயமும் கல்வியும் புத்துயிர் பெற்றன. அவர் அவைக்களத்தில் புலவர் பலர் இருந் தனர். வரலாற்றாசிரியர்களும், கவிஞர்களும், நாடக ஆசிரியர் களும் இலக்கியப்பணி புரிந்தார்கள். அவர் காலத்தில் ஜெர்மன் மொழி இலக்கிய மொழியாகியது. ஜெர்மானிய மக்களின் பழக்க

வழக்கங்கள், ஒழுக்கம் முதலியவற்றை அறிவதற்குப் பெரிதும் உதவுகின்ற 'டெர் ஹீலியண்டு' ('Der Heliand') என்ற காப்பியம் ஜெர்மன் பின்னணியோடு எழுதப்பட்ட இயேசுவின் வாழ்க்கை வரலாறுகும். எந்த வகையிற் பார்த்தாலும், 'பெரியார்' என்ற பட்டத்திற்குப் பெரியார் முதலாம் ஆட்டோ (Otto the Great) பெரிதும் தகுதி வாய்ந்தவரே.

## இரண்டாம் ஆட்டோ—973-983

இவர் ஜெர்மானியர்களையும் இத்தாலியர்களையும் ஒன்று சேர்த்து முஸ்லிம்களோடு ஒரு சமயப் போர் தொடங்கத் திட்டமிட்டிருந்தார். அது நிறைவேறவில்லை. சாரஸெனியர்கள் இத்தாலியின் தென்பகுதியின்மீது படையெடுத்து வந்தார்கள். அவர்களோடு பேரரசர் போராடினார். அவர் அப் போரில் ஈடுபட்டிருந்தபோது அவருடைய நாட்டைக் கிழக்கிலிருந்து வந்த மிலேச்சர்கள் தாக்கிக்கொண்டிருந்தார்கள். அதனால், ஜெர்மன் மக்கள் மிகத் துன்புற்றார்கள்.

## மூன்றும் ஆட்டோ—983-1002

போப்பின் ஆட்சியை ஓர் உரோமானியத் தன்னலக் கும்பலின் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கச் சென்ற பேரரசர், தம்முடைய நெருங்கிய உறவினருள் ஒருவரைப் போப்பாக்கினார். அப்போது அவருக்கு வயது பதினாறே. மூன்றாண்டுகளுக்குப் பின்னர், தம்முடைய ஆசிரியரைப் போப்பின் பீடத்தில் அமர்த்தினார். பிரபுக்களும் மிலேச்சர்களும் ஜெர்மனியை என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளட்டுமென்று விட்டுவிட்டு, மூன்றும் ஆட்டோ உரோம் நகரில் குடிபுகுந்தார். அங்கேற்பட்ட கலகங்கள் அவரை விரட்டவே, அவர் மீண்டும் ஜெர்மனிக்குத் திரும்பிச் சென்றார். அவர் இத்தாலியிலிருந்தபோது இராச்சியத்தின் எல்லைகள் சுருங்கின; மதிப்புக் குறைந்தது. அவருடைய ஆட்சியில் கிழக்கெல்லையில் போலண்டும், மாக்யார்கள் குடியேற்ற நாடும் தோன்றி வளரலாயின. பின்னர், அவை அடிக்கடி ஜெர்மனியோடு மோத நேரிட்டது. இளமையிலேயே இறந்துவிட்ட மூன்றும் ஆட்டோவிற்கு வாரிசு இல்லை. ஆதலால், அவர் உறவினர் இரண்டாம் ஹென்றி (Henry-II) பேரரசராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## இரண்டாம் ஹென்றி—1002-1024

இரண்டாம் ஹென்றியு... ப் பின் பட்டத்திற்கு வந்த இருவரும், ... பதவியிலும் அதனுடன்

இணைந்து கிடந்த இத்தாலியப் பொறுப்பிலும் தம் மனத்தைப் பறி கொடுத்துவிடாமல், ஜெர்மனி நாட்டின் நலத்திலும் வளர்ச்சியிலும் கவலை கொண்டனர். பிரபுக்களின் ஆதிக்கம் மேலோங்காமல் சமயக் குருமார்களும் அரசரும் கூட்டுச் சேர்ந்தார்கள். இக் கூட்டால் இரு பங்காளிகளும் ஆதாயமடைந்தார்கள். வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் வேறெந்த நாட்டிற்கும் இல்லாத வாய்ப்பைப் பதினோராம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் ஜெர்மனி பெற்றிருந்தது.

நாட்டில் கலகங்களும் அயலார் தாக்குதல்களும் மலிந்து இரண்டாம் ஹென்றியின் ஆட்சி அமைதியின்றிக் காணப்பட்டது. அவருக்குப் பின் இரண்டாம் கான்ராடு (1024-1039) பேரரசராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார். திருமணத் தொடர்பால் பர்கண்டி அவருடைய இராச்சியத்தோடு இணைக்கப்பட்டது. சில கோமகனுர் நாடுகளை நெருங்கிய உறவினர்களுக்கு அளித்து, நாட்டின் பல பகுதிகளில் அவர் தம் ஆட்சியை வலுப்படுத்திக்கொண்டார்; சிறு நிலக்கிழார்களுக்கு அவர்களுடைய மானியங்களில் மரபுரிமை வழங்கி, அவர்களைத் தம்மோடு அணைத்துக்கொண்டார்; அழைத்தபோது வந்து அரசருக்கு குடிமக்கள் போர்ப் பணி செய்யவேண்டுமென ஆணையிட்டு, படை மானிய முறையில் ஒரு பெரிய மாற்றத்தைச் செய்தார். இம் மாற்றத்தால் பெரு மானியதார்களின் வலிவு குறைந்துபோயிற்று.

## மூன்றும் ஹென்றி—1039-56

பிரபுக்கள், குருமார்கள் ஆகிய இரு சாரார் ஆதரவையும் ஒருங்கேபெற்று மூன்றும் ஹென்றி, போலண்டிலிருந்து பொஹீமியாவை மீட்டார். ஹங்கேரியாவில் பழைய மன்னரை விரட்டி விட்டுத் தம் ஆதிபத்தியத்தை ஏற்றுக்கொண்ட ஒருவரை அரசராக்கினுர்; இத்தாலியில் தம்முடைய அதிகாரத்தை நிலைநிறுத்தினுர். அவருடைய இராச்சியப் பரப்பு ஷார்லேமேன் பேரரசில் மூன்றில் இரு பங்கு அளவினதாயிற்று.

ஜெர்மனியிலும் இத்தாலியிலும் திருச்சபை மூன்றும் ஹென்றியின் ஆணைக்குக் கட்டுப்பட்டிருந்தது; அவர் திறமையுடையவர்களையே திருச்சபையில் பணி புரிய அமர்த்தினுர். தந்தையாரைப் போல, திருச்சபை அதிகாரிகளிடம் பொருள் வாங்கிக்கொண்டு அவர்களை அமர்த்தவில்லை. குளூனியக்குச் சீர்திருத்த முறைப்படி சமயக் குருமாரின் வாழ்க்கையும் ஒழுக்கமும் திருத்தப்பட்டன. அவர் மடத்துப் பள்ளிகளை ஊக்கியும், லௌகிகர்களுக்குப் பள்ளிகளை நிறுவியும் கல்வித்துறையில் அக்கறை காட்டினுர். 1046-ல் பேரரசர் இத்தாலிக்குச் சென்ற போது, போப்பின் பதவிக்கு

மூவர் போட்டியிடுவதைப் பார்த்தார்; அம் மூவரையும் ஒதுக்கி விட்டு, போப்பை அமர்த்தும் உரிமை பேரரசருக்கே உரியது என வலியுறுத்தி நிலை நாட்டும் வகையில், ஒரு ஜெர்மானியரை அப் பதவியில் அமரச் செய்தார். பின்னர் அப் பதவிக்கு மூன்று ஜெர்மானியர்களை அமர்த்தும் அரிய வாய்ப்பை அவர் பெற்றார். திருச்சபை எவ்வாறு மக்களிடையே பணியாற்ற வேண்டுமென் பதை மூன்றும் ஹென்றி வரையறை செய்தார். பெரிதும் ஒதுக்கப் பட்டுக் காத்திருந்த பிரபுக்கள் 1056-ல் அவர் இறந்த பின் வாய்ப்புப் பெற்றார்கள். ஆறாண்டு நிரம்பப் பெறாத ஒரு மகனைத் தனியே விட்டு மூன்றும் ஹென்றி அவ்வாண்டில் உயிர் நீத்தார். வயது நிரம்பாத வாரிசுகளின் காலத்தில் மானியதார்கள் தங்க ளிச்சை போல ஒருவரோடொருவர் போராடி நாட்டின் அமைதி யைக் குலைத்துத் தங்கள் ஆதிக்கத்தைப் பெருக்கிக்கொள்ளும் வாய்ப்பைப் பெறுகிறார்கள்.

தென்னித்தாலியைத் திரும்பிப் பார்ப்பதற்கு முன், ஜெர் மானிய, ஃப்ரெஞ்சு நாட்டினங்களின் முதிர்ச்சியை ஒப்பிட்டுக் காண்போம். அவை இரண்டின் வளர்ச்சியும் தொடக்கத்தில் ஒத்திருந்தது. இரு நாடுகளிலும் உண்மையான அதிகாரம் உள்ளூர் மானியதார்கள் கையில் சிக்கியிருந்தது. அவர்களால் தேர்ந் தெடுக்கப்பெற்ற அரசர்களே கரோலிங்கியப் பேரரசிருந்த இடத் திலே, தனித்தனி நாட்டரசுகளை நிறுவினார்கள். இறுதியில் ஒவ் வோர் அரச குடும்பமும் ஆட்சியில் மரபுரிமை பெற்றது. இவ் வாறு கரோலிங்கியப் பேரரசு, இரு வேறு நாட்டினங்கள் தன் னிடத்திலிருந்து கிளைக்க உதவி வரலாற்றிலிருந்து மறைந்தது.

ஒன்பதாம் நூற்றாண்டில் சிசிலியைக் கைப்பற்றிய சாரஸேனி யர்கள் இத்தாலியப் பெருநிலப்பகுதியிலும் சில இடங்களைத் தங்கள் வசமாக்கிக் கொண்டார்கள். தென்னித்தாலியின் பெரும் பகுதி பைசான்டைன் பேரரசர் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்தது. அன்றியும், ஜெர்மன் பேரரசர், கிரேக்கப் பேரரசர் ஆகிய இருவர் ஆதிக்கத்திலுமில்லாத பல பகுதிகள் சுதந்தரக் கோமகனார்கள் ஆட்சியின் கீழிருந்தன. அப் பகுதிகளில் நடைபெற்ற போர்க் காரணமாய்க் குழப்பம் நிறைந்திருந்தது. கி.பி. 1016-ஆம் ஆண்டு முதல், நார்மானிய வீரர்கள் தென்னித்தாலியக் கோமகனார்களுக் குத் தங்கள் வீரத்தை விலை பேசி வந்தார்கள். 1027 ல் நேப்பிள்ஸ் கோமகனார் கொடுத்த ஒரு நிலப்பகுதியோடு (Aversa) வேறு சில பகுதிகளையும் நாடோடி வீர வாழ்வில் திளைத்த நார்மா னியர்கள் வென்று சேர்த்துக் கொண்டார்கள். கிரேக்கர்களுடன் பிணங்கிய நார்மானியர்கள் அப்பூலியாவைத் (Apulia) தாக்கிப் பிடித்துக்கொண்டார்கள், 1053-ல் போப்பைச் சிறைப்படுத்தி,

தாங்கள் வென்ற பகுதிகளின் அரசுரிமைக்கு அவர் ஒப்புதலையும் பெற்றார்கள். இராபர்ட்டு கிஸ்கார்டு (Robert Guiscard) என்ற நார்மானிய வீரர், அப்பூலியாக் கோமகனாய் மட்டும் இருக்க விரும்பாது, சிசிலியைத் தம் ஆதிக்கத்திற்குக் கொண்டுவரப் போப்பின் இசைவைப் பெற்று, அம் முயற்சியில் இறங்கினார். முப்பதாண்டு போராட்டத்திற்குப் பின் (1060-1090) சிசிலி நார் மானிய ஆட்சிக்குட்பட்டது. போப்பு ஏழாம் கிரெகரியின் (Gregory-VII) ஆசி ஆதரவுடன் இராபர்ட்டு சிஸ்கார்டு கிழக்குப் பேரரசின்மீதே படையெடுத்துச் சென்றார். அப்போதிருந்த ஆட்சி உரிமையற்ற பைசான்டைன் பேரரசர், இருந்த பேரரசரை விரட்டிவிட்டுப் புதிதாய் அப்பதவியைக் கைப்பற்றியவர். ஆகவே, அப்பேரரசின் பதவிப் போராட்டத்தில், படையெடுப்பு வாயிலாக இராபர்ட்டுத் தலையிட்டார் எனக் கொள்ளலாம். படையெடுத் துச் சென்ற இராபர்ட்டு, பல இடங்களைப் பிடித்துப் பேரரசிற் குள்ளே நுழைந்தார். அச்சங்கொண்ட பைசான்டைன் பேரரசர் அலெக்ஸியஸ் (Alexius), ஜெர்மன் பேரரசராகிய நான்காம் ஹென்றியைத் (Henry-IV) துணைக்கழைத்தார். அதற்கிணங்கி நான்காம் ஹென்றி இத்தாலிக்கு வந்து, ஏழாம் கிரெகரியை நெருக்கவே, இராபர்ட்டு உரோம் நகருக்கு விரைந்து சென்று, ஜெர்மானியரை விரட்டிவிட்டுப் போப்பை மீட்டார். ஆனால், நார்மானியப் படை கிழக்குப் பேரரசுடன் தொடங்கிய போரில் தோற்று, வெளியேற வேண்டியதாயிற்று. 1085-ல் இராபர்ட்டு இறக்கவே, பைசான்டைன் பேரரசினைத் தாக்க அவர் வகுத் திருந்த திட்டம் கைவிடப்பட்டது.

இராபர்ட்டு ஆற்றிய அரசியற்பணி அவருக்குப் பிறகும் நெடுங்காலம் நீடித்தது. அவர் ஆட்சியில் இணைந்த தென்னித் தாலியும் சிசிலியும் மேலும் இணைக்கப் பெற்றுப் பின்னால் 1130-ல் இரு சிசிலிகள் என்ற இராச்சியமாய் (Kingdom of the Two Sicilies) வளரலாயிற்று. இன்னும் பேரரசர்களுக்கும் போப்பு களுக்கும் நிகழ்ந்த நீண்ட போராட்டத்தில் அப் புதிய இராச்சியம் போப்பாட்சிக்குப் பேராதரவு அளித்துப் பெரும்பங்கு கொள்ள இருந்தது.

போப்புகளைத் தெரிந்து அமர்த்தும் உரிமை தங்களுக்கு உரியது என்று சொல்லி வந்ததோடு அதனைப் பயின்றும் வந் தார்கள் ஜெர்மானியப் பேரரசர்கள். இந்த நிலைமையைத் தலை கீழாக மாற்றி, அரசர்களையும் பேரரசர்களையும் ஆக்கவும் நீக்கவும் உரிமை பெறப் போப்புகள் முயன்றதுமல்லாமல், அதிலே முனைந் தும் நின்றார்கள்.


ஐரோப்பா - பன்னிரண்டாம் நூற்றாண்டு
இங்கிலாந்து
ஹால்ஸ்டன்
லண்டன்
ஃபிளாண்டர்ஸ்
லூபெக்
பிரஷியா
கொலோன்
போலண்டு
ரூவன்
பிரிட்டனி
நார்மண்டி
ரீம்ஸ்
மெயின்
பாரீஸ்
ஆஞ்சோ
ஃபிரான்ஸ்
பாய்டோ
பாய்ட்டியர்ஸ்
அக்விடைன்
போர்டோ
காஸ்கனி
ஃப்ராங்ஃபர்ட்
பிராஃக்
மெயின்ஸ்
பொகிமியா
ஜெர்மன் அரசு
ஸ்டிராஸ்பர்ஃக்
ஆஸ்டிரியா
வியன்னா
சூரிச்
ஹங்கேரி
ஜெனீவா
மிலான்
டூரின்
அரசு
வெனிஸ்
பர்கண்டி
ஜெனோவா
ஃப்ளாரென்சு
இத்தாலி
அரசு
காஸ்டில்
அரகான்
கார்சிகா
ரோம்
ஹோஹென்ஸ்டாஃபென் பேரரசு எல்லை
ஆஞ்செவின் பேரரசு எல்லை

# அதிகாரம் 8

## ஃப்ரான்சில் காப்பேஷியன் மன்னர்கள்

ஷார்லேமேன் இராச்சியத்தின் ஜெர்மன் பகுதியையும் ஃப்ரெஞ்சுப் பகுதியையும் இணைத்து அரசுபுரிந்த இறுதிக் கரோலிங்கியப் பேரரசர் சார்லெஸ் (Charles the Fat), கி. பி. 885-ல் திறமையின்மை காரணமாய், அரியணையிலிருந்து இறக்கப்பட்டார். ஃப்ரெஞ்சுப் பகுதியிலிருந்த பிரபுக்களும் மேற்றிராணியார்களும் பாரிஸ் கோமகனுரான ஓடோ (Odo) என்பவரைத் தங்கள் மன்னராய்த் தேர்ந்தெடுத்தார்கள். பாரிஸ் நகரை நார்ஸ் மக்களிடமிருந்து காப்பாற்றியவர் என்ற புகழ் அவருக்கு ஏற்கெனவே உண்டு. 898-ல் அவர் இறக்கும் வரையில் தம்முடைய அரசப் பதவியைக் காப்பாற்றிக்கொள்ளப் போரிட்ட வண்ணமிருந்தார். பிறகு சார்லஸ் (Charles the Simple) கரோலிங்கியப் பேரரசராகவும், ஓடோவின் தம்பியாரான ராபர்ட்டு, பாரிஸ் கோமகனுராகவும் இருக்க நேரிட்டது. 911-ல் வடவர்கள் தாங்கள் கைப்பற்றிக் குடியேறிய ஃப்ரெஞ்சு நாட்டுப் பகுதியை ஓர் ஒப்பந்தத்தால் தங்களுக்கே சொந்தமாக்கிக்கொண்டார்கள். அப் பகுதியே பின்னர் நார்மண்டியாயிற்று. வடவர் தலைவர் பேரரசரின் மகளாரை மணந்து கிறித்துவரானுர்.

பர்கண்டியைச் சேர்ந்த ருடால்ஃப் (Rudolf) என்பவர், பேரரசரைச் சிறையிலிட்டு, பன்னிரண்டாண்டுகள் ஃப்ரெஞ்சு மன்னராயிருந்தார், கடைசிக் கரோலிங்கியப் பேரரசர் லூயி–V 987-ல் இறந்தார். அக் காலத்தில் பாரிஸ் கோமகனுரான ஹியூகோ (Hugo) என்பார், பெருவாரியான நிலப் பகுதியைத் தம் ஆதிக்கத்தில் வைத்துக்கொண்டு மிக்க செல்வாக்குடனிருந்தார். அவருடைய மூத்த மைந்தரான ஹியூகோ காபெட்டு (Hugo Capet), ஜெர்மானிய மன்னரான மூன்றும் ஆட்டோவின் (Otto-III) உதவியுடன், திருச்சபை, பிரபுக்கள் முதலியோரின்

ஆதரவும் பெற்று, 987-ல் ஃப்ரெஞ்சு மன்னராய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு, அவர் ஃப்ரெஞ்சு மக்கள் யாவருக்கும் தலைவராக முடிசூட்டப்பட்டார். அவர் தோற்றுவித்த அரச மரபு நேர்க்கால் வழியில் முந்நூறாண்டுகளுக்குமேல் (987-1328) ஃப்ரான்சில் ஆதிக்கஞ் செலுத்தியது. மன்னர் இறந்தபின் அவருடைய மக்கள் இராச்சியத்தைப் பிரித்துத் துண்டு போடும் கரோலிங்கிய வழக்கத்தை ஹியூகோ காபெட்டின் மரபு வழியினர் பின்பற்றவில்லை. இந்தப் புதிய மரபில் அரசர் இறந்ததும் அவர் வழி வந்த ஒருவர் பட்டமெய்தினர். மேலும், காப்பேஷியன் (Capetian) வமிசத்தில் தந்தையார் விட்டுச்சென்ற நாட்டின் ஆட்சிப் பொறுப்பையேற்று நடத்த வயதுவந்த மைந்தர் என்றும் இடையீடின்றிக் கிடைத்து வந்தனர் அது அந்த மரபுபெற்ற பேறுகும். இடைக்காலத்தில் வாரிசின்றி ஓர் அரசர் இறந்தாரெனில், பதவிப் போட்டியும் போராட்டமும் ஏற்பட்டு, ஆட்சியின் அமைதி குலைந்து வந்தது கண்கூடு.

முதலில் காபெட்டு மன்னர்களின் செல்வாக்கும் அதிகாரமும் குறைவாகவே இருந்தன. பெருநிலக்கிழார்கள் தங்கள் மானியங்களிலும் கோட்டங்களிலும் சிற்றரசர்கள் போலவே இருந்தார்கள். நிலமானிய முறையின் குறைகளை நீக்கி, வலிவுள்ள மத்திய ஆட்சியை நிறுவிய பின்னரே காபெட்டு மன்னர்களின் ஆதிக்கம் ஓங்கியது. இதற்கு ஒரு நூற்றுண்டிற்குமேல் ஆயிற்று. காபெட்டு மன்னர்கள் திருச்சபைக்குப் பல சலுகைகள் காட்டியும் உரிமைகள் வழங்கியும் சமயக் குருமார்களின் பேராதரவைப் பெற்றிருந்தார்கள். நிலமானிய முறை இங்கிலாந்தில் வளர்ந்தது போல, ஃப்ரான்சில் வளரவில்லை. ஃப்ரான்சில், மானியதார்கள் இடையீடின்றிப் போரிட்டார்கள். அத்தகைய போர்கள் அங்கு வழக்கமாகிவிட்டன.

ஹியூகோ காபெட்டுக் காலத்தில் (987-996) ஃப்ரான்சில் நாட்டு உணர்ச்சி வளர்ந்தது. அவருடைய மைந்தர், புது நகரங்களையும் இடங்களையும் கைப்பற்றி, நாட்டை விரிவடையச் செய்தார். முதலாம் ஹென்றி (1031-60) நார்மண்டிக் கோமகனுரோடு போரிட்டுத் தோல்வி அடைந்தார். அந்த நார் மானியக் கோமகனுரே இங்கிலாந்தை வென்று, வெற்றி வேந்தர் வில்லியம் (William the Conqueror) ஆனுர். அடுத்த காபெட்டு மன்னராக முதலாம் பிலிப்பு (Philip-I) கி. பி. 1060-ல் அரசு கட்டிலேறினுர். அவர் நார்மண்டிக் கோமகனுர் குடும்பத்தில் பிளவு ஏற்படுத்தி அதன் ஆதிக்கத்தைக் குறைக்க முயன்றுர். புதிய நாட்டை (இங்கிலாந்தை) வென்ற வில்லியம், அதற்கு ஆட்சி முறைகள் வகுப்பதில் ஈடுபட்

டிருந்தார். ஆதலால், அவர் ஃப்ரெஞ்சு மன்னருக்கு மிகுந்த தொல்லை தரவில்லை. கி. பி, 1095-ல் முதற் சிலுவைப் போரில் கலந்துகொள்ளப் பல ஃப்ரெஞ்சு மானியதார்கள் சென்றுவிட்டார்கள். இந்த நிகழ்ச்சியும் அரசாட்சியை மிக எளிதாக்கிற்று. ஆயினும், அவராட்சி சிறக்கவில்லை.

## ஆறும் லூயி—1108-1137

ஆறும் லூயி நாட்டில் அமைதியை ஏற்படுத்தி, படைமானிய முறையின் ஒழுங்கீனத்தை ஒடுக்கி, அரச ஆதிக்கத்தை வளர்த்துக்கொண்டார்; தம்முடைய கோட்டத்திலிருந்த சிறிய பிரபுக்களையெல்லாம் அடக்கி, வருவாயைப் பெருக்கினார். மானியதார்கள் வாரிசில்லாமல் இறந்துவிடில் அந்த மானியங்களைப் ஃப்ரெஞ்சு அரசர்கள் தங்கள் நிலத்தோடு சேர்த்துக்கொண்டார்கள். ஆனால், ஜெர்மனியில் இந்த வழக்கமில்லை. காலி மானியங்களை ஓராண்டிற்குள் ஜெர்மன் மன்னர்கள் பிரபுக்களுக்கு வழங்கிவிட வேண்டும். ஜெர்மன் மன்னர்களுக்கு இல்லாத ஒரு வசதி ஃப்ரெஞ்சு மன்னர்களுக்கிருந்ததால், அவர்கள் நிலப்பரப்பு விரிவடைந்தது. ஆறும் லூயி திருச்சபையின் ஆதரவாளர் ; நகரங்களுக்குச் சலுகைகள் தந்து, அவற்றை அயல் மானியதார்களின் ஆதிக்கத்திலிருந்து விடுவித்தார். அவர் காலத்தில் வழிப்போக்கர்களும் வணிகர்களும் அச்சமின்றித் தங்கள் பயணத்தை மேற்கொண்டார்கள்.

## ஏழாம் லூயி—1137-1180

சமயக் குரு சுஜே (Suger) இறக்கும் வரை, அவர் அறிவுரையைப் பின்பற்றியதனால் லூயியின் ஆட்சி செவ்வனே நடைபெற்றது. அக்விட்டெயின் (Aquitaine) கோட்ட உரிமையாளரான எலினர் (Eleanor) என்ற கோமகளாரை ஏழாம் லூயி மணந்துகொண்டார். அக் கோமகளார் காபெட்டு மன்னரின் நிலப் பகுதியைப்போல் இரு மடங்கு பெரிய கோட்டத்தை (Duchy of Aquitaine)—ஏறத்தாழ இக்கால ஃப்ரான்ஸ் நாட்டின் கால் பகுதியை-பெண்வழிச் சீர் வரிசையாகப் பெற்றவர். இத் திருமணம் இன்ப மயமாய் நீடித்திருக்குமானால், ஃப்ரெஞ்சு முடியரசு மிக வலுத்து வளம் பெற்றிருக்கும். எலியனரிடம் அரசர் இரண்டு பெண்களைப் பெற்றாரேயன்றி, அவர்களுக்கு ஆண் மகவு பிறக்கவில்லை. அவர் இரண்டாவது சிலுவைப் போரில் கலந்துகொண்டு வெற்றிபெறாது திரும்பினார். அதன் பின் லூயியும் எலியனரும் பிணங்கி, மணவிலக்குச் செய்துகொண்டார்கள். பதினைந்தாண்டு மண வாழ்க்கைக்குப் பின் லூயியும் எலியனரும்

நெருங்கிய உறவினர்களெனவும் அதனால் அவர்கள் திருமணம் திருச்சபைச் சட்டத்திற்குப் புறம்பானது எனவும் முடிவு செய்யப் பட்டது. மணவிலக்குப் பெற்ற எலியனூர் ஆஞ்சோ (Anjou) மெயின் (Maine) என்ற இரண்டிற்கும் கோட்டத் தலைவராயிருந்த ஹென்றி என்ற இளைஞரை மணந்துகொண்டார். அவ்விளைஞர் திருமணம் நடந்த ஓராண்டிற்குள் இரண்டாம் ஹென்றி என்ற பட்டத்துடன் இங்கிலாந்து மன்னரானார். இதனால், ஃப்ரெஞ்சு முடியரசின்கீழ் இருந்துவந்த பெருநிலப் பரப்பாகிய அக்விட் டெயின், ஆங்கில மன்னர் ஆதிக்கத்தின்கீழ் வந்தது. மேலும், ஹென்றியை மணந்த எலியனூர் நான்கு ஆண் மக்களைப் பெற் றெடுத்தார். ஃப்ரெஞ்சு மன்னரைக் காட்டிலும் இரண்டாம் ஹென்றி ஃப்ரான்சில் ஆற்றல் மிக்கவராய் இருந்தார். ஃப்ரான் ஸின் பெரும்பகுதியையும் இங்கிலாந்தையும் இணைத்து ஆண்டு வந்த இரண்டாம் ஹென்றியுடன் ஒப்பிடும்போது ஏழாம் லூயி ஒரு சிற்றரசராகவே காணப்பட்டார்.

நிலமானிய முறை ஃப்ரான்சில் ஆதிக்கஞ் செலுத்தியதுபோல இங்கிலாந்தில் செலுத்த முடியவில்லை; வேறெந்த நாட்டிலுமே அதற்கு அவ்வளவு ஆதிக்கமில்லை. ஃப்ரெஞ்சு நாடு பல பெரிய மானியங்களாய்ப் பிரிந்திருந்தது. நார்மண்டி, பர்கண்டி, ஃப்ளான் டர்ஸ், பார்சிலோனா என்னும் கோட்டங்கள் பெயரளவிலேதான் ஃப்ரெஞ்சு மன்னரின் ஆதிக்கத்திலிருந்தன; உண்மையில் அவை தனித்தனி சிறு இராச்சியங்களாகவே இருந்தன. கோட்டங்களி லிருந்த மக்கள் கோட்டத் தலைவர்களுக்கே குடிமக்களாயிருந்தார் கள். புதிய ஐரோப்பிய முடியரசுகளில் ஃப்ரெஞ்சு முடியரசே வலிவற்றிருந்தது. ஆனால், நகரங்களும் நடுத்தர வகுப்பினரும்- வணிகர்கள், வழிப்போக்கர், வேளாண் மக்கள் முதலிய யாவரும்- நிலக்கிழார்களின் அளவிறந்த செயல்களைக் கண்டு அஞ்சி, அவற் றைத் தடுக்க அரசரை ஆதரிக்க முன்வந்தனர். அவர்களது உதவியைக் கொண்டே பிரபுக்களை அடக்கி அரசருடைய ஆட்சி வலுக்கவேண்டியிருந்தது. திருச்சபையும் இந்த வகையில் அரசரை ஆதரித்தது. நிலமானிய முறையின் திய விளைவுகளிலிருந்து இங்கிலாந்து எளிதாகவும் விரைவாகவும் விடுபட்டது போல், ஃப்ரான்ஸ் விடுபட முடியவில்லை.

## ஃபிலிப் அகஸ்டஸ் (1180—1223)

வேறெந்த மன்னரைக் காட்டிலும் இவருக்கு இடைக்கால ஃப்ரான்ஸ் மிகவும் கடமைப்பட்டிருந்தது. பல போர்களில் ஈடு பட்டுத் தன்னாதிக்கத்திலிருந்த நாட்டை இருமடங்கிற்கு மேலும் விரிவு படுத்தினார். ஆங்கில அரசன் ஜானைப் பொவைன்ஸ்

(Bowvines) போர்க்களத்தில் தோற்கடித்து, நார்மண்டி, ஆக்விடைன், ஆஞ்சோ, மெயின் முதலிய ஃப்ரெஞ்சுப் பகுதிகளை வென்ருர். நிலமானியதார்களில் ஒருவராயிருந்த அகஸ்டஸ், ஏனைய மானியதார்களை ஒடுக்கும் அளவிற்கு ஆற்றல் உடைய வரானுர். நாட்டின் பரப்புப் பெருகியதற்கேற்ப ஆட்சியமைப்பும் விரிவடைந்தது மாகாணங்களில் பெயிலி (Bailli) என்ற அரச அதிகாரிகள் பொருள் திரட்டியும், நீதி வழங்கியும் அரச ஆதிக்கத்தை நிலை நாட்டினுர்கள். ஆட்சியில் பிரபுக்கள் வகித்த பதவிகளில் இடைத்தர வகுப்பினர் அமர்த்தப்பட்டார்கள். அகஸ்டசிடமிருந்து பல நகரங்கள் உரிமைப் பத்திரங்கள் பெற்றன. அரசனுக்குச் சொந்தமான நிலப் பெருக்கத்தால் கிடைத்த அதிக வருவாயும், நிலமானிய முறையில் உடல் ஊழியத்திற்குப் பதிலாகப் பொருளாய்க் கொடுத்தல் என்ற ஏற்பாட்டால் வந்த வருமானமும் சேர்ந்து கருவூலம் நிரம்பிற்று, அவ்வப்போது திரட்டப் பெற்ற நிலமானியப் படைக்குப் பதிலாக அரசரே வீரர்களைப் பொறுக்கிச் சேர்த்து ஊதியமளித்து ஒரு நிரந்தரப் படையை வைத்திருந்தார். குருமார்களிடமிருந்தும், யூதர்களிட மிருந்தும் பொருள் திரட்டப்பட்டது. அகஸ்டஸ் காலத்தில் ஃப்ரான்ஸ் ஒரே நாடாய் உருப் பெற்றது; அரசுரிமையும் அவர் குடும்பத்தில் நிலைத்தது.

அகஸ்டஸ் பாரிசு நகருக்கு நடை பாதைத் தளங்களையும் நகரைச் சுற்றி அலங்கங்களையும் கட்டித் தந்தார். கட்டுக் கால்வாய்களும், மருத்துவமனைகளும் கட்டப் பெற்றன. பாரிஸ் பல்கலைக் கழகத்திற்கு உரிமைப் பத்திரம் வழங்கி ஆதரித்தார். நாடர்டேம் (Notre Dame) என்ற திருக்கோயிலையும் பாரிசில் எழுப்பினுர். அவருடைய ஆட்சிக்குப் பிறகு நாட்டின் தலை நகராயிருக்கும் தகுதி பாரிசு நகருக்கன்றி வேறெந்த நகருக்கும் இல்லை.

தன்னுதிக்கத்திலிருந்த நாட்டை வலுப்படுத்த வேண்டிய நேரத்தில், அகஸ்டசின் மகன் எட்டாம் லூயி, மூன்ருண்டு ஆட்சி யில், தன் மகன் ஒவ்வொருவனுக்கும் நாட்டின் ஒரு பகுதியையும் அதன் வருவாயையும் பகிர்ந்தளித்தார்.

## ஒன்பதாம் லூயி 1226—1270

சிறுவனுயிருந்ததால் இவன் தாய் பத்தாண்டுகள் ஆட்சியி லமர்ந்து மானியதார்களை அடக்கி, அரச ஆதிக்கத்தை வளர்ந்தாள். தாயிடம் பயின்ற மன்னன் சிறந்த கிறித்துவ மன்னராய்த்

திகழ்ந்தார்; பகட்டான ஆடையையும் இன்ப வாழ்வையும் வெறுத்தார். சமயக் கொள்கையில் ஊறிய மன்னன், வாய்ப்புக்களிருந்தும், அயல் நாடுகளைக் கைப்பற்ற மறுத்தார். பேரரசருக்கும் போப்பிற்கும் இருந்த பகையைக் கண்டு வருந்தியவர் அவர்களிடையே நட்புறவை ஏற்படுத்த முயன்றார். நீதி வழங்குவதில் அவருக்கேற்பட்ட புகழ் அவரை ஐரோப்பாவிற்கே நடுநிலை தீர்ப்பாளராக்கிற்று. அவருடைய சீரிய பண்பினைப் பாராட்டித் திருச்சபை தன் திருத்தொண்டர் குழாத்தில் அவரை ஒருவராய்ச் சேர்த்துக் கொண்டது.

சமயத்துறையில் சிறந்து விளங்கியது போல், ஆட்சித் துறையிலும் லூயி சிறந்து விளங்கினார். அரச அவையை மூன்றாய்ப் பிரித்து நிருவாகம், நீதி, கருவூலம் என்ற மூன்று துறைகளையும் அவற்றிடம் ஒப்படைத்தார். இவ்வாறு பிரிக்கப்பட்டதால் ஆட்சி செம்மையாய் நடைபெற்றது. வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள் சண்டையிட்டு வழக்கிற்குத் தீர்வு காணும்முறை (Irial by duel)யைத் தடுத்தார். கடுமையான சட்டங்களால் கள்ள நாணயம் தயாரிப்பதைத் தடுத்து, நாடு முழுவதிலும் ஒரே அரச நாணயம் வழங்கச் செய்தார். பெயிலி என்ற அதிகாரிகளிடமிருந்து நாணயமாய்த் தம் கடமைகளை நிறை வேற்றுவோம் என்ற வாக்குறுதிகளைப் பெற்று மன்னருக்கும் மக்களுக்கும் உண்மையும் உறுதியுமான ஊழியர்களாயிருக்குமாறு அவர்கள் பணிக்கப்பட்டார்கள். ஃப்ரான்சின் உயர்நீதி மன்றமாய்த் திகழ்ந்த பார்லிமெண்டு நிலமானிய அமைப்பை ஒழித்து, முடியாட்சியை ஈடிணையற்ற உன்னத நிலைக்கு உயர்த்தியது.

லூயி சமயப் பற்றுளராகவும், திருச்சபைப் பாதுகாவலராகவும் இருந்தும், குருமார்களால் அரச உரிமைகள் பறிக்கப்படாமல் பார்த்துக் கொண்டார். குருமார்களில் ஒரு பிரிவினரை நாட்டுச் சட்டத்திற்குக் கட்டுப்படுத்தியதன்றி மேற்றிராணியார்களின் நீதித்துறை அதிகாரத்தையும் மட்டுப் படுத்தினார். திருச்சபையிலிருந்து அரசுக்கு வரவேண்டிய வரிப்பணத்தை வசூலிப்பதில் கண்டிப்பாயிருந்தார். இரந்து வாழும் துறவிகளை அரசாங்கத் தூதுவர்களாய்ப் பயன்படுத்தினார்.

லூயி உருவாக்கிய ஆட்சிப் பொறியைப் பயன்படுத்தி அவருடைய பெயரன் நான்காம் ஃபிலிப் நாட்டில் வல்லாட்சியை ஏற்படுத்தினார்; பாட்டனார் மதித்துப் பெருமைப் படுத்திய போப் பாட்சியைத் தாழ்த்தினார். நிலமானிய பிரபுக்கள் பலர் ஒன்று சேர்ந்து லூயியை எதிர்த்துப் போராடித் தோல்வி அடைந்தனர்;

அத் தோல்வியில் நிலமானிய அமைப்பே தோல்வியுற்றது. இரு முறை சிலுவைப் போர்களில் ஈடுபட்டு லூயி தோற்றுப் போனர். முரண் சமயத்தினராகிய அல்பிஜென்சியரோடு போராடித் தோற்கடித்து ஃப்ரான்சின் தென் பகுதியைத் தன்னுதிக்கத்திற்குட் படுத்தினர். லூயி ஆண்ட அரசு நெதர்லாண்ட்சிலிருந்து பிரன்னீஸ் மலைவரை பரந்திருந்தது. அவருடைய இளவல் சார்லசு, சிசிலி, நேபிள்ஸ் நாடுகளின் மன்னரானர். முரண் சமயத்தினரை ஒறுக்கச் சமயத்துறை சார்ந்த உயர்நீதி மன்ற (Inquisition) த்தை நாட்டில் நிறுவியது அவரது ஆட்சியில் ஏற்பட்ட ஒரு களங்கமாகும்.

## மூன்ரும் ஃபிலிப் (1270—85)

ஸ்பானிஷ் மன்னர்களோடு போரிட்டு வெற்றி பெற்ருர்; கலகஞ் செய்த மானியதார்களைக் கடுமையாய்த் தண்டித்தார்.

## நான்காம் ஃபிலிப் (1285—1314)

இவர் ஆட்சியில் ஃப்ரான்ஸ் ஐரோப்பாவில் முதன்மையான நாடாய் விளங்கிற்று. பேரரசர்கள் வலிவற்றவர்களாய் இருந்த தால் கிழக்கெல்லையில் பேரரசினைத் தாக்கிச் சில பகுதிகளைக் கைப் பற்றினர். போப்பாட்சியோடு போராடியபோது 1302-ல் ஃபிலிப் தேசீய அவையைக் கூட்டி மக்கள் ஆதரவைப் பெற்ருர். போப்பு ஐந்தாம் கிளெமெண்டின் இசைவோடு வீரத்தொண்டர் (Templars)களின் பொருளைக் கவர்ந்தார். போப்புகள் இவர் காலத்தில் உரோம் நகரிலிருந்து புறப்பட்டு ஃப்ரான்சில் அவிஃக்நன் என்ற ஊரில் தங்கி வாழ்ந்தார்கள்.

அரச ஆதிக்கத்தை வலுப்படுத்த குருமார்களுக்கு வரி விதித் தார்; மேற்றிராணியார்மீது குற்றஞ்சாட்டி அரச நீதிமன்றத்தில் அவ்வழக்கை விசாரிக்கத் தொடங்கினர். இவற்றை எதிர்த்த போப்பாட்சியோடு போராட வேண்டியதாயிற்று. அப் போராட் டத்தில் ஃப்ரெஞ்சு குருமார்கள் அரசனை ஆதரித்தார்கள். தன்னை அரச பதவியிலிருந்து நீக்க முயன்ற போப்பை, அரசன் சிறைப்பிடித்து திருச்சபைப் பேரவை முன் நிறுத்திப் பதவியி லிருந்து இறக்கத் திட்டமிட்டார். அவர் செத்தபின் 1305-ல் ஃபிலிப்பின் ஆதரவுபெற்ற கிளெமெண்டு போப்பாகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். அடுத்த 70 ஆண்டுகளுக்குப் போப்பாட்சி அவிஃக்நனில் ஃப்ரெஞ்சு ஆதிக்கத்திலிருந்தது.

கட்டாயக் கடன், உதவிப் பணம், சொத்துப் பறிமுதல், அயல் நாட்டு வணிகர்மீது வரி விதிப்பு, யூதர்களின் பணத்தைப் பறித்தல்

முதலிய பல வழிகளிலும் வருவாயைப் பெருக்கியும் கருவூலம் நிரம்பவில்லை. ஆட்சியில் தனக்கு உதவச் சில அமைச்சர்களை அமர்த்திக்கொண்டார். அவருக்குப் பின் அவருடைய மூன்று மக்கள் ஒருவர் பின் ஒருவராய் 1328 வரை ஆட்சி செய்தனர். அவருக்கு அடங்கியிருந்த பிரபுக்கள் அவர் மக்கள் ஆட்சியில் தங்கள் உரிமைகளைத் திரும்பப் பெற்றுர்கள். மூன்று அரசர்களும் ஆண் வாரிசின்றி இறந்ததால், அவர்களின் நெருங்கிய உறவினரு கிய ஃபிலிப்வலாய் அரியணையேறி வலாய் (Valois) பரம்பரை யைத் தொடங்கினுர்.

கி.பி. 987-ல் ஹியூகாபெட் (Hugh Capet) அரசு கட்டிலேறிய போது ஃபிரான்சின் சிறுபகுதியே அவர் ஆட்சிக்குட்பட்டிருந்தது. மூன்று நூற்றுண்டுகளில் நாட்டின் பெரும் பகுதி நான்காம் ஃபிலிப்பின் ஆட்சியின்கீழ் வந்தது. ஆயினும் நூருண்டுப் போருக்குப் பின்னரே நாடு முற்றிலும் ஓர் ஆட்சி ஏற்பட்டது.

# அதிகாரம் 9

## போப்பாட்சியின் வளர்ச்சி; அபெலார்டு

இடைக்காலத் திருச்சபை வளர்ச்சியையும், அரசிற்கும் அதற்கும் இருந்த உறவினையும் அறிவதற்குக் கி. பி. 600 முதல் கி.பி. 1000 வரையிலுள்ள காலத்தை ஆய்வதே சிறந்த முறையாகும். இந்த நூற்றுண்டுகளில், அதாவது பெரியார் கிரெகரி முதல் இரண்டாம் ஸில்வெஸ்டர் காலம் வரை, போப்பாட்சியில் பல திடுக்கிடும் மாறுபாடுகளைக் காணலாம். அது சில காலம் கிரேக்கப் பேரரசிற்கும், வேறு காலங்களில் மேலைப் பேரரசிற்கும், மற்றக் காலங்களில் இத்தாலிய உயர்குடி மக்களுக்கும் உட்பட்டிருந்தது. ஆயினும், எட்டாம், ஒன்பதாம் நூற்றுண்டுகளில் ஆற்றல் மிக்க போப்புகள் வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் தங்கள் ஆதிக்கத்தை வளர்க்கத் தவறவில்லை.

கிரேக்கப் பேரரசர்களின் ஆதிக்கத்திலிருந்து போப்புகளை விடுவித்தவர்கள் லம்பார்டுகளே. ஆனுல், அதற்காக அவர்களுக்குப் போப்புகள் நன்றியுடையவர்களாயில்லை. கான்ஸ்டான்டிநோப்பிள் தலைமைக் கிறித்துவர் குரு (Patriarch) கிரேக்கப் பேரரசருக்கு அடங்கியிருக்க இசைந்தார்; மற்றுப் போப்பின் ஆதிக்கத்தை யேற்க மறுத்தார். அப் பேரரசின் ஆதிக்கத்திலிருந்து விடுபட விரும்பிய துறவிகள் போப்புகளோடு ஐக்கியமானுர்கள். லம்பார்டுகளின் ஆதிக்கத்தைக் கண்டு அஞ்சிய போப்புகள் கரோலிங்கியப் பேரரசின் நட்பை நாடினுர்கள். அவர்களுக்குள் ஏற்பட்ட உடன்பாட்டின் விளைவாகவே தூய உரோமானியப் பேரரசு தோன்றியது. போப்பும் கரோலிங்கியப் பேரரசரும் ஒருவருக்கொருவர் துணையாய் இருந்ததால், அவர்களுள் நல்லுறவு நிலவியது. கரோலிங்கிய அரச மரபு நலிவுற்றதும், அதைப் பயன்படுத்திப் போப்பாட்சியின் ஆதிக்கம் வளரலுற்றது. ஒன்பதாம் நூற்றுண்டின் பிற் பகுதியில், இதுவரை

காணுத உச்சநிலைக்குப் போப்பாட்சியை முதலாம் நிக்கொலஸ் உயர்த்தினுர். இத்தாலியில் பொதுவாய் ஆட்சி குலைந்த நிலை யேற்பட்டதால், உரோமனிய உயர்குடி மக்கள் ஆதிக்கத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள். பத்தாம் நூற்றுண்டில் அவர்கள் போப்பாட்சியையும் தங்களாதிக்கத்திற்குள் கொண்டு வந்தார் கள். இது போப்பாட்சிக்குப் பெருங்கேடு விளைவித்தது. போப் பாட்சியையும், திருச்சபையையும் நிலமானிய உயர்குடி மக்களின் ஆதிக்கத்திலிருந்து காப்பாற்றச் சீர்திருத்த இயக்கம் ஒன்று பதினேராம் நூற்றுண்டில் வளர்ந்தது. இது நிற்க.

இத்தாலியில் சிறிது சிறிதாக லம்பார்டு ஆட்சியும் ஆதிக்கமும் விரிவடைந்து வளர்ந்தன; அந்த அளவு பைசான்டைன் ஆதிக்கம் குறைந்தது. இவ்விரண்டையும் பயன்படுத்திக் கொண்டு, போப் பாட்சி மேலும் தன்னுதிக்கத்தை வளர்த்துக்கொண்டதை மேலே கண்டோம். சமயக் கொள்கையில் எட்டாம் நூற்றுண்டில் ஒரு கருத்து மாறுபாடு ஏற்பட்டுக் கிறித்துவ உலகத்தையே பிளவு படுத்தியது. அக் காலக் கிறித்துவ மக்கள் உருவ வழிபாட்டில் மனத்தைப் பறி கொடுத்து ஆன்மிகச் சமயத்தை அறவே மறந்து வாழலானுர்கள். இதைக் கண்ட பேரரசர் மூன்ரும் லியோ கி. பி. 726-ல் உருவப் படங்களையும் உருவச் சிலைகளையும் உடைத் தெறியுமாறு ஆணை பிறப்பித்தார். கிறித்துவச் சமயத்தில் இத் தகைய சீர்திருத்த இயக்கம் வளர்வதற்குக் காரணம், உருவ வழி பாட்டினைக் கண்டித்த மகம்மதிய சமயக் கொள்கையானது பக்கத்து நாடுகளில் பரவியதேயாகும். லியோவின் ஆணையைக் கடுமையாய் எதிர்த்த மேலை ஐரோப்பா, அதனைக் கடவுள் மறுப்பு உத்தரவாகவே கருதியது. போப்பின் தலைமையின் கீழிருந்த இத்தாலியத் திருச்சபை, 'சிலையுடைப்பவர் எவராயினும், அவர் தெய்வத்தைப் பழித்துச் சமயத்தை மறுப்பவராகவே கருதப்படு வார்,' என அறிவித்தது. உரோமானியத் திருச்சபையின் எதிர்ப் பின் பயனுய்க் கி. பி. 787-ல் பேரரசியார் ஐரீன் (Irene) சிலையுடைப்புக் கொள்கையைக் கைவிட்டார்.

ஆனுல், இச் சீர்திருத்த முயற்சியின் விளைவாய்ப் போப்பாட்சி யின்மேல் பைசான்டியத்திற்கிருந்த ஆதிக்கம் முடிவுற்றது. தெய் வத்தைப் பழித்த பேரரசருக்குக் கிறித்துவ மக்கள், குடிமக்க ளாய்க் கட்டுப்பட்டிருக்கத் தேவையில்லை என்ற எண்ணம் பரவிற்று. தக்கார் ஒருவரைப் பேரரசராக்க மக்கள் விழைந் தார்கள். இனி, போப்பும் பிராங்கியருமே மேலை ஐரோப்பாவின் தலைமையை ஏற்க வேண்டும் என்ற முடிவுக்கும் வந்தார்கள். கான் ஸ்டான்டி நோப்பிளுக்கும் உரோமாபுரிக்கும் இருந்த தொடர்பு அற்றுப் போயிற்று.

பிரான்சில் முஸ்லிம்களை முறியடித்துக் கிறித்துவச் சமயத்தையும் நாகரிகத்தையும் காப்பாற்றினார் சார்லஸ் மார்ட்டெல் என்ற மொரோவிங்கிய மேயர். அவர் மைந்தர் பிப்பினுக்குக் கி. பி. 751–ல் போப்பு முடி சூட்டினார். பிப்பினும், அவர் மைந்தர் ஷார்லேமேனும் எவ்வாறு லம்பார்டுகளை ஒடுக்கி இத்தாலியை மீட்டனர் என்பதை முன்னர் அறிந்தோம். கி. பி. 800–ல் ஷார்லேமேன் பேரரசராக முடி சூட்டப்பட்டார். இனி, மேலை ஐரோப்பாவில் பைசான்டிய ஆதிக்கமில்லையென்பது முடிவாயிற்று, உலகில் திருச்சபைகள், உரோம் நகரில் ஒன்று, கான்ஸ்டான்டிநோப்பிளில் மற்றொன்று என்பதும் தெளிவாயிற்று. இரு பேரரசுகளேற்பட்டு ஐரோப்பிய ஒற்றுமை குலைந்தது போல, இரு திருச்சபைகள் தோன்றித் தனித்தியங்கியதால் அவற்றுக்குள் சமயக் கோட்பாட்டு வகையிலும் மாறுபாடு வளர்ந்தது. கிறித்துவ உலகம் இரு கூறாயிற்று.

முதலாம் நிக்கொலஸ் (Nicholas-I) போப்பாட்சியின் செல்வாக்கைப் பல வழியிலும் அதிகரித்தார். இரண்டாம் லோத்தேர் விரும்பிய மணவிலக்கை யளிக்க மறுத்தார். இடைக்காலத்தில் போப்பாட்சியின் ஆதிக்கத்திற்குப் பெருஞ்சோதனையாயிருந்த ஒன்று மண விலக்கே. மண விலக்குகளால் வாரிசுப் போட்டிகளும் மரபுப் போர்களும் விளைந்தன. அவற்றால் நாட்டமைதி குலைந்தது. ஆகவே, மண விலக்களிப்பதில் திருச்சபை மிகுந்த கருத்தும் கவலையும் கொள்ள வேண்டுமெனப் போப்பு எண்ணியது சரியே. மண விலக்கு வகையில் எட்டாம் ஹென்றியின் ஆட்சியில் ஆங்கிலத் திருச்சபை இழந்த ஆதிக்கத்தை எட்டாம் எட்வர்டு காலத்தில் மீட்டுக்கொண்டது. கிழக்குப் பேரரசர் போப்பு நிக்கொலசைக் கலந்தே கான்ஸ்டான்டிநோப்பிள் தலைமைக் குருவை அமர்த்த விரும்பினார். அவர் தலைமைக் குரு ஒருவரை ஒருதலை முடிவாய் நீக்கிவிட்டதால் கிழக்குப் பேரரசரைச் சமயத்திலிருந்து போப்பு விலக்கினார். பேரரசர் மூன்றும் மைக்கேலுக்குப் போப்பு நிக்கொலஸ் எழுதிய கடிதமொன்றில், தம் இருவருக்கும் இருக்க வேண்டிய தொடர்பை விளக்கியுள்ளார். அரசர்கள் குருமார்களாயிருந்த காலமும், பேரரசர்கள் திருச்சபைத் தந்தைகளாய் இருந்த காலமும் மறைந்துவிட்டன. அவ்விரு பணிகளையும் கிறித்துவம் வேறாக்கிவிட்டது. 'நிலைத்த வானுலக வாழ்விற்காக, கிறித்துவப் பேரரசர்களுக்குப் போப்புகள் தேவைப்படுகிறார்கள். ஆனால், சமயஞ்சாராதவற்றினை நீக்கிவிடில், போப்புகளுக்குப் பேரரசர்கள் தேவைப்படமாட்டார்கள்,' என்று போப்பு நிக்கொலஸ் தம் கருத்தைத் தெரிவித்தார். அரசர்கள்பால் தம் ஆதிக்கத்தை நிலை நிறுத்தியதுபோல, திருச்

சபை அதிகாரிகளேயும் அவர் தம் அதிகாரத்திற்கு உட்படுத்தினர். மேற்றிராணியார்களும் அதிமேற்றிராணியார்களும் போப்பின் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வரப்பட்டார்கள். தங்கள் திருச்சபை வாழ்வே போப்பைப் பொறுத்திருந்ததென அவர்கள் எண்ணுமாறு நிலை மாறியது. போப்பின் ஆதிக்கத்தை எந்தெந்த வகையில் நிறுவலாமோ அந்தந்தத் துறைகளில் ஒன்றைக்கூட நிக்கொலஸ் தவறவிட்டு விடவில்லை.

போப்பு நிக்கொலசிற்குப் பிறகு போப்பின் பதவியும் நிலையும் மிகமிகத் தாழ்ந்துவிட்டன. பத்தாம் நூற்றுண்டில் போப்புகள் உரோமானியப் பிரபுக்களின் ஆதிக்கத்தின்கீழ் வந்தார்கள். போப்புகளைத் தேர்ந்தெடுக்கத் திட்டவட்டமான விதி முறைகள் வகுக்கப்படாததால், பொது மக்கள் ஆர்ப்பரிப்பாலும், பேரரசர் அருள் நோக்காலும் உரோம் நகரப் பெருமக்களின் அன்பளிப்பாலுமே போப்புகள் அந்நிலைக்கு உயர்த்தப்பட்டார்கள். இத்தாலியில் சாரசேனியர்கள் புகுந்து நேப்பிள்ஸிற்கருகில் நிலைத்தும், மான்டிகாசினேப் போன்ற மடங்களை அழித்தும், பிரோவென்ஸ் (Provence) கரையிற்குடியேறி, அங்கிருந்து ஆல்பைன் பள்ளத்தாக்குகளைத் தாக்கி, உரோம் நகரிலிருந்து வடக்கு நோக்கிச் சென்ற போக்குவரவைத் தடுத்தும், நாட்டில் குழப்பம் விளைவித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஆதிக்கத்தில் இத்தாலி சிக்காதபடி கிழக்குப் பேரரசு கி.பி 915-ல் தடுத்தது ஆயினும், உரோம் நகரில் ஆதிக்கஞ் செலுத்தும் ஆற்றல் அதற்கில்லை.

உரோமானிய உயர்குடி யொன்றிலிருந்து வழிவழியாகப் போப்புகள் சிலர் ஆட்சிக்கு வந்தனர். உரோமானிய மக்களில் வலிமை மிக்கவர் ஒரு செனட்டு அவை உறுப்பினர் (Theophylact) ஆவார். அவர் மனைவியாரும் மைந்தரும் சில காலம் போப்புகளைத் தம் இச்சை போல ஆக்கி ஆட்டிப்படைத்தனர். மேலும், அந்தச் செனட்டு உறுப்பினர் மகளாரான மரோஸியா (Marozia) என்பவர், அவரைப் போன்று ஆற்றல் மிக்கவர். அன்னருக்கு ஒருவர் பின் ஒருவராகக் கணவர் பலரும் எண்ணற்ற காதலரும் இருந்தனர். அந்த உயர்குடி நங்கையார், அக்காலப் போப்பைச் (John-X) சிறைப்படுத்திய பின், தம் காதலருள் ஒருவரை (Sergius-II : 904-11) அப் பதவிக்கு உயர்த்தினர். அவர்கள் மைந்தர் (John-XI : 931-36 பிறகு போப்பானர்; அதன் பின்னர் அம்மங்கையார் பேரர் (John-XII: 955-64) பதினாரும் வயதில் திருச்சபையின் தந்தையாரானர். அவர் தம் ஒழுக்கக் கேடான வாழ்க்கைக்கும் வெறியாட்டங்களுக்கும் தம்முடைய லாட்டெரன்

(Lateran) அரண்மனையைக் காட்சிக்களமாக்கி, போப்பாட்சியின் இழிவை நிறைவாக்கினர். 'போப்பு ஜோன்' என்று ஒரு பெண்ணின் பெயர் தாங்கிய கட்டுக்கதைக்கு அடிப்படை ஒரு போப்பின் காதலியும், மற்றொரு போப்பின் தாயும், வேறொரு போப்பின் பாட்டியுமாயிருந்த மேலேகுறிப்பிட்ட சீமாட்டியாராய் (Marozia) இருக்கலாம். இவ்வாறு போப்புகள் மதிப்பெல்லாமிழந்து, மாசு படிந்து, பழிப்பிற்குரியவர்களானார்கள்.

தூய பால் (St. Paul) காலம் முதலே, கி.பி. 1000-ம் ஆண்டில் உலகம் அழிந்துவிடும் எனக் கிறித்தவர்கள் நம்பி வந்தார்கள். மேற்கு ஐரோப்பியப் பண்பாடு அந்த ஆண்டு வரையில் மிக மிகத் தாழ்ந்து பின்னர் மேல் நோக்கி உயர்வதைக் காணலாம். மடத்துத் துறவிகளல்லாத ஏனைய சமயக் குருமார் எல்லோரும் சமயப் பற்றற்று, உலகியல் பற்றும் ஒழுக்கக்கேடும் நிறைந்தவரா யிருந்தனர். திருச்சபையின் ஏராளமான செல்வமும் அவர்களை மேலும் கெடுத்தது. இந்த அவல 'நிலையில் திருச்சபையையும் போப்பாட்சியையும் திருத்தவும், அவற்றைப் பெரிய ஒழுக்கச் சத்தியாக உயர்த்தவும், சீர்திருத்தக்காரர்கள் தோன்றினார்கள்.

இனி, போப்பாட்சியின் சமயம் சாரா (Temporal) அதிகார வளர்ச்சியை ஆய்வோம்: இடைக்காலத்தில் கத்தோலிக்கத் திருச்சபைக்கு ஏராளமான நிலப்பரப்புகள் சொந்தமாயிருந்தன. அந்த நிலங்களில் வாழ்ந்த மக்களிடமிருந்து வரிகள் வசூலித்தநும் நீதி மன்றங்களில் அவருக்கு நீதி வழங்கியும், சமயச் சட்டங்களை நிறைவேற்றியும் திருச்சபை ஆட்சி புரிந்தது. பள்ளிகளும் மருத்துவச்சாலைகளும் நிறுவப்பட்டு, தெய்வப் பணியோடு மக்கள் பணியும் நடைபெற்றது. திருச்சபைப் பள்ளிகளில் சில, பின்னர்ப் பல்கலைக்கழகங்களாய் வளர்ந்தன. வேறு அறப்பணிகளிலும் சமய அதிகாரிகள் ஈடுபட்டார்கள். மக்கள் வாழ்வில், திருச்சபை தொடர்பு கொள்ளாத துறையொன்றுமில்லை.

உரோம் நகருக்கும் திருச்சபை நிலங்களுக்கும் மட்டும் அரசரா யிருந்த போப்பு, முதல் கரோலிங்கிய மன்னர் பிப்பின் அவர்களின் கொடையினல் (Donation of Pepin) லம்பார்டி இராச்சியத்தின் மூன்றில் ஒரு பகுதிக்கும் மன்னரானார். ஆட்சித்துறையில் போப்பின் உரிமைக்கு ஆதாரமாயிருந்தது. இப்போப்பின் நாடே (Papal State) கி.பி. 755இலிருந்து போப்புக்கள் சமயத் துறை யிலும் அரசியல் துறையிலும் ஆதிக்கம் பெற்றார்கள். அவர்கள் கிழக்குப் பேரரசரின் ஆதிக்கத்திலிருந்து விடுபடுவதன் இறுதிக் கட்டமாய்ப் பேரரசர் ஷார்லேமேனின் முடிசூட்டு விழாவைக்

கொள்ளலாம். ஒருவர் பின் ஒருவராய் ஜெர்மானிய மன்னர் நால்வருக்கு முடி சூட்டிப் போப்புத் தம்முரிமையை நிலை நாட்டிக் கொண்டார். பேரரசர் பதவியையும் பட்டத்தையும் ஒருவருக்கு வழங்கும் தனியுரிமை போப்பிற்கே உரியது என்னும் வழக்காறு ஏற்பட்டுவிட்டது.

போப்பின் உரிமைகளை முறைப்படுத்தி விளக்கியும் அவற்றுக்கு ஆக்கம் தேடியும், போப்பாட்சியை நிறுவி நிலைபெறச் செய்தவர்களின் வரிசையில் முதலாம் லியோ, முதல் மூன்று கிரெகரிகள், முதலாம், நிக்கொலஸ் என்பவர்கள் தலைசிறந்தவர்கள். போப்புகளின் அரசியற் செல்வாக்கு அந்தப் பதவிக்கே ஒரு சிறப்பை அளித்தது. போப்பின் அரசியல் ஆதிக்கத்தின் சமயத்துறைத் தலைமை மறைந்துவிட்டது.

பன்னிரண்டாம் போப்பு ஜான், கி.பி. 962-ல் உரோம் நகருக்கு ஜெர்மன் அரசர் முதலாம் ஆட்டோவை வரவழைத்துப் பேரரசராக முடி சூட்டினார். அவருக்குத் தம் பகைவரை அடக்குவதில் முதலாம் ஆட்டோவின் உதவி தேவையாயிருந்தது. ஆனால், பேரரசருக்கு எதிராகப் போப்புச்சதி செய்யத் தொடங்கியதும், முதலாம் ஆட்டோ உரோம் நகருக்கு வந்து திருக்கூட்டத்தைக் கூட்டிப் போப்பைப் பதவியிலிருந்து இறக்கினார். 'பேரரசர் இசைவைப் பெறாது போப்புகளை அமர்த்தமாட்டோம்,' என உரோமானியர்களிடம் முதலாம் ஆட்டோ வாக்குறுதி பெற்றுத் திரும்பினார். அவர் தம் நாடு திரும்பியதும், உரோமானிய மக்கள் தங்கள் இச்சை போலப் போப்புகளை நீக்கியும் அமர்த்தியும் வரலானார்கள். ஆட்டோவும் அடிக்கடி இத்தாலி வந்து தம் ஆள்களைப் போப்பாக்கிச் சென்றார். இந்நிகழ்ச்சிகளிலிருந்து அறியக்கிடப்பது யாதெனில், திருச்சபைத் திருத்தந்தையார், ஜெர்மானிய அரசரின் கீழ் ஒரு மானியதார்; ஆனால், மேலாண்மைக்குக் கீழ்படியாத மானியதாராயிருந்தார். உரோம் ஜெர்மனியிலிருந்து தொலைவிலிருந்தது தான் இதற்குக் காரணம்.

போப்பும் பேரரசரும் இணைந்து கிறித்துவ உலகத்தை உரோம் நகரிலிருந்து ஆட்சி புரிவதென்று மூன்றும் ஆட்டோ திட்டமிட்டார். அரசியலாதிக்கமும் சமயத்துறைத் தலைமையும் முறையே அவரிடமும் அவருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு போப்பிடமும் இருப்பின், கிறித்துவ உலக ஆட்சி வலிமை பெற்று, அதற்கிருந்த இடையூறுகளைச் சமாளித்து, பகைவர்களை அடக்கி, ஆன்மிகப் பணியிலும் சமுதாய முன்னேற்றத்திலும் இறங்கலாமென்பதே அத் திட்டத்தின் முடிந்த கருத்தாகும். இரண்

டாம் ஸில்வெஸ்டர் (Sylvester-II) என்னும் ஆன்றமைந்த ஓர் அறிஞரைப் போப்பாக அமர்த்தி, அவர் அரண்மனைக்கு அருகிலேயே வேறோர் ஆடம்பரமான அரண்மனையில் மூன்றும் ஆட்டோ உரோம் நகரில் குடியேறினர். அவர் ஜெர்மனியிலிருந்து வெளியேறி இத்தாலிக்கு வந்ததன் நோக்கம், உரோம் நகரை மீண்டும் உலகத்தின் மையமாக்குவதேயாகும். கிறித்துவ முடியரசுகள் சேர்ந்த கூட்டமைப்பின் தலைமை, திருப்பீடத்திற்கு (Holy see) வர வேண்டுமென இரண்டாம் ஸில்வெஸ்டர் எண்ணினர். ஆனால், அவர் கனவு நனவாகவில்லை. உரோமானியர்கள் கிளர்ந்து எழுந்ததால், மூன்றும் ஆட்டோ உரோம் நகரை விட்டு வெளியேறினர். அதன் பின்னர் இரண்டு உயர்குடிக் குடும்பங்கள் போட்டியிட்டு, போப்பின் பதவியைப் பகிர்ந்து வந்தன. ஒரு காலத்தில் மூன்று போப்புகள் அப் பதவியிலமர்ந்திருந்த காட்சி, கட்சிப்பூசல்களால் உருவாகியதே. ஆகவே, ஜெர்மன் பேரரசர்கள் போப்புகளுடன் நட்பு முறையில் பழகும் கரோலிங்கிய வழக்கத்தைக் கைவிட்டனர். போப்பின் உதவியை நாடாது, மேற்றிராணியார்களின் துணையுடன் அவர்கள் ஆண்டு வரலானர்கள். உரோமானியக் குருமார்கள், மறைந்து வந்த போப்பாட்சியின் பெருமையைப்பற்றிக் கவலை கொள்ளவில்லை. அதைத் திரும்பக் கொண்டு வர, வெளியுலகமே முனைந்து முன் வந்தது.

பதினோராம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சீர்திருத்தத்தில் கருத்தைச் செலுத்திய போப்புகள், திருச்சபை ஊழல்கள் பலவற்றையும் திருத்த முயன்றனர்கள். சீர்திருத்தங்களில் போப்பாட்சியைப் பொறுத்த வரை முதன்மையானது போப்பைத் தேர்ந்தெடுக்கும் முறையில் ஏற்பட்ட மாற்றமே. இனிப் பேரரசரோ, உரோம் நகர உயர்குடிக் குடும்பங்களோ, போப்பை அமர்த்தலும் அவர் பெயரைக் குறிப்பிடலும் கூடா எனக் கி.பி. 1059-ல் போப்பு இரண்டாம் நிக்கொலஸ் ஆணை பிறப்பித்தார். உரோமானிய மேற்றிராணியார்கள், குருமார்கள், டீக்கன்கள் (Deacons) யாவரும் இடம் பெற்ற கார்டினல்களின் குழுவினால் (College of Cardinals) போப்புத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என அவர் விதி செய்தார். இத் தேர்வு முறை, தகுதி பெற்றவர்கள் பதவி பெறுவதற்கும், வெளியுலகத் தலையீட்டிலிருந்து விடுபெற்றுப் போப்புகள் உரிமையோடு சமயப் பணியாற்றுவதற்கும் வழி வகுத்தது.

பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் பதின் மூன்றுவது நூற்றாண்டு வரை, போப்பாட்சியின் ஆதிக்க வளர்ச்சி உச்சநிலையடைந்திருந்தது. உரோமானியப் பேரரசின் வாரிசாய்

விளங்கிய திருச்சபை, இடைக்காலத்தில் சிறந்த அறிஞர்களையும் ஊழியர்களையும் பணியாளர்களாய்க் கொண்டு சிறந்த அமைப்பினைப் பெற்ற வலி மிக்க ஒரு நிறுவனமாயிற்று. அது பேரவாவினருக்கு வாழ்வும் அறிவுத் துறையில் ஆர்வமுள்ளவர்களுக்கு ஒய்வும் தனிமையும் தந்த நிறுவனமாகும். போர்த்தொழில் ஒன்றினைத் தவிர, வாழ்க்கைத் தொழில்கள் பலவற்றிலும் திருச்சபைத் தொண்டர்களே காணப்பட்டார்கள். மருத்துவம், கல்வித்துறைகள், அறத்துறையமைப்பு, சட்டத்துறை, இலக்கியத்துறை இவற்றில் எந்த ஒன்றில் ஒருவருக்கு ஆர்வமிருப்பினும் அவர் கோயிற் குரு ஆகிவிடவேண்டும். பயிற்சியும் தகுதியும் பெற்ற குருமார்கள் கிறித்துவ உலகில் ஆட்சிப் பீடங்களில் அமர்ந்து அரும்பணியாற்றினார்கள்; அரசியல் அமைப்புகளை உருவாக்கினார்கள்; சட்டம் செய்தார்கள்; போர் தொடுத்தார்கள்; அமைதி கண்டார்கள். இடைக்கால ஐரோப்பாவின் தலைவராய்த் திருச்சபைத் தந்தையார் திகழ்ந்தார்.

## குளூனியச் சீர்திருத்தம்

கிறித்துவத்தை ஏற்ற ஐரோப்பாவின் பகுதி, கிறித்துவ உலகு (Christendom) என்ற பெயருடன் இடைக்கால வரலாற்றில் இடம் பெற்றுள்ளது. போலண்டும் ஹங்கேரியும் பத்தாம் நூற்றாண்டினிறுதியில் கிறித்துவச் சமூகத்தில் சேர்ந்தன. ஸ்காண்டிநேவியர்கள் கன்யூட்டுத் தலைமையில் கி.பி. 1027-ல் போப் பாதிக்கத்தின் கீழ் வந்தார்கள். வடக்கில் ஃபின்னியரும் (Fins) லாப் மக்களும் (Laps), பிரஷியர்களும் (Prussians), லித்துவேனியர்களும் (Lithuvanians) மட்டுமே கிறித்துவச் சமயத்தைத் தழுவாதிருந்தனர். ஐரோப்பாவில் கிறித்துவம் பரவியது பெரும்பாலும் ஆர்வமிக்க கிறித்துவத் திருத்தொண்டர்களின் அரிய தனி முயற்சியினாலன்றி, போப்புகளின் திட்டமிட்ட சமயப் பணியினாலென்று சொல்வதற்கில்லை. போப்புகள் விதைக்காமலே, நல்ல அறுவடை செய்தார்கள்.

பெனிடிக்டைன் மடங்களில் வாழ்ந்த துறவிகள் மக்களுக்கு முன் மாதிரியாக வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் திருமணத்தை மேற்கொள்ளாது, வறுமை வாழ்வையேற்று, நல்ல கட்டுப்பாட்டுடன் மடத்துத் தலைவருக்குக் கீழ்ப்படிந்து ஒழுகி வந்தார்கள். அவர்கள் புலவர்களாகவோ, சமயத்தைப் பரப்பும் தொண்டர்களாகவோ இருக்கவேண்டுமென பெனிடிக்டு விரும்பவில்லை; ஆனால், சமயத் தொண்டில் அவர்களைப் போப்புகள் ஈடுபடுத்தினார்கள். உலகிலிருந்து முற்றிலும் விலகிவிடாமல், சமுதாயத்

திற்கு அவர்கள் மிகப் பயன்பட்டார்கள். மடாலய வாழ்வு கிறித்துவ இலட்சிய வாழ்வெனக் கருதப்பட்டது. பல்வேறு காரணங்களால் இந்த இலட்சிய வாழ்வு பத்தாவது நூற்றுண்டில் பழிப்பிற்கிடமாயிற்று.

கிறித்துவப் பற்றுள்ளவர்களின் கொடையினுல் திருச்சபைக்கு ஏராளமான செல்வமும் நிலமும் வந்து சேர்ந்தன. இவற்றைக் கட்டிக் காத்த திருச்சபை அதிகாரிகள் குறைவற்ற வாழ்வில் திளைத்திருந்தார்கள். பெருமானியங்களைப் பெற்றிருந்த மேற்றிராணியார்களோ, சிற்றரசர்கள் போல ஆங்காங்கு ஆட்சிப் பீடத்திலமர்ந்தார்கள். வருமானத்திற்காக இத்தகைய மேற்றிராசனங்களை வாங்குவதும் விற்பதும் பெருவழக்காகி வந்தன. அரசர்களும் மானியதார்களும் பெரும்பொருள் பெற்றுக்கொண்டு, பொருள் அளித்தவர்களை மேற்றிராணியார்களாக அமர்த்தத் தொடங்கினுர்கள். மேற்றிராணியார்களும் அவர்கள் ஆதிக்கத்திலிருந்த பதவிகளைப் பொருளுக்காகவே அளிக்கலானுர்கள். இவ்வாறு வெளிப்படையாகக் கையாளப் பெற்று வந்த தவருன முறையினை, சைமனி (Simony) என்று குறிப்பிட்டார்கள். தகுதியற்றவர்கள், பொருள் படைத்தவர்கள், சமயப்பற்றில்லாதவர்கள் திருச்சபைப் பதவிகளில் அமர்ந்தார்கள். மேலும், சமய அதிகாரிகள் அரசியலதிகாரிகளுக்கு அடங்கி நடக்கவேண்டியதாயிற்று. திருச்சபை அதிகாரிகள் மானியதார்களாகி, நிலமானிய அமைப்பின்கீழ் வந்தார்கள். பொருள் கொடுத்துப் பதவியை விலைக்கு வாங்கியவர்கள், அப் பொருளைத் திரும்பப் பெறுவதில் கண்ணுங் கருத்துமாயிருந்ததால், அவர்கள் ஆன்மீக வாழ்வினைவிட உலகியல் வாழ்வில் அதிக ஆர்வம் காட்டினுர்கள்.

துறவிகள், 'நிறையுடையவர்களாயிருப்போம்,' என உறுதி பூண்டிருந்தார்கள். அவர்கள் திருமணம் செய்துகொள்ள முடியாது. ஆனுல், திருச்சபை பணியாற்றிய குருமார்களுக்கு மணத்தடை திட்டவட்டமாய் விதிக்கப்படவில்லை. பதினேராவது நூற்ருண்டில் கோயில் குருமார்களில் பெரும்பாலார் மணம் செய்துகொண்டிருந்தனர். அவர்களின் துணைவிகளைக் காமக்கிழத்திகளெனவே தூய்மையாளர்கள் கருதினுர்கள். மேற்றிராணியார், 'ஒருத்திக்குக் கணவராயிருந்து, குற்றங்கூட இடந் தாராமல் வாழ வேண்டும்,' என்ற தூய பால் அவர்கள் அறிவிப்பை எடுத்தியம்பி, திருமணத் தடைக்கு ஆதாரமில்லையென்று சிலர் விளக்கினர், சைமனியைப் போல இதில் ஒன்றும் ஒழுக்கப் பிரச்சினை இல்லை. எனினும், அரசியல் உள்ளெண்ணத்தோடு குருமார்கள் திருமணஞ் செய்து கொள்வதைத் தடுத்து வந்தார்கள். மண வாழ்க்கையினை

மேற்கொண்ட குருமார்கள், திருச்சபைச் சொத்தையும் பொருளை யும் தங்களுடைய மக்களுக்கு விட்டுச் செல்ல விரும்பினார்கள். அவர்களுடைய மக்கள் குருமார்களாகிவிட்டால் அவ்வாறு செய் வதில் சட்டப்படி யாதொரு தடையுமில்லை. ஆகவே, மரபுவழிச் சொத்துரிமை செல்லாதவாறு குருமார்களுடைய மக்கள் குருமார் களாய்த் தீக்கை (Cardination) பெறுவதைத் தடுத்தனர். மணஞ் செய்துகொண்ட குருமார்களுக்கும் இல்லறத்தார்களுக்கும் வேறு பாடில்லையாதலால், அவர்கள் சமுதாயத்தில் தனி மதிப்புப் பெற வில்லை; ஆனால், நிறையுடையவர்கள் பெரிதும் மதிக்கப்பட் டார்கள். குருமார்களுடைய ஆதிக்கமும் செல்வாக்கும் அந்தச் சமுதாய மதிப்பைப் பொறுத்திருந்தன. மேலும், மணம் முடித் துக்கொண்ட நிலை தீவினையாகாதெனினும், நிறையுடைமை சிற் றின்பத்தைக் கடந்த நிலையாகையால், அஃது ஒரு சிறந்த நிலை யெனச் சீர்திருத்தக் கட்சியார்கள் கருதினார்கள். திருச்சபைப் பணிக்கு நிறையுடையவர்களே தகுதி பெற்றவர்கள்; 'உண்மைச் சமயத் தொண்டனால் புலன்களையடக்கி வாழ முடியும்,' என்று தூய பால் தம் கருத்தை வெளியிட்டுள்ளார், திருச்சபை குரு மார்கள் உலகினருக்கு ஒழுக்கத்தைக் கற்பிக்க வேண்டுமானால், புலனடக்க வாழ்வு அவர்களுக்கு இன்றியமையாதது என்று முடிவு செய்யப்பட்டது.

இனி, சீர்திருத்த இயக்க வரலாற்றினைக் காண்போம்: கி. பி. 910-ல் பர்கண்டியில் குளூனி (Cluny) என்னும் இடத்தில் அக்விட் டெயின் கோமகனார் வில்லியம் என்ற தெய்வ அன்பர் ஒரு மடத்தை நிறுவினார். அந்த மடம் தொடக்கத்திலிருந்தே போப்பைத் தவிர வேறு எந்த உலகியலதிகாரிக்கும் கட்டுப்படாது உரிமையோடு இயங்கியது. மானிய நிலத்திற்காகக் குளூனி மடம் அரசுக்கு எவ்வித ஊழியமும் செய்யத் தேவையில்லாமலிருந்தது. குளூனி மடத்திலிருந்து கிளைத்த ஏனைய மடங்கள் அந்த மடத்துத் தலைவரின் ஆதிக்கத்திலிருந்தன. பண்டைய மடங்களுட் பல அந்தக் குளூனி மடத்துடன் ஆர்வத்தோடு இணைந்துகொண்டன. பொருளும் அதற்கு ஏராளமாய்ச் சேர்ந்தது. குளூனி மடம் சமயப் பற்றுக்கும் அதன் கட்டுப்பாட்டுக்கும் கல்விக்கும் எடுத்துக் காட் டாய் விளங்கிற்று. அங்கிருந்து துறவிகள் புது மடங்களை நிறுவ வும் பழைய மடங்களைத் திருத்தவும் சென்றார்கள். 'சைமனி' போன்ற தவறுகளையும் ஊழல்களையும் கண்டித்துக் களைய ஒரு சீர்திருத்த இயக்கம் குளூனி மடத்திலிருந்து ஐரோப்பாவில் பரவியது. அதற்குப் போப்புகளுள் பலர் பேராதரவு அளித்தனர்.

ஒரு புதிராண்டாயிருந்த கி. பி. 1000-க்கு முன் கிறித்துவச் சமயத்திற்குப் புத்தாக்கம் தருவதற்காக அமைக்கப்பட்ட பல

நிறுவனங்களுள்; ஒன்றேயொன்று ஐரோப்பாவில் பெருஞ்சிறப் பெய்தியது. அதுதான் குளூனியக்கு மடமாகும். முந்நூற்றுக்கு மேற்பட்ட துணை மடங்கள் சேர்ந்த குளூனியக்குத் திருக்கூட்டம், மேலை ஐரோப்பாவெங்கும் அரசியல் கிளர்ச்சி, சமயப் பேச்சுகள் வாயிலாக ஒழுக்கத்தைப் பரப்பி வந்தது. அரசியல் ஆதரவின்றி எந்தச் சீர்திருத்த இயக்கமும் வெற்றி பெறவியலாது. நிலைபெற்ற வழக்கங்களைக் கைவிடப் பெரும்பாலாரான மன்னர்கள் விரும்ப வில்லை. ஆனால், ஜெர்மன் பேரரசர் மூன்றும் ஹென்றி, குளூனியக்குக் கொள்கையை யேற்று, அதனைப் பின் பற்றவும் முன் வந்தார். அவர் குளூனியக்குத் துறவியார் (Leo-IX) ஒருவரைப் போப்பாக்கினர்; 'சைமனி' ஊழலை அகற்ற மனமிசைந்தார்; ஆனால், சமயத் துறையாதிக்கத்தை விட்டுவிட ஒருப்படவில்லை. குளூனியக்கு இயக்கத்தார் ஒரு சீர்திருத்தத் திட்டத்தை மக்கள் முன் வைத்தார்கள். எவ்வித உலகியற் கட்டுப்பாடுமின்றிப் போப்பாட்சி நடைபெற வேண்டும். சமயக் குருமார்களெல்லாம் போப்பாட்சியின்கீழ்ப் பணி புரிய வேண்டும். அவர்களுக்கு வேறு மேலாண்மையிலிருத்தலாகாது. குருமார்கள் மணஞ்செய்து கொள்வதைத் தடுத்து, குடும்பக் கவலைகளினின்று அவர்களை விடுவிக்க வேண்டும். 'சைமனி'யையும் ஆட்சியாளர் பதவிச் சின்னமளித்தலையும் சீர்திருத்தக்காரர்கள் ஒழிக்க விரும்பினர்கள். பேரரசர்களின் கட்டுப்பாட்டிலிருந்து திருச்சபையையும், மானிய தார்களின் ஆதிக்கத்திலிருந்து மேற்றிராணியார்களையும் குருமார் களையும் விடுவித்தலே, அந்தத் திட்டத்தின் முடிவான நோக்க மாகும். சமயக் குருமார் எல்லாரும் மடத்துத் துறவிகள் போல மணம் செய்துகொள்ளாது கட்டுப்பாட்டுடன் எளிமையாய் வாழ வேண்டுமென்று குளூனியக்குத் துறவிகள் கூறினர்கள். சமயத் துறையைப் பொறுத்த வரை குருமார்களின் கருத்தும் செயலும் இறுதியானவையெனக் கருதப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமென்றும் அவர்கள் விழைந்தார்கள். ஹில்டிபிராண்டு (Hildebrand) என்ற ஏழாம் கிரெகரி குளூனியக்குத் திட்டத்தைப் போப்பாட்சியின் திட்டமாக்கினர். கிறித்துவ உலகில் ஆன்மிக ஆதிக்கத்தோடு அரசியல் ஆதிக்கத்தையும் அந்தத் திட்டத்திலே போப்புக் கிரெகரி சேர்த்துக்கொண்டார்.

குளூனியக்கு மடங்களெல்லாம் குளூனி மடத் தலைவரின் தலைமையை ஏற்று, கூட்டாட்சி போல இயங்கின. மறைந்து வந்த தூய பெனிடிக்டின் மடத்துக் கொள்கைக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தது குளூனியக்கு மடம். தன் ஆதிக்கம் நிலவத் திருச்சபை செய்துகொள்ள இயலாததைக் குளூனியக்கு இயக்கம் செய்து முடித்தது. பல நூற்றுண்டுகள் வரை, மேலை ஐரோப்

பாவின் கிறித்துவச் சமயத்தின்மீது, குளூனி முத்திரையைக் காண்கிறோம். பதினோம் நூற்றாண்டில் பணியாற்றிய இயேசு சங்கத்தோடு (Society of Jesus) குளூனியக்கு மடத்தின் அமைப்பையும் அதன் பணியையும் ஒப்பிட்டு, பின்னதன் பெருமையை ஒருவாறு அறியலாம்.

'ஆன்மா வீடு பேறடைதலே வாழ்க்கையின் குறிக்கோள். திருச்சபை ஒன்றினுல் மட்டுமே அதனைச் சித்தியாக்க முடியும். ஆதலால், கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையிலே நின்று, லௌகிகர் தலையீடின்றித் திருச்சபை தன்னுடைய பணியைச் செய்ய வாய்ப்பிருக்க வேண்டும். திருச்சபையும் அரசாங்கமும் இணையத் தேவையில்லை. மனிதனும் சமுதாயமும் ஆன்மிகத் துறையில் திருச்சபைக்கு அடங்கியிருக்க வேண்டும்,' என்பதே குளூனியக்கு இயக்கத்தின் சித்தாந்தம். சமயத் துறையில் அதன் நோக்கம் துறவு; அரசியல் துறையில் அதன் குறிக்கோள் திருச்சபையின் விடுதலையாகும்.

குளூனியக்கு இயக்கம் ஃப்ரான்ஸ் நாடு முழுவதிலும் பரவி, பிறகு இத்தாலிக்குச் சென்று, அதன் பின்னர் ஃப்ளாண்டர்சுக்கும் எட்டி, பதினோராவது நூற்றாண்டின் தொடக்கத்தில், ஜெர்மனியை அடைந்தது. எங்கெல்லாம் அதன் துறவிகள் சென்று மடங்களை நிறுவினார்களோ, அங்கெல்லாம் சமயப் பற்று வளர்ந்தது. திருச்சபையின் மதிப்பு உயர்ந்தது. பண்பாளர்களெல்லாம் புதிய இயக்கத்தில் மனத்தைப் பறிகொடுத்து, பத்தர்களாய் மாறி, அதன் குறிக்கோளை நிறைவேற்றும் பணியாளர்களானார்கள். சமய ஆர்வம் காரணமாகப் பெருங்கோயில்கள் கட்டப்பட்டன கோயிற் கட்டடக்கலை மிகச் சிறப்பாய் உருவாயிற்று. பன்னிரண்டாம் நூற்றாண்டில் தூய பெர்னார்டு (St. Bernard) பகட்டான கோயில் கட்டடங்களைச் சமயச் செருக்கின் அடையாளமெனக் கண்டித்தார். மடாலயக் கொள்கை புத்துயிர் பெறுவதற்குக் காரணமாயமைந்த உணர்ச்சியின் சிறந்த சான்றாய், அப் பெரியார் விளங்கினார். புதிய பகுத்தறிவியக்கத்தை அவர் எதிர்த்தார்.

உலக மக்களுக்குப் பணிபுரிந்த திருச்சபைத் தொண்டர்களை, கோயிற்குருமார்கள், டீக்கன்கள், மேற்றிராணியார்கள் என்றும், மடத்தில் சேர்ந்து முறையாகத் துறவு பூண்டொழுகியவர்களைச் (Regular) சமய குரவர்களாகவும் பாகுபாடு செய்திருந்தார்கள். அன்றாட உலகியலுக்கப்பால் தனிச்சமூகமாய் வாழ்ந்த துறவிகள், பெனிடிக்டைன், குளூனியக்கு இயக்கங்களிலும், வேறு பல துறவுக் குழுக்களிலும் (Monastic Orders) சேர்ந்து சமயப் பணி

யாற்றினார்கள். அவர்கள் திரிதுறவிகளும் (Friars) ஆனார்கள். பெனிடிக்டின் காலத்திலிருந்தே துறவியர் குழுக்கள் திருச்சபையின் வரலாற்றில் பெரும்பங்கு கொண்டன. குளூனியக்கு இயக்கத்தைத் தொடர்ந்து பதினோராம் நூற்றாண்டில் பலவகையான மடங்கள் தோன்றி வரலாயின. கி.பி. 1084-ல் கார்த்தூசியர்களும் (Carthucians), 1098-ல் சிஸ்டர்ஷியன்களும் (Cistercians) சமயப் பணியில் ஈடுபட முனைந்தெழுந்தார்கள். உயர்குடி மகனார் பெர்னார்டு என்பவர் 1113-ல் சிஸ்டர்ஷியன் வகுப்பில் சேர்ந்து, அந்தக் குழுவிற்குப் பெருமை தேடித் தந்தார். 'படிக்கவும் எழுதவும் கற்றுக்கொள்ளக்கூடாது,' என அத் துறவியர் குழுவிற்கு ஆணை பிறந்தது. உழவுத் தொழிலும், கட்டடத் தொழிலுமே அவர்கள் சிறப்பாய் மேற்கொண்டவை. அழகிய கட்டடக் கலையைக் கண்டித்த துறவியர் கூட்டம், பின்னர்ப் பல அழகிய மடங்கள் கட்டியிருப்பதை இங்கிலாந்தில் எங்கும் காணலாம். கார்த்தூசியர்கள் தனிமையில் வாழ்வதையும் 'சும்மா இரு'த்தலையும் பெரிதும் விரும்பிச் சமயத்துறையில் அவற்றைப் புகுத்தினார்கள்.

சிலுவைப் போர்கள் காரணமாய்ச் சில புதிய துறவுக் குழுவினர் தோன்றினர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் டியூட்டானிக்கு நைட்டுகளும் (Teutonic Knights) வீர சமயத் தொண்டர்களும் (Knights Templars) ஆவார்கள். புனித நாடாகிய பாலஸ்தீனத்தில் போர்ப்பணி செய்த டியூட்டானிக்கு வீரர்கள் கிழக்குப் பால்டிக்குக் கடற்பகுதிக்கு 1230-ல் சென்றார்கள். அப் பகுதி பின்னர் பிரஷியாவாயிற்று. அங்குள்ள மக்களை டியூட்டானிக்கு நைட்டுகள் வற்புறுத்திக் கிறித்துவர்களாக்கினார்கள். இயேசுவின் வாழ்வோடு தொடர்புகொண்ட இடங்களை முஸ்லிம்களாதிக்கத்திலிருந்து விடுவித்தல், சிலுவைப் போர்களில் கலந்துகொண்டு துன்புற்றவர்களுக்கு மருத்துவ உதவிசெய்தல் போன்ற தொண்டினைச் செய்யத் தொடங்கப்பட்டதே சிலுவைப் போர் தொண்டர் குழாம் ஆகும். சமயத் தொண்டிற்காக வீர அடிப்படையில் நிறுவப்பட்ட மடங்களும் சங்கங்களும் இடைக்காலத்தில் நற்பணி புரிந்தன.

## திரிதுறவிகள்

பன்னிரண்டாம் நூற்றாண்டில் மடத்துக் கொள்கை, எதிர்ப்பு மறுப்பின்றி வளர்ந்து சமயப் பணி புரிந்தது. பதின்மூன்றாம் நூற்றாண்டில் இக் கொள்கைக்கு அறைகூவல் போன்று, ஒரு புதிய குறிக்கோள் திருச்சபைக்குள்ளேயே உருவாயிற்று. இப் புதிய

குறிக்கோளை நிறைவேற்றத் திரிதுறவிகள் (Friars) பணியாற்ற முன் வந்தார்கள். மடத்தில் வாழ்ந்த துறவிகளைப்போல நிறையுடனும் கட்டுப்பாடுடனும் திரிதுறவிகளும் வாழ்ந்தார்கள். ஆனால், அவர்கள் நோக்கமும் முறையும் மாறுபட்டன. தூய்மை கெடாமலிருக்க, உலகியல் கறைபடாதவாறு மடங்களின் நான்கு சுவர்களுக்குள்ளே ஒதுங்கி வாழ்ந்தார்கள். அக் காலத்தில் துறவிகள், திரிதுறவிகளோவெனில், ஓரிடத்தில் நிலையாயில்லாமல், நாடெங்கும், நாளுக்கோரிடமாய், மக்களிடையில், சிறப்பாய் ஒழுக்கக் குறையுடையோரிடையில் இருந்து, கலந்துறவாடினார்கள்; தங்கள் சொந்த ஆன்மிக நலத்திற்கும் முத்திக்கும் பாடுபட்டார்கள் மடத்துத் துறவிகள்; மக்கள் நலத்திற்கும் சமுதாய முன்னேற்றத்திற்கும் உழைத்தார்கள் திரிதுறவிகள். அக் கூட்டங்கள் தனிப்பட்ட முறையில் அமைப்பு வகையிலும் பொருளை வெறுத்து ஒதுக்கி வாழ்ந்தன.

கால உணர்ச்சியே திரிதுறவிகளைத் தோற்றுவித்தது. முஸ்லிம்களிடமிருந்து புனிதக் கல்லறையை (Holy Sepulchre) மீட்க வீரத் தொண்டர் குழுவினர் தேவைப்பட்டனர். அதே போல மக்களிடையில் காணப்பட்ட சமயப் பற்றின்மை, சமய மறுப்புப் போன்ற குறைபாடுகளோடு போரிட முன் வந்தவர்களே திரிதுறவிகள். பன்னிரண்டாம் நூற்றாண்டில் அபெலார்டும் (Abelard, 1079–1142), ஆர்னல்டும் (Arnold of Brescia) இடைக்கால இறையியலின் அடிப்படைக் கருத்துகள் சிலவற்றைக் கண்டித்து எழுதினார்கள். விவிலிய நூலிற்கு (Scriptures)ப் புறம்பானவற்றைத் தவறில்லாதன (Infallible) என்று சொல்வதை அபெலார்டு ஏற்க மறுத்தார். இயேசுவின் மாணவர்களும் (Apostles) திருச்சபைத் தந்தைகளும் (Fathers) கூடத் தவறிழைக்கலாம் என்றும் அவர் கருதினார். அபெலார்டு ஒரு புரட்சிகரமான சிந்தனையாளர். அவர், 'காரணங்காட்டி, வாதிட்டுப் பின்பு நம்ப வேண்டுமேயன்றி, நம்பிய பின் வழக்காடுவதில் பயனில்லை,' என்றார். 'குருமார்கள் சமயப் பணியிலே மூழ்கிக் கிடக்க வேண்டுமேயன்றி வேறு உலகியல் காரியங்களில் தொடர்பு கொள்ளலாகாது,' என்றார் ஆர்னல்டு. குருமார்கள் பொருளோ நிலமோ வைத்திருந்தால், வீடுபேறு பெற முடியாது என்பது அவர் துணிபு. இது போன்ற இடைக்காலச் சமய அறிஞர்கள் (Schoolmen) தங்கள் புலமைக் கொள்கை (Scholasticism) வாயிலாகத் திருச்சபைக்கு ஓர் எதிர்ப்பை உருவாக்கிக்கொண்டிருந்தார்கள். மடாலய வளர்ச்சியோடு அறிவும் ஆராய்ச்சியும் வளர்ந்தன. நம்பிக்கையோடு பகுத்தறிவும் போட்டியிட்டுப் போராடியது. தென்ஃப்ரான்சில்—குறிப்பாய் ஆல்பி (Albi) என்ற நகரில்—முரண் சமய

(Albigensian heresy)க் கருத்துகள் வலியுற்று வந்தன. அந்தச் சமய மறுப்புக் கொள்கையினரை எதிர்த்து ஒரு சமயப் போர் தொடுத்து, கி.பி. 1208-ல் அவர்கள் நாட்டையே அழிக்கப் போப்பு மூன்றும் இன்னொசண்டினிடமிருந்து ஆணை பிறந்தது. இந்தச் சூழ்நிலையிலே திரிதுறவிகள் தோன்றி, முரண் சமயக் கருத்துகளோடு போராடினார்கள்.

திருச்சபைக்குப் பதினொரும் நூற்றாண்டில் ஏற்பட்ட எதிர்ப்பில் எந்த வகையிலும் குறைவில்லாத எதிர்ப்புப் பதின்மூன்றும் நூற்றாண்டில் ஏற்பட்டன. திரிதுறவிகள் தங்களுடைய சீரிய மக்கள் தொண்டினால் அந்த நெருக்கடியான காலத்தில் திருச்சபைக்கு ஆக்கந்தேடித் தந்தார்கள். மக்கட்பணி வாயிலாகத் தெய்வத் தொண்டு புரிந்த அத் துறவிகள், தன்னலம் கருதாத தகைமையுடையவர்கள்; வறுமையையே அணியாகப் பூண்டு இரந்து உயிர் வாழ்ந்தார்கள். ஆதலால், அவர்களை இரந்து திரிந்த துறவியர் கூட்டம் (Mendicant Orders) என மக்கள் பாராட்டினார்கள். நாடுதோறும் துறவிகள் சென்று அந்தந்த நாட்டு மொழியிலே பாமர மக்களுக்குச் சமய அறிவையும் ஒழுக்க நெறியையும் புகட்டி வந்தார்கள். திரிதுறவியர் இரு குழுவினராய்க் காணப்பட்டனர். அவர்கள் அணிந்திருந்த அடையின் வண்ணத்தைக்கொண்டு, சாம்பல் நிற ஆடையணிந்த துறவிகள், (Grey Friars) கருமை நிற அங்கியணிந்த துறவிகள் (Black Friars) என அவர்கள் வழங்கப்பட்டார்கள். மேலை ஐரோப்பியப் பட்டணங்களிலும் தென் ஐரோப்பிய வட்டாரங்களிலும் நாடோடி துறவியர் பரவி ஒழுக்கத்தில் தாழ்ந்தவர்களை உயர்த்தினர்; சமயக் கருத்துகளில் ஐயுற்றோருக்கு உறுதியூட்டினர்; ஏழை யெளியவருக்கு அன்புமுகங்காட்டி ஆறுதலளித்து, இன்பங்கூட்டினர். திரிதுறவிகள் கூட்டம் ஒரு புதிய ஆக்கச் சத்தியாய் விளங்கியது. போப்பு ஏழாம் கிரெகரிக்குக் குளூனியக்கு இயக்கம் பேருதவி புரிந்ததுபோல, போப்பு மூன்றும் அலெக்ஸாண்டருக்குச் சிஸ்டர்ஷியன் இயக்கம் துணை செய்ததுபோல, போப்பு மூன்றும் இன்னோசென்டு (Innocent-III)க்கும், அவருக்குப் பின்னர்ப் பதவியேற்ற போப்புகளுக்கும், ஃப்ரான்சிஸ்கன் (Franciscan) டாமினிக்கன் (Dominican) குழுவினர் பணி செய்து கிடந்தனர். பேரரசருடன் நிகழ்ந்த போராட்டத்தில் அவர்கள் போப்பாட்சிக்குப் பக்கபலமாயிருந்தார்கள்.

திருச்சபை மேடையில் ஆற்றிய திருவுரைகளும் (Sermons) வழிபாடும் இலத்தீன் மொழியில் நிகழ்த்தப்பட்டதால், பாமர மக்களுக்குச் சமயக் கருத்து விளக்கமோ, சமயத்தில் தெளிந்த

அறிவோ ஏற்பட வாய்ப்பில்லாமல் போய்விட்டது. சமய அறிஞருட் சிலர் அன்றைய கிறித்துவக் கொள்கைகளைக் கண்டித்து, தூய்மையான உண்மைக் கிறித்துவத்தை விளக்கியெழுதி, மக்கள் மனத்தைக் கவர்ந்தார்கள். இச் சூழ்நிலையில் தூய ஃப்ரான்சிஸும், தூய டாமினிக்கும் தோன்றிக் கிறித்துவத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தார்கள்.

## தூய ஃப்ரான்சிஸ் (St. Francis of Assisi)—1181-1226

ஃப்ரான்சிஸ் அன்பே வடிவான, அருள் உள்ளம் படைத்த பெரியார்; இத்தாலியின் இடைப்பகுதியில் அசிசி (Assisi) நகரில் ஒரு செல்வ வணிகருக்கு மகனாராய்த் தோன்றினார். அவர் இளம் பருவத்தில் நவ நாகரிக இன்ப வாழ்வில் திளைத்தார்; வாணிகத் தொழிலை வெறுத்துப் போர்வீரரானார். அவர் போரில் பிடிபட்டு, சிறையில் கடுநோயினால் துன்புற்று, வீடு திரும்பினார். அது முதல் அவர் முற்றிலும் மாறிவிட்டார். ஒரு நாள் அவர் குதிரை இவர்ந்து சென்று கொண்டிருந்தபோது ஒரு தொழுநோயாளியைக் (leper) கண்டார்; இரக்கமேலிட்டு, குதிரையிலிருந்து குதித்து, அந்தப் பெருநோயாளியைத் தழுவி முத்தமிட்டார். ஃப்ரான்சிஸ், புத்த பெருமானைப்போல, உலகியலின்பத்தையெல்லாம் துறந்து, மக்கட் பணிக்குத் தம்மை ஆளாக்கிக்கொண்டார். கிறித்துவச் சமய நூலில் இயேசு தம்முடைய சீடர்களுக்கு அருளியவற்றை (Mathew-X: 7-10) அப்படியே தம்முடைய வாழ்க்கைக் குறிக்கோளாகவும், தம்முடைய இயக்கத்தின் வேலைத் திட்டமாகவும் கொண்டார். 'நோயாளிகளைக் குணப்படுத்து; தொழுநோயினரைத் துப்புரவு செய்; மேற்சட்டை ஒன்றுக்குமேல் வைத்துக்கொள்ளாதே; பயணத்திற்குச் சிறு மூட்டையும் வேண்டா; பணப்பையில் பித்தளைக் காசும் சேர்க்காதே,' என்ற அருள் மொழிகளால் அவர் ஈர்க்கப்பட்டு, தெய்வப்பணியாம் மக்கட்பணியில் உந்தப்பட்டார். வெறுங்காலோடு நடந்துசென்று, கிறித்துவ உண்மைகளை மக்களுக்குத் தெரிவித்து, இரந்துண்டு வாழ்ந்தார். அவரும் அவர் சீடர்களும் பேசிய வண்ணம் வாழ்க்கை நடத்தியதையும் தங்களுக்கு உண்மையான ஊழியஞ் செய்ததையும் கண்ட மக்கள், அவர்களுடைய அறிவுரைகளைக் கேட்டுப் பெருந்திரளாய்க் கூடினார்கள். கிறித்துவச் சமய ஆர்வம் மக்களிடையே பன்மடங்காய்ப் பெருகிற்று. ஃப்ரான்சிஸ் கிறித்துவச் சமய வீரப்பாணராய் (Troubadour of Christianity) நாட்டில் உலவி வந்தார்.

எளிமை நோன்பென்னும் வேடம் புனைந்த மடத்துத் துறவிகளைப்போலல்லாது அவருடைய சீடர்கள் உண்மையாகவே எளிய

வாழ்வினை மேற்கொண்டிருந்த காரணத்தால், அவர்கள் சமய மறுப்பாளர்களோ (Heretics) என்ற ஐயத்திற்காளானார்கள். தம்மையும் தம்முடைய சீடர்களையும் இளைய சகோதரர்கள் (Friars Minor) அல்லது அசிசி நகர எளியவர் (Poor men of Assisi) என அறிமுகஞ் செய்துகொண்டார். பெண்களும் அவருடைய குழுவில் சேர்ந்து உழைக்க முன் வந்தார்கள். கி. பி. 1209-ல் ஃப்ரான்சிஸ்கன் துறவியர் சங்கம் ஏற்பட்டது. ஆதியில் அதற்கு அமைப்பொன்றுமில்லை. ஃப்ரான்சிஸ்கன்கள் (Grey Friars) சாம்பல் நிற ஆடையணிந்திருந்தார்கள்.

தூய்மை, தெய்வப்பற்று, மக்களன்பு இவற்றின் வடிவாகவே ஃப்ரான்சிஸ் மக்களிடையில் நடமாடினார். ஏழைகள், நோயாளிகள், விலங்குகள், பறவைகளுங்கூட அவருடைய் அன்பிற்குப் பாத்திரமானார்கள். கி.பி. 1219-ல் அவர் கிழக்கே சென்று சுல்தான் முன்னிலையில் சமய விளக்கந் தந்து திரும்பினார். அவர் ஆயுட் காலத்திலேயே அவரைப் பின்பற்றியவர் தங்களுக்கென்று ஒரு கட்டடத்தைக் கட்டிக்கொண்டார்கள். இச் செயல் அவர் மனத்தைப் புண்படுத்தியது. எவ்வித முயற்சியுமின்றிப் பிறரிடம் பரிவு காட்டும் குணம் அவருக்கு இயற்கையாகவே அமைந்திருந்தது. அவர் எல்லோருக்கும் வேறுபாடின்றி அன்பை வாரி வழங்கினார்; இயற்கையான மகிழ்ச்சியைப் பெற்றிருந்த ஃப்ரான்சிஸ், துன்புற்றிருந்த மக்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினார்; எவ்வகை மக்களோடும் அவர்களுள் ஒருவராய்ப் பழகினார்.

அன்புருவப் பெரியாரும், அருள்மழை பொழிந்த வள்ளலுமான தூய ஃப்ரான்சிஸ் கண்ட ஃப்ரான்சிஸ்கன் குழுவின் பிற்கால வரலாறனது, சைத்தான் (Satan) இருப்பானாகில், அவன் கண்டு களி கூரும் வகையில், அமைந்துவிட்டது. ஃப்ரான்சிஸை யடுத்து அக் குழுவிற்குத் தலைமை தாங்கியவர் (Brother Elias) இன்ப வாழ்வில் திளைத்தார். அக் குழுவினரிடமிருந்து வறுமைக் குறிக்கோள் நீங்கியது. ஃகெல்ஃப்களுக்கும் (Guelfs) ஃகிப்பெலின்களுக்கும் (Gibbellines) இடையே நிகழ்ந்த கொடிய போர்களுக்குப் படை வீரர்களைச் சேர்க்கிற தொழிலைப் ஃப்ரான்சிஸ்கன்கள் மேற்கொண்டிருந்தார்கள். ஃப்ரான்சிஸ்கன்கள் பல நாடுகளில் உள்ள முரண் சமயத்தவர்களைத் தேடிப் பிடித்து அவர்களைக் குற்றவாளிகளாவென உசாவி அறிந்த பின் அவர்களை ஒறுத்தார்கள்: தூய ஃப்ரான்சிஸின் கொள்கையைக் கடைப் பிடித்தவர்கள் கிறித்துவக் கொள்கையை மறுத்தவர்களென அவர்கள்மேல் குற்றஞ்சாட்டி அவர்களை எரித்துவிட்டார்கள். தூய ஃப்ரான்சிஸ் நிறுவிய துறவுக் குழுவினர் செல்வர்களாகி,

தூய்மை கெட்டுவிட்ட நிலையில், நாட்டு மக்களுக்கு நற்பணிபுரிவ தற்குப் பதிலாகச் சுதந்திரச் சிந்தனையாளர்களையும், ஒழுக்கச் சீலர்களையும் துன்புறுத்தி வந்தார்கள்.

## தூய டாமினிக்கு (St Dominic)—1170-1221

தூய ஃப்ரான்சிஸும் தூய டாமினுக்கும் சமகாலத்தவர்கள். அவர்கள் நிறுவிய இரு துறவுக்கு குழுவினமும் பல வகையில் ஒத்திருந்தனர். டாமினுக்கு ஸ்பெயின் நாட்டில் தோன்றியவர்; லயோலா (Loyola)வைப் போல மிக்க வைதிகப் பற்றுள்ளவர். அவர் சீடர்களும் வறுமையணி பூண்டவர்களே தென் ஃப்ரான்சிஸ் ஆல்பிஜென்சீய சமய மறுப்பாளர்களோடு நடைபெற்ற சமயப் போரில், டாமினிக்குப் பங்கு கொண்டார். கி. பி. 1215-ல் டாமிக்கன் குழு நிறுவப்பட்டது. அவர்கள் கறுப்பு அங்கி அணிந்தார்கள் (Black Friars); முரண் சமயத்தார்களைத் தேடி ஒறுப்பதில் ஃப்ரான்சிஸ்கன்களை அவர்கள் மிஞ்சிவிட்டார்கள். உடல் உழைப்பு அவர்கள் வாழ்க்கைத் திட்டத்தில் இடம் பெற வில்லை; படிப்பதற்கு நீண்டநேரம் ஒதுக்கப்பட்டிருந்தது. முரண் சமயத்தாரோடு வாதிடக் கல்வியும் புலமையும் மிகத் தேவைப்பட்டன. அறிவுத் துறையில் அவர்கள் காட்டிய ஈடுபாடானது, சிறந்த மக்கள் தொண்டாய் மலர்ந்தது. தாமஸ் அக்வினஸ் (Thomas Aquinas) என்பவர், சிறந்த டாமினிக்கன் மெய்ப் பொருளறிஞராய் விளங்கினர். தூய ஃப்ரான்சிஸ் அறிவை வெறுத்த போதிலும், அவருடைய சீடருட்பலர் பெரிய மெய்ப் பொருளறிஞராய்த் திகழ்ந்தனர். அவர்களுட் குறிப்பிடத் தக்கவர், ரோஜர் பேக்கன் (Roger Bacon) ஆவார். இவ்வாறு இடைக் கால அறிஞர்களெல்லாம் இவ்விரண்டு குழுவினரைச் சேர்ந்தவர்களே.

இரந்து திரிந்த துறவிகளில் ஃப்ரசன்சிஸ்கன்களும் டாமினிக் கன்களும் முதன்மையானவர்கள்; அகஸ்டின்களும் (Augustins) கார்மெலைட்டுகளும் (Carmelites) குறிப்பிடத் தக்கவர்கள். பதின்மூன்றும் நூற்றுண்டினிறுதியில் அவர்களுடைய பணியினுலும் உதவியினுலும் திருச்சபை .வேறெந்தக் காலத்தையும்விட வலிமையுடையதாயிருந்தது; அன்றியும், பேரரசுடன் நிகழ்ந்த போராட்டத்தில், திருச்சபை முடிவான வெற்றி பெற்றுச் சிறந்த முறையுடனும் காணப்பட்டது.

# அதிகாரம் 10

## பேரரசு — போப்பாட்சிப் போராட்டம்

### பேரரசர் நான்காம் ஹென்றி ஹில்டிபிராண்டு

சமயத்திற்கும் படை வலிமைக்கும், திருச்சபைக்கும் நாட்டிற்கும், மறுமைக்கும் இம்மைக்கும் இடையே இருந்த உறவு முறையே ஐரோப்பிய வரலாறு முழுவதிலும் இழை போல ஓடிக்கொண்டிருக்கிறது. போப்பாட்சியும் பேரரசும் ஒன்றுக்கொன்று ஆதரவாயும் பேருதவி புரிந்தும் வந்துள்ளன. போப்பாட்சியை அதனுடைய இழிநிலையிலிருந்து பேரரசு காப்பாற்றியிருக்கிறது; ஜெர்மனியில் திருச்சபையதிகாரிகள் பேரரசின் நம்பகமான, திறமைமிக்க ஊழியர்களாய் இருந்திருக்கிறார்கள். போப்புக்களுக்குப் பாதுகாப்புத் தந்து வந்த பேரரசர்கள் அவர்களின் புரவலர்களாகும் நிலை எய்தவே, போப்பாட்சி பேரரசரின் தலைமையிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளவும், இயலுமானால் அத் தலைமை நிலையை எட்டிப் பிடிக்கவும் முயன்ற நிலையில் போராடியது. இவ்விரண்டுள் ஒன்று வலி மிகுந்திருந்த போது, மற்றொன்று அதைக் கண்டு அஞ்சவுமில்லை, பொறுமைப்படவுமில்லை. ஆனால், ஒன்றையொன்று மிஞ்சும் வலிமை பெறத் தொடங்கியதும், அவற்றுக்குள் போட்டியும் போராட்டமும் தொடங்கின.

பேரரசுக்கும் போப்பாட்சிக்கும் நிகழ்ந்த போராட்டத்தைப் பற்றி நன்கு அறிவதற்கு அவற்றுக்குள் பண்டை நாள் தொட்டு இருந்து வந்த தொடர்பும் உறவும் என்னவென்றும், அந்த இரு நிறுவனங்களைப் பற்றி நிலவி வந்த கருத்து யாதென்றும் தெரிந்து கொள்வது இன்றியமையாததாகிறது. திருச்சபையும் நாடும் எத்தகைய உறவு கொண்டிருக்க வேண்டுமென்பதைப் போப்பு ஃகெலேசியஸ் (Celasius) ஐந்தாம் நூற்றாண்டிலே வரையறுத்து விட்டார். அவையிரண்டும் கடவுளால் உலகிற்கு அளிக்கப்பட்டவை; தத்தம் எல்லைக்குள் வரம்பில்லாத அதிகார உரிமை பெற்

றவை. ஆதலால், நாடு, திருச்சபைத் தேர்தலில் தலையிடலாகாது, திருச்சபை மானியங்களையோ, அதன் ஊழியர்களையோ தன் மேலாண்மைக்குட்படுத்தக் கூடாது. இத்தகைய உறவு முறையே நிலவ வேண்டுமெனத் திட்டவட்டமாய் ஒரு சித்திரம் வாயிலாக எட்டாம் நூற்றுண்டினிறுதியில் போப்பு மூன்றும் லியோ (Leo-III) தெளிவாக்கினுர். போப்புகள் வாழ்ந்து வந்த லாட்டெரன் அரண்மனையில் தொடர் உருவகக் கதையின் விளக்கமாய்ப் பல வண்ண ஒவியமொன்று தீட்டப்பட்டுள்ள. தூய பீட்டர் (St. Peter) அரியணையில் அமர்ந்துள்ளார். அவருக்கு வலப்புறத்தில் சார்லஸூம் (ஸார்லேமேன்) இடப்புறத்தில் லியோவும் மண்டியிட்டு அவரிடமிருந்து உலகில் தங்களுக்குரிய அலுவல்களின் அடையாளங்களாக முறையே மேலாடையையும் (pallium), கொடியையும் (gonfalon) பெறுகிருர்கள். இச் சித்திரம் வாயிலாகப் போப்பு, பேரரசர் ஆகிய இருவரின் அதிகார வரம்பும் தெளிவாகவே தெரிவிக்கப்பட்டிருக்கிறது என்று திருச்சபையார் கருதினர்.

ஆனுல், ஆற்றல் மிக்க பேரரசர்கள் இக் கொள்கையை அப்படியே ஏற்றுக் கொள்ளவில்லை. இதை மறுப்பதும் எளிதாயில்லை. ஏனெனில், நாட்டினைப் பற்றி இக்காலத்தில் நிலவுகிற கருத்தோடு இது பெரிதும் ஒத்திருக்கிறது. கரோலிங்கியப் பேரரசின் இறுதிக் காலத்தில், சீர்திருத்தக்காரர்களும், அரசியலில் ஈடுபட்டிருந்த சமயத் தொண்டர்களும், ஃகெலேசியன் கொள்கையை நிறைவேற்றுவதைத் திட்டமாய்க் கொண்டிருந்தார்கள். குளுனியக்கு இயக்க மடங்கள், நாட்டின் மேலாண்மை, அதிலிருந்து விளைந்த பொறுப்புகள் ஆகிய இவை இரண்டிலிருந்தும் தப்புவதற்காக, போப்பின் தனிப்பாதுகாப்பை வேண்டிப் பெற்றன.

ஆற்றல் மிக்க சில போப்புகள் தங்கள் ஆற்றலை மேலும் மேலும் பெருக்கிக்கொள்ளவே விழைந்தார்கள். ஒழுக்கத்தில் தவறுகிறவர்களைச் சமயத்தினின்று விலக்கி (excommunication), சமயத் தொடர்பால் கிடைக்கும் நலங்களையும் காப்பினையும் அவர்கள் பெருதவாறு செய்துவிடும் வழக்கத்தைப் போப்புகள் ஏற்படுத்திக்கொண்டார்கள். அதனைப் பின்னர்த் தன் உரிமைகளுள் ஒன்ருகவே திருச்சபை அடைந்துவிட்டது. முதல் முதலாக இந்த உரிமையை ஒரு பேரரசருக்கெதிராகப் பயன்படுத்தியவர் போப்பு முதலாம் நிக்கொலஸ் ஆவார். லொரைன் மன்னர் லோத்தேர் தேசிய அவையின் இசைவுடன் தம் மனைவியாரை விலக்கிவிட்டுத் தம் காமக்கிழத்தியை மணந்துகொண்டார். இந்த மணவிலக்கில் தலையிட்டுக் காமக்கிழத்தியை நீக்கிவிடுமாறு

லோத்தேருக்குப் போப்பு ஆணையிட்டார். அவ்வாணையை நிறை வேற்றாது காலங்கடத்திய மன்னரைச் சமயத்திலிருந்தே போப்பு விலக்கினர். ஃப்ரெஞ்சு, ஜெர்மன் மன்னர்கள் உரோமாபுரியின் ஆணை வருமாயின், லோத்தேருடைய இராச்சியத்தின் மேல் படை யெடுத்துச் செல்லக் காத்திருந்தார்கள். மன்னருடைய தகாத செயலும் மக்களை அவர்பால் அருவருப்புக் கொள்ளச் செய்தது. ஆகவே, மன்னர் போப்பின் அடி பணிந்தார்.

சமய விலக்குரிமையால் ஒழுக்கம் தவறிய ஒருவரையே ஒறுக்க முடியும். இந்த ஒறுப்பு முறையின் விரிவாகத் தடையாணை (Interdict) என்ற ஒரு முறையைப் போப்புகள் கைக்கொண் டார்கள்; ஓர் அரசரின் ஒழுக்கக் கேட்டிற்காக அவருடைய நாட்டையே ஒறுத்தார்கள்; அந்நாட்டு மக்கள் சமயத் தொடர் பான ஊழியம் எதனையும் பெறுதவாறு நிறுத்தி விடுவார்கள். தடையாணையின் காலத்தில் கோயில் மூடப்பட்டுக் கிடக்கும்; கோயில் மணியோசை கேளாது; இறந்தவர் புதைக்கப்பட மாட் டார். ஏழாம் கிரெகரி காலம் வரையில் அத் தடையாணை மிக அருமையாகவே பயன்பட்டது. ஆயினும், சமயக் குருமார்களின் ஆதிக்க இயந்திரப் பொறியில் தடையாணை ஒரு மூல விசையா யிருந்தது. கிறித்துவ உலகினை இயக்குவதற்கு அது ஒரு நெம்பு கோல் போன்றிருந்தது. சமய விலக்கு, தடையாணை இரண்டும் போப்புகளின் ஆதிக்கக் கருவிகளான பின், அரசர்களும் பேரர சர்களும் போப்பாட்சிக்கு மண்டியிடுவதைத் தவிர இடைக்காலத் தில் வேறு வழியில்லாமற் போய்விட்டது.

உரோம் நகரிலிருந்த திருச்சபையினரும் லௌகிகர்களும் சேர்ந்தே போப்புகளைத் தேர்ந்தெடுத்து வந்தார்கள். ஷார்லே மேன் காலத்திலிருந்து கரோலிங்கிய மன்னர்கள் இத்தேர்வினை உறுதிப்படுத்துவது வழக்கமாயிற்று. பின்னர் உரோம் நகரி லிருந்த உயர்குடித் தன்னலக் கும்பல் போப்புகளை அமர்த்தி வந் தது. ஆட்டோ, பேரரசர் ஆனபின், போப்புகளின் பெயர்களைத் தாமே குறிப்பிட்டு அமர்த்தும் சிறப்புரிமையைப் பெற்றார். கி.பி. 1047 முதல் மூன்றும் ஹென்றி தந்நலத்தைக் கருதாது நல்லவர் இருவர் மூவரைப் போப்புகளாக அமர்த்தினர். கி. பி. 1059-ல் இரண்டாம் நிக்கொலஸ் போப்புகளைத் தேர்ந்தெடுக்கும் முறையினை மாற்றியமைத்தார். உரோமாபுரிக்குப் பக்கத்தில் பணி யாற்றிய ஏழு மேற்றிராணியார்கள் (கார்டினல்கள்) முதன்மை யான குருமார்கள், டீக்கன்கள் (Deacons) ஆகியோரின் இசை வுடன் போப்பைத் தேர்ந்தெடுத்தார்கள். இவ்வாறு தேர்ந்தெடுக் கப்பட்ட போப்பு அப் பதவியில் பேரரசரால் உறுதி செய்யப்படு

வார். இந்த முறையினால், உரோம் நகரின் குடி மக்களும் பிரபுக் களும் போப்பின் தேர்தலில் தங்களுக்கிருந்த உரிமையை இழந் தார்கள். பேரரசர்களும் தேர்ந்தெடுக்கப்பட்ட போப்புகளை ஏற்கலாமேயன்றி மறுத்துத்தள்ள இயலாது.

புதிய பேரரசர்களுக்கு முடிசூட்டி அவர்களைப் பேரரசர் களென ஐரோப்பாவிற்கு அறிமுகப்படுத்தி வந்தவர்கள் போப்பு களே. தேர்ந்தெடுக்கப்பட்ட போப்புகள், பதவிப் பீடத்தில் பேரரசர் இசைவுடனேதான் அமர்ந்து வந்தார்கள். இது பெரு வழக்காயிருந்தபோதிலும், ஆற்றல் மிக்கவர் காலத்தில் இப் பழக்கம் வெற்றுச் சடங்காகவே இருந்து வந்தது. போப்பும் பேரரசரும் இணைந்தே ஐரோப்பியத் தலைமையைத் தங்கள் கைகளில் வைத்திருந்தார்கள். ஆற்றல் மிக்கவர், போப்பாயினும் பேரரசராயினும், மற்றவர் துணையுடன் தமக்கேற்பட்ட எதிர்ப்பு எத்தகையதாயினும் சமாளித்தார். ஒருவருக்கொருவர் சளைக்காத சம ஆற்றல் பெற்றதும், யார் யாருக்குத் தலைவர் என்று முடிவு காணும்பொருட்டுப் போராட்டம் தொடங்கியது. இதனால், ஜெர்மனியிலும் இத்தாலியிலும் குழப்பமேற்பட்டு, மக்கள் துன்புற்றார்கள்.

போப்புகள் இத்தாலியில் திருச்சபைத் தலைவர்களாய் மட்டு மல்லாமல், அந் நாட்டில் சில பகுதிகளுக்கு மன்னர்களாகவும் இருந்தார்கள். ஆதலால், பேரரசின் ஆதிக்கத்தினின்றும் விடுபட அவர்கள் முயன்றார்கள். போப்பாட்சியானது அமைப்பிலும் ஆற்றலிலும் முன்னேறி, வரவர, பேரரசருடன் போராட்டம் தவிர்க்க முடியாததாயிற்று. இத்தாலிய மக்கள் இன்னும் நாட்டி னம் ஆகாவிடிலும், அந்நிய மொழி பேசிய ஜெர்மன் வீரர்களும் அதிகாரிகளும் தங்கள் நாட்டு மண்ணில் இருந்து ஆதிக்கஞ் செலுத்துவதைக் கண்டு அவர்கள் சினமடைந்தார்கள்.

ஜெர்மானிய மன்னர்கள் தங்கள் நாட்டிலிருந்த மேற்றிராணி யார்களுக்கு மிகுதியான ஆட்சிப் பொறுப்பைத் தந்து, அவர்கள் உதவியுடன் நாட்டை ஆண்டு வந்தார்கள். பேரரசர்களால் அமர்த்தப்பட்ட மேற்றிராணியார்கள், தத்தம் பதவிச் சின்னத் தையும் அவர்களிடமே பெற்று வந்தார்கள். ஆதலால், அவர்கள் போப்புகளுக்குப் பொதுவாகவும், பேரரசர்களுக்கு உண்மை யாகவும் கட்டுப்பட்டிருந்தார்கள்.

## நான்காம் ஹென்றி—1056-1106

கி.பி. 1056-ல் நான்காம் ஹென்றி ஜெர்மன் பேரரசரானார். அவருக்கு அப்போது ஆறே வயது. மன்னர் சிறுவராயிருந்த

காலத்தில் நாட்டில் நல்லாட்சி நடைபெறவில்லை. போப்போடு போராடுவதற்குமுன் பிரபுக்களோடு நிகழ்ந்த போரிலேயே, பேரரசு நலிவுற்றது. நான்காம் ஹென்றி தங்கள் இனத்தோன்றல் அல்லராகையால், சாக்ஸேனியர்கள் அவரை யெதிர்த்துக் கலகம் செய்தார்கள். பகைவர்களிடம் தோற்ற மன்னர் அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்க வேண்டியதாயிற்று. அவர் நாட்டில் தம்முடைய நிலையைப் புரிந்துகொள்ளாது, வேட்டையிலும் காமக் கிழத்திகளுடன் உறவாடுவதிலும் காலத்தைக் கழித்தார்; திருச்சபைப் பொருளைக் கொள்ளை கொண்டும், நாட்டுப் பதவிகளை விற்றும் காமக்கிழத்திகளைச் செல்வர்களாக்கினர். இந்த நிலையில் கி.பி. 1075-ஆம் ஆண்டில், பேரரசர் போப்போடு போராட நேரிட்டது. அப்போது போப்பாயிருந்த ஏழாம் கிரெகரி மிகுந்த செல்வாக்கும் சிறந்த ஆட்சித் திறனும் படைத்த அரசியல் அறிஞராவர். போராட்டமோ, பதவிச் சின்னமளித்தலைப்பற்றி எழுந்தது. நான்காம் ஹென்றிக்கும் ஏழாம் கிரெகரிக்கும் ஏற்பட்ட போராட்டத்தை இடைக்கால வரலாற்றின் மையம் அல்லது நீர் பிரிநிலம் (Water shed) என மதிக்கலாம்.

கார்டினல் ஹில்டிபிராண்டு (Cardinal Hildebrand) டஸ்கனியில் ஒரு வேளாளக் குடும்பத்தில் தோன்றினர்; பின்னர்த் துறவியரானர். குளூனியக்கு இயக்கக் கொள்கைகளில் அவருக்கு மிகுந்த பற்று ஏற்பட்டது. அவர் இரு போப்புகளுக்குச் (Louis-IX, Nicholas-II) செயலாளராயும் அமைச்சராயும் இருந்து, திருச்சபை வரலாற்றிற்கு ஒரு திருப்பந்தந்தார். சுதந்தரப் போப்பாட்சியே அவரது குறிக்கோள். திருச்சபையில் பணச் சத்தியின் திருவிளையாடல்களும், குருமார்களின் ஒழுக்கச் குறைவான வாழ்க்கையும், போப்பாட்சியின் சுதந்தரத்திற்கும் பெருமைக்கும் இடையூறுகளாயிருந்தன. இவைகளை யெதிர்த்துப் போராடுவதே ஹில்டிபிராண்டின் வாழ்க்கைப் பணியாயிற்று. போப்புகளைத் தலைமைக் குருமார்களே தேர்ந்தெடுக்கவேண்டுமெனத் திட்டமிட்டு, போப்புகளின் தேர்வில் பொது மக்களும் பேரரசர்களும் தலையிடாதவாறு, தேர்தல் முறையைக் கி.பி. 1059-ல் மாற்றியமைத்த பெருமை அவரையே சாரும். திருச்சபைத் தந்தையார் சமயப் பணியை, எவருடைய விருப்பு வெறுப்பையும் பற்றிக் கவலைப்படாது, செவ்வனே ஆற்ற இச் சுதந்தரத் தேர்தல் வழி வகுத்துதவியது. தேர்தல் முறையை வகுத்த அதே திருச்சபையின் அவை, பொருள் மாறுபாட்டுக் கோட்பாட்டையும் (Transubstantiation doctrine) வரையறுத்து விளக்கம் தந்தது. பொதுமக்களின் அன்பிற்குப் பாத்திரமாயிருந்த ஹில்டிபிராண்டு, கி.பி. 1073-ல் குருமார்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு,

போப்பு ஏழாம் கிரெகரியானுர்; சிறந்த பாப்பாட்சிக் கொள் கையை உருவாக்கி, அதன் உருவமாகவே விளங்கினுர். தோற்றப் பொலிவின்றி மெலிந்த குரலுடையவராயிருந்த போதிலும், புலமையொன்றும் வாய்க்கப் பெருவிடினும், தாம் கொண்ட கொள்கையின் நேர்மையில், அசைக்க முடியாத உறுதி அவ ருடைய உள்ளத்தில் கொழுந்துவிட்டெரிந்துகொண்டிருந்தது. உலகிலே தலைசிறந்த நிறுவனமாகிய திருச்சபை, கடவுளிட மிருந்து நேரடியாய் மேலாண்மை உரிமையைப் பெற்று, அதனை இவ்வுலகிலுள்ள பேரரசர்களுக்கும் ஏனைய மன்னருக்கும் வழங்கி யுள்ளது என்பதுதான் அவருடைய சித்தாந்தம். போப்பாட்சி யின் உரிமையை வற்புறுத்தி, அதற்குரிய செல்வாக்கை அதற்குத் தேடியளிப்பதே அவருடைய வாழ்நாள் முயற்சியாயிற்று; இவ் வுலகில் போப்பு ஈடும் இணையுமற்றவர். சமயத் துறையில் மேற் றிராணியார்களுக்கும் அரசியலில் பேரரசர்களுக்கும் அவரே தலை வர். அவர்களைப் பதவியிலிருந்து விலக்கவும் அவருக்கு உரிமை யுண்டு. அவருடைய கருத்தை மதிப்பிடுவதற்கோ, செயலைப்பற்றி ஆய்ந்து தீர்ப்பளிப்பதற்கோ, யாருக்கும் அதிகாரமில்லை. நேர்மை யற்ற மன்னர்களின் ஆட்சிப் பிடியிலிருந்து குடிமக்களை விடுவிக் கும் அதிகாரம் போப்புகளுக்கு இருந்தது. மன்னரின் அதிகாரம் மனிதத் தற்பெருமையால் தோற்றுவிக்கப்பட்டது. ஆனுல், மேற் றிராணியார்களின் சத்தியோ, கடவுளின் இரக்கத்தின் படைப் பாகும்,' என இவ்வாறு எண்ணிய கிரெகரி, தம் குறிக்கோளை அடையத் திருச்சபை ஆற்றலையும். துணை வலியையும் கொண்டு ஐரோப்பாவில் குழப்பத்தையேற்படுத்தி, அரசியலமைதியைக் குலைத்தார்.

தூய பீட்டர் அவர் வாயிலாகப் பேசினுர் என்ற அவருடைய கூற்று, அவருக்கிருந்த கொள்கை உறுதியைக் காட்டுகிறது. ஆகவே, உலகில் படைத் தலைவர்களிடமும் பேரரசர்களிடமும் காணுத ஓர் அரிய ஆற்றல் அவரிடம் காணப்பட்டது. ஐரோப்பா வில் பரவிய சமயச் சார்பு ஆட்சி முறைத் தத்துவம் (Theocratic Ph.losophy) அவரது அரிய சாதனையே. எவ்வாறு லெலினுடைய பொது உடைமைத் தத்துவம் முதலாளித்துவத்தை இந்த நூற் ருண்டின் தொடக்கத்தில் அச்சுறுத்தியதோ, அவ்வாறே பதினே ராம் நூற்ருண்டில் முதிராமலிருந்த நாட்டு வாழ்விற்குக் கிரெகரி யின் தத்துவம் பேரிடராயிருந்தது. கிறித்துவ உலகு எல்லாம் வல்ல—தவறு செய்ய முடியாத—போப்பாதிக்கத்தின் கீழ் ஒரே ஆட்சியமைப்பாய் இயங்குகிற நினைவு அவருள்ளத்தில் குடிகொண் டிருந்தது. அக்காலத்தில் வளர்ந்து பணியாற்றிய துறவியர் குழு வினர் யாவரும் அக் கிறித்துவப் பேரரசிற்குப் படைபோன்றிருந்

தனர். 'மனித உடலைவிட ஆன்மா உயர்ந்தது. மதியிலும் ஒளியில் உயர்ந்தவன் கதிரவன். உலகியல் ஆற்றலைவிட ஆன்மிகச் சத்தி பெரியது. கிறித்துவச் சமுதாயத்திற்குத் தேவையான பருப்பொருள் அடிப்படைகளை அமைக்கவும், திருச்சபையைக் காக்கவும், அதன் செல்வாக்கெல்லையை விரிவாக்கித் திருச்சபைச் சட்டத்தை எதிர்ப்போரை ஒடுக்கவுமே நாடு இருந்தது. திருச்சபையிடமிருந்து பெற்ற அதிகாரத்தை, அதன் ஆணைக்கேற்பப் பயன்படுத்தி, திருச்சபைக்கு ஊழியஞ் செய்வதே நாட்டின் பணியாகும்,' என இவ்வாறெல்லாம் திருச்சபை ஆதரவாளர்கள் எண்ணியும் எழுதியும் திருச்சபைக்கு ஆக்கம் தேடி வந்தார்கள்.

தூய பீட்டர் ஒரு திறவுகோலைப் போப்பினிடமளித்துத் திருச்சபைப் பொறுப்பையும், மற்றொன்றைப் பேரரசரிடம் தந்து நாட்டு ஆட்சியையும் அவர்களிடம் ஒப்படைத்தார் என்ற மரபு அவ்விரு நிறுவனங்களும் ஒன்றுக்கொன்று தாழ்ந்தனவல்ல என்பதையே அறிவிக்கிறது. மேலும், 'சீசருக்கு உரியவற்றைச் சீசருக்கு அளித்துவிட வேண்டும்,' என்ற மறைநூலின் வாக்கும் இதையே வற்புறுத்துகிறது. கிரெகரி காலத்திற்குமுன் போப்பும் பேரரசரும் ஒருவர்க்கொருவர் துணையாயிருந்து கிறித்துவ உலகை ஆட்சி செய்வதில் ஒத்துழைத்து வந்துள்ளனர். மேலும் இடைக்காலச் சமுதாய அமைப்பிற்கும் அமைதிக்கும் உத்தரவாதமளித்தது நாடுதான் என்பதைப் பொதுமக்கள் எடுத்தியம்பாவிடினும், மனமார உணர்ந்திருந்தார்கள்.

திருச்சபை ஊழியர்களாய் இருக்க வேண்டிய மேற்றிராணியார்களை, ஜெர்மானிய அரசர் ஆட்சியில் ஈடுபடுத்தி, அவர்கள் செய்ய வேண்டிய சமயப் பணியை அறவே மறக்கச் செய்த காட்சியினைப் போப்பு ஏழாம் கிரெகரி கண்டு கலங்கினார். உலகியலதிகாரிகள் திருச்சபை அதிகாரிகளுக்குப் பதவிச் சின்னமளித்தலைக் கண்டித்து, 1075-ல் அவர் ஓர் ஆணை பிறப்பித்தார். மானியதார் முதல் பேரரசர் ஈறாக, வௌளிகர்கள், திருச்சபை அதிகாரிகளை அமர்த்தி, அவர்களுக்கு அதிகாரச் சின்னங்களாக மோதிரத்தையும் கோலையும் தந்து வந்தார்கள். இவ்வாறு அமர்த்தப்படும் மேற்றிராணியார்கள் முதற்கண் பேரரசர்களுக்குக் கீழ்ப்படிந்தும், பின்னரே போப்புகளுக்குக் கடமைப்பட்டும் இருந்து வந்தார்கள். ஆதலால், ஏழாம் கிரெகரி, பதவிச் சின்னம் அளிக்கும் உரிமை பற்றிய நிலையைத் தெளிவாக்கினார். இனித் திருச்சபையாரே அப் பதவிச் சின்னங்களை அளிப்பார்கள். அதை மீறி, பேரரசரோ, மற்று அவருக்குக் கீழ்ப்பட்ட மானியதார்களோ, வேறெந்த உலகியல் ஆட்சியாளரோ, பதவிச் சின்னங்களை அளித்

தார்களானால், அவர்கள் சமயத்திலிருந்து கண்டிப்பாய் விலக்கப் படுவார்கள். இவ்வறிவிப்புப் பேரரசரின் ஆட்சியதிகாரிகளாய்ப் பணியாற்றிய மேற்றிராணியார்களைப் போப்பின் ஆதிக்கத்தில் கொண்டுவந்து பேரரசரின் ஆட்சியை நிலைகுலையச் செய்துவிடு மாகையால், பேரரசர் இதையெதிர்த்துப் போராடுவதைத் தவிர வேறு வழி காணவில்லை. போப்பின் ஆணையை மீறுவிடில், நான் காம் ஹென்றி அரசியல் துறவுபூண்டு ஆட்சிப் பொறுப்பிலிருந்து வெளியேற வேண்டும்; ஆகவே, ஹென்றி போப்பைப் பதவியி லிருந்து இறக்கிவிட்டதாக அறிவித்தார். அதற்குப் பதிலிறுப்பது போலப் போப்புப் பேரரசரை அவர் பதவியிலிருந்து நீக்கிய துடன் அவரைச் சமயத்திலிருந்தும் விலக்கினர். பேரரசரின் செயலால் போப்புக்கு யாதொரு தொல்லையும் ஏற்படவில்லை. ஆனால், பேரரசைத் தாழ்த்தவும் இழிவுபடுத்தவும் காத்திருந்த பெரிய மானியதார்களும் கோமகனர்களும் அவர் சமயத்திலிருந்து விலக்கப்பட்டதைத் தங்களுக்கு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டார்கள். போப்பினால் மன்னிக்கப்பட்டாலன்றி, பேரரசர் ஹென்றியின் பதவி பறிக்கப்படுமென, ஜெர்மானியச் சட்ட மன்றத்தில் (Diet) கூடிய கோமகனர்களும் தேர்வாளர்களும் தெளிவாய் அறிவித்தார்கள்.

போப்பு கிரெகரி, தம் வலியும் பேரரசர் வலியும் சூழ்ந்தே கி.பி. 1075-ல் போராட்டத்தைத் தொடங்கினர். பதினோராம் நூற்றாண்டு சமய நம்பிக்கைக் காலமாகும். ஜெர்மன் பேரரச ரோடு நிகழ்ந்த போராட்டத்தில் இத்தாலி நாடு ஒருமுகமாய்ப் போப்பிற்கு ஆதரவாயிருந்தது. நார்மானியர்கள் போப்பிற்குத் துணைவர்களானார்கள். டஸ்கனியில் அரசோச்சிய மாட்டில்டா அவருக்கு உதவியளிக்க முன் வந்தார். வடக்கு இத்தாலியின் பெரிய நகரங்கள் ஆல்ப்ஸ் மலைக்கப்பாலிருந்து வந்த ஜெர்மானிய ரைத் தடுத்து நிறுத்தும் கிரெகரியை வாகை வீரராய்க்கொண்டு அவர் கட்சியில் சேர்ந்தன. ஜெர்மனியில் எதிர்ப்புச் சத்திகள் ஒருங்கு திரண்டு நின்றதைக் கண்ட நான்காம் ஹென்றிக்கு, எங்கே தம்மைக் கடைசி மெரோவிங்கிய அரசரைப்போல நீக்கிவிட்டு, தம்மிடத்தில் போப்பு வேறொரு பிரபுவைப் பேரரசராக்கிவிடு வாரோ என்ற அச்சம் மேலிட்டது. தன்மானத்தைவிட்டுப் பணிந் தாயினும் தம் பதவியை இப்போது காப்பாற்றிக் கொண்டால், பின்னர்ப் பழி தீர்த்துக்கொள்ளும் வாய்ப்புக் கிட்டலாம் என்று எண்ணமிட்டார் பேரரசர். அவர் ஆல்ப்ஸ் மலையைக் கடந்து, போப்புத் தங்கியிருந்த கனோசா (Canossa) அரண்மனைக் கோட் டைக்குச் சென்று, கி. பி. 1077-ல் குளிர்த் திங்களாகிய ஜனவரி இறுதியில் வாயிற்புறத்தே மூன்று நாள் இரவு பகலாய்க் காத்துத்

தவங்கிடந்தார். பிறகு மாட்டில்டாவின் தலையீட்டால் போப்பின் மனம் மாறவே, பேரரசரும் அவர் அடிபணிந்து மன்னிக்கப் பெற்றார். பகைத்துக்கொண்ட பேரரசரும் போப்பும் கூடியும் ஜெர்மன் பேரரசிற்கு அமைதியேற்படவில்லை. இந்தக் கனோசாக் கழிவிரக்கம் (The penitencc of Canossa) போப்பாதிக்க உச்ச நிலையையும் பேரரசரின் தாழ்வையும் காட்டுகிறது.

ஆனால், இதுவே போராட்டத்தின் முடிவன்று. ஜெர்மனிக்குத் திரும்பிய பேரரசர், கிரெகரியைப் பதவியிலிருந்து அகற்றி விட்டு, வேறொரு மேற்றிராணியாரை அப் பதவியில் அமர்த்தினார்; பின்னர், 1081-ல் பெரும்படையொன்றைத் திரட்டிச் சென்று, போப்பை அவர் நகரிலேயே முற்றுகையிட்டார். 1084-ல் நான்காம் முறையாக உரோம் நகரை முற்றுகையிட்டபோது நார்மானியத் தலைவர் இராபர்ட்டு ஃகிஸ்கார்டு போப்பின் உதவிக்கு ஓடோடி வந்தார். மத்திய இத்தாலியில் ஜெர்மனாதிக்கம் ஏற்படாதவாறு தடுக்கவே நார்மானியர்கள் விரும்பினார்கள். ஃகிஸ்கார்டு பேரரசரின் முற்றுகையிலிருந்து போப்பை விடுவித்தார். ஆனால், புனித நகரமாகிய உரோம் நார்மானியர்களிடம் சிக்கிச் சீரழிந்தது. போப்பின் பத்த கோடிகள் அந்நகரைச் சூறையாடியதுபோல, அலாரிக்கோ (Alaric), ஜென்செரிக்கோ (Genseric) செய்யவில்லை. உரோம் நகர மக்களின் வெறுப்புடன் வெளியேறிய கிரெகரி, ஸாலெர்நோ ((Salerno) என்ற இடத்தில் 1085-ல் இறந்தார். வாழ்நாளெல்லாம் எந்தத் தூய நகரின் பெருமைக்கும் ஆதிக்கத்திற்கும் தம்மை உரிமையாக்கிக்கொண்டாரோ, அந்தத் தூய பீட்டரின் நகரம் (உரோம்) அவர் கண் முன்னால் அவருக்குத் துணை நின்றவர்களாலேயே அழிக்கப்படுவதைப் பார்த்து மனம் புழுங்கி மறைந்தார்.

## ஐந்தாம் ஹென்றி—1106-1122

போப்பிற்கும் இவருக்கும் பகை நீடித்தது. விட்டுக் கொடுப்பும் சமரசமும் பகை நீக்கத்திற்கு வழி வகுக்கலாமென இரு சாரிலும் முயற்சி செய்யப்பட்டது. அம்முயற்சியின் விளைவாய் ஹென்றிக்கு உரோம் நகரில் போப்பு முடிசூட்டு விழாவின் போது குழப்பமும் கலவரமும் ஏற்பட்டு, உரோம் நகரில் அமைதி குலைந்தது. மீண்டும் போர் தொடங்கி, போட்டிப் போப்பும் போட்டிப் பேரரசரும் ஏற்பட்டுப் பழைய வரலாறு திரும்ப நிகழ்ந்தது. போர் விளைவுகளைக்கண்டு சலித்துப்போன இருதரப்பினரும் கூடிப் பேசி ஒரு முடிவுக்கு வந்தனர். பதினாறு ஆண்டுகளுக்கு முன்னர் இங்கிலாந்தில் முதலாம் ஹென்றியும் ஆன்ஸெல்மும்

செய்துகொண்ட ஒப்பந்தத்தைப் பின்பற்றியே இந்த முடிவும் இருந்தது. 1122-ல் வோர்ம்ஸ் (Worms) என்ற இடத்தில் ஓர் ஒற்றுமைப் பத்திரம் (concordat) திட்டப்பட்டது. தற்காலிகமாக அமைதி நிலவியது. இனித் திருச்சபை அதிகாரிகளே மேற்றி ராணியார்களைத் தேர்ந்தெடுப்பார்கள்; அவர்கள் பதவிச் சின்னங் களைப் போப்பிடமிருந்தே பெறுவார்கள்; அரசருடைய அதிகாரி யொருவர் மேற்றிராணியார்களின் தேர்தல்கள் நடைபெறும் போது உடனிருந்து தேர்தல் வழக்குகளைத் தீர்த்து வைப்பார். இதன்றி, அரசரிடம் பெற்ற மானியங்களுக்கு மேற்றிராணி யார்கள் அவருக்கு இறை வணக்கஞ் செய்வார்கள்; அந்த நிலங் களுக்காக அவரிடமும் பதவிச் சின்னமாகிய செங்கோலைப் பெறு வார்கள். இந்த முறையில் அமைந்த ஒப்பந்தம் போராட்டத்திற்கு இறுதியான முடிவைக் காணவில்லை. சமயத் துறையிலும், உலகி யலிலும் பெரும்பங்கு கொண்டிருந்த மேற்றிராணியார்கள், போப் புக்கும் பேரரசருக்கும் போராட்டம் ஏற்படில், யாரோடு சேர்வது என்பது 1254இலிலும் முடிவாகவில்லை. மேற்றிராணியார்களுக் குப் பதவிச் சின்னங்கள் அளிப்பதைப் பற்றி நிகழ்ந்த போராட் டம், 'இத்தாலி நாட்டு ஆட்சி போப்புக்கா, பேரரசருக்கா?' என்ற போராட்டமாய் மாறியது. புனித உரோமனியப் பேரரசர் பழைய உரோமானியப் பேரரசரின் மரபு வழி வந்ததாகச் சொல் லிக் கிறித்துவ உலகின் திருத்தந்தையாரென்ற முறையில் தமது ஆதிக்க எல்லையைக் குறைக்க இசையவில்லை. இருவர் மனப் போக்கும் இவ்வாறிருந்ததால், அமைதி காண்பது அரிதாயிற்று.

போப்பு—பேரரசர் போராட்டத்தில் இரண்டாவது பருவத் தைக் காணுமுன் ஜெர்மானியப் பேரரசின் வரலாற்றைத் தொடர் வோம். சாலியன் (Salian) பேரரசர்களின் மரபு முடிந்து, சாக்ஸன், ஆட்சி தொடங்கியது. சாக்ஸனிக் (Saxony) கோமக ஞரான லோத்தேர் (Lothair) 1125-ல் பேரரசராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். போதிய ஆதரவில்லாதிருந்த ஒரு போப்பை (Innocent-II) உரோம் நகருக்கு அழைத்துச் சென்று அவரை ஆட்சிப் பீடத்தில் அமர்த்திய பின் லோத்தேர் தம் நாடு திரும்பி னார். ஆயினும், பேரரசரிடத்தை லோத்தேர் போப்பினிடம் கொடையாய்ப் பெறுவதாகச் சித்திரம் ஒன்று திட்டி, அதில் போப்பிற்கு லோத்தேர் மண்டியிட்டு அவர் கைகளிலிருந்து மணி முடியைப் பெறுவதைப் போன்ற காட்சி அமைத்தார்கள்.

1138-ல் மூன்றும் கான்ராடு (Conrad-III) அவருக்குப் பின் பட்டமெய்தினர். சுவாபியா (Swabia) நாட்டில் ஹோஹன்-ஸ்டாஃபென் (Hohen-Staufen) என்ற கோட்டையிலிருந்து கான்

ராடின் குடும்பம் தோன்றி, அந்தப் பெயரையே தாங்கி விளங்கி யது. பேரரசர் பதவியைப் கைப்பற்றிய ஹோஹன்-ஸ்டாஃபென் மரபினர் இடைக்காலப் பேரரசு ஆற்றல் மிக்க நாடாயிருந்த வரையில், அதனுட்சிப் பீடத்தில் அமர்ந்திருந்தார்கள்.

மூன்றும் கான்ராடைத் தொடர்ந்து முதலாம் ஃபிரெடெரிக்கு (Frederick-I; 1152-90) அரசு கட்டில் ஏறினர். பிற்காலத்து மக்களுக்கு அவர் செந்தாடி (Barbarossa) ஃபிரெடெரிக்கு என்றே அறிமுகமானர். பார்பரோசா, பவேரியா (Guelf) ஸ்வாபியா (Ghibelline) என்ற இரு போட்டிக் குடும்பங்களின் தோன்ற லாகையால் அவற்றுக்குள் இருந்த பகைமைக்கும் போராட்டத் திற்கும் அவர் முடிவு காண்பார் என்று எதிர் பார்க்கப்பட்டது. தம்முடைய பகைவர்களோடு, பல சலுகைகள் அளிப்பது வாயி லாக நட்புறவு காண முயன்று அவர் இறுதியில் தோல்வியே கண்டார்.

பார்பரோசா, ஹோஹன்-ஸ்டாஃபென் அரசர்களில் முதன் மையானவர், ஷார்லேமேன் காலத்திற்குப் பின் இடைக்கால அரசர்களில் தலை சிறந்தவர். அவர் ஆட்சியில் ஜெர்மனி போர்த்துறையில் புகழ் பெற்றது. வாணிகத்தில் வளமடைந்தது; அறிவிலும் கலையிலும் சிறப்பெய்திற்று; இத்தாலிய நகரங்கள் முன்னேறிய அளவு, ஜெர்மானிய நகரங்களும் வளர்ந்தோங்கின; சுந்தர ஆட்சி அமைப்புடன் விளங்கிய கொலோன் (Cologne) மெயின்ஸ் (Mainz) ஆக்ஸ்பர்கு (Augsburg) முதலிய பெரிய நகரங் களில் உறைந்த மக்கள் எல்லாக் கலைகளிலும் ஆர்வமுடையவர் களாயும் உரிமையோடும் வாழ்ந்தார்கள். ஜெர்மனியில் மேற்கி லும் தெற்கிலும் நகர ஆட்சி செவ்வனே நடைபெற்றது; நில மானியதார்களைத் தங்கள் பகைவர்களாகவும் அரசரைத் தங்கள் நண்பராகவும், காவலராகவும் ஃப்ரெஞ்சு நகரங்கள் நினைத்தது போல, ஜெர்மானிய நகரங்களும் எண்ணிப் பேரரசர் உதவியை நாடின. மேலும், பேரரசரும் பெரிய நகரங்களின் ஆதரவைப் பெற்றார். நகர வளர்ச்சியும் வாழ்வும் நிலமானிய பிரபுத்துவத் திற்குப் பெரும்பகைச் சத்தியாகவே வளர்ந்து வந்தன.

ஆயினும், பெரிய மானியதார்களும் உயர்குடி மக்களின் பண் டைய குடும்பங்களும் பேரரசின் சத்தியை வளர விடாமல் தடுத்தே வந்தார்கள். ஷார்லேமேன் காலத்திலிருந்தும், முதலாம் ஆட் டோவின் காலத்திற்குப் பிறகும், பேரரசர்கள் கோமகனர்களோடு போராடி அவர்கள் ஆற்றலைக்குறைத்து வந்திருந்தாலும், மீண்டும் பெரிய பெரிய மானியங்கள் இரண்டொரு குடும்பங்களிடத்தில்

போய்ச் சேர்ந்ததால், ஃபிரெடெரிக்குக் காலத்தில் நிலமானியப் பிரபுத்துவம் வலி மிக்கதாயிருந்தது. போப்புகளோடு பேரரசர்கள் போராடி வந்த காலத்தில், மேலும் அது சுதந்தர மடைந்து வளர்ந்தோங்கியிருந்தது. ஜெர்மானிய முடியரசினையே, நிலமானிய அமைப்பு அச்சுறுத்தத் தொடங்கியது. அந்தச் சத்தியைச் சாமளித்து ஓரளவு ஒடுக்கி, பார்பரோசா ஏகாதிபத்தியத்தை வெற்றியோடு வற்புறுத்தினர். ஃபிரெடெரிக்கின் நெருங்கிய உறவினரும், ஃகெல்ஃப் குடும்பத்தின் தோன்றலுமான 'அரிமா ஹென்றி; (Henry the Lion) அவரை எதிர்த்து நின்ற மானியதார்களுள் முதன்மையானவர். அவர் கிழக்கில் ஜெர்மானிய ஆதிக்கத்தை நிலை நாட்டியதோடன்றி, பெரும்பரப்பளவில் ஜெர்மானியப் பண்பையும் பரவச் செய்து, பேரும் புகழும் பெற்றிருந்தார். முதலில் ஃபிரெடெரிக்கும் ஹென்றியும் இணைந்தே பல வெற்றிகளைப் பெற்றனர். ஹென்றியின் வலிமை வளரத் தொடங்கியதும் அவர் பேரரசுப் பதவிக்குப் போட்டியிடலாமென்ற நிலையும் ஏற்பட்டது, இப் போட்டி வலுக்கவே, ஜெர்மனியில் அமைதி குன்றிற்று. அதனுல் ஆல்ப்ஸிற்குத் தெற்கே ஏகாதியத்தியப் படைக்குத் தாழ்வு உண்டாயிற்று.

பன்னிரண்டாம் நூற்ருண்டில் வாணிக வளர்ச்சியின் பயனுய் இத்தாலியின் வடபகுதியில் பல வளநகர்கள் தழைக்கலாயின. சிலுவைப் போர்களில் ஈடுபட்ட படைகள், இத்தாலி நாட்டின் வழியே புனிதக் கல்லறைப் பகுதிகளுக்குப் போவதும் வருவதுமாயிருந்ததால், கீழை நாடுகளிலிருந்து வாணிகப் பொருள்கள் ஏராளமாய் இத்தாலியக் கடற்கரைப் பட்டினங்களில் வந்து குவிந்தன. இந்தக் கடல் வாணிகத்தால் வளநகர்கள் மேலும் வளம் பெற்றன. சுதந்தர நகராட்சியை விரும்பிய நகர மக்கள் மேற்றிராணியார்களின் ஆதிக்கத்திலிருந்து விடுபெறப் போராடினுர்கள். கோட்டைகளில் வாழ்ந்த பிரபுக்களை நகரவெல்லைக்குள் வாழுமாறு வற்புறுத்தினுர்கள். நிலமானியச் சமுதாய அமைப்பு வலிவற்றிருந்த வடஇத்தாலி, நகர சமூக (Commune) வளர்ச்சிக்களம் ஆயிற்று. ஜெனேவா (Genoa), பைசா (Pisa) ஃப்ளாரென்ஸ் (Florence), மிலான் (Milan), வெனிஸ் (Venice), பொலோனு (Bologana) என்னும் பட்டணங்கள் இடைக்காலத்தில் பெயர் பெற்று விளங்கிய இத்தாலிய நகரங்களாகும். அவற்றுள் நேப்பிள்ஸ் (Naples) தனிச் சிறப்புப் பெற்றிருந்தது. உரோம் நகரமும் அத்தகைய சீரிய வாழ்வைப் பெற, பிரபுக்களின் ஆதிக்கத்திலிருந்து, போப்பாட்சியிலிருந்துங் கூட, விடுதலை பெறுவதற்குக் கிளர்ச்சிகள் நடைபெற்றன. சமய அறிஞரும் (Schoolman) சமய மறுப்பாளரும் (Heretic) ஆன அபெலார்டு (Abelard) என்பவரின்

மாணவராகிய ஆர்னல்டு (of Brescia) அத்தகைய கிளர்ச்சிக்குத் தலைவராயிருந்தார்.

இத்தாலிய நகரங்கள் பேரரசரையும் எதிர்த்து உரிமைக் கிளர்ச்சி தொடங்கின; நகரப்பாட்டைகள், பாலங்கள், படைகள், குற்ற நடுவர்கள் (Magistrates) அமர்த்துதல் முதலியவற்றின் கட்டுப்பாட்டில் பேரரசரின் தலையீட்டை ஏற்க மறுத்தன. ஆதலால், போப்பு-பேரரசர் போராட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டு போப்பை ஆதரித்தன.

இத்தாலியின் தென்பகுதியில் நேப்பிள்ஸிலும் சிசிலியிலும் (Naples and Sicily) நார்மானியர்கள் ஆட்சி செய்துவந்தார்கள். அங்கே இத்தாலியர்களன்றி, நார்மானியர்கள், கிரேக்கர்கள், சாரசேனியர்கள் என்ற பல இனத்தவர்கள் வாழ்ந்தார்கள். ஆகவே, அவர்கள் பேசிய மொழிகளும் பின் பற்றிய சமயங்களும் பல. நார்மானிய ஆட்சியின் சமய சமரசக் கொள்கை அவர்களிடையில் ஒப்புரவை வளர்த்தது. அவர்கள் ஒரு சேர வாழ்ந்தார்கள்; ஒன்றுய்ப் போரிட்டார்கள்; ஒருமிக்க முன்னேறினர்கள். ரோஜர், முதலாம் வில்லியம், இரண்டாம் வில்லியம் என்ற நார்மன் மன்னர்கள் ஒருவர் பின் ஒருவராய் அரியணையிலமர்ந்து திறமையாய் ஆண்டார்கள். அவர்கள் போப்புகளைப் பகைத்துக் கொண்டார்கள். அவர்களோடு போருமிட்டார்கள். ஆயினும், பேரரசர் இத்தாலியில் புகுந்து போப்போடு போரிட்ட காலத்தில், நார்மானிய அரசர்கள் போப்புகளுக்கு ஆதரவு தந்தார்கள். ஏனெனில், இத்தாலியில் பேரரசர் ஆதிக்கமேற்படுவது நார்மானியர்களின் ஆட்சிக்கும் முன்னேற்றத்திற்கும் உகந்ததன்று. நார்மானிய இராச்சியமாகிய இரு சிசிலிகள் (The Two Sicilies) அறிவுத் துறையிலும் கலைத்துறையிலும் அடைந்த வளர்ச்சியும் பெருமையும் அந்த நாடு திரும்பவும் காணுத முதிர்ச்சியும் முன்னேற்றமுமாகும். பாலெர்மோப் (Palermo) பட்டினம் கட்டடக் கலை வளர்ச்சிக்குச் சான்றுய்த் துலங்கிற்று.

கி.பி. 1122-ல் பதவிச் சின்னப் போட்டி யாருக்கும் வெற்றி தோல்வி இன்றி முடிவாகியிருந்தும், அப் போராட்டத்தின் போது போப்பாட்சியின் வலி மிகுந்ததுடன் பேரரசின் ஆதிக்கமும் குறைந்துவிட்டது. கனேசாக் கழிவிரக்கம் மறக்கற்பாலதன்று. இன்னும் திருச்சபைக்கும் அரசிற்கும் உள்ள தொடர்பு திட்டவட்டமாய் வரையறுக்கப்படவில்லை. சீசர்களின் வாரிசும், தூய பீட்டரின் மரபு வழியினரும் கிறித்துவ உலகத் தலைமைக்குப் போட்டியிட்டுப் போராடுவதை ஒத்தியே வைத்திருந்தனர்.

ஏழாம் கிரெகரிக்குப் பிறகு உடனடியாய்த் திருச்சபைத் தலைவர்களானவர்கள் திறமையற்றவர்களாயிருந்தார்கள். பேரரசர் பதவிக்குச் சில காலங்களில் ஒருவருக்கு மேற்பட்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் போல, கி.பி. 1130-ல் போப்பின் பதவிக்கும் இருவர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஒருவருக்கு (Innocent-II) தூய பெர்னூர்டும், அவருடைய முயற்சியால் ஆங்கில, ஃப்ரெஞ்சு, ஜெர்மன் மன்னர்களும் பேராதரவு தந்தார்கள். மற்றவருக்கு (Anacletus-II) சிசிலி மன்னர் இரண்டாம் ரோஜர் (Roger-II) துணையாயிருந்தார். 1138-ல் அநக்லிட்டஸ் இறக்கவே, இன்னொசன்டு எல்லோராலும் போப்பாக ஏற்றுக்கொள்ளப் பட்டார். இப் பிளவு (Schism) போப்பாட்சியை வலியிழக்கச் செய்தது. பன்னிரண்டாம் நூற்றுண்டின் முற்பகுதியில், திருச்சபை வரலாற்றிலே அறிவிலும் பண்பிலும் சிறந்த துறவியராய் விளங்கிய தூய பெர்னூர்டு (1091-1153) ஏழாம் கிரெகரியைப் போல மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார். இருவர் போப்பின் பதவிக்குப் போட்டியிட்டபோது பெர்னூர்டு தலையிட்டுத் திருச்சபை பிளவு படாதவாறு தடுத்தார். தகுதியுடையவர் என்று அவரால் குறிப்பிடப்பட்டவரைப் போப்பாக ஏற்றுக்கொண்டார்கள். ஐரோப்பிய மன்னர்களை இரண்டாவது சிலுவைப் போரில் கலந்து கொள்ளுமாறு தூண்டியவரும் இவரே.

1157-ல் போப்பு நான்காம் ஹேடிரியன் ஃப்ரெடெரிக்கிற்கு எழுதிய கடிதமொன்றில், பேரரசர் போப்பிற்கு அடங்கியவர் என்ற குறிப்பிருந்தது. பேரரசு போப்பினுல் பேரரசருக்கு வழங்கப்பட்ட 'மானியம்' (benefice) என்று அதில் எழுதியிருந்தார். அந்தக் கூற்று வாயிலாக, பேரரசர்பால் தமக்கு ஆதிபத்திய (overlordship) உரிமையுண்டென, சொல்லாமல் சொல்லியிருந்தார் போப்பு. இதை மறுத்த பேரரசர், தாம் அப் பதவிக்குப் பிரபுக்களாலும் கோமகனூர்களாலும் தேர்ந்தெடுக்கப்பட்டவரென்றும், மேலும் பேரரசு கடவுளால் தமக்களிக்கப்பட்ட கொடையென்றும் தெரிவித்தார். அதற்குமேல் போப்பு ஒருவாறு தம் சொல்லிற்கு வேறு பொருள் கூறிச் சமாளித்துக்கொண்ட போதிலும், அவருக்கும பேரரசருக்கும நட்புறவு ஏற்படவில்லை. பேரரசா பார்பரோசா பேரரசினைக் கடவுட்கொடை என்று சொன்னதோடு அப் பேரரசில் இத்தாலியும் உரோம் நகரமும சேர்ந்தவையே என்றும் விளக்கம் தந்தார். பேரரசு இழந்த மாகாணங்களைத் திரும்பக் கைப்பற்ற, பேரரசர் இத்தாலிமேல படையெடுத்துச் சென்றூர். புனித உரோமானியப பேரரசர்கள் உரோம் நகருக்குச் சென்று போப்பினுல் முடிசூட்டப்பட்ட பின்னரே தங்கள் பெருமையும மதிப்பும் முற்றுப்பெற்றதாகக் கருதி

னார்கள். மேலும், பார்பரோசாவிற்கு இத்தாலிய வளநகர்களைத் தம்மாதிக்கத்தில் கொண்டு வருவதில் தனி விருப்பமிருந்தது. பண்டைய உரோமானியப் பேரரசின் புகழினைத் திரும்பக் கொண்டுவருவதே பார்பரோசாவின் குறிக்கோளாகும். இத்தாலிய நகரங்களில் முன்னணியிலிருந்து பேரரசரை எதிர்த்த பட்டணம் மிலானாகும். ஏனைய நகரங்களின் பொறாமையைப் பயன்படுத்திக் கொண்டு, பேரரசர் அந் நகரத்தைத் தாக்கித் தம் அடி பணியச் செய்தார்; பின்னர் ஓர் அவையைக் கூட்டி, இத்தாலி நாடு, பேரரசின் ஒரு பகுதியென அறிவித்தார்; இத்தாலிய நகரங்களில் வரி வசூலிக்கவும், அவற்றுக்கு மேலதிகாரிகளை அமர்த்தவும் உரிமை கொண்டாடினார். இதை இத்தாலிய நகரங்கள் எதிர்த்தன. மூன்றாண்டுகள் (1159-1162) முற்றுகையிடப்பட்ட மிலான், பஞ்சம் காரணமாய்ப் பேரரசருக்குக் கீழ்ப்படிந்தது. மிலான் நகரக் கோட்டை கொத்தளங்கள் தரைமட்டமாக்கப்பட்டன; அந் நகர மக்கள் வேறு சில நகரங்களில் குடியேற்றப்பட்டார்கள். பார்பரோசா ஆதிக்க உச்சியிலிருந்தார். ஐரோப்பாவில் அவரை எதிர்க்க யாருமில்லை. ஆனால், இந்த நிலை நீடிக்கவில்லை.

1159-ல் மூன்றாம் அலெக்ஸாண்டர் போப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவரை ஆதரிக்காமல் பேரரசர் வேறொருவரைப் போப்பாக ஏற்றுக்கொண்டார். ஆகவே, மூன்றாம் அலெக்ஸாண்டர் வட இத்தாலிய நகரங்களோடு சேர்ந்து, பேரரசரை எதிர்க்கத் தொடங்கினார். இத்தாலியிலிருக்க அஞ்சிய அலெக்ஸாண்டர் ஃப்ரான்சிற்குச் சென்றார். இத்தாலிய நகரங்கள் தங்களுக்குள்ளிருந்த பழைய பகைமையையெல்லாம் மறந்து, லம்பார்டு சங்கம் (Lombard League) என்று ஒரு கூட்டுக் குழுவை அமைத்துக்கொண்டன; ஏனென்றால், பேரரசரோடு தனித்துப் போராடிய மிலான் நகரத்தின் முடிவு தமக்கும் ஏற்பட்டுவிடாது காத்துக்கொள்ளவே அவ்வாறு செய்தன. போப்பு அலெக்ஸாண்டரும் ஃப்ரான்சிலிருந்து இத்தாலிக்குத் திரும்பவே, 1166-ல் பார்பரோசா நான்காவது முறையாக இத்தாலிக்குப் படையுடன் சென்றார். இத்தாலியில எதிர்ப்பைக் காணாத பேரரசர், உரோம் நகரை முற்றுகையிட்டுப் பற்றிக்கொண்டார். அலெக்ஸாண்டர் நார்மானியர்களிடம் ஓடித் தஞ்சமடைந்தார். வெற்றி பெற்ற பேரரசரின் படையினர் கொள்ளை நோயினால் பெருவாரியாய் இறந்தனர். பார்பரோசா தம் நாடு திரும்பவே, அவருடைய பகைவர்கள மீண்டும் தலைதூக்கலானார்கள். 1167-ல் லம்பார்டு சங்கம் விரிவாக்கப்பட்டுச் சிறந்த வகையில் நிறுவப்பட்டது. இத்தாலியில் வெனிசிலிருந்து மிலான் வரையில், பிரெசியா (Brescia) முதல்

பொலோஞு ஈருக, எல்லா நகரங்களும் அச் சங்கத்தின் உறுப்புக்களாயின. அச் சங்கம் போப்பு மூன்றும் அலெக்ஸாண் டர் பெயரால் அலெக்ஸாண்டிரியா என்ற நகரத்தை லம்பார் டிச் சமவெளியில் நிறுவ முடிவு செய்தது. அப் புதிய நகரம் போப்பை மேன்மைப்படுத்துவதோடு பகை நகரமாகிய பேவியாவை உன்னிப்பாய்ப் பார்த்துக் கண்காணிக்கும் நகர மாயும் அமையும்.

முதலாம் ஃபிரெடரிக்கு இத்தாலிக்கு வருகைதருவது இன்றி யமையாததாயிற்று. 1176-ல் மிலானுக்கருகில் லெக்யானோ (Leguano) என்ற களத்தில் இத்தாலிய நகரங்களின் படையும் பேரரசர் படையும் சந்தித்துக் கடும்போர் செய்தன. லம்பார்டு காலாட் படையினர், கட்டுப்பாட்டோடு அணி வகுத்து நின்றனர். அவர்களின் நெஞ்சுரமும், பேரரசர் படையினர் சிலரின் சதிச் செயலும் சேர்ந்து லம்பார்டு சங்கத்திற்கே வெற்றி தேடித் தந்தன. படுதோல்வியுற்ற பார்பரோசா, 1177-ல் வெனிசில் இருந்த தலைக்கோயிலில் போப்பைச் சந்தித்து மன்னிப்புப் பெற்றார். கோவேறு கழுதையின் மீது போப்பு ஏறும்போது, படித்தட்டைத் தாங்கி அவருக்குப் ஃபிரெடெரிக்கு உதவினார். கனோசாக் கழிவிரக்கத்திற்குப் பின் சரியாய் நூறாண்டுகள் கழித்து மீண்டும் ஜெர்மன் பேரரசருக்குத் தாழ்வு ஏற்பட்டது. 1177-ல் ஏற்பட்ட இழிவு, முன்னால் ஏற்பட்டதற்கு எந்த வகை யிலும் குறைந்ததன்று. இம்முறை போப்பாட்சியின் வெற்றி பண்டையதைவிடப் பெரிது என்றே சொல்லவேண்டும். 1183-ல் கையெழுத்திடப்பட்ட கான்ஸ்டன்ஸ் உடன்படிக்கை (Peace of Constance) இத்தாலிய நகரங்கள் பெற்ற வெற்றியை விளக்க மாய் அறிவித்தது. நகரங்கள் சுதந்தரமடைந்து தன்னாட்சி பெற்றன. அவற்றுக்குத் தனிப்படைகளும், கோட்டைகளும், ஆதிக்க வரம்பும் இருந்தன. பேரரசர் தம் இராச்சியத்தில் எப் பகுதியையும் இழக்கவில்லையெனினும், ஆல்ப்ஸ் மலைக்குத் தெற்கில் அவருடைய இராச்சியம் கானல் நீராயிற்று.

ஃபிரெடெரிக்கு பார்பரோசாவின் பகைவர் யாவரும் போப்பிற் காதரவாயிருந்து, அவ்விருவருக்குமிடையே நடைபெற்ற போராட்டத்தைப் பெரிதாக்கி, அவருடைய ஆட்சிக்கால நிகழ்ச்சி களில் அதை முதன்மையாக்கினார்கள். இத்தாலியைத் தம் பேரரசி லிருந்து இழக்க விரும்பவில்லை. அந் நாட்டைத் தம் ஆதிக்கத்தில் நிலைக்கச் செய்யவே பேரரசர் சலிக்காமல் போரிட்டார். ஆதலால், அவருக்கு ஜெர்மானிய ஆட்சியில் தம் கருத்தைச் செலுத்தக் காலம் கிடைக்காமலே போய்விட்டது. இடைக்கால

ஜெர்மன் மக்கள் ஒன்றித்து, ஒரு நாட்டினமாகும் இறுதி வாய்ப்பை அவருடைய ஆட்சியிலே பெற்றிருந்தார்கள். அந்த முயற்சியில் ஈடுபடப் பேரரசரால் முடியவில்லை. போப்போடு நடைபெற்ற போராட்டம் முடிந்ததும் ஆல்ப்ஸ் மலைக்கு வடக்கி லிருந்த பகைவர்களுடன் பேரரசர் போராட வேண்டியதாயிற்று. பதினோராவது நூற்றூண்டில் சாக்ஸன்-சாலியன் குடும்பத்தார்கள் போராடினார்களெனில், பன்னிரண்டாம் நூற்றூண்டில் ஃவெல்ஃப் ஃகிப்பெலின் குடும்பங்கள் பேரரசர் பதவிக்குப் போட்டியிட்டன. பேரரசரின் பகைவர்களுள் முதன்மையானவர் 'அரிமா' ஹென்றி. அவருடன் போரிட்டு வென்றபின், பேரரசர் அவருடைய நாட்டைப் பல உரிமையாளர்களுக்கும் பகிர்ந்து கொடுத்தார். அதனுடன் ஃவெல்ஃப் குடும்பம் வரலாற்றிலிருந்து மறையவில்லை எனினும், அதன் பின்னர் அது ஜெர்மனியில் முதலிடத்தை நெருங்கவே இல்லை.

ஜெர்மானிய ஆதிக்கம் கிழக்கில் பரவியதால், பார்பரோசா காலத்தில் புதியனவாய் இரு நாடுகள் தோன்றி வளரலாயின. அவை ஆஸ்திரியாக் கோமகனூர் நாடும் (Duchy of Austria), பிராண்டன்பர்கும் (Brandenburg) ஆகும். பின்னர்ப் பேரரசிற்குப் பல அரசர்களை அளித்த ஹாப்ஸ்பர்கு (Hapsburg) அரச குடும்பம் ஆஸ்திரியாவிலேதான் வளர்ந்து வலிமை பெற்றது.

முதலாம் ஃபிரெடெரிக்கு இங்கிலாந்து மன்னர் முதலாம் ரிச்சர்டுடனும் ஃப்ரெஞ்சு மன்னர் இரண்டாம் ஃபிலிப்புடனும் (Philip-II) மூன்றூவது சிலுவைப் போரில் கலந்துகொள்ளப் படையுடன் புறப்பட்டார். தூய நாட்டிற்குத் தரை வழியாய்ச் சென்ற பேரரசர் ஒரு சிலிஷியன் (Cilician) ஓடையைக் கடக்கும்போது, அவரணிந்திருந்த போர்க் கவசத்தின் பளுவினால் நீரில் மூழ்கி இறந்தார். அவர் இறப்பதற்கு முன் போப்போடு நெடுங்காலம் நடைபெற்று வந்த போராட்டத்தின் மூன்றூவது பருவத்திற்கு வழிவகுத்துச் சென்றூர். இரு சிசிலிகளின் இராச்சியம் பல காலம் பேரரசினை எதிர்த்துப் போப்பாட்சியை ஆதரித்து வந்துள்ளது. அந்த இராச்சியத்திற்கு அரசிளங்குமரியார் கான்ஸ்டன்ஸ் (Constance) தலைவியரானூர். ஃபிரெடெரிக்குத் தம் மைந்தர் ஹென்றிக்கு அந்த நார்மானிய நாட்டரசியாரை மணஞ்செய்து வைத்தார். இத் திருமணம் பேரரசரின் வெல் திறத்தைக் காட்டு கிறது. இதன் விளைவாக இரு சிசிலிகளும் அடுத்து நடைபெற்ற போராட்டத்தில் பேரரசிற்கே ஆதரவளித்தன. இந்த இணைப் பிலிருந்தே போப்பாட்சியின் பெரும்பகைவர் தோன்றினர். ஐரோப்பிய நாகரிகமே இத் திருமணத்தால் உருவாகிய தெனலாம்.

# ஆறும் ஹென்றி—1190-1197

பெரிய நிலப்பரப்பிற்கு உரியவராய் ஆட்சிப் பீடமேறிய ஆறும் ஹென்றி தமது இராச்சியப் பரப்பையும், பேரரசின் வலிமையையும் பெருக்கத் திட்டமிட்டார். ஜெர்மானியப் பேரரசின் தலைமைத் தேர்தலினல் முடிவு செய்யப்பட்டு வந்ததை மாற்றி, அப் பதவியை வழிவழியாக வரும் பட்டமாக்க வேண்டும் என்று கனக்கண்டார். அக் கனவு உண்மையாகிச் செயற்பட்டிருக்குமாஞல், ஜெர்மனி பின்னர் அதற்கேற்பட்ட பங்கீடுகளிலிருந்து தப்பியிருக்கும். அவருடைய மற்றொரு கனவு என்னவென்றால், அரசியற் குழப்பமும் கலவரமும் நிறைந்திருந்த கான்ஸ்டான்டிநோப்பிளை வென்று, அங்கிருந்து பாலஸ்தீனத்தில் நடந்த சிலுவைப் போர்களில் கலந்துகொண்டு, சாரசேனியர்களை ஒடுக்கி, தூய இடங்களை மீட்பதாகும். தொலைவிலிருந்த நாடுகளைப் பற்றிய திட்டத்தை நிறைவேற்றப் புகுமுன், தமக்குரிய ஆட்சிப் பகுதிகளில் தம்மாதிக்கத்தை நிலைநாட்டுவதிலே பல தொல்லைகளிருந்தன. ஜெர்மனியோடு நேப்பிள்ஸும் சிசிலியும் இணையுமாயின், ஐரோப்பிய அரசியல் நிலைமையில் ஏற்படக்கூடிய மாற்றத்தைக் கருதிய போப்பு திகிலடைந்தார். ஜெர்மன் பேரரசர் அந்த இரு நாடுகளிலும் ஆதிக்கம் பெறுதவாறு போப்பின் வெல்திறம் குறுக்கிட்டது. ஆயினும், ஹென்றி உள்நாட்டுப் போர்களை ஒருவாறு முடித்துக்கொண்டு, 'அரிமா' ஹென்றியுடன் உடன்படிக்கை செய்துகொண்டார்; பிறகு இத்தாலிக்கு விரைந்து சென்றூர்; உரோம் நகரில் முடிசூடிய பின் சிசிலியைத் தம் வசமாக்கிக் கொள்ள முயன்றூர். அங்கு ஒரு போட்டி அரசருக்குப் போப்பு ஆதரவளித்தார். பேரரசின் பகைவர்களெல்லாம் அங்கு ஓர் ஐக்கிய முன்னணியை அமைத்துவிட்டார்கள். அவர்களுள் ஒருவராய் ஆங்கில அரசர் முதலாம் ரிச்சர்டு போப்பை ஆதரித்து நின்றூர். மூன்றும் சிலுவைப் போரிலிருந்து திரும்பிய அந்த ஆங்கில மன்னரை ஜெர்மானியர் சிறை பிடித்து வைத்துக்கொண்டனர். 'அரிமா' ஹென்றியின் மைந்தர் பேரரசரோடு சேர்ந்துவிடவே, அவர் தந்தையார் மனமுடைந்து தம் நாடு திரும்பிவிட்டார். பின்னர்ச் சிசிலியை வென்று கைப்பற்றுவது ஆறும் ஹென்றிக்கு எளிதாகிவிட்டது. இந்த வெற்றி பேரரசரை மேலும் ஊக்குவித்தது. தூய உரோமானியப் பேரரசை, பெயரளவில் அல்லாமல், உண்மையாக்க அவர் துடித்தார்; டஸ்கனியைக் கைப்பற்றிய பின் போப்பின் நாடு (Papal State) முழுவதையும் பேரரசிற்குள் கொண்டுவர விரும்பினூர். ஆனால், அவர் எண்ணம் ஈடேறவில்லை. அவர் தமக்கு வாரிசாக மூன்று வயதுள்ள தம் மைந்தரை (Frederick-II) விட்டு, 1197-ல் இயற்கை எய்தினூர்.

ஹென்றியின் ஆசைகளும் திட்டங்களும் நிறைவேருமல் போனதுடன், அவருடைய நாடு பதவிப் போட்டியினல் போர் மலிந்து, சீர் குலைந்தது பன்னிரண்டாம் நூற்ருண்டிறுதியில் மீண்டும் போப்பு-பேரரசர் போராட்டத்திற்கான ஆயத்தக் குறிகள் புலப்பட்டன; போராட்டத்தின் முதலிரண்டு பருவங்களிலும் போப்பாட்சியே வெற்றி பெற்றதாயினும், பேரரசின் வலிமை குன்றிவிடவில்லை. 1198-ல் மூன்ரும் இன்னெசன்டு போப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இடைக்காலத்துப் போப்புகளுள் அவர் மிக்க திறமை வாய்ந்தவர். நாம் போப்பாட்சியின் சிறந்த தன்மையையும் உயர்ந்த நிலையையும் அவருடைய பண்பிலும் பணியிலும் காண்கிருேம். சிறிதும் விட்டுக் கொடாமல் போப்பாட்சியின் உரிமைகளைச் சட்ட நுணுக்கத்தோடு அவர் வெளியிட்டார். ஏனைய போப்புகள் திருச்சபைக்குச் சுதந்திர வாழ்வை ஏற்படுத்தப் பாடுபட்டார்கள்; ஆனல் இவரோ, கிறித்துவ மன்னர் எல்லோருக்கும் தலைமை பூண்டு அவர்கள் பால் திருச்சபை ஆதிக்கஞ் செலுத்தவேண்டும் என்ற குறிக்கோளுடையவர்; ‘கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையே நின்று தெய்வ ஊழியராய்ப் பணிபுரியும் போப்பு, கடவுளுக்குக் கீழ்ப்பட்டவர்; ஆனல், மனிதரிலும் மேலானவர்’ என்ற கருத்தைக் கொண்டவர். இன்னெசன்டின் கருத்தும் குறிக்கோளும் உலகியல் அதிகாரத்தோடும் ஆட்சியோடும் மோதாமலிருக்க இயலாது. மேலும், இத்தாலிய மக்களின் ஜெர்மானிய ஆதிக்க எதிர்ப்புக் கொள்கையை எடுத்தியம்பியதுடன், இத்தாலியிலிருந்து ஜெர்மானியரை விரட்டுவதே தம்முடைய நோக்கமென்றும் மூன்ரும் இன்னெசன்டு தெரிவித்தார்.

ஆட்சிப்பீடம் ஏறும்போது பேரரசர்கள் போப்புகளோடு நட்பு முறையில் பழகினுலும், அந்த நல்லுறவு நீடிப்பதில்லை. ஏனெனில், அவர்களுடைய போராட்டம் ஒன்ருேடொன்று ஒவ்வாத உரிமைகளைப் பற்றியதாகும். ஜெர்மனியில் ஹோஹன்ஸ்டாஃபென் மரபினைச் சேர்ந்த ஃபிலிப்பும் (Philip) ஃகெல்ஃப் குடும்பத் தோன்றல் ஆட்டோவும், பேரரசர் பதவிக்குப் போட்டியிட்டனர். திருச்சபை நண்பராகிய ஆட்டோவிற்குப் போப்பு ஆதரவு அளித்தார். ஆயினும், அவர் தோல்வியுற்ருர். வெற்றி பெற்ற ஃபிலிப் கொல்லப்படவே, நான்காம் ஆட்டோ 1208-ல் பேரரசராய் நாட்டு மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டார். போப்பிடம் முதலில் மிக்க நன்றி பாராட்டிய பேரரசர், இரு சிசிலிகளின் இராச்சியத்திற்கு உரிமை பாராட்டியதும், போப்பின் பகைவராக நேர்ந்தது. ஜெர்மனி, தென் இத்தாலி இணைப்பு, போப்பிற்குப் பெருங் கிலியை உண்டாக்கியது. ஆட்டோ சிசிலியைப் போரில்

வென்று வாகை சூடுவதற்கு முன், போப்பு ஜெர்மானிய அரசர்களைப் பேரரசருக்கு எதிராகக் கிளர்ந்தெழுமாறு தூண்டிவிட்டார்; அதுவுமன்றிச் சிசிலி இளவரசர் ஃபிரெடெரிக்கை ஜெர்மன் மணிமுடிக்காக ஆட்டோவோடு போராடுதற்கு அந்த நாட்டரங்கில் கொண்டுவந்து நிறுத்தினர். ஆட்டோவைப் பேரரசர் பதவியிலிருந்து நீக்கும் முயற்சியில், போப்பாட்சி இதுவரை காணாத ஒரு பெரும்பணைவரை இன்னொசன்டு தோற்றுவித்தார்.

## இரண்டாம் ஃபிரெடெரிக்—1215-50

முதலில் தந்தையாரையும், பின்னர்த் தாயாரையும் இழந்த இளவரசர் ஃபிரெடெரிக்கைப் போப்பு இன்னொசன்டு தம் பாதுகாப்பில் வைத்துக்கொண்டு, சிறந்த முறையில் வளர்த்து வந்தார்; பேராசிரியர்களைக்கொண்டு அச் சிறுவருக்குக் கல்வி புகட்டியதுடன் சிசிலி நாட்டையும் அவருக்குக் காத்தளித்தார். 1212-ல் இளவரசர் ஃபிரெடெரிக்கைப் பேரரசராகப் போப்பு ஒப்புக்கொண்டதுடன் அவரை அப் பீடத்திலமர்த்தவும் மடி தட்டி நின்றார். ஃப்ரெஞ்சு மன்னர் இரண்டாம் ஃபிலிப் அவருக்கு உதவ முன் வந்தார். ஆட்டோவிற்கு ஆங்கில அரசர் ஜான் துணை புரிந்தார். 1214-ல் பூவீன் (Bouvines) போர்க்களத்தில் ஆங்கில அரசர் ஜானும் ஃப்ரெஞ்சு மன்னரை யெதிர்த்த ஏனைய பிரபுக்களும் ஃப்ரெஞ்சு மன்னரிடம் படுதோல்வி அடைந்தார்கள். ஆட்டோவின் நண்பர்கள் தோற்கவே அவர் பேரரசர் பதவியை இளைஞர் ஃபிரெடெரிக்கிற்கு விட்டுக்கொடுத்து விலகிக் கொண்டார்.

ஏக்கன் (Aachen) என்ற இடத்தில் 1215-ல் ஜெர்மன் முடி சூடிய ஃபிரெடெரிக், பேரரசர் முடிக்கும் முயன்றார். ஆனால், ஜெர்மனியும் சிசிலியும் இணையாதவாறு, சிசிலியைத் தம்மிடமிருந்து மானியமாய்ப் பெற்றுப் பேரரசரின் மைந்தர் அந்த நாட்டை ஆள வேண்டுமென்று இன்னொசன்டு திட்டமிட்டார். ஆனல், அத் திட்டம் நிறைவேறுவதற்குமுன் போப்பு இறந்து போனர். பதின்மூன்றும் நூற்றாண்டின் தொடக்கத்தில் இன்னொசன்டின் ஆணையை மறுப்பவரோ எதிர்ப்பவரோ ஐரோப்பாவில் இல்லையென்ற அளவில் அவர் ஆதிக்கத்தின் உச்சியில் வீற்றிருந்தார்; தம்மை எதிர்த்தவரிடமிருந்து பேரரசர் பதவியைப் பறித்துத் தாம் விரும்பிய ஒருவரை அப் பதவியில் அமர்த்திப் போப்பாட்சியின் ஆற்றலை உலகறியச் செய்தார். போர்ச்சுகல், ஃப்ரான்ஸ், டென்மார்க்கு, நார்வே, ஸ்வீடன், போலண்டு, ஹங்கேரி முதலிய பல நாடுகள் போப்பின் ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்டன; போப்பைத் தலைவராய்க்கொண்டு ஐரோப்பா

ஐக்கிய நாடுகள் (United states of Europe) போல இயங்கின எனச் சொல்லலாம்.

போப்பின் ஆணையை ஏற்றுக்கொண்ட ஃப்ரெஞ்சு மன்னர் போதிய காரணமில்லாது விலக்கி வைத்திருந்த தம் முதல் மனைவியாருடன் மீண்டும் வாழ்ந்தார். போப்பினல் அமர்த்தப்பட்ட காண்டர்பரி மேற்றிராணியார் ஸ்டீபன் லாங்டனை (Stephen Langton) ஆங்கில அரசர் ஜான் முதலில் எதிர்த்துத் தோற்று, பின்னர்ப் போப்பின் அடி பணிந்து ஏற்றுக்கொண்டார். தென் ஃப்ரான்சில் அல்பிஜென்ஸியர்களை அழிக்க ஒரு சமயப் போரைத் தூண்டி, சமய மறுப்பாளர் என்று கருதப்பட்ட மக்களை மிகக் கொடுமையாய்த் துன்புறுத்திய பொறுப்பும் பழியும் இன்னொசன்டைச் சார்ந்தன. 1215-ல் கூடிய லாட்டெரன் அவையில், சமய மறுப்பாளர்களைத் தேடிப் பிடித்து உசாவியறிந்து ஒறுக்கும் நீதி மன்றம் (Inquisition) ஒன்று நிறுவ ஏற்பாடாயிற்று. சமய மறுப்புக் குற்றஞ் செய்தவர்களைக் கழுமரத்தில் கட்டி எரித்துவிட வேண்டும் என்று போப்பின் தலைமையில் அந்தத் திருச்சபையின் அவை முடிவு செய்தது. மேலும், அந்த அவை சிக்கலான சில சமயக் கோட்பாடுகளை ஆய்ந்து வரையறுத்தும், விளக்கம் தந்தும் முடிவு கண்டது. ஒவ்வொரு கிறித்துவரும் ஆண்டுக்கொரு முறையேனும் தம்முடைய சமய, ஒழுக்கக் குற்றங்குறைகளைக் குருமாரிடம் சொல்லி, மன்னிப்புக் கேட்டுப் பெறவேண்டும் என்பதும் அந்த அவையின் முடிவுகளுள் ஒன்று. இவ்வாறு சமயச் சீர்திருத்தத்தில் போப்பு மிகவும் ஆர்வமுடையவராயிருந்தார்.

பிரான்சிஸ்கன், டாமினிக்கன் துறவியர் கூட்டங்களை நிறுவ உதவி, திரிதுறவிகளைக் கொண்டு சிறந்த சமயப் பணிகளை ஆற்றவும், திருச்சபைக்கு அவர்களால் பெரிய ஆக்கம் தேடிக் கொள்ளவும் காரணமாயிருந்தவர் இன்னொசன்டு. கிறித்துவ மன்னர் யாவரும் போப்பிற்குக் கட்டுப்பட்டிருந்தனர். போப்புத் தலையிட்ட ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் அவருக்கே வெற்றி வாய்த்தது. ஆனல், அவருக்கு அரசியலே எல்லாமாய் இருந்ததால், போப்பாட்சி ஆன்மிகச் சத்தியில் மிகப் பின்னடைந்து விட்டது. நாட்டின்மேல் விதிக்கப்பட்ட தடையாணை அடிக்கடி பயன்படுத்தப் பட்டதால், அதன் முனை மழுங்கிப்போயிற்று. பொதுவாய் அவர் மக்கள் வெறுப்பிற்கு ஆளானர். இங்கிலாந்திலும், தென் ஃப்ரான்சிலும், ஜெர்மனியிலும் அவருக்குப் பெரிய மக்கள் எதிர்ப்பு ஏற்பட்டது. ஆயினும், போப்பாட்சியை ஆக்கிய பெரியார்களுள் இறுதியானவரென மூன்றாம் இன்னொசன்டைக் கருத வேண்டும்.

போப்பு மூன்றும் இன்னொசன்டு மிக்க திறமை வாய்ந்தவராய் இருந்ததுபோல, அவரைத் தொடர்ந்துவந்த பேரரசர் இரண்டாம் ஃபிரெடெரிக்கும் பேராற்றலைப் பெற்றிருந்தார். அவர் உருவத்தில் சிறியவர்; தம் குலத்திற்குரிய சிவப்பான தலைமுடியை மரபு வழியாகப் பெற்றிருந்தார். அளவற்ற ஆற்றலும், எண்ணங்களிலும் செயல் முறைகளிலும் தமக்கே உரிய முன் மாதிரியான புதுமையும் பெற்றிருந்த ஃபிரெடெரிக்கை அவர் காலத்தவர்கள் 'உலகு வியக்கும் பெரியார்' ('Stupor Mundi') எனக் கொண்டாடினார்கள். அவர் இடைக்கால அரசர்களைப் போலல்லாமல், தாம் வாழ்ந்த பதின்மூன்றும் நூற்றாண்டைக் கடந்து, பதினைந்தாம் நூற்றாண்டு ஆங்கில மன்னர் எழாம் ஹென்றி, ஃப்ரெஞ்சு மன்னர் பதினோராம் லூயி, மறுமலர்ச்சிக் கால இத்தாலிய மன்னர்கள் போன்றவர்களுக்கு முன் மாதிரியாயிருந்தார்; எளிய தென் இத்தாலிய மொழியில் செய்யுள்கள் எழுதிப் பின்னர் ஐரோப்பாவில் வளர்ந்த பொதுமக்கள் இலக்கியத்திற்கு முன்னோடியாயிருந்தார்; விஞ்ஞான, தத்துவ வளர்ச்சியில் மிக்க ஆர்வம் காட்டினார். அறிவுப் பசியெடுத்தவர்கள் வெளிநாட்டிற்கேகி அறிவுப் பிச்சை கேட்டு நிற்காதவாறு, சொந்த நாட்டிலே அப் பசியைத் தணிக்கக் கூடிய உணவைச் சமைத்து அளிப்பதற்கென, ஃபிரெடெரிக் நேப்பிள்ஸில் ஒரு பல்கலைக் கழகத்தைக் கண்டதாக அவர் வழங்கிய பல்கலைக் கழக உரிமைப் பத்திரம் பகர்கிறது. பாலெர்மோவில் (Palermo) காட்டு விலங்குகள் வாழ்வதற்கென ஒரு தோப்பும், சாலெர்னோவில் மருத்துவ முறைகளைக் கற்பதற்கென ஒரு பள்ளியும் நிறுவப்பட்டன. சுருங்கச் சொல்லின், அவருடைய ஆட்சியில் தென் இத்தாலியும் சிசிலியும் முற்போக்கான கருத்தும் கலையும் வளரும் நாடுகளாய்த் திகழ்ந்தன எனலாம். தாமஸ் அச்வினஸ் (Thomas Aquinas) போன்ற கிறித்தவ அறிஞர்கள் மட்டுமன்றி, சாரசேனியப் புலவர்களும் அக் கருத்துக் கலை முன்னேற்றத்தில் பங்குகொண்டார்கள். சமய, இன வேறுபாடின்றிப் பேரரசர் சாரசேனிய அறிஞர்களுடன் மிக நெருங்கிப் பழகினார்.

விஞ்ஞான வளர்ச்சியில் அவர் காட்டிய ஆர்வமும், இன வேறுபாடு பாராமல் யூதர்களோடும் முஸ்லிம்களோடும் அவர் கொண்டிருந்த நல்லுறவும், அவர் செயல்களைத் திருச்சபை ஐயுறவோடு பார்க்கக் காரணமாய் அமைந்திருக்கலாம். போப்பினால் வெளியிடப்பட்ட பல அறிக்கைகள், அவர் ஒரு முரண் சமயத்தினர் எனப் பழி சுமத்தி, அவர்மேல் வெறுப்புக்கொள்ளுமாறும் போர் தொடுக்குமாறும் மக்களைத் தூண்டின. இதனை மறுக்கும் முகத்தால் பேரரசர், தாம் குருமார்களின் பகைவரல்ல

ரென்றும், திருச்சபையின் குற்றம் குறைகளின் பகைவரென்றும் அறிவித்தார். உலகியலிலிருந்து விலகி வாழும் தூய குருமார் களைத் தந்தைமாரெனக் கொள்ளலாம்; சிற்றின்ப உணர்ச்சி, பேரவா, பிறர் பொருள் நயத்தல் முதலிய ஒழுக்கக் கேடுகள் திருச்சபையின் தூய்மையைக் கெடுத்து வலிமையையும் குறைத்து விட்டன; அவற்றைப் படை கொண்டு தாக்கி அழிப்பதே தம் தலையாய பணியென்று பேரரசர் கொண்டார்; ஆடுகளுக்கு இடையரையும், மக்களுக்கு அவர்களுடைய மேற்றிராணியாரை யும் உலகிற்கு ஆன்மிகத் தந்தையாரையும் திரும்பவும் தேடித் தர உறுதிபூண்டார். ஓநாய் போன்ற வல்லாளராயிருந்த போப்பின் முகமூடியைக் கிழித்து அவர் இப் பூவுலகப் பகட்டையும் உலகியலை யும் விடுத்து இயேசுவின் தூய அடிச்சுவட்டினைப் பின்பற்றிச் செல்ல வழி துறை காண்பதே தம் பெரும்பணியா யிருக்குமென்று பேரரசர் தெரிவித்தார். மேலும், மக்கள் மதிப்பிற்குப் போப்பைப் போலப் பேரரசரும் உரியவரே என்றும் அவர் கருதினர். ஒரு நாட்டுத் திருச்சபை மன்னராதிக்கத்தின்கீழ் இயங்குவதே சாலச் சிறந்ததெனக் கொள்ளுமாறு அவர் சமயக் கருத்தின் போக்குக் காணப்பட்டது.

நாடும் அரசும், திருச்சபையைப் போன்று, கடவுட் படைப் பாகும். அதன் ஆட்சிப் பொறுப்பையேற்றுள்ள மன்னர் நீதி வழங்கியும், அமைதி காத்தும், ஒழுங்கை நிலைநாட்டியும் உலகில் கடவுட் பணியையே செய்துவருவதால், அவர் எந்த வகையிலும் போப்பிற்குத் தாழ்ந்தவரல்லர். அவரவர் துறையில் இருவரும் பெரியவரே என்று இடைக்கால அரசர் நிலையைத் தனித் துணி வுடன் தெளிவுபடுத்தினர் பேரரசர் இரண்டாம் ஃபிரெடெரிக். நல்ல வலிவுள்ள மத்திய அரசினைக் காண விழைந்த பேரரசர், தென் இத்தாலியில் குருமார்களின் சிறப்புரிமைகளைப் பறித்தார்; பிரபுக்களை ஒடுக்கிக் கட்டுப்படுத்தினர். மானியதார்களின் கோட்டைகளுக்குப் பதிலாக அரசாங்கக் கோட்டைகள் எழுந் தன. அரச நீதிமன்றங்கள் நீதி வழங்கத் தொடங்கின.

பேரரசர் ஜெர்மனியையும் வட இத்தாலியையும் ஆண்டு வந்தார். இத்தாலியில் அவர் அதிகக் கவலையும் கருத்தும் செலுத் தியதால் ஜெர்மனி பேரரசர் முதலாம் ஆட்டோவின் காலத்தி லிருந்தே புறக்கணிக்கப்பட்டு வந்தது நன்கு தெரிந்திருந்த போதி லும், ஃபிரெடெரிக்கின் ஆட்சி அதனை மேலும் தெளிவாக்கிற்று. போப்பிற்கு வாக்களித்தபடி தம் மைந்தரிடம் சிசிலி இராச்சியத் தைப் பேரரசர் ஒப்படைக்கவில்லை; பேரரசர் ஜெர்மனியில் தங்காமல் இத்தாலியிலிருந்தே அந்த நாட்டை ஆண்டு வந்தார்.

அவருடைய ஆட்சிக் காலத்தில் ஜெர்மானியப் பேரரசர் இத்தாலி யிலிருந்து ஜெர்மனிக்கு மூன்று முறைகளே சென்று வந்தார். ஜெர்மனியில் வலிமை வாய்ந்த பிரபுக்களுள் பலர் பேரரசருக்குப் பங்காளிகளாகி அவருடைய ஆதிக்கத்தை மிகக் குறைத்துவிட்ட னர். அவருடைய படைகள் மிகவும் தொலேவிலிருந்த இரு நாடு களின் ஒழுங்கினைக் காக்குமளவு வலுவுடையதாயில்லை. ஆதலால், ஜெர்மானிய ஆட்சிப் பொறுப்பை அவர் சில வேளைகளில் துறந்துவிடுவதுமுண்டு. இத்தகைய ஆட்சியின் விளைவாகச் சிசிலியில் ஒடுக்கப்பட்ட நிலமானிய அமைப்பு ஜெர்மனியில் பேரரசருடன் கடுமையாய்ப் போட்டியிட்டது.

1239-ல் ஜெர்மன் பிரபுக்கள் நீதித்துறையிலும் படைத் துறையிலும் பெற்ற அதிகாரம், அவர்களை மத்திய ஆட்சியின் ஆதிக்கத்திலிருந்தே விடுவித்தது. பேரரசர் சில நகரங்களை அழித்தும், பல நகரங்களின் சிறப்புரிமைகளைக் குறைத்தும் பிரபுக்களின் உரிமைகளைப் பெருக்கினர். இத்தகைய சலுகை களைப் பெற்றும் பிரபுக்களுக்குப் போதுமென்ற மனமில்லை. பிரபுக்களின் ஆதிக்க வளர்ச்சி மேலும் அவர்களுக்கு ஆதிக்க ஆசையைத் தூண்டிற்று. அவர்கள் பேரரசரை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார்கள். அக் கிளர்ச்சியில் பேரரசர் மூத்த மைந்தரும் சேர்ந்தார். கலகம் செய்த இளவரசர் ஹென்றி தோற்றபின், சிறை பிடிக்கப்பட்டு, வாழ்நாளெல்லாம் சிறையிலே யிருந்து மடிந்தார். ஆனல், ஜெர்மானியக் கோமக்களும் (Dukes) கோட்டத் தலைவர்களும் (Counts) கட்டுக்கடங்காமலே இருந்து வரலானர்கள். ஜெர்மனிக்கு நல்லதோர் ஆட்சி அளிக்கச் செய்த முயற்சி பயன் தரவில்லை. பத்தொன்பதாம் நூற்றண்டு வரை ஜெர்மனி நிலமானிய அமைப்பின் கேடுகளிற் சிக்கி ஒன்று படாமலே இருந்தது.

ஃபிரெடெரிக்கிற்கும் போப்பிற்கும் நிகழ்ந்த போராட்டம் அவர்களுக்குள்ளிருந்த பூசல் காரணமாய் நிகழவில்லை. மேற்றி ராணியார்களின் தேர்தல் முறையினைப் பற்றியே நாலாம் ஹென்றி போப்போடு போராடினர். முதலாம் ஃபிரெடெரிக்கு, போப்பு மூன்றும் அலெக்ஸாண்டர் தேர்ந்தெடுக்கப்பட்டதை ஏற்றுக் கொள்ள மறுத்தார்; ஆனல், இரண்டாம் ஃபிரெடெரிக்கு, போப்பு ஒன்பதாம் கிரெகரியோடு ஒளிவு மறைவின்றி இத்தாலி நாட்டின் ஆட்சியுரிமைக்குப் போரிட்டார். இதுவே போப்பு-பேர ரசர் போராட்டத்தின் வளர்ச்சியாகும். சமயச் சார்புடையதாகத் தொடங்கிய போராட்டம் வெளிப்படையாகவே உலகியலைப் பற்றிய போராட்டமாய் வளர்ந்துவிட்டது.

பட்டமேற்ற நாள் முதலே பேரரசர் சிலுவைப் போருக்குச் செல்வதாகப் போப்பிற்கு வாக்களித்திருந்தார். ஆனால், பண்டைய நாள் அறப்போர் வீரருடைய உணர்ச்சி ஃபிரெடெரிக்கிற்குச் சிறிதுமில்லை. முஸ்லிம்களைத் தாக்கிப் போரிட்டு வெற்றி பெறுவதில் அவருக்கு ஆர்வமும் இல்லை. அவர் போப்பின் வற்புறுத்தலுக்காக 1227-ல் பிரிண்டிசியில் கப்பலேறினார்: ஆனால், உடல் நலமில்லையென்று சொல்லி மூன்றும் நாளே திரும்பிவிட்டார். இதைக் கேட்டுச் சினங் கொண்ட போப்பு அவரைச் சமயத்திலிருந்து விலக்கி வைத்தார். ஆதலால், அவர் 1228-ல் சிலுவைப் போரில் கலந்துகொள்வதற்காக மீண்டும் புறப்பட்டுச் சென்றார்; சாரசேனியர்களிடம் பகைமையுணர்ச்சியில்லாததால், அவர்களோடு போரிடுவதற்குப் பதிலாக, பேரம் பேசினார்; தமக்கு முன் போரிட்டவர்கள் படை வலிமையால் பெற்றதைக் காட்டிலும் தம் வெல் திறத்தால் அதிகமான உரிமைகளைத் திருப்பயணம் செல்லும் கிறித்துவர்களுக்குச் சாரசேனியர்களிடமிருந்து வாங்கித் தந்தார். ஜெருசலம், பெத்லேகேம், நாசரெத்து என்னும் இடங்கள் கிறித்துவர்களுக்குக் கிடைத்தன. அவர் ஜெருசல அரசர் மகளை மணந்து அங்குள்ள கோயிலில் தம் கைகளாலேயே முடியும் சூட்டிக்கொண்டு நாடு திரும்பினார்.

பேரரசர் வெளி நாடு சென்றிருந்த காலத்தில், போப்பின் படை நேப்பிள்ஸ் நாட்டை அழித்தது. மேலும், பேரரசரை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யுமாறு ஜெர்மானியர் தூண்டப்பட்டனர். 1230-ல் பேரரசரும் போப்பும் சான் ஜெர்மானோ (San Germano) என்ற இடத்தில் சந்தித்து, நாட்டிற்கு அமைதி அளித்தனர். ஆனால், இந்த அமைதி நீடிக்கவில்லை. முதலாம் ஃபிரெடெரிக்கின் தாழ்விற்குக் காரணமாயிருந்த லம்பாடி நகரங்களின் சங்கத்தின்பால் பேரரசரின் கவனம் திரும்பியது. கான்ஸ்டன்ஸ் உடன்படிக்கைக்குப் பின், மத்திய இத்தாலியிலும் நகரச் சங்கங்கள் தோன்றி வளர்ந்து பேரரசரை எதிர்ப்பதில் முனைந்திருந்தன. அவை வளமடைந்து வலிவு பெற்றிருந்த போதிலும், பொறாமையினால் பிளவுபட்டிருந்தன். இதைப்பயன்படுத்திக்கொண்டு பேரரசர் அவற்றோடு கடுமையாய்ப் பொருதார். இத்தாலிய நகரங்கள் 1237-ல் தோல்வியுற்றன. பேரரசர் வெற்றி வாகை சூடிவிடுவாரென்பதைக் கண்ட போப்பு, நகரங்களோடு சேர்ந்துகொண்டு பேரரசரைச் சமயத்திலிருந்து விலக்கினார். அதற்குப் பின் விரைவில் ஒன்பதாம் கிரெகரி இறந்தார். நான்காம் இன்னொசன்டு போப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். புதிய போப்பு, பேரரசரின் பழைய நண்பர். ஆயினும், நான்காம் இன்னொசன்டு, தம் பதவி காரணமாய் நட்புணர்ச்சியை அறவே

விடுத்து, ஃப்ரான்சிற்குச் சென்று, 1245-ல் ஓர் அவையைக் கூட்டி, 'பேரரசர் ஒரு ஃபாரோ (Pharo), ஒரு ஹெராது (Herod), ஒரு நீரோ (Nero)' என்றெல்லாம் சமயப் பகைவர்களின் பெயர்களை அவருக்கு அடுக்கடுக்காய்ச் சூட்டி, மிக வன்மையாக அவர்மேல் குற்றஞ்சாட்டினர். இப் பழிச் சொற்களைக் கேட்டுப் பேரரசர் அயரவில்லை. 'பேரரசர்களைப் பதவியிலிருந்து நீக்கப் போப்பு களுக்கு உரிமை இல்லை; ஏனெனில், அவர்கள் தங்கள் முடியைக் கடவுளிடமிருந்தே பெற்றிருந்தார்கள்; அதைப் பறிக்கக் கீழ்க் குலத்தோன்றலாகிய ஒருவருக்கு (போப்பிற்கு) என்ன உரிமை உளது'! என்று பேரரசர் ஆர்ப்பரித்தார். போப்பு ஒரு போட்டிப் பேரரசரைத் தோற்றுவித்துப் போராட்டத்தைக் கடுமையாக் கினர். மக்களிடையில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த திரி துறவிகள் பேரரசரை எதிர்த்துப் போப்பிற்கு ஆதரவு தேடினர்கள்.

சிலுவைப் போரில் பெருவெற்றியுடன் திரும்பிய பேரரசரை எதிர்த்துப் போப்பு ஒரு சமயப் போரைத் தொடுத்தார். சிலுவைப் போரில் ஈடுபட்டவர்களுக்கு அளிக்கப்பட்ட சலுகை களும் பரிசுகளும் பேரரசரை எதிர்த்துப் போராடியவர்களுக்கு வழங்கப்பட்டன. ஜெர்மனியில் உள்நாட்டுப் போர்கள் மலிந்தன. 1248-ல் ஹாலண்டு நாட்டு வில்லியம் (William of Holland) ஏக்கன் நகரில் ஜெர்மன் பேரரசராக முடி சூட்டப் பெற்றார்; ஃபிரெடெரிக்கிற்கு நஞ்சூட்டிக் கொல்லவும் சதி செய்தனர். 1247-ல் பார்மாவில் அவர் பெருந்தோல்வியடைந்தார். ஆனால், அவர் அஞ்சா நெஞ்சினராயத் துணிவுடன் இறுதி வரையில் போரிட்டிறந்தார். அவர் இறப்பதற்கு முன் அவருடைய படைகள் இத்தாலியில் வெற்றி முழக்கஞ் செய்து உரோம நகரைக் கைப் பற்றும் நிலையிலிருந்தன. போப்புடன் போராட்டம் முடிவுறாத படி, பேரரசர் மறைவு குறுக்கிட்டது.

இரண்டாம் ஃபிரெடெரிக்கு இடைக்கால அரசராயினும், இக் கால அரசருக்குள்ள சில பண்புகளைப் பெற்றிருந்தார். அவரு டைய எண்ணங்களும செயல்களும் சமயத்திற்குக் கட்டுப்படாமல், பெரும்பாலும் அரசியற் கருத்துகளால் உருவாக்கப்பட்டிருந்தன. சிசிலியில் ஒரு வரம்பிலா முடியரசு (Absolute monarchy) நிறுவுவதில் நிலமானியக் கருத்துகள் அவருக்குத் தடையா யில்லை. ஐரோப்பாவில் இக்கால நாடுகளில் சிசிலியே முதலாவ தாகக் கருதப்படுகிறது. ஃபிரெடெரிக்கு, அபெலார்டு மரபில் வந்த ஒரு சுதந்தரச் சிந்தனையாளர். அவர் பேரரசினைச் சுதந்தர மாய் ஆளும் தம் உரிமையை நிலைநாட்டவே போப்போடு

போராடினார். அப் போராட்டம் இறுதியில் தமக்கும் தம் குடும்பத்திற்கும் மாறாகவே முடியுமென்பதையும் அவர் உணராமலில்லை; ஆயினும் தம் முயற்சியில் மனம் தளரவேயில்லை. பேரரசர் போப்புடன் போராடுவதற்கு மற்ற முடி மன்னர்களையும் தம்மோடு சேர அழைப்பு விடுத்தார். போராட்டத்தில் தாம் வீழ்ந்தால், வேறு யாரால் போப்பை எதிர்த்து நிற்க முடியும் என்ற வினாவையெழுப்பி, அரச நிலைமையைச் சுட்டிக் காட்டினார். ஃபிரெடெரிக்கை இடைக்கால அரசுரிமைக்குக் காவலர் எனலாம்.

இத்தாலிய அரசைத் தோற்றுவிக்க வேண்டும் என்ற அவரது அவா நிறைவேறவில்லை. சிறப்பான சட்டத் தொகுப்பு (Liber Augustalia) ஒன்றை அவர் வெளியிட்டார். அவருடைய ஆட்சித் துறைகளில் முதலிடம் பெற்றிருப்பது பொருளாதாரத் துறையே. அவர் உள்நாட்டு ஆயத்திற்குப் பதிலாக எல்லைப் புறங்களில் சுங்க வரி விதித்தார். அது காப்பு வரியாகவும் பயன்பட்டது; ஆயினும், அவர் வரலாற்றில் வால் வெள்ளியைப் போலத் தோன்றி ஒளி வீசி மறைந்தார். அவர் மரபு அழிந்தது போல அவரது சாதனையும் மறைந்தது. அவரது அரிய ஆட்சித் திறத்தைப் பாராட்ட இடைக்காலம் மறுத்தது.

இரண்டாம் ஃபிரெடெரிக்கோடு ஹோஹன்ஸ்டாஃபென் மரபு நலிந்து, பதினெட்டாண்டுகள் கழித்து மறைந்தது. இத்தாலிய நகரங்கள், மக்கள் வகுப்புகள், நாட்டுக் குடும்பங்கள் யாவும் ஃகெல்ஃப்கள் (போப்பின் கட்சி), ஃகிப்பெலின்கள் (பேரரசுக் கட்சி) எனப் பிளவுபட்டு, போரில் ஈடுபட்டிருந்தன. போப்பாட்சி ஹோஹன்ஸ்டாஃபென் வமிசத்தை அழிப்பதில் கண்ணும் கருத்துமாயிருந்தது; அது மூலம் போப்பின் நாடு தடையேதுமின்றி விரிவடைவதற்கான வழியைத் தேடியது. ஜெர்மனியில் பேரரசராயிருந்த நான்காம் கான்ராடு (Conrad-IV) அந்த நாட்டைவிட்டு வெளியேறிச் சிசிலியை அடைந்தார். அவர் போப்போடு ஒப்பந்தம் செய்துகொண்டு அமைதி காண விரும்பினார். ஆனால், நான்காம் இன்னொசென்டு அதற்கிணங்க மறுத்தார். ஹோஹன்ஸ்டாஃபென் என்ற பெயரையே அவர் வெறுத்தார். கான்ராடும் அவர் உடன் பிறந்த மான்ஃபிரெடும் (Manfred) சேர்ந்து தென் இத்தாலியையும், சிசிலியையும் வசப்படுத்திக் கொண்டனர். ஆனால், திடீரென்று கான்ராடு 1254-ல் இறந்தார். மான்ஃபிரெடு 1258-ல் அரசரானார். 1261-ல் ஃப்ரெஞ்சு நாட்டவரான நான்காம் அர்பன் (Urban-IV) போப்பின் பீடத்தில் அமர்ந்தார். சிசிலி நாட்டு ஆட்சிப் பொறுப்பை ஆஞ்சோ நாட்டுச் சார்லசிற்கு (Charles of Anjou) அளித்து, சிசிலி நாட்டைப் படை

யெடுத்துப் பிடித்துக்கொள்ளுமாறு போப்பு அவருக்கு 1263-ல் அழைப்பு விடுத்தார். பெனிவென்டோ (Benevento)விற்கு அருகில் நடைபெற்ற சண்டையில் சார்லசிடம் தோற்று மான் ஃபிரெடு இறந்தார். நான்காம் கான்ராடு விட்டுச் சென்ற ஒரே மைந்தரான கான்ராடினோ (Conradino) ஒரு ஜெர்மானியர். அவர் உண்மையான ஹோஹன்ஸ்டாஃபென் சிறுவராயிருந்தும், மிக்க துணிவுடன் கிப்பெலின்களின் அழைப்பையேற்று ஒரு சிறு படையுடன் இத்தாலிக்கு வந்தார். இறுதி ஹோஹன்ஸ்டாஃபென், கான்ராடினோ டக்லியாக்கோசோ (Tagliacozzo) என்ற போர்க் களத்தில் சிறைபட்டு நேப்பிள்ஸில் கொல்லப்பட்டார். ஃகெல்ஃபு கள் ஆதிக்கம் பெற்றனர்.

இடைக்காலத்தின் (1137-1268) இடைப்பகுதி முழுவதும் ஐரோப்பிய வரலாற்றில் பெரும்பங்கு கொண்டிருந்த ஹோஹன் ஸ்டாஃபென் குடும்பம் 1268-ல் முடிவுற்றது. ஐரோப்பாவில் ஏகாதிபத்தியத்தை ஏற்படுத்தச் செய்த இடைவிடா முயற்சியும் அதனுடன் முடிவடைந்தது. அந்த ஈடேறாத ஏகாதிபத்தியக் கொள்கைதான் இடைக்கால அரசியல் சமயக் கருத்துகளை ஊக்கு வித்தது. நீண்ட போராட்டத்திற்குப் பின் போப்பாட்சி வெற்றி பெற்றது. அந்த வெற்றியினால் அதன் ஆதிக்கத்திற்கு ஏற்பட்ட வீழ்ச்சி, அது தோற்றிருந்தாற்கூட ஏற்பட்டிராது. தங்கள் ஆதிக்க ஆசையை நிறைவேற்றிக் கொள்ளவும், சொந்த விருப்பு வெறுப்பு களுக்காகவும், போப்புகள் சமயத்தின் உயரிய நோக்கங்களை அடியோடு மறந்தார்கள்; தங்களுடைய மிக உயரிய ஆன்மிகச் சத்தியை மிக இழிந்த வகைகளில் பயன்படுத்தினார்கள். போப் ஆட்சி பெற்ற வெற்றியின் பயன் போப்புகளைச் சேரவில்லை; அது ஃப்ரெஞ்சு நாட்டிற்கு நலம் பயந்தது. அடுத்த முப்பத் தேழாண்டுகளுக்குள் போப்புகள் இத்தாலியை அரசியற் குழப்பத் தில் ஆழ்த்திவிட்டு, ஃப்ரான்சிற்குச் சென்று, அந்த நாட்டுக் கொள்கை முறையின் கருவிகளாய் அவீன்யான் (Avignon) என்ற ஊரில் உரிமையிழந்து வாழவேண்டியதாயிற்று. அச் சிறைவாசம் அவர்கள் முற்பகல் செய்த தீச்செயல்களின் பிற்பகல் விளைவாகும்.

இரண்டாம் ஃபிரெடெரிக் இறப்பதற்கு முன்னரே பேரரசர் பதவி ஐரோப்பிய மன்னர் பலருக்கு ஒருவர்பின் ஒருவருக்குப் போப்பினால் அளிக்கப்பட்டது. ஃப்ரான்ஸ் நாட்டு இராபர்ட்டு டென்மார்க்கு இளவரசர், நார்வே தேசத்து ஹேகன் (Hakon), இறுதியாகத் துரிங்கியாவைச் சேர்ந்த ஹென்றி, ஹாலண்டு நாட்டு வில்லியம் இவ்வாறு ஒவ்வொருவராய்ப் பேரரசின் பொறுப்பையேற்று முடி சூடிக்கொள்ள அழைக்கப்பட்டனர்.

இறுதியாக வில்லியத்திற்கு ஜெர்மனியில் ஆதரவு திரட்ட, போப்பு பெருமுயற்சி செய்தார். 1256-ல் அவர் கொல்லப் பட்டார். கார்ன்வால் ரிச்சர்டும், காஸ்டில் அல்ஃபான்சோவும் பேரரசராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆனால், அவர்களுக்கு நாட்டில் ஆதிக்கம் செலுத்த முடியவில்லை. அல்ஃபான்சோ ஜெர்மனிக்கு வரவே இல்லை. ரிச்சர்டு வந்தும் பயனில்லை. தூய உரோமானியப் பேரரசாகிய ஜெர்மன் இராச்சியத்தில் 1254 முதல் 1273 வரை எவரும் பேரரசர் என்ற பட்டம் தாங்கி ஆட்சி செய்ய வில்லை. இந்த இருபதாண்டுக் காலத்தை நீண்ட ஆட்சி இடை யீடு (The Great Interregnum) என்று குறிப்பிடுகிறார்கள். இந்த இடையாட்சிக் காலத்தில் நாட்டுக்கு ஓர் அரசரில்லை. ஆனால், இளவரசர் பலரும், கோமக்களும் தத்தம் பகுதிகளைத் தங்கள் இச்சை போல ஆண்டு வந்தார்கள். சிறிதும் பெரிதுமான பல நாடுகளின் கதம்பமாய் ஜெர்மனி காட்சியளித்தது.

பேரரசர்-போப்பு போராட்டத்தால் இத்தாலியும் ஜெர்மனி யும் பல சிறுசிறு பகுதிகளாய்ச் சிதறி, பத்தொன்பதாவது நூற்றாண்டு வரையில் ஐக்கியப்படாமலிருந்தன. ஜெர்மனி ஒன்று படாதபடி நிலமானியப் பிரபுக்கள் தடுத்தார்கள். இத்தாலியின் ஒன்றிப்பு, சுதந்தர நகரச் சமூகங்களால் தடைப்பட்டது. ஜெர்மன் பேரரசு இத்தாலியை இழந்தது. நார்மானியச் சிசிலியின் தலை சிறந்த நாகரிகம் அஞ்செவின் கொடுங்கோன்மையால் அழிந்து போயிற்று. இடைவிடாத போர்கள் காரணமாக இத்தாலியில் சுதந்தர நகர ஆட்சி கொடுங்கோன்மையாய்த் திரிந்தது. ஆனால், அச் சர்வாதிகார ஆட்சி கலைக்கும் இலக்கியத்திற்கும் பேராதரவு தந்தது. போப்புகளுக்கும் பேரரசர்களுக்கும் நிகழ்ந்த போராட் டத்தில், இறுதியாகப் போப்பாட்சிக்கு வெற்றி கிடைத்தது போலத் தோன்றியது. போப்புகள் பேரரசர்களும் ஆனார்கள். ஆனால், இரு நிறுவனங்களும் ஒன்றையொன்று ஒடுக்கி வலி விழந்து, வாழ்விழந்தன. போராட்டத்தின்போது உரோமானியச் சட்டங்களைப் பலர் ஊன்றிப் படித்தனர்; சட்ட அறிவு நாட்டில் வளர்ந்தது.

போப்பாட்சிக்கும் பேரரசிற்கும் இடையே நிகழ்ந்த நீண்ட போராட்ட வரலாற்றைத் தொகுத்துக் கூறி மேலே செல்வோம். இரு நூற்றாண்டுகளில் (1056—1254) மூன்று முறை போராட்டம் நடைபெற்றது. ஒவ்வொரு முறையும் போப்புகளோடு போராடி யவர்கள் மன உறுதியும், வாய்ப்பு வசதியும் பெற்ற பேரரசர்களே யாயினும், இறுதியில் தோல்வியே அடைந்தார்கள். முதற்பருவத் தில் களத்தில் சந்தித்தவர்கள் நான்காம் ஹென்றி (1056—1106) யும், போப்பு கிரெகரியும் ஆவார்கள். மேற்றிராணியார்களை

உலகியல் கட்டுப்பாடுகளிலிருந்து விடுவித்தலே திருச்சபையின் நோக்கமாயிருந்தது. தம் உரிமையையும், நாட்டு மரபையும் வற்புறுத்திய குற்றத்திற்காகப் பேரரசர் 1077-ல் கனோசாவில் போப்பிடம் மண்டியிட்டார். தந்தையாரைத் தொடர்ந்து போரிட்ட ஐந்தாம் ஹென்றி (1106—1125) 1122-ல் வொர்ம்ஸ் ஒற்றுமைப் பத்திரத்தில் கையெழுத்திட்டார்.

இரண்டாவது பருவத்தில் போப்புகளின் சுதந்தரத் தேர்தலும், 'திருச்சபைக் கொள்கை முறையை உருவாக்குபவர் போப்பா, பேரரசரா?' என்ற வினாவுமே போராட்டக் காரணங்களாய் அமைந்தன. ஃபிரெடெரிக்குப் பார்பரோசாவும் (1152-1190) மூன்றும் அலெக்ஸாண்டரும் எதிர்ப்பட்டனர். ஷார்லேமேன் காலத்திலிருந்து வழிவழியாய் வந்த உரிமைகளைப் பேரரசர் விட்டுக் கொடுக்கவேண்டி வந்தது. பதினேழு ஆண்டுகளாக ஏற்றுக் கொள்ள மறுத்த போப்பு அலெக்ஸாண்டருக்கு அடிபணிந்து பேரரசர் (1177) அமைதி காண வேண்டியதாயிற்று.

ஆறும் ஹென்றி கான்ஸ்டன்ஸை மணந்துகொண்டு சிசிலியைப் பேரரசோடு இணைத்துப் போராட்டத்தின் மூன்றுவது பருவத்திற்கு வழி கோலினர். இத்தாலி நாடு பேரரசோடு இணைந்து விடில், போப்பிற்கு உலகியல் ஆதிக்கம் இல்லாமலே போய்விடும். ஆதலால், திருச்சபைச் சுதந்தரம் என்ற போர்வையில் போப்புகள் (Honorius-III, Gregory-IX, Innocent-IV) இத்தாலிய ஆதிக்கத்திற்காகப் போராட்டத்தில் இறங்கினுர்கள். அவர்களை எதிர்த்தவர் இடைக்காலப் பெரியார் இரண்டாம் ஃபிரெடெரிக்கு (1212–1250) ஆவார். அவர் தமக்குமுன் போரிட்டவர்களைவிடத் தம் கொள்கையைத் தெளிவாய்ச் சொல்லி, மிகத் திறமையாய்ச் செயலாற்றியும், இறுதியில் தோற்றூர். தோல்வியின் விளைவு அவர் வமிசத்தின் அழிவாயிற்று.

பருவந்தோறும் போராட்டக் காரணங்களின் நேர்மையும் முறைகளின் ஒழுக்கமும் மேலும் மேலும் குன்றி வந்தன. தொடக்கம் முதல் இறுதி வரை போப்பாட்சிக் கூட்டாளிகள் திருச்சபையின் பெயரைச் சொல்லித் தங்கள் நோக்கங்களை நிறைவேற்றுவதிலேயே ஈடுபட்டிருந்தார்கள். ஜெர்மன் இளவரசர்கள், தென்னித்தாலிய நார்மானியர்கள், லம்பார்டி நகரச் சமுகங்கள் யாவரும் பேரரசர்களான ஹென்றிகளையும் ஃபிரெடெரிக்குகளையும் தோற்கடிப்பதில் பங்கு கொண்டார்கள். ஜெர்மன் இளவரசர்கள் பேரரசரின் மேலாண்மையை எதிர்ப்பதற்கும், நகரச் சமுகங்கள் தங்கள் உரிமைகளைக் காத்துக்கொள்வதற்கும் வற்

புறுத்துவதற்கும், இன்னும் சில நாடோடி வீரர்கள் புது இராச்சி யங்களை நாடிப் பெறுவதற்கும் திருச்சபையின் ஆதரவாளர் களானுர்கள்.

போப்பு-பேரரசர் போர்களின் விளைவு, என்னவானுலும் இறுதி காணவேண்டும் என்று நிகழ்கிற ஏனைய போர்களின் விளை வாகவே இருந்தது. வெற்றி அதனைப் பெற்றவர்களுக்குப் பெய ரளவிலேதான் கிட்டியது. ஆனுல், போப்பாட்சியும் பேரரசும் வீழ்ந்தன. அவற்றுள் ஒன்று தன்னுடைய நோக்கங்களையும் முறை களையும் மாற்றிக்கொண்ட பின்னரே எழ முடிந்தது. மற்றென்று, எழவேயில்லை என்று போப்பாட்சி தன்னுடைய ஆன்மிகச் சத்தியை மறந்து, ஆன்மிகக் கருவிகளை விடுத்து, போர்ப்பாதையில் இறங்கிப் போர்க் கருவிகளைப் பயன்படுத்தியதோ அன்றே அது தடம் புரண்டு தவறுன பாதையில் வீழ்ச்சி நோக்கிச் சென்றது. கி.பி. 1075-ல் பதவிச் சின்னமளிப்பு உரிமையை உலகியல் அதிகாரி களிடமிருந்து பறிக்க, ஹில்டிபிராண்டு திட்டமிட்டுத் திருச் சபையை அரசரோடு மோதவிட்ட காலமுதல், திருச்சபை மேலும் மேலும் உலகியலில் ஈடுபட்டு, உலகியலாதிக்க ஆசை அளவு மீறி, தடம் புரண்ட நிலையில் நெடுந்தூரஞ் சென்று, இறுதியாகப் பேரதிர்ச்சிகளால் (Tragedy at Anagin 1303, Babylonish Captivity, 1305-18, Schism, 1379-1415) தன் ஆன்மிக நினைவு பெற்று, தனக்குரிய நேரிய, ஆனுல், ஒடுக்கமான வழியில் (The strait and narrow way) திரும்பிற்று.

# அதிகாரம் 11

## பல்கலைக் கழகங்கள்

பல்கலைக் கழகங்கள் இடைக்காலப் படைப்பே, நாட்டுப் பற்று, மொழிப்பற்றுக் காரணமாக நாடுதோறும் அவை தோன்ற லாயின. நகரங்களிலும், தலைக்கோயில்களிலும் (Cathedrals) நிறுவப்பட்டிருந்த பள்ளிகள் விரிவடைந்து பல்கலைக் கழகங்களாய் வளர்ந்தோங்கின. சமுதாயத்தில் மக்கள் சிறந்த வகையில் வாழ விழைந்தார்கள். வாழ்வு சிறக்க அறிவும், அறிவைப் பெறக் கல்வியும், கல்வியை அளிக்கப் பள்ளிகளும் கல்லூரிகளும் தேவை என்ற எண்ணம் இடைக்காலத்தில் உருப்பெற்றது. நாடோடி வாழ்வில் கண்ட சுதந்தரத்தையும், தன்னம்பிக்கையையும், நாகரிக வாழ்வில் மலர்ந்த பாதுகாப்பு, கூட்டுறவு, பொருள் வளத் திற்கேற்ப உருவாக்குவதே கல்விப் பணியாயிற்று. கற்றுத் தேர்ந்தவர்களே அக்கால வாழ்க்கைத் துறைகள் பலவற்றிலும் முன்னணியில் இருந்தார்களாகையால், கற்கும் வசதிகள் மிகுதி யாய்த் தேவைப்பட்டன. கற்போர் எண்ணிக்கையும் கற்பிப் போர் தொகையும் பெருகவே, பல்கலைக்கழகங்கள் தழைத்தன.

பல்கலைக் கழகத்தைக் குறிக்கும் ஆங்கிலச் சொல்லாகிய 'University' என்பது, இலத்தீன் சொல்லாகிய 'Universitas' என்பதினின்றும் பிறந்தது. நீண்ட இலத்தீன் சொற்றொடரின் குறுக்கமாகிய இச்சொல் ஏறத்தாழக் கி.பி. 1400 முதல் வழக்கில் இருந்து வருகிறது. பேராசிரியர்கள் மாணவர்களின் சங்கம் (Guild) என்ற பொருளில் அச்சொல் (Universitas) வழங்கி வந்தது. பின்னர் ஏறக்குறைய ஒரே காலத்தில்-பதின்மூராம் நூற் றூண்டில்-பல்வேறு இத்தாலிய, ஃப்ரெஞ்சு நகரங்களில் பல்கலைக் கழகங்களால் விளங்கவிருந்த பள்ளிகள் தோன்றி எண்ணிக்கை யிலும் அளவிலும் வளர்ந்தன. இறையியல் (Theology), தத்துவம் (Philosophy), சமூகச் (Civil) சட்டம், திருச்சபைச் (Canon)

சட்டம், மருத்துவம் முதலியவற்றைக் கற்பித்தலே அவற்றின் நோக்கமாகும்.

பல்கலைக்கழப் படிப்பிற்கும் ஆராய்ச்சிக்கும் கிரேக்கர்களைப் போல உரோமானியர்கள் அவ்வளவு மதிப்போ முதன்மையோ தரவில்லை. ஏதென்ஸ் பல்கலைக் கழகத்தில் கி. மு. முதல் நூற்றாண்டில் சிசரோ (Cicero) ஹோரஸ் (Horace), ஜூலியஸ் சீசர் (Julius Caesar) போன்றவர்கள் மாணவர்களாய்ச் சேர்ந்து சிறிது காலம் கற்று வந்தார்கள் என்பது அறியக் கிடக்கிறது. உரோமப் பேரரசர் ஹேடிரியன் (Hadrian) கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் நிறுவிய அறிவுக் கூடம் ஐந்தாம் நூற்றாண்டு வரை நீடித்திருந்தது. கிரேக்க அறிவுத் தெய்வமாகிய அதீனா (Athena)வின் பெயரால், அது அதீனியம் (Athenaeum) என்று வழங்கப்பட்டது. உரோமப் பேரரசு வீழ்ந்த பின், கான்ஸ்டான்டிநோப்பிளைத் தலை நகரமாய்க் கொண்ட பைசான்டியப் பேரரசு, கிரேக்கக் கல்வி முறைகளைப் பின் பற்றிக் கி.பி. 425-ல் ஒரு பல்கலைக்கழகத்தை அமைத்தது. ஆறும் நூற்றாண்டில் ஜஸ்டினியன் என்பார் (527-65) ஒரு பல்கலைக் கழகத்தை நிறுவினார். கல்வியை வளர்ப்பதில் கரோலிங்கிய வமிச மன்னர்கள் பெரும் பங்கு கொண்டார்கள். திருச்சபை பல பள்ளிகளை ஏற்படுத்தியது. புதிய முறையில் அழகாய் எழுத மாணவர்களுக்குக் கையெழுத்துப் பயிற்சி அளிக்கப்பட்டது. பண்டைய நூல்கள் படி செய்யப்பட்டுக் காக்கப் பெற்றன. ஜெர்மனியில் முதலாம் ஆட்டோவும் (Otto-I) இங்கிலாந்தில் ஆல்ஃபிரெடும் (Alfred), ஃப்ரான்சில் சிற்றரசர் சிலரும் கல்விப் பணியை மேற்கொண்டனர். பொருளாதாரத் துறையிலும், அரசியல் துறையிலும் முன்னேற்றம் ஏற்படவே, கல்வி வசதிகள் மிகுதியாய்த் தேவைப்பட்டன. மடங்களும் மேற்றிராணியார்களும் பள்ளிகளை நிறுவிக் கற்பிக்கப் பெரு முயற்சியை மேற்கொண்டார்கள். திருச்சபைப் பள்ளிகளுக்கே மக்களாதரவும் மதிப்பும் கிடைத்தன. பாரிஸ், கொலோன் (Cologne) முதலிய இடங்களில் தலைக்கோயில் பள்ளிகளையே மாணவர்களும் ஆசிரியர்களும் பெரிதும் விரும்பித் தேடிச் சென்றார்கள். உரோமானியக் குடியரசில் காணாத பள்ளிப் பயிற்சியையும் கல்வியறிவையும் கத்தோலிக்கத் திருச்சபை அளிக்க முன் வந்தது.

உரோமப் பேரரசில் மக்கள் நகரப் பள்ளிகளில் பயின்றார்கள். பேரரசின் வீழ்ச்சி காரணமாய் நகரப் பள்ளிகள் மூடப்பட்ட பின் மேலை ஐரோப்பாவினுல் கற்பிக்கும் பொறுப்பைக் கிறித்துவக் கோயில்களும் மடங்களும் ஏற்றுக்கொண்டன. சமய வாழ்வினை மேற் கொள்வதற்கான பாடத் திட்டத்தையே அப் பள்ளிகள்

கையாண்ட போதிலும், சமயச்சார்பற்ற (Secular) அறிவுத் துறைகளும் அங்கு இடம் பெற்றிருந்தன. 'இலக்கணம்' என்ற பெயரில் இலத்தீன் மொழியையும் இலக்கியத்தையும் மாணவர்கள் கற்றூர்கள்; தருக்க நூலும் சட்டமும் பயின்று பேசவும் எழுதவும் பழகித் தேர்ச்சியும் திறமையும் அடைந்தார்கள். கணக்கும், வானநூலும், இசையும் கல்வித் திட்டத்தில் இடம் பெற்றிருந்த மற்ற அறிவுக் கலைகளாகும். இத்தகைய இலக்கணப் பள்ளிகளை (Grammar Schools) அன்றி நகரச் சங்கங்களும், நில மானியதாரர்களும் தொடக்கப் பள்ளிகளை நிறுவியிருந்தார்கள். அப் பள்ளிகள் நாட்டு (Local) மொழிகளைப் படிக்கவும் எழுதவும் கற்பித்ததோடு இசைப் பயிற்சியும் அளித்தன. பெண் துறவிகள் வாழ்ந்த மடங்களைச் சார்ந்த பள்ளிகளில் பல பெண்கள் எழுதப் படிக்கப் பழகியும், குடும்பக் கணக்கு, தையல் வேலை, மருத்துவம் கற்றும், தங்களை வாழ்க்கைக்குத் தகுதியாக்கிக் கொண்டார்கள். இளம் பிரபுக்களுக்குச் சிறப்புக் கல்வி அளிக்கப்பட்டது. திறமை வாய்ந்த ஏழை மாணவர்கள் கற்பதற்கான வசதிகளைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் அளிக்கச் சமய நிலையம் முன் வந்தது. இடைக்காலத்தில் செல்வர்களைவிட வறிய மாணவர்களே மிகுதியாய்ப் பள்ளிகளிற் சேர்ந்தார்கள். ஏழை மாணவர்களுட் சிலர், பிற்காலத்தில் தலை சிறந்த எழுத்தாளர்களாய், அரசியல் வல்லுநர்களாய், போப்புகளாய்ப் பேரும் புகழும் பெற்றனர்.

இடைக்காலத்தின் தொடக்கத்தில் பள்ளிகளும், அவற்றிற் படித்த மாணவர்களின் எண்ணிக்கையும் மிகக் குறைந்திருந்தன. அதன் இறுதியில் கற்றவர்களின் தொகை கணிசமான அளவு உயர்ந்தது. அக் காலத்தில் குருமார்களே நன்கு கற்றுத் தேர்ந்திருந்தார்கள். இடைக்காலக் கருத்தையும் இலக்கியத்தையும் உருவாக்கி வளர்த்தவர் சமயத் துறையினரே. நகரங்கள் தோன்றி, வாணிகத்தால் வாழ்வு வளம் பெறத் தொடங்கியதும், கல்வித் துறையில் ஆர்வம் பெருகிற்று; நகரப் பள்ளிகள் புத்துயிர் பெற்றன. பதினோராம், பன்னிரண்டாம், நூற்றுண்டுகளில், உயர்தரக் கல்வியைத் தேடி அலைந்தவர்களின் எண்ணிக்கை வளரலாயிற்று. சாதாரண வாழ்க்கைக்கு வேண்டிய தொழில்களைக் கற்பதற்கு இளைஞர்கள் அக் காலத்தில் பள்ளி செல்வதில்லை; நெசவுத் தொழிலில் பழகுவதற்கும், கீழை நாட்டு வாணிகத்தில் ஈடுபடுவதற்கும் அத் துறைகளில் சிறந்து விளங்கியவர்களிடம் தொழில் மாணவர்களாய்ச் (Apprentice) சேர்ந்து தொழில் நுட்பத்தை அறிந்தார்கள். இடைக்காலக் கல்வித் திட்டம் மாணவர்களின் அறிவாற்றலுக்குப் பயிற்சி அளித்து. அதனை விரிவாக்கி, முதிர்ச்சி பெறச் செய்வதையே குறிக்கோளாய்க் கொண்டு வகுக்கப்பட்டி

ருந்தது. வயிற்றுப் பிழைப்பிற்கான வழிகளைக் கற்பித்தல் அவற்றின் நோக்கமன்று. சமயத் தொண்டர்களுக்கும் வழக்கறிஞர்களுக்கும், மருத்துவர்களுக்கும், ஆட்சி வல்லுநர்களுக்கும் பயிற்சி தருவதற்கே பள்ளிகள் இருந்தன.

சமய நிறுவனத்தின் மொழியாயிருந்த இலத்தீனே கற்பிக்கும் மொழியாயும் இருந்தது. இலத்தின் நூல்களைப் படித்துப் பழகியவர்கள் தங்கள் கருத்துகளை ஐயந்திரிபற வெளியிடும் ஆற்றல் பெற்றார்கள். அளவை நூலும் (Logic) முரண்நிலை தருக்க இயல் (Dialectics) பயிற்சியும் அவர்களுடைய சிந்திக்கும் முறைகளையும் ஆற்றலையும் வளர்த்தன. கற்றவர்களுட் பெரும்பாலார் சமய நிறுவனத்தில் சேர்ந்துகொண்டு, பல துறைகளில் சமுதாயப் பணி புரிந்தனர்.

இருண்ட கால முடிவில் சில கலைத்துறைகளைப் பள்ளியிற் பயில இயலாது போயிற்று. அவற்றைக் கற்றுத் தேறப் பல்கலைக் கழகங்கள் வேண்டப்பட்டன. புதிய துறைகளிற் பயிற்சி தரப் பல்கலைக் கழகங்களே முன் வந்தன. மேலும், கற்கும் முறைகளிலும் மாற்றம் ஏற்பட்டது. சமயக் கட்டுப்பாடுகளுக்கு அஞ்சாது சுதந்தரமாய்ச் சிந்திக்கவும், சிந்தித்தவற்றைச் சொல்லவும் எழுதவும், சமயக் கருத்துகளைத் தாராளமாய் விளக்கவும் பல்கலைக் கழகங்கள் வசதியும் வாய்ப்பும் தந்தன. மாணவர்களும் ஆசிரியர்களும் தனித்தனியே குழுக்கள் அமைத்துக்கொண்டு பாடத் திட்டத்தையும், கற்பிக்கும் முறைகளையும் வரையறுத்துக்கொண்டார்கள். சட்டத்துறை, மருத்துவத் துறைகளில் ஈடுபட விழைந்தவர்கள், பல்கலைக்கழகங்களில் உறுப்பினராய்ச் சேர்ந்துகொண்டார்கள். மாணவர்கள் நல்லாசிரியர்கள் பேருரையாற்றிய இடங்களை நாடிச் சென்று, அங்கேயே தங்கிக் கற்கலானார்கள். செல்வக் குடும்ப இளைஞர்கள் வசதியாய்த் தங்கிப் படித்தார்கள். ஏழை மாணவர்கள் மச்சு அறைகளிலும் (Garrets) நிலவறைகளிலும் (Cellars) தங்கி நூல்களைப் படி செய்தும், வேறு பல பணிகளில் ஈடுபட்டும் பெற்ற ஊதியத்தைக்கொண்டு பல்கலைக்கழகப் படிப்பை மேற்கொண்டார்கள்; பாட புத்தகங்களைப் படி செய்யச் சம்பளம் கொடுத்தது போல, அப் படிகளைப் பயன்படுத்த மாணவர்களிடம் வாடகை பெறப்பட்டது. பிற்காலத்தில் மாணவர்கள் வசதியாய்த் தங்கிப் படிக்க மடாதிபதிகளும் செல்வர்களும் கல்லூரிக் கட்டடங்களைக் கட்டித் தந்தார்கள்.

பல்கலைக் கழகமென்றவுடன் நம் கண்முன் கூட கோபுரங்களுடன் காட்சி தருகிற மாடங்களையும், மண்டபங்களையும்,

கல்லூரிகளையும், நூலகங்களையும், சொற்பொழிவுக் கூடங்களையும், சோதனைச் சாலைகளையும் மனத்திற்கொண்டு இடைக்காலப் பல்கலைக்கழகங்களை மதிப்பிடக்கூடாது. தொடக்கத்தில் கல்விக் கொடைகள் (Endowments) இல்லை. வாய் மூலமாகவே கற்பிப்பும், பெரிதளவு கேள்வியளவிலேயே படிப்பும் இருந்தன. நூல்களின் படிகள் மிக அருமையாக இரண்டொன்றே கிடைக்கும். மேலை உலகில் கற்பிக்கும் ஊடகம் (Medium) இலத்தீனே. ஆசிரியர்களும் மாணவர்களும் ஓரிடத்தில் நிலைத்திராமல் ஊரூராய், நாடு விட்டு நாடு சென்றார்கள். பன்னிரண்டாம் நூற்றாண்டுப் பல்கலைக் கழக மாணவன், 'திருத்தலஞ்சுற்றுவோன் (Pilgrim) போலவும், சிலுவை வீரன் (Crusader) போலவும் அறிஞரைத் தேடி அலைந்தான். சமய நிறுவனச் சட்டப் (Canon Law) பயிற்சி பெற விரும்பியவர்கள், பாரிஸ் பல்கலைக் கழகத்திற்கும், சமுதாயத் தொடர்பான சட்ட அறிவை நாடியவர்கள். பொலோனு (Bologna) பல்கலைக் கழகத்திற்கும், மருத்துவப் பயிற்சியில் நாட்டமுள்ளவர்கள், சாலெர்னோ (Salerno) அல்லது பாடுவாப் (Padua) பல்கலைக்கழகங்களுக்கும் திரண்டு சென்றார்கள். தொடக்கத்தில் பல்கலைக்கழகம் மாணவ. ஆசிரியச் சங்கமாகவோ, அச் சங்கங்களின் கூட்டமைப்பாகவோ இருந்தது. மாணவர்களும் ஆசிரியர்களும் நிலையாய்த் தங்கிய இடம் பல்கலைக்கழகமாய் வளர்ந்தது. பொலோனுவில் மாணவர்களின் குழுவும் பாரிசில் ஆசிரியச் சங்கமும் பல்கலைக் கழக ஒழுங்கு முறைகளையும் சட்டத்திட்டங்களையும் வகுத்துக் கொண்டன. பின்னர் அரசர்களோ போப்புகளோ உரிமைச் சாசனமளித்து, பல்கலைக்கழகத்தை நிறுவினார்கள். திருச்சபை ஆதரவிலும் அரவணைப்பிலும் அவைகள் வளர்ந்தோங்கின.

நடுத்தர வகுப்பினரும், சமுதாயத்தில் கீழ்மட்டத்தில் வாழ்ந்தவர்களுமே பல்கலைக் கழகங்களுக்கு மிகுதியாகச் சென்றார்கள். ஏழைகளும் வாழ்க்கையில் முன்னுக்கு வர விரும்பியவர்களும் தங்கள் திறமையை வளர்த்துக்கொண்டு வாழ வழிதேடியே அங்குப் பயின்றார்கள். கலைத்துறையில் ஐந்தாறு ஆண்டுகளும், இறையியல் துறையில் பன்னிரண்டாண்டுகளும் படித்துப் பட்டம் பெறுவதற்கு முடியாமல் எத்தனையோ மாணவர்கள் இடையிலேயே கற்பதைக் கைவிட்டார்கள். பட்டம் பெறுவிடினும், ஓரளவு இலத்தீன் மொழிப் பயிற்சி, சிறிது அளவை இயல், சிறிது விஞ்ஞான அறிவு பெற்றவர் பலர் சமுதாயத்தில் காணப்பட்டனர். கலைப்பட்டம் (B.A.) பெற விழைந்த மாணவர்கள், நான்காண்டுகளில் இலக்கணம், சொற்கோப்புக்கலை (Rhetoric), அளவை இயல், கணக்கு, விஞ்ஞானம் முதலிய பாடங்களைக்

கற்றுத் தேறவேண்டும். அவர்கள் தொடக்க நிலையிலிருப்பவர்களுக்கு மட்டுந்தான் கற்பிக்கலாம். பல்கலைக்கழகத் தலைமைப் பட்டம் (M.A.,) பெறுவதற்கு ஆறுண்டு படித்து இருபது வயது நிரம்பியிருக்க வேண்டும். மேலும், பத்தாண்டு இறையியல் கற்றுத் தேர்ந்து முப்பத்தைந்து வயது அடைந்த பின்னர் இறையியல் ஆசிரியராகலாம்.

ஒவ்வொரு பாடத் துறைக்கும் தலைவர் (Dean) ஒருவர் உண்டு. கலைத்துறை மேற்பார்வையாளர் ரெக்டர் (Rector) என்ற பெயருடன் பணியாற்றினர். பல்கலைக்கழகத் தலைவர் சான்செலர் (Chancellor) ஆவார். பேராசிரியர்கள் கால் வரையில் நீண்ட கறுப்பு அங்கி அணிய வேண்டும். பேராசிரியர் குழுவே பட்டங்களை வழங்கிற்று. ஆசிரியர்கள் நிகழ்த்திய சொற்பொழிவுகளைக் கேட்டு மாணவர்கள் குறிப்பெடுப்பார்கள்; சில கருத்துகளின்மேல் சொற்போர் நிகழ்த்தியும், வாதிட்டும், கூடிப்பேசியும் தெளிவு பெறுவார்கள். சட்டம், இறையியல் இவ்விரண்டு துறைகளிலும் தேவையான மூலங்கள் யாவும் இலத்தீன் மொழியில் இருந்தவை போல மற்றப் பாடத் துறைகளுக்கில்லை. பழைய மாணவர்கள் புதிய மாணவர்களை அச்சுறுத்தியும் (Hazing) அவர்களோடு முரட்டுத்தனமாக விளையாடியும் (Horse Play) மிகுந்த தொல்லை தருவது வழக்கமாயிருந்தது.

பண்டைக் காலத்தில் உயர்குடிப் பிறப்பிற்கும் கல்வியறிவிற்கும் நெருங்கிய தொடர்பிருந்தது. ஆனால், இடைக்காலத்தில் உயர்குடி மக்கள் வேட்டையாடுவதிலும் போரிடுவதிலுமே தங்கள் காலத்தைக் கழித்தார்கள். சமுதாயத் தாழ்வைப் பொருட்படுத்தாமல் மாணவர்களைச் சேர்த்துக்கொண்டதுடன், புலமை எங்குக் காணப்படினும் அதைப் பல்கலைக் கழகங்கள் மதித்தன. சமயத்தடை ஏதுமில்லையேல், எவரும் பல்கலைக் கழகத்தில் இடம் பெறலாம். புலமையும் வறுமையும் இணைந்திருந்ததில் வியப்பில்லை.

சிலுவைப் போர்களின் பயனாய் ஐரோப்பிய அறிவியல் வாழ்வு பெரிதும் மாற்றமடைந்து வந்தது. ஐரோப்பிய எண்ணங்களில் மறுமலர்ச்சி ஏற்பட்டது. வாழ்க்கை வசதிகள் மலிந்ததும், பயணஞ் செல்வோர்க்குப் பாதுகாப்பு ஏற்பட்டதும், அமைதி நிலவத் தொடங்கியதும் உலகத் தொடக்கத்திலிருந்து மனிதனுக்குள்ள அறிவு வேட்கை மீண்டும் தலை தூக்கியது. சிறுவர்களும் நடுத்தர வயதினரும் முதியவர்களும் அறிவுப் பசிக்குத் தீர்வு காணக் கலைக்கழகங்களுக்கு விரைந்தார்கள். அறிவுப் பசியெடுத்தவர்கள் அயல் நாட்டிற்கேகி அறிவுப் பிச்சையெடுக்காமல், தங்கள்

நாட்டிலேயே பசி தீர்த்துக்கொள்வதற்காகவே நேப்பிள்ஸில் (Naples) பல்கலைக்கழகம் நிறுவியதாக, அப் பல்கலைக்கழகத்திற்கு இரண்டாம் ஃபிரெடெரிக்கு (Frederick-II, the Emperor) 1224-ல் வழங்கிய உரிமைச் சாசனம் (Charter) தெரிவிக்கிறது.

ஒன்பதாம் நூற்றுண்டில் நேப்பிள்ஸிற்கருகில் சாலெர்னே நகரில் சிறந்த மருத்துவர்கள் வாழ்ந்து வந்தார்கள். கிரேக்க மருத்துவர் ஹிப்போகிராட்டிஸ் (Hippocrates), காலென் (Galen), யூதர்கள் ஆகியோரின் மருத்துவ நூல்களில் கண்ட மருத்துவ அறிவை மருத்துவ மாணவர்களுக்குப் புகட்டினார்கள். பேரரசர் இரண்டாம் ஃபிரெடெரிக்கு (1215-54) சாலெர்னேவில் ஒரு மருத்துவப் பள்ளியை நிறுவி, அக் கலையை ஆதரித்து வளர்த்தார். 1817-ஆம் ஆண்டு வரை சாலெர்னேப் பல்கலைக் கழகம் மருத்துவத்திற்குப் பெயர் பெற்று விளங்கியது.

இடைக்காலத்தில் பேரறிஞராய்த் திகழ்ந்த பேராசிரியர்களை மாணவர்கள் சூழ்ந்து நின்று கற்பார்கள். பாரிஸ் நகரத்தில் இடைக்கால அறிஞர் அபெலார்டு (Abelard-1079-1142), அளவை இயலிலும் (Logic) இறையியலிலும் (Theology) சிறந்த சொற்பொழிவுகளாற்றி ஆயிரக்கணக்கான மாணவர்களின் அன்பிற்கும் ஆதரவிற்கும் பாத்திரமானார். ஐரோப்பிய அறிவுத் துறை வரலாற்றில் அவர் தலைசிறந்தவர். 'ஒருவருக்கேற்படும் ஐயம், உசாவுதல் வழியே அவரை ஆராயத் தூண்டி உண்மையைக் காண வழி வகுக்கிறது,' என்பது அவருடைய சித்தாந்தம். அவர் 158 கேள்விகளை எழுப்பி அவற்றைப் பற்றிச் சமயக் குருமார்களின் முரண்பட்ட கருத்துகளையெல்லாம் திரட்டி (Sic et Non) வெளியிட்டு, மாணவர்களைச் சிந்திக்கச் செய்தார்.

1110-ஆம் ஆண்டிற்கும் 1140-ஆம் ஆண்டிற்குமிடையில் ஆசிரியராயிருந்த அபெலார்டு, 'ஒரு கோட்பாட்டை நாம் நம்புவது ஆண்டவன் அருளிச் செய்தான் என்பதால் அன்று; அதன் உண்மை நம்முடைய அறிவிற்கு ஒத்து வருவதாலேயே அதனை ஏற்றுக்கொள்ளுகிறோம்,' என்று கூறித் தம்முடைய அறிவு முதற்கொள்கையைப் (Rationalism) பரப்பலானார். இதைக் கண்டு திடுக்கிட்ட திருச்சபை, அவரைக் கட்டாயப்படுத்தி அக்கருத்தை மறுக்கச் செய்தது. இப்படிப் பல நாட்டவரும் ஆசிரியர்களாகவும் மாணவர்களாகவும் கருத்துப்போர் நிகழ்த்திய கோயிலைச் சுற்றிப் பாரிஸ் பல்கலைக்கழகம் உருப்பெற்றது. கி.பி. 1200-ல் பிலிப்பு அகஸ்டஸ் அதற்கு ஓர் உரிமைப் பத்திரம் வழங்கினார்; அதனைப் பிற ஆதிக்கங்களிலிருந்து விடுவித்து, திருச்சபை ஆதிக்கத்திலிருக்கச் செய்தார். அது பின்னர்ப் போப்பாட்சிச்

சார்புடையதாயிற்று. குருமார்களானாலும் ஆகாவிடினும் பல்கலைக் கழகப் பட்டதாரிகளுக்குச் சில சலுகைகளையும் உரிமைகளையும் போப்பு மூன்றும் இன்னொசென்டு வழங்கினர். அவர்கள் வரிகள் கொடுக்க வேண்டுவதில்லை; ஆயுதம் தாங்கிப் போர் செய்யவும் வேண்டா, அவர்களுக்கெனத் தனியான தலையணியும் (Academic Cap) நீண்ட அங்கியும் (Gown) உண்டு. குற்றஞ்செய்த பட்டதாரி களை விசாரிக்கவோ, ஒறுக்கவோ திருச்சபை நீதி மன்றங்களுக்கே உரிமை அளிக்கப்பட்டிருந்தது. 1258-ல் மாணவர்களுக்கு விடுதி அமைக்க இராபர்ட்டு-டி-சோர்பான் (Robert-de-Sorbon) என்பவர் பொருள் அளித்தார். சோர்பான் (Sorbonne) கல்லூரி மாணவர் விடுதியுடன் கூடிய மிகப் பழைய கல்லூரியாகும். ஈடும் எடுப்புமில்லாத இறையியல் பள்ளியாய்ப் பாரிஸ் பல்கலைக்கழகம் திகழ்ந்தது. பாரிஸ் பல்கலைக்கழகம் பல்கலைக் கழகங்களுக்கே முன் மாதிரியாய் விளங்கிற்று. ஐரோப்பாவின் வடபகுதியிலும் மேற்குப் பகுதியிலும் நிறுவப்பட்ட பல்கலைக்கழகங்கள் பாரிஸ் கழகத்தைப் பார்த்து உருவாயின. ஒரு காலத்தில் பாரிசில் 50,000 மாணவர்கள் பயின்று வந்தார்கள். அவர்களுக்கு அரிஸ்டாட்டில் நூல்களையும் அவைகளுதவிய கருத்துகளையும் கத்தோலிக்கச் சமயத்திற்கு முரண்படாமலும், அதற்கு ஆக்கம் தரும் வகை யிலும் செப்பனிட்டு உதவினார்கள்.

பாரிசில் கல்வி பயில வந்தவர்கள் சிறுவர்கள்; அளவை இயல், கணக்கு, பொது விஞ்ஞானம் போன்ற பாடங்களைப் படித்து, இறையியல், சட்டம் முதலிய உயர்தரப் படிப்பை மேற் கொள்ளத் தங்களைத் தயாரித்துக்கொள்ள வந்தவர்கள். கலை இளைஞர் பட்டம் (B.A.,) என்ற முதல் நிலைப் பட்டத்தைப் பெற வந்தவர்களே பெரும்பாலார். ஆகையால், அவர்களைக் கண்காணிக் கும் பொறுப்பு ஆசிரியர்களுக்கிருந்தது. முதலிலிருந்தே மாணவர் குழாம் பேராசிரியர் குழுவிற்கு (College) அடங்கியிருந்தது. பதின்மூன்காம் நூற்றாண்டில் அறிவு வளர்ச்சியில் முன்னணியில் இருந்த பாரிஸ் பல்கலைக்கழகம் இறையியற் பயிற்சி அளிப்பதன் மூலம் சமயத்திற்கு ஆக்கமளித்து வந்தது. பல்கலைக்கழகப் பேராசிரியர்களின் புலமையைக் கண்டு போப்புகளும் அஞ்சி நடுங்கினார்கள். சமயப் பிளவினால் போட்டிப் போப்புகள் தேர்ந் தெடுக்கப்பட்டிருந்த நிலையில் அச் சிக்கலுக்கு ஒரு முடிவு காணத் திருச்சபைக் கூட்டம் ஒன்றைக்கூட்ட அது முயன்றது எனில், பாரிஸ் பல்கலைக்கழகத்திற்கு ஐரோப்பாவில் இருந்த செல் வாக்கை ஓரளவு அறியலாம்.

பாரிஸ் பல்கலைக்கழகத்திலிருந்து அயல் நாட்டு மாணவர்கள் வெளியேற்றப்பட்ட காலத்தில் ஆங்கில மன்னர் இரண்டாம்

ஹென்றி (1154-89) பிற நாடுகளில் கல்வி கற்ற ஆங்கில மாணவர்களையும் கற்பித்த ஆசிரியர்களையும் தாய் நாட்டிற்கு வருமாறு 1167-68-ல் அழைப்பு விடுத்தார். தாயகம் திரும்பிய பல்கலைக் கழகக் கூட்டம் ஆக்ஸ்போர்டில் (Oxford) நிலைத்து அங்கே ஒரு பல்கலைக்கழகத்திற்கு வித்திட்டது. ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகம், தன்னுடைய அமைப்பு, கல்வித் திட்டம், கற்பிக்கும் முறை ஆகியவற்றில் பாரிஸ் பல்கலைக்கழகத்தைப் பின்பற்றியது. பாரிஸ் மாணவர் விடுதிகளைப் போல இங்கும் அவர்களுக்கு வசதியான இல்லங்கள் கட்டப்பட்டன. புலமைக்கொள்கை அடிப்படையில் மெய்யியல் அறிவினைக் (Scholastic philosohpy) கற்பித்த இரு பல்கலைக்கழகங்களுக்கு ஐரோப்பாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் மாணவர்கள் திரண்டு சென்றுர்கள். பதின் மூன்றும் நாற்றுண்டில் கல்விக்கொடைகளைக் கொண்டு பாரிசிலும் ஆக்ஸ்போர்டிலும் பல கல்லூரிகள் தொடங்கப்பட்டன. ஆக்ஸ்போர்டிலிருந்து வெளியேறிய மாணவர்களைக் கொண்டு 1209-ல் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது. ஆக்ஸ்போர்டில் ஒரு காலத்தில் பதினயிரம் மாணவர்கள் பல்வேறு பாடங்களைப் படித்து வந்தார்கள்.

போப்பாட்சி நிலையமான இத்தாலி நாடு, சமயச், சார்பற்ற (Secular) நாடுகளில் முதன்மையாய் விளங்கியது விந்தைக்குரியதே. சமயச் சார்பற்றவர்களால் நிறுவப்பட்ட இத்தாலியப் பல்கலைக்கழகங்கள் பெரும்பாலும் சமயச் சார்பற்ற அறிவுத் துறைகளையே பேணி வந்தன. பொலோஞவில் (Bologna) கிரேஷியன் (Gratian) என்ற துறவியார் திருச்சபை விதிகளைத் தொகுத்து வெளியிட்டார். அவர் தந்த கருத்து விளக்கத்தைக் கேட்கப் பலர் திரண்டு வந்து ஓர் அமைப்பை ஏற்படுத்தினர். அதுவே பொலோஞப் பல்கலைக் கழகமாகும். பொலோஞ, சட்டப் படிப்பிற்கு முதலிடம் பெற்றது. சட்டக் கல்வி பயின்ற மாணவர்கள் ஒரு குழுவாய்ச் சேர்ந்து, பல்கலைக்கழகத்தை நடத்தலாஞர்கள். அவர்களே ஆசிரியர்களை அமர்த்திக்கொண்டார்கள். ஆசிரியர்களுக்குக் குறைவான ஊதியமே அளிக்கப்பட்டது. கடமையைச் சரிவரச் செய்யாத ஆசிரியர்கள் தண்டம் கொடுத்தார்கள். அவர்களுக்கு விடுமுறையளிக்கும் விதிகள் மிகக் கண்டிப்பானவைகளாயிருந்தன. நகர மக்களால் நடத்தப்பட்ட காலத்திலேதான் பல்கலைக்கழகத்தின் நிலை செம்மைப்பட்டது. பாரிஸ் பல்கலைக்கழகத்தைப் போலவே பொலோஞப் பல்கலைக்கழகமும் ஐரோப்பியப் பல்கலைக்கழகங்களுக்குத் தாய்ப் பல்கலைக்கழகமாய்த் திகழ்ந்தது. ஐரோப்பியத் தென்பகுதிப் பல்கலைக்கழகங்கள் பொலோஞவை அடியொற்றி உருப்பெற்றன. பொலோஞப் பல்கலைக்கழகத்தில்

ஏற்பட்ட பிளவு காரணமாய்ப் பாடுவாப் (Padua) பல்கலைக் கழகம் எழுந்தது.

இடைக்காலப் பல்கலைக் கழகங்களை அக்காலக் கல்வியினின்று பூத்த மலராகவும், கிறித்தவ நாகரிகம் பயந்த பழமாகவும் கொள்ளலாம். ஐரோப்பிய அறிவுலகத் தலைவர்களே அவற்றை உருவாக்கினவர்கள்; அவற்றுக்குப் பேரும் புகழும் அளித்தவர்கள். எவ்விதத் தடையும் இன்றி மனிதன் சுதந்தரமாய்ச் சிந்திக்க வேண்டுமென்று ரோஜர் பேக்கன் (1214-94) பெரிதும் விழைந்தார். அவர் முற்போக்கான ஒரு சிந்தனையாளர். அவர், அரிஸ்டாட்டில் எழுதிய நூல்களைக் குறைபாடு மிகுந்த இலத்தீன் மொழி பெயர்ப்புகள் வாயிலாகக் கற்பது அறியாமையை வளர்ப்பதாகும் என்று தம் கருத்தை ஆணித்தரமாய் அறிவித்தார்: அறியாமையின் மூலங்களை நான்காகப் பிரித்துக்கொண்டு அவற்றைத் தாக்கினார்; அறிவு பெற விரும்பிய மக்களுக்கு ‘உலகத்தைப் பாருங்கள்’ என்று அறிவுரை வழங்கியுள்ளார்.

தாந்தே (Dante) பாரிஸ் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த கல்லூரியில் கல்வி பயின்றார். சமயச் சீர்திருத்தத்தின் விடி வெள்ளியாய் (Morning star of the Reformation) விளங்கிய விக்ளிஃப் (Wycliffe) என்பார் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகப் பேராசிரியர். அவருடைய கொள்கைகளைப் பிரேக்கு (Prague) பல்கலைக்கழகத்தில் உயர்பதவி வகித்த ஹஸ் (Huss) என்பார் ஏற்றுக்கொண்டு தம் நாட்டிலுள்ள கத்தோலிக்கத் திருச்சபையை எதிர்த்து, ‘பொகீமியா பொகீமியர்களுக்கே,’ என்று குரல் எழுப்பினார். பொகீமியாவில் (Bohemia) இருந்த பிரேக்குப் பல்கலைக் கழகம் ஐரோப்பாவில் செல்வாக்குடனிருந்த மூன்று நான்கு கழகங்களுள் ஒன்றாகும். பாரிஸ் பல்கலைக்கழகத்தைப் பின்பற்றி நான்காம் சார்லஸ் அக் கழகத்தை 1348-ல் நிறுவினார். அதுவே பின்னர் ஜெர்மன் பல்கலைக் கழகங்களுக்கு முன் மாதிரியாயிற்று. மார்ட்டின் லுதர் (Martin Luther) என்பார், விட்டன்பர்க்கு (Wittenberg) பல்கலைக்கழக இறையியற் பேராசிரியராவர்.

பல்கலைக் கழகங்களிலிருந்து சிறந்த சிந்தனையாளர்களும் எழுத்தாளர்களும், செயல் வீரர்களும் இடைக்காலத்தில் தோன்றி அறிவுலகை ஆட்டிப்படைத்தார்கள். இடைக்காலச் சமுதாயத்தையும் அரசியலையும் தாக்கி உருவாக்கிய சத்திகளில் உரோமானியச் சட்ட நூல்களும் முறைமையும் முதலிடம் பெற்றிருந்தன. டையோகிளேஷன் (Diocletion) கான்ஸ்டன்டைன் முதலிய பேரரசர்களுக்கிருந்த தனிச்சிறப்பு உரிமைகள் (Prerogatives)

போப்புகளுக்கும் இருந்தன என்று பொலோஞச் சட்ட அறிஞர்கள் (Jurists) வாதிட்டார்கள். ஆனல், போப்பு-பேரரசர் போராட்டத்தில் தங்களுடைய வரம்பில்லாத ஆதிக்கத்திற்கு ஆக்கமளித்த உரோமானிய மேற்கோளுரைகளைச் (Maxims) சட்ட வல்லுநர்களைக் கொண்டு தேடிப் பயன்படுத்திக் கொண்டு பேரரசர்கள் வலுவடைந்தார்கள். 'மனித சமுதாயம் தழைக்கப் போப்பாட்சியும் (Papacy) பேரரசும் (Holy Roman Empire) கடவுளால் நிறுவப்பட்டிருப்பது போல, பல்கலைக்கழகமும் அதற் காகவே தோன்றியுள்ளது,' என்று சில இடைக்கால எழுத்தாளர் கள் கருதினர்கள்.

பல்கலைக்கழகங்கள் தத்தம் நாடுகளோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கவில்லை. ஒரு பல்கலைக்கழகத்திலிருந்து மற்றொன் றிற்கு மாணவர்கள் மிக எளிதாய்ச் செல்ல முடிந்தது. திறமையும் புலமையும் நிறைந்த ஆசிரியர்கள் அயல் நாட்டவர்களாயினும் பல்கலைக்கழகங்களில் அமர்த்தப்பட்டார்கள். போப்பாட்சி, பேரரசு இவற்றுடன் பல்கலைக்கழகமும் பன்னாட்டு ஒற்றுமைச் சத்திகளுள் (International Forces) ஒன்ருய் இடைக் காலச் சமுதாயத்தையும் அதன் போக்கையும் வரையறுத்தது.

உரோமானியப் பேரரசு வீழ்ந்தபின் கிரேக்கக் கல்வி முறை களைப் பின்பற்றி அறிவை வளர்த்துப் பரப்புப் பணியில் முஸ்லிம் களும் முனைந்தார்கள். கிரேக்கக் கலைகளையும் விஞ்ஞானத்தையும் கற்று அறிவுலகில் இஸ்லாமிய ஆதிக்கத்தை நிலைநாட்டப் பல்கலைக் கழகங்களை ஆங்காங்கு நிறுவினர்கள். கி.பி. 970 அளவில் கெய்ரோவில் அல் அஷார் (Al Azhar) பல்கலைக்கழகம் தொடங்கப் பட்டு, இன்றும் முதன்மையான முஸ்லிம் பண்பாட்டு நிலையமாய்ப் பணி புரிகிறது. அங்குப் பன்னீராயிரம் மாணவர்கள் பயின்றுர்கள். நூலகத்தில் நூருயிரம் புத்தகங்களுக்கு மிகுதியாக இடம் இருந்தது. புத்தகங்களை வரிசைப்படுத்தி, பட்டியலும் தயாரித் திருந்தார்கள். கார்டோவாப் (Cordova) பல்கலைக்கழகம் பாரிஸ், ஆக்ஸ்போர்டு, வட இத்தாலியப் பல்கலைக் கழகங்களைப் பெரிதும் உருவாக்கிற்று. கார்டோவாவிற்குக் கிறித்துவ மாணவர் பலர் படிக்கச் சென்றனர். அங்குப் படித்த கிறித்துவ மாணவராகிய கெர்பர்ட்டு (Cerbert) என்பவர், பின்னர் இரண்டாம் ஸில்வெஸ்டர் (Silvester-II) என்ற பட்டத்துடன் போப்பானுர். பாக்தாது (Baghdad) பல்கலைக்கழகமும் புகழ் பெற்று விளங்கியது. முஸ்லிம் பல்கலைக்கழகங்கள் கிறித்துவக் கழகங்களையும் மிஞ்சி விட்டன.

# அதிகாரம் 12

## ஐரோப்பாவில் நகரங்களின் வளர்ச்சி

பத்தாம் நூற்றுண்டில் போர்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கப் பட்டு ஒழுங்கும் அமைதியும் நிலவத் தொடங்கவே வாணிபம் வளர்ந்தது; வாணிப வளர்ச்சியால் செல்வ வளமும், செல்வப் பெருக்கால் சுதந்தர ஆசையும் வளர்ந்தன. வணிகச் செல்வர்கள் பிரபுக்களை எதிர்த்துத் தனியார் சுதந்தரத்தைப் பெற்றுத் தாங்கள் வாழ்ந்த இடங்களில் தன்னுட்சி உரிமையும் பெற்றுர்கள். வடவர்களும், ஹூணர்களும் படையெடுத்து வந்ததால், பாதுகாப் பிற்காக மதில் சூழ்ந்த பகுதிகளில் மக்கள் வாழ்ந்தார்கள். அப் பகுதிகள் நகரங்களாயின. திருச்சபையைச் சேர்ந்த மடங்களையும், பிரபுக்களின் கோட்டைகளையும் சுற்றி மக்கள் தங்கி நகரங்களைத் தோற்றுவித்தார்கள். சிறிய நகரங்களில் மக்களுக்குத் தனி மனிதச் சுதந்தரமோ அரசியல் சுதந்தரமோ இல்லை. செல்வ நிலை யிலும் அளவிலும் நகரங்கள் வளரத் தொடங்கியதும் இருவகைச் சுதந்தரத்திற்கும் போராடித் தன்னுட்சி உரிமை பெற்றன. கைத் தொழில்களில் ஈடுபட்டவர்கள் பொதுவான ஆதாயங்கருதிச் சங்கங்களை அமைத்தனர்; அச் சங்கங்கள் இணைந்து சுதந்தர நகரங்கள் தோன்றலாயின.

பன்னிரண்டாம் நூற்றுண்டுத் தொடக்கத்தில் மேற்கு ஐரோப்பாவில், சாரசேனியர்களால் தடைப்பட்ட வாணிபமும் தொழிலும் மீண்டும் முன்னேறத் தொடங்கின. உரோமப் பேரரசில் பண்டையப் பெருநகரங்கள் புத்துயிர் பெறலாயின. பாதுகாப்போடு பொருளைத் தேடுவதற்கேற்ற நிலைமையை உரு வாக்குவதற்காக மக்கள் அரசரிடமிருந்து நகர உரிமை ஆவணத் தைப் பெற்றுர்கள். அப் பத்திரம் மக்களை நிலமானிய ஊழியக் கட்டுப்பாட்டிலிருந்து விடுவித்தது; சட்டங்களை நிறைவேற்றிக் கொள்ளவும், வழக்குகளுக்குத் தங்கள் நீதிமன்றங்களிலே தீர்வு காணவும், நகர அலுவலர்களைத் தேர்ந்தெடுக்கவும் மக்கள்

உரிமையும் சலுகையும் பெற்றார்கள். நகரவெல்லைக்குள் பண்ணையாட்கள் ஓர் ஆண்டும் ஒருநாளும் வாழ்ந்துவிட்டால் சுதந்தர மக்களாய்க் கருதப்பட்டார்கள்.

இவ்வுரிமைகளும் சலுகைகளும் கூடியும், குறைந்தும், மாறுபட்டும் நகர உரிமைப் பத்திரங்களில் இடம்பெற்றன. நகரங்கள், அரசுரிமைப் பத்திரங்களைப் பெற்ற வழிமுறைகள் வேறு வேறாகும். சில நகரங்கள் பிரபுக்களுடன் போராடி உரிமை பெற்றன, வேறு சில மன்னருக்கோ, மானியதாருக்கோ பெரும் பொருளைக் கொடுத்துத் தன்னாட்சி உரிமை பெற்றன. இன்னும் சில அமைதியாய் முன்னேற அனுமதிக்கப்பட்டன. பன்னிரண்டாம் நூற்றாண்டினிறுதியில் பெரும்பாலான நகரப் பகுதிகள் சலுகைகளும் உரிமைகளும் பெற்ற நகரங்களாயின.

இடைக்கால நகரங்கள் பாதுகாப்பிற்காகக் கோட்டைக் கொத்தளங்கள் எழுப்பிக் கொண்டன; படைக் கருவிகள் வாங்குவதில் கணிசமான பொருளைச் செலவழித்தன. ஒரு நாட்டரசு மேற்கொள்ளுகிற பணிகளில் பலவற்றை அக்கால நகரங்கள் மேற்கொண்டன. சமுதாயப் பிரச்சினைகளுக்கு நகராட்சியே முடிவு கண்டது. வணிகச் சங்கங்கள், வாணிபக் கட்டுப்பாட்டு விதிமுறைகளை நகரவை இசைவுடன், வகுத்துத் தந்தன. சுற்றுச் சுவர்களும் தீயணைக்கும் படையும் நகரவைப் பொறுப்பிலிருந்தன. தானியப பண்டகசாலைகள் நகரந்தோறும் பதினைந்தாம் நூற்றாண்டில் கட்டப்பட்டன. பற்றாக்குறைக் காலத்தில் மக்களுக்கு உதவ நகரக் களஞ்சியங்களில் தானியம் நிரப்பி வைக்கப்பட்டது. பொருளை உற்பத்தி செய்வோருக்கு நல்வாழ்வளிக்கும் வகையில், வாங்குவோருக்கு அதன் தரத்தைப் பற்றி உத்தரவாதம் தரும் முறையில், விலைப்பட்டி நகரவையால் தயாரிக்கப்பட்டது. சுருங்கச் சொல்லின் நகரம் வங்கித் தொழில் அதிபராகவும், பெரும் முதலாளியாகவும் மிகுந்த செல்வாக்குடன் திகழ்ந்தது.

பெரும்பாலான நகரங்கள் சுதந்தர உயர்குடி அரசுகளாயிருந்தன; அவை அரசன் அல்லது மேற்றிராணியார் மேலாண்மையை ஏற்றுக் கொண்டிருந்தன. சில, வெனிஸ் நகரம் போன்று நகரக் குடியரசுகளாயிருந்தன. இடைக்கால நகரங்கள் நில மானியச் சமுதாயத்தின் இன்றியமையாக் கூறுகளாயிருந்தன. அவை அரசன் கோமகன் அல்லது மேற்றிராணியாரின் மானியங்களாகும். மேற்றிராணியாருடனும் பிரபுவோடும் போராடி நகரம் தன்னாட்சிப் பெற்றது. குறைந்த புறத்தலையீட்டோடு இடைக்கால நகரம் மக்களாட்சிச் சின்னமாய் விளங்கிற்று. பண்ணையில் மானியதார் செலுத்திய அதிகாரங்கள் யாவும் நகரவைக்கிருந்தது.

அரசர்கள், மானியதார்களின் தலைநகரங்கள் மேற்றிராணியார் களின் தலைமைப் பீடங்கள், எல்லைப்புறப் பாதுகாப்புப் பட்டணங் கள், வளநகர்களாய்த் திகழ்ந்தன. புதிதாய் வென்ற நாடுகளில் கிறித்துவச் சமயப் பரப்பு நிலையங்கள், சந்தை கூடுமிடங்கள், நில அமைப்பில் சிறப்புற்ற பண்ணைக் கிராமங்கள் நகரங்களாய் வளர்ந்தன. வட்டார மேற்றிராணியார், நிலமானியதார் தலைமை யில் நகரங்கள் தேசியப் பற்றும் சுதந்தர உணர்ச்சியும் பெற்று ஆட்சி அமைத்துக் கொண்டன. அநாகரிக மக்களின் படையெடுப்பு களையும் கொள்ளைக்காரர்களின் தாக்குதலையும் படைக்கலம் தாங்கிய மக்கள் தடுத்து நிறுத்தியதாலும், நிலமானியச் சண்டை களில் உதவிப் பாதுகாப்பு அளித்ததாலும் நிலமானியதார் களிடம் தனிச்சலுகைகளும், நன்மதிப்பும் பெற்றூர்கள்.

இடைக் காலத்தின் பிற்பகுதியில் நகர வாழ்வின் சிறந்த வளர்ச்சியையும் நிறைவையும் இத்தாலியில் காண்கிறோம். ஹோஹென்ஸ்டாஃபென் பரம்பரை முடிந்தபின், உரோம் நகருக்கு வடக்கே அரைகுறை சுதந்தரத்துடன் நகர நாடுகள் தோன்றின. பெரும் பாலும் நகர நாடுகளின் வரலாறு ஒன்று போலிருந்தது. இத்தாலிய நகரங்கள் சுங்கவரிக்காகவும், சந்தைக் காகவும், சலுகைகளுக்காகவும் போரிட்டன. அவை ஒன்றோ டொன்று நிரந்தரமாய்ச் சண்டை செய்தன. இச் சச்சரவுகளைப் பேரரசு-போப்பாட்சிப் போராட்டம் பயன்படுத்திக் கொண்டது. லம்பார்டு படையெடுப்பின்போது இத்தாலிய அகதிகள் ஏடிரி யாடிக் கடலின் மேற்பகுதியில், கடற்கழிகளினிடையில் உள்ள சிறு தீவுகளின் மீது வெனிசு நகரத்தைக் கட்டினூர்கள். வெனிசும், ஜெனோவாவும் அக்காலப் பெரிய துறைமுகங்களாகும். அந் நகரங் களில் கட்டப்பட்ட அழகிய அரண்மனைகள், தீட்டப்பட்ட விழுமிய ஓவியங்கள் இன்றும் பாராட்டுக்குரியனவாயுள்ளன. இத்தாலிய நகரங்களுக்குள் தலையாய ஃப்ளாரென்சு நகரத்தை மெடிசி குடும்பத்தார் ஆண்ட பதினைந்தாம் நூற்றூண்டை பெரிக்ளியன் காலத்தையொத்த பொற்காலமெனலாம். அழகிய கலைக்குப் பெயர் பெற்ற அந் நகரம் கலைமறுமலர்ச்சியில் பெரும் பங்கு ஏற்றது. பைசா, நேபிள்ஸ், மிலான் முதலியவை இடைக் கால இத்தாலிய நகரங்களில் சிறந்தவையாகும். அவை வாணிகத் துறையில் போட்டியிட்டுப் போரிட்டன. மேல் மட்டத்திலிருந்த பிரபுக்களும் வணிகச் செல்வர்களும் கீழ்மட்டத்திலிருந்த தொழி லாளிகளும் ஆட்சியைக் கைப்பற்ற உள்நாட்டுப் போர்களில் ஈடுபட்டனர்.

இத்தாலியிலும் ஜெர்மனியிலும் வலுவான நடுவண் ஆட்சி இல்லாததால் இடைக்கால நகரங்கள் வலிமையோடும் தன்னாட்சி

யுரிமையோடும் வளர்ந்தன. வாணிகம், போர் இரண்டிற்காகவும் கூட்டாய்ச் சங்கம் அமைத்துக்கொண்டு அந் நகரங்கள் பேரரசரைப் படுதோல்வியடையச் செய்தன. ஹான்சியாடிக் சங்கம் வடஜெர்மனியின் கடல் கடந்த வாணிபத்திலும் கட்டிடக் கலையிலும் பெரும் பங்கு பெற்றது. அச் சங்கம் வட்டார வாணிகம் முழுவதையும் கைப்பற்றி, வடமேற்கு ஐரோப்பாவை ஆண்டு வந்தது. 1350 முதல் 1500 வரை அதன் ஆதிக்கம் உச்சநிலையில் இருந்தது. நண்ணிலக் கடல், கீழைக் கடல்களில் மலிந்திருந்த கொள்ளைக் கூட்டத்தார் வடகடல்களில் தலைகாட்டாதவாறு அச் சங்கம் செய்துவிட்டது.

தென் ஐரோப்பாவில் பழைய நகரங்கள் புத்துயிர் பெற்றன. ஜெர்மனியின் வடபகுதியிலும் இடைப்பகுதியிலும், நெதர்லாண்ட்ஸ், போலண்டு ஹங்கேரி முதலிய நாடுகளிலும் புதிய நகரங்கள் தோன்றின. பாதுகாப்பிற்காகப் பல உழவர்கள் நகர வாழ்வை விரும்பிக் குடியேறினார்கள். பண்ணையாட்கள் சுதந்தரமடைய பண்ணைகளிலிருந்து தப்பி ஓடி நகரங்களில் ஓராண்டு ஒளிந்து வாழ்ந்தனர். வாணிகம் தொழில் வளர்ச்சி காரணமாய் நகரங்கள் வளம்பெற்றுத் தம் பரப்பையும் பணிகளையும் பெருக்கிக் கொண்டன. கீழைநாடுகளுடன் வாணிபஞ் செய்யப் பயன்பட்ட வாணிபப் பாட்டைகளிலிருந்த நகரங்கள் செல்வத்திலும் மக்கள் தொகையிலும் பெரிதும் வளர்ந்தோங்கின. சிதைந்து கொண்டிருந்த புனித உரோமப் பேரரசிலிருந்த நகரங்கள் பேரரசின் நலிவைப் பயன் படுத்திக்கொண்டு நகர நாடுகளாகிவிட்டன. ஜெர்மனி, நெதர்லாண்ட்ஸ், வடஇத்தாலி முதலிய நாடுகளில் தோன்றி வளர்ந்த நகர நாடுகள் பண்டைய கிரேக்க ஃபினிஷிய நகர நாடுகளை ஒத்திருந்தன. வெனிஸ், ஜெனோவா, பைசா. ஃப்ளாரென்ஸ், மிலான், லூபெக், பிரிமென், ஹாம்பர்க், பின்சிக், கொலோன், ப்ருஜெஸ், ஃகெண்ட் போன்ற நகர நாடுகள் தொலைவிடங்களில் வணிகத்துறைக் களங்கள் அமைத்துக் கொண்டிருந்தன. ஒவ்வொரு நகர நாடும் சட்டம் இயற்றியும், நீதி வழங்கியும், நாணயமடித்தும் தனி ஆணை செலுத்தி வந்தது; உள்நாட்டு நகரமாயின் பாதுகாப்புப் படையும், கடற்கரைப் பட்டினமாயின் நாவாய்ப் படையும் வைத்திருந்தது. நகர நாடுகள் ஒன்றோடொன்று போரிட்டும் வந்தன.

ஜெர்மன் நகரங்களின் ஆட்சி வழக்கமாய் ஒரு சில பழைய பணக்காரக் குடும்பங்களின் கைகளில் இருந்தது. நகரத்தலைவராகிய பர்கோமாஸ்டரும் (Buagomaster) அவருடைய ஆட்சிக் குழுவும் அக் குடும்பங்களிலிருந்தே தேர்ந்தெடுக்கப்பட்டனர். தொழில் துறையில் ஈடுபட்டிருந்தவர்கள் சங்கங்கள் அமைத்துக் கொண்டார்கள். பதின்மூன்றும் நூற்றாண்டின் இறுதியில் நகர்

ஆட்சியில் பங்கு பெற அச் சங்கங்கள் போராடின. பதினைந்தாம் நூற்றாண்டில் மிக முற்போக்கான ஜெர்மன் நகரத் தெருக்கள் குறுகலாயும் ஒழுங்கின்றியும் இருந்தன. மரத்தாலான வீடுகளில் ஒருபகுதியில் கால்நடைகளும், நகர் நடுவில் பன்றிப்பட்டிகளும் இருந்தன. பணக்கார உழவர் வீடுகளில் விசாலமான முற்றங் களும், தானியக் களஞ்சியங்களுமிருந்தன. ஏழைகள் நகர் புறத்தில் நகர மதில்களை யொட்டி இருந்த குடிசைகளில் வாழ்ந்தனர். நகரந்தோறும் திருக்கோயில்களும் நகர மன்றங் களும் கோத்திக் முறையில் கட்டப்பட்டன.

பேரரசு, போப்பாட்சி, இரண்டின் ஆதிக்கத்திலிருந்தும் விடு பட்ட இத்தாலிய நகரங்கள் சுதந்தரக் குடியரசுகளானது போல் ஃப்ரெஞ்சு நகரங்கள் சுதந்தரக் குடியரசுகளாகவில்லை. அவை நிலமானியதார்கள் ஆதிக்கத்திலிருந்து கூட முற்றிலும் விடுபட வில்லை. பிரபுக்களோடு போராடி சில நகரங்கள உரிமைகளைப் பெற்றன; வேறு சில பெருளீந்து தன்னாட்சி உரிமை பெற்றன. ஒரு சில நகரங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட கான்சல்களாலும் ஒரு சில மேயர்களாலும் ஆளப்பட்டன. நகரத்தின் திறவுகோல் அவருடைய ஆதிக்கத்தின் அடையாளமாய்ப் பிரபுவின் கையி லிருந்தது. உரிமைச் சின்னமாய் விளங்கிய நகர முத்திரை, நகர ஆவணங்களில் பொறிக்கப்பட்டது. நகர ஆட்சியைக் கைப்பற்ற கீழ் மக்கள் மேன் மக்களோடு சண்டையிட்ட வண்ணமிருந்தனர். வருவாய்க்கு மிஞ்சிய செலவினாலும், வரவு செலவு வகையில் அதிகாரிகளின் கையாடலினாலும், ஏய்ப்பாலும் ஏற்பட்ட குழப்பத் தாலும், நகரங்கள் நலியத் தொடங்கின. 1400 அளவில் ஃப்ரெஞ்சு அரசர்கள் அவற்றை ஒடுக்கி தம்மாதிக்கத்தில் கொண்டு வந்து விட்டார்கள்.

ஃப்ரான்ஸ் இங்கிலாந்து தென் இத்தாலி நாடுகளில் சில நகரங்கள் நாட்டாட்சியுடன் இணைக்கப்பட்டு அரச ஆதிக்கத் திற்குட்பட்டன. அவை தேசிய ஆட்சி அவைக்கு உறுப்பினர் களைத் தேர்ந்தெடுத்தனுப்பி அந்த அவையின் பணிகளில் பங்கும் பெற்றன. இங்கிலாந்திலுள்ள இலண்டன், யார்க், ஆக்ஸ்போர்டு போன்ற நகரங்கள் பயன்பெறும் வகையில் தேசிய அவை (Parliament)யோடு இணைக்கப்பெற்றன. புதிய நாடுகளும் கண்டங் களும் கண்டு பிடிக்கப்பட்டு, கடல் கடந்த வாணிபம் வளரத் தொடங்கியதும், நிலவழி வாணிபப் பாதைகளின் முக்கியத்துவம் குறைந்ததும், சில நகரங்கள் வாணிக வளங்குன்றி மறைந்தன. நாட்டாட்சி வலிமை பெறவே நகர ஆட்சி நலிந்து நாட்டாட்சி யின் கீழ் வந்தன. சமயச் சீர்திருத்தத்தால் ஏற்பட்ட சமயப் போர்களில் ஈடுபட்டு மேலும் சில நகரங்கள் வலிவிழந்தன.

# அதிகாரம் 13

## சிலுவைப் போர்கள் — 1096-1291

நாடுகளைக் கைப்பற்றி ஆதிக்கம் செலுத்துவதற்காக நிகழ்ந்த போர்கள் நாம் எதிர்பார்க்கும் அளவு அடிக்கடி இடைக்காலத்தில் நடைபெறவில்லை. 'கிறித்துவ உலகு ஒன்று,' என்ற எண்ணம் மேலோங்கியிருந்ததால், ஒரு கிறித்துவ நாடு தக்க காரணமின்றி மற்றொரு கிறித்துவ நாட்டைத் தாக்கிப் பிடித்துக்கொள்வதை அக்காலத்தவர்கள் பெரிதும் விரும்பவில்லை. இடைக்காலத்து நிலமானிய நாடுகளைப் பிடித்து நிரந்தரமாய் ஆள்வதற்குவேண்டிய பொருள் வசதியும் எந்த ஒரு நாட்டு மன்னருக்கும் எளிதாய்க் கிட்டவில்லை. கிழக்கு ஐரோப்பாவில் பகை உணர்ச்சியோடு வாழ்ந்த பல்வேறு பண்படாக் குலங்களோடு செய்த எல்லைப்புறப் போர்களே மிக்க பயனுடையனவாய்த் தெரிந்தன. அதேபோல, மத்தியதரைக் கடற்பகுதிகளில் நலிந்து காணப்பட்ட முஸ்லிம் நாடுகளுடன் செய்த போர்கள் ஆதாயமாயிருந்தன. கிறித்துவச் சமயக் கொள்கையைப் பரப்புவதற்கும், அச்சமயத்தைத் தழுவாதவர்களை அழிப்பதற்கும், தூய இடங்களைக் காப்பதற்கும் நிகழ்ந்த எல்லைப் போர்கள், சமயக் காப்புப் போர்களாகக் (Crusades) கருதப்பட்டு, மக்களிடையிலும் திருச்சபையளவிலும் ஆதரவுபெற்றன. பிற்காலத்தில் அல்பிஜென்சியர்களைப்போன்ற முரண் சமயத்தவர்களோடும் போப்பாதிக்கத்தை எதிர்த்தவர்களோடும் நடைபெற்ற போர்களுக்கும், சமயப் போர்கள் அல்லது சிலுவைப் போர்கள் என்னும் பெயர் வழங்கப்பட்டது.

முஸ்லிம் ஆதிக்கத்திலிருந்த ஸ்பெயின் போர்த்துகல் நாடுகளைக் கிறித்துவச் சமயத்திற்கு மீட்டுத் திரும்பக் கிறித்துவ உலகில் சேர்ப்பதற்காகச் செய்யப்பட்ட போர் முயற்சியைச் சிலுவைப் போர்களின் முன்னறிவிப்பெனக் கொள்ளலாம். பத்தாம் நூற்றுண்டில் கார்டோவா மன்னர்களும் (Abdervaluman-III and

Al Mansur) ஆப்பிரிக்காவிலிருந்து வந்த பெர்பெர் (Berber) கூட்டத்தார்களும் ஸ்பானிஷ் கிறித்துவர்களை விரட்டியும் தாக்கியும் அவர்களிடையில் பேரச்சத்தை விளைவித்தார்கள். அந்தக் கிறித்துவர்களுக்கு உதவ, ஃப்ரான்சு நாடுகளிலிருந்து தொண்டர் படைகள் பிரனீஸ் மலையைக் கடந்து சென்று போரிட்டன. சிலுவைச் சின்னம் தாங்கியவர்கள் பிறைச் சின்னக்காரர்களோடு நிகழ்த்திய போர்களுக்கு, ஏழாம் கிரெகரியின் ஆசியும் ஆதரவும் கிடைத்தன. அதன் பிறகு மூர்களை எதிர்த்துச் செய்த எந்தத் துணிவுள்ள முயற்சியும் திருச்சபைக்குச் செய்த சமயப் பணியாகியது.

ஸ்பெயின் நாட்டில் கிறித்துவர்களுக்கும் மூர்களுக்கும் நடைபெற்ற போர்கள் ஏனைய சமயப் போர்களுக்கு வழி காட்டியாய் அமைந்தன. கிழைப் பேரரசில் முஸ்லிம்களின் ஆதிக்க வெற்றிகள் விளைவித்த அச்சத்தால், சிலுவைப் போர்களின் எண்ணம் மேலை ஐரோப்பாவில் முளைத்தது. சமய ஆர்வம் மிகுந்த செல்ஜுக்குத் துருக்கியர்கள் (Seljuk Turks) அல்ப் அர்ஸ்லான் (Alp Arslan), மாலிக் ஷா (Malik Shah) என்ற இரு தலைவர்களின் கீழ், மேற்கு ஆசியாவில் முஸ்லிம் அரசினைக் கைப்பற்றி, 1071-ல் கிழைப் பேரரசின் படையை மான்சிகெர்ட்டு (Manzikert) என்ற போர்க்களத்தில் படுதோல்வியுறச் செய்து, சிறிய ஆசியாவில் தங்கள் ஆதிக்கத்தை நிறுவினார்கள். சிரியா நாடும் அவர்களாதிக்கத்திற்குரியது. இந்த நிகழ்ச்சித் தொடர்ச்சியின் விளைவாக அச்சங்கொண்ட கான்ஸ்டான்டிநோப்பிள், மேற்கு ஐரோப்பிய நாடுகளின் உதவியை நாடியது. இந்த நிலையில் பாலஸ்தீன் நாட்டில் தூய கல்லறையை முஸ்லிம்களிடமிருந்து மீட்பதற்கும் கிழைப் பேரரசைத் துருக்கியர் படையெடுப்பிலிருந்து காப்பதற்கும் திருச்சபை திட்டமிடத் தொடங்கியது.

பாலஸ்தீனம் கிறித்துவர்களுக்குத் தூய்மையான நாடு. கிறித்துவின் கல்லறை அங்கிருக்கிறது. அவ்விடத்தில் பேரரசர் கான்ஸ்டன்டைனுடைய தாயார் தூய ஹெலினு (St. Helena) ஒரு திருக்கோயிலை எழுப்பியுள்ளார்கள். அங்கே தொழுவதற்குச் சமயப் பற்றுள்ள கிறித்துவர்கள் போய் வருவதுண்டு. கி. பி. 637-ல் அரபு மக்கள் ஜெருசலத்தைக் கைப்பற்றினார்கள். ஆனால், கிறித்துவர்கள் அத்தூய இடங்களுக்குப் போய் வருவதை அவர்கள் தடுக்கவில்லை. ஆயினும், 1071-ல் அத்தூய பட்டணத்தை அரபு மக்களிடமிருந்து கைப்பற்றிய துருக்கியர்கள் புண்ணியப் பயணம் செய்த கிறித்துவர்களை மிகத் துன்புறுத்தினார்கள். அவ்வாறு தொல்லைப்பட்ட மக்கள் தங்கள் நாட்டிற்குத் திரும்பிச் சென்று செய்தியை மற்றவர்களுக்குத் தெருவித்தார்கள்.

பாலஸ்தீனத்தைக் கைப்பற்றிய துருக்கியர்களின் முன் வரலாற்றையும் வளர்ச்சியையும் சற்றுப் பார்ப்போம்; ஹூணர்களும் ஹங்கேரியர்களும் ஒரு காலத்தில் வாழ்ந்து வந்த நாடு துருக்கியர்கள் வாழ்வதற்கு இடமளித்துத் துருக்கிஸ்தானம் (Turkestan) ஆயிற்று. அந்த நாடோடிக் கூட்டத்தின் தலைவர் செல்ஜுக்கு ஆகையால், அந்த மக்கள், லெஸ்ஜுக்குத் துருக்கியர்கள் (Seljuk Turks) எனப் பெயர் பெற்றார்கள். அவர்கள் பாரசீகம் மெசொபொட்டேமியா முதலிய நாடுகளைக் கைப்பற்றி, பின் பதினோராம் நூற்றாண்டில் பாக்தாது நகரையும் அதன் ஆதிக்கத்தையும் தங்கள் வசமாக்கிக்கொண்டார்கள். அர்மீனியாவும், சிறிய ஆசியாவும் துருக்கியர்களுக்குச் சொந்தமாயின. 1071-ல் பைசான்டைன் பேரரசர், அவர்களால் தோற்கடிக்கப்பட்டுச் சிறைப்படுத்தப்பட்டார். கான்ஸ்டான்டிநோப்பிளுக்கு எதிரில் பாஸ்பொரஸிற்கப்பால் இருந்த நிஷியா (Nicaea) என்ற கோட்டை, துருக்கியர் கையிற் சிக்கியது. இனி எந்த நேரத்திலும், கான்ஸ்டான்டிநோப்பிள் முஸ்லிம்களின் ஆதிக்கத்திற்குட்படலாம். 1084-ல் ஆன்டியோக்குத் (Antioch) துருக்கியர்களால் பிடிக்கப்பட்டு ஆசியாவில் கிறித்துவ ஆட்சி அழிவுற்றது. இஸ்லாம் சமயத்தைத் தழுவிய துருக்கியர்கள் சிறிய ஆசியா, பாரசீகம், இராக்கு சிரியா முதலிய நாடுகளில் சுல்தான்களினாட்சியை (Sultanate) ஏற்படுத்தினார்கள். நான்கு நூற்றாண்டுகளுக்குமுன் அரபு மக்கள் கைப்பற்ற இயலாத சிறிய ஆசியாவைத் துருக்கியர்கள் பதினோராம் நூற்றாண்டில் பிடித்துக்கொண்டார்கள். முதல் கிறித்துவப் பொது அவை கூடிய நிஷியா, அப்போது முஸ்லிம் ஆட்சிப் பீடமாய் மாறியது. ஆகவே, பேரரசர் முதலாம் அலெக்ஸியஸ் (Alexius-I) (1081–1118) போப்பு இரண்டாம் அர்பனுக்கு (Urbar–II) ஒரு வேண்டுகோள் விடுத்தார். அதற்குமுன் பேரரசர் ஏழாம் மைக்கேல் (Michael–VII) ஏழாம் கிரெகரியின் உதவியை வேண்டிக் கொண்டிருந்தார். இந்த இரு வேண்டுகோள்களையும் பெற்ற உரோம் நகரம் பெருமகிழ்ச்சியுற்றது. கீழைப் பேரரசில் போப்பாதிக்கம் ஏற்படவும் கிறித்துவ உலகு முற்றிலும் போப்பாட்சியை ஏற்று ஒன்றுபடவும் அரிய வாய்ப்பாகுமென அது கொள்ளப்பட்டது.

ஏற்கெனவே ஸ்பெயின் நாட்டில் மூர்களை எதிர்த்து ஒரு சிலுவைப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இத்தாலிய நகரங்களான ஜெனோவாவும் (Genova) பைசாவும் (Pisa) கடற்படைகளைத் தயாரித்து 1084-ல் வட ஆப்பிரிக்காவில் முஸ்லிம் கோட்டையாயிருந்த டுனிசைக் கைப்பற்றிவிட்டன. 1072-ல் பாலெர்மோவைப் பிடித்த நார்மானியர்கள், 1091-ல் சிஸிலித்

தீவு முழுவதையும் தங்கள் வசமாக்கிக்கொண்டார்கள். இந்தக் கிறித்துவ முயற்சியைப் பாலஸ்தீனத்திற்கும் சிறிய ஆசியாவிற்கும் எட்டச்செய்து கிறித்துவச் சமயத்திற்கும் கீழைப் பேரரசிற்கும் சிறந்த முறையில் உதவலாம் என்று மேற்கு ஐரோப்பிய நாடுகள் எண்ணவும் செயற்படவும் இடமுண்டாயிற்று.

1095-ல் ஃப்ரெஞ்சு நாட்டவரான போப்பு இரண்டாம் அர்பன் தென் ஃப்ரான்சில் கிளெர்மான்டு (Clermont) என்னும் ஊரில் ஒரு கிறித்துவப் பேரவையைக் கூட்டினர். குருமார்களும் பெருமானிய தார்களும் வந்திருந்தார்கள். பேரவை முடிவில் போப்பு மிக உருக்கமாய்ப் பேசினர். பிரபுக்கள் அடிக்கடி ஒருவரோடொருவர் போரிட்டு மக்களுக்கும் தங்களுக்கும் வீண் தொல்லையையும் துன்பத்தையும் விளைவித்துக்கொள்வதைக் கண்டு அவர் வருந்தினர். அச் சண்டைகளில் பயிர்கள் அழிவது காரணமாய் மக்கள் பஞ்சத்தால் பீடிக்கப்பட்டார்கள். மக்கள் எண்ணிக்கை கூடிப் புதிதாய்ப் பிறக்கின்ற பிரபுக்களின் வாரிசுக்குப் போதிய நிலமானியங்கள் இல்லாதபடி நிலைமை மாறிவிட்டது. ஆதலால், மூன்றாண்டுகளுக்குச் சொந்தச் சண்டைகளை மறந்து, முஸ்லிம்கள் கையிற் சிக்கிச் சீரழியும் தூய நாட்டை மீட்பதில் அவர்களுடைய போர்த் திறமையைப் பயன்படுத்துதல் எல்லோருக்கும் நலம் பயக்கும். ஐரோப்பாவில் தேடிப் பெறுவதற்கு இல்லாத நிலங்களும் பொருளும் வளமான கீழை நாடுகளில் ஏராளமாயுள்ளன. கீழை நாடுகளில் கிறித்துவர்கள் படும் துன்பங்களை எண்ணிப் பார்ப்பதற்கும் மனம் கூசிற்று என்று போப்புப் பேசிச் சென்றார். இந்த உணர்ச்சி மிக்க சொற்பொழிவைச் செவிமடுத்த அனைவரும் சிலுவைப் போரில் ஈடுபடுவதென அன்றே உறுதி பூண்டனர்.

'பிரபுக்கள் போர் முயற்சியில் ஈடுபட வேண்டும். ஒரு பெரும்படை பாலஸ்தீனம் செல்ல ஆயத்தமாக வேண்டும்,' என்பதே போப்புப் பேசியதன் சுருக்கம். கிறித்துவர் எல்லோரும் உணர்ச்சி வயப்பட்டு, எந்த வகையிலாவது தூய கல்லறையை மீட்கும் பெரும்பணியில் பங்குகொள்ளத் துடித்து நின்றனர். ஆர்வமே உருவமாயிருந்த துறவியார் பீட்டரும் (Peter the Hermit) ஒரு சிறு காசுமில்லாத வால்டரும் (Walter without a Cent) நாடெங்கும் சுற்றித்திரிந்து பாமர மக்களைத் தட்டியெழுப்பினர்கள். 'ஜெருசலம் எவ்வளவு தொலைவிலுள்ளது? அங்குச் செல்வதில் உள்ள துன்பங்கள் யாவை?' என்றெல்லாம் சிறிதும் சிந்திக்காது, தங்கள் மனைவி மக்களையும் உலகில் தங்களுக்கிருந்த பொருள்களையும் வண்டிகளில் ஏற்றிக்கொண்டு பாமர மக்கள் கிழக்கு நோக்கிப் பயணமானர்கள்.

தொலைவில் கிறித்துவர்களுக்கு நிகழ்ந்து வந்த துன்ப நிகழ்ச்சிகளைக் கேட்டு ஐரோப்பிய மக்கள் கொதித்தெழுந்து நின்ற காட்சி பாராட்டுக்குரியதே. கிழையுலகில் கிறித்துவச் சமயத்திற்குப் பெருங்கேடு என்ற செய்தி மேற்கு ஐரோப்பிய நாடுகளையெல்லாம் ஒன்றுபடுத்தி ஒருமுகமாய் ஒரு கருத்து வழிச் செயற்படத் தூண்டிய நிலையும் உணர்ச்சியும் எழவே, ஐரோப்பாவில் ஏழாம் நூற்றாண்டினும் பதினோராம் நூற்றாண்டின் இறுதியில் திருச்சபைச் செல்வாக்கு உச்சநிலையை எட்டியது. போப்பின் குரலுக்கு மக்கள் செவி சாய்த்தார்கள்; அதற்குக் கீழ்ப்படிந்தார்கள். சமயத் தலைவர்கள் கிரெகரியும் அர்பனும் பேசிய பின், நம்பிக்கை ஊழியாகிய அக்காலத்தில் மக்கள் வெள்ளம் திரண்டெழுந்ததில் வியப்பு ஏதுமில்லை. மேலும், அக்காலம் போர் ஊழியுமாகும். இடைக்காலத்தில் போர்தான் விளையாட்டு. அரசியல், வாணிகம் எல்லாம் போர் வாய்ப்புகள் குறைந்துவந்த நேரத்தில் சமயத்தின்பேரால் போரிட்டுப் புதிய நாடுகளைக் கைப்பற்றலாம், கொள்ளையிடலாம் என்ற வாய்ப்பினை அக்காலத்து நிலமானியப் பெருமக்கள் பெரிதும் வாழ்த்தி வரவேற்றார்கள்.

ஷார்லேமேன் காலத்திற்குப் பின், கிழைப் பேரரசு ஐரோப்பிய அரங்கில் அவ்வளவாகப் பங்கு பெறாவிடினும், கிழக்கில் ஐரோப்பியப் பண்பாட்டுக் கோட்டையாயிருந்து அந்தப் பண்பாடு வேறு பண்பட்டவர்களால் அழியாதவாறு காத்து வந்தது. பைசான்டியம், பன்னிரண்டாம் நூற்றாண்டு முடிய மக்களுக்கு நல்லாட்சியும் அமைதியும் தந்து அறிவையும் கலையையும் சிறந்த வகையில் வளர்த்துக் காத்து வந்தது. அதற்குக் கேடெனில், மேற்கு ஐரோப்பா வாளாவிருக்க முடியாது. ஏனெனில், அந்தக் கிழக்குக் கோட்டை விழுமாகில் மீண்டும் கிழக்கிலிருந்து பெருங்கூட்டங்கள் மத்திய ஐரோப்பாவிற்கும் மேற்கு ஐரோப்பாவிற்கும் படையெடுத்துவந்து அங்கு ஏற்பட்டிருந்த நானூறாண்டு வளர்ச்சியை அழித்து ஒழித்துவிடும் என்று எண்ணினார்கள்.

போப்புகளும், கிழைப் பேரரசர்களுமே சிலுவைப் போர்களின் கருத்தாக்கள் ஆவார்கள். ஃப்ரான்ஸ் நாடே அப்போர்களில் மிகுதியாய் ஆர்வம் காட்டியது. முதலில் அப் போர்களில் உயர்ந்த எண்ணங்களும் சிறந்த ஆர்வமும் காணப்பட்டன. ஆனால், போர் நிகழ்ச்சிகள் தொடர்ந்ததும் சொந்த அவா, பொருளாசை, போர்க்கொடுமை வெறுப்பு, வஞ்சம் தீர்த்தல் ஆகிய அனைத்தும் தலைவிரித்தாடின. அவற்றிற் பங்கு கொள்ள வந்த மக்கள் பலதிறப்பட்டவர்கள். கடனிறுக்க வகையற்றவர்களும்,

உழுத்தர்களும், குற்றமிழைத்துத் தப்பி ஓடியவர்களும், குறைபாடுடையவர்களும், நிலமானியக் கட்டுப்பாட்டிலிருந்து வெளியேறிய உட்குடிகளும், சமுதாயக் கழிவுகளும் தூய நாட்டிற்குச் செல்ல முன் வந்தார்கள். அன்றியும், பாவமன்னிப்பு வேண்டியவர்களும், மறுமைப்பயனை விழைந்தவர்களும், இம்மையில் பொருளும் புகழும் தேடி அலைந்தவர்களும், வீர வாழ்வில் திளைக்கத் துடித்துக்கொண்டிருந்தவர்களும் ஆகிய இன்னோரன்ன பண்பாளர்களும் சிலுவைப் போர்களில் கலந்துகொண்டார்கள்.

சிலுவைப் போர் வீரர்கள் சிவப்புத் துணியாலான சிலுவைக் குறியைத் தங்கள் ஆடையோடு வலத்தோளுக்குக் கீழே இணைத்துக்கொண்டார்கள். தங்களுக்கு உறுதியாய்க் கடவுள் அருள் கிடைக்கும் என்ற முழு நம்பிக்கையோடு அவர்கள் சமயப் போர்களில் ஈடுபட்டார்கள்.

ஒழுங்கும் அமைப்புமில்லாத பாமரக் கூட்டம் துறவியார் பீட்டர் தலைமையில் ஹங்கேரி, பல்கேரியா, நாடுகள் வழியாகக் கிழக்குநோக்கிச் சென்றது. வழிநெடுக முன்னேற்பாடு ஒன்றும் செய்யப்படாததால், அவர்கள் மிகத் தொல்லைப்பட்டார்கள்; போகிற வழியிலிருந்த மக்களுக்கும் பெருந்தொல்லை விளைவித்தார்கள். வழியில் இறந்தவர்களும், வழி தவறியவர்களும் எண்ணற்றவர்கள். மிஞ்சியவர்கள் 1096–ல் கான்ஸ்டான்டிநோப்பிள் போய்ச் சேர்ந்தார்கள். அங்கிருந்து சிறிய ஆசியாவிற்குச் செல்ல அவர்களுக்குப் பேரரசர் உதவினார். படைத்தலைவர் யாருமின்றி, திட்டம் ஒன்றுமில்லாமல், வெறுங்கையோடு சென்ற அந்த உணர்ச்சி மிக்க கூட்டம் துருக்கியரின் வாளுக்கிரையாகி மடிந்தது. துறவியார் பீட்டர் மட்டும் தம்முடைய கனவுகள் செயற்பட்டு நிறைவேறுவதைக் கண்டு களிக்க உயிர் பிழைத்துத் திரும்பி வந்தார்.

## முதற் சிலுவைப் போர் — 1096-1099

சிலுவைப் போரில் கலந்துகொண்டவர்களுக்குப் பல வேறு நோக்கங்கள் இருந்தன. ஆனால், உரோமானியத் திருச்சபை கீழைப் பேரரசர் ஆதிக்கத்திலிருந்த பைசான்டைன் திருச்சபையைத் தன்னுடைய அதிகாரத்திற்கு உட்படச் செய்து அதன் சுதந்தர நிலைக்கு முடிவு கட்ட விரும்பியதே முதன்மையான காரணமாகும். ஜெனோவாவும் வெனிசும் பாக்தாது, அலெப்போ (Aleppo) பட்டணங்கள், எகிப்து நாடு வழியாய்ச் செய்து வந்த கீழை நாட்டு வாணிகத்திற்குச் செல்ஜுக்குத் துருக்கியர் பெருந்

தடையாயிருந்தனர். தடை நீக்கப்படாவிடில் இத்தாலிய நகரங்களும் மத்தியதரைக்கடலும் அந்த வாணிகத்தை இழக்க வேண்டும். போருக்கு இது மற்றொரு முக்கியமான காரணம். இங்ஙனம் இத்தாலியைச் சூறையாடி வந்த நார்மானியக் கொள்ளைக் கூட்டத்தினருக்கு வளமிக்க கீழை நாடுகளின் பக்கம் தங்கள் கவனத்தைத் திருப்பும் வாய்ப்பு மிக்க மகிழ்ச்சி அளித்தது. அயினும், கிறித்துவின் தூய கல்லறையைத் துருக்கியரிடமிருந்து மீட்டுக் கிறித்துவ அன்பர்கள் பட்ட துன்பங்களின் இழிவைப் போக்குவதே முதற் சிலுவைப் போரின் நோக்கமென்று பறை சாற்றப்பட்டது.

முதற் சிலுவைப் போரில் நிலமானியதார்களே அணிவகுத்துச் சென்றார்கள். அரசர் எவரும் அதில் கலந்துகொள்ள முன் வரவில்லை. பங்கு கொண்டவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் லொரைன் கோமகனர். பூய்லான் கோட்ஃப்ரே (Godfrey of Bouillon), நார்மண்டி இராபர்ட்டு, ஃப்ரெஞ்சு மன்னரின் உடன் பிறந்த ஹ்யு (Hugh) என்பவர்களே. எல்லாரையும் கட்டுப் படுத்தித் தலைமை தாங்கி சிலுவைப் போர்களை நடத்தத் தலைவர் யாருமில்லை. ஏறத்தாழ முப்பதினாயிரம் வீரர்கள் கான்ஸ்டான்டி நோப்பிள் பட்டணத்தை அடைந்தார்கள்; சிலர் தரை வழியாகவும் மற்றவர் கடல் வழியாகவும் அங்கு வந்து சேர்ந்தனர். முதற் சிலுவைப் போருக்கு வந்த ஃப்ரெஞ்சு பிரபுக்களும் நார்மானியப் பிரபுக்களும் அவர்களைப் பின்பற்றி வந்த வீரர்களில் பெரும் பாலாரும் ஃப்ரெஞ்சு மொழி பேசிய காரணத்தால், கீழை நாட்டார், மேலை ஐரோப்பிய மக்கள் யாவரையும் ஃப்ராங்கு மக்கள் என்று எண்ணி அவ்வாறே வழங்கலானார்கள்.

போரிட்டுக் கைப்பற்றும் நாடுகள் யாருக்கு உரிமையாக்கப் பட வேண்டும் என்பது பற்றி வீரர்களிடையில் கருத்து வேற்றுமை நிலவியது. இறுதியாய், வென்ற நாடுகளைக் கிழக்குப் பேரரசரிடம் சேர்ப்பதாக வாக்களித்து, சிலுவை வீரர்கள் போரில் இறங்கினார்கள். 1097-ல் கிறித்துவப் படை சிறிய ஆசியாவின் தலைநகராகிய நிஷியாவைக் கைப்பற்றி, அர்மீனியர்களின் உதவியுடன் சிரியா நாட்டின்மீது படையெடுத்து ஆன்டியோக்கை (Antioch) முற்றுகையிட்டுப் பிடித்துக்கொண்டது. பின்னர் ஜாஃபா (Jaffa) வழியாய் வீரர்கள் ஜெருசலத்தை நோக்கி முன்னேறினார்கள். 1099-ல் தூய நகரம் கிறித்துவர்கள் வசமாயிற்று. அந்த வெற்றியைக் கொண்டாடும் வகையில் சிலுவைப் படையினர் எண்ணற்ற முஸ்லிம்களை ஈவு இரக்கமின்றிக் கொன்று குவித்தனர்; பின்னர் மிக்க ஆடம்பரமாய்த் திருக்கோயிலில் தொழு

தனர். வென்ற நாடுகளையெல்லாம் ஒன்றாக்கி ஒரு பெரிய கிறித்துவ நாட்டைத் தோற்றுவிக்காமல், நிலமானிய அமைப்பைப் பின்பற்றி நான்கு சிறிய நாடுகளை வெற்றி வீரர்கள் நிறுவினார்கள். கோட்ஃப்ரே ஜெருசலத்தைக் காக்கும் பொறுப்பையேற்றுக் கொண்டார். தூய கல்லறையின் காவலர் என்ற பட்டத்தை அவர் தாங்கினார். பால்டுவின், எடேசா (Edessa) என்ற கோட்டத்தையும், போஹிமண்டு என்ற நார்மானியர் (Bohemund the Norman) ஆன்டியோக்குப் (Antioch) பகுதியையும், ரேமண்டு (Raymond) என்பவர் டிரிப்பொலிஸ் (Tripolis) நாட்டையும் ஆள வேண்டும் என ஏற்பாடாயிற்று. பேரரசர் அலெக்ஸியஸ் சிறிய ஆசியாவை மீட்டுக் கொண்டார்.

முதற் சிலுவைப் போரில் கலந்து கொண்டவர்களிடையில் ஒற்றுமையில்லை; ஒழுங்கான செயல் முறை இல்லை. பெரும்பாலார் நில மானியதாரர்கையால், அவர்களுக்குள் போட்டியும் பகையும் மலிந்திருந்தன. ஆனால், வீரர்களுடைய கைமுதல் அவர்களுக்குள் இருந்த அளவு கடந்த வீரமும் ஆர்வமுமே. முஸ்லிம் ஆதிக்கத்திலிருந்த ஜெருசலத்தைக் கைப்பற்றித் தூய கல்லறையைக் காணச் செல்லும் கிறித்துவ அன்பர்களுக்கு வாய்ப்பும் வசதியும் ஏற்படுத்தித் தந்ததுதான் முதற் சிலுவைப் போரின் பெரிய சாதனை. ஒற்றுமையுடன் திட்டமிட்டுச் செயலாற்றியிருப்பார்களானால், அவ்வளவு பெரிய படை எவ்வளவோ சாதித்திருக்க வேண்டும். அந்த வகையில் அது அவர்களுக்குத் தோல்வியே. நான்கு புதிய நாடுகளைத் தோற்றுவித்து, பாலஸ்தீன் சிரியா நாடுகளின் பெரும்பகுதிகளைத் தன் வசமாக்கிக்கொண்ட படை, பேரரசர் அலெக்ஸியஸிற்குக் கொடுத்த வாக்குறுதியை மீறியே அவ்வாறு ஏற்பாடு செய்தது. ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு (1099-1187) தூய நாடு (Holy land) கத்தோலிக்கக் கிறித்துவர்களின் சமயப் பண்பாட்டு ஆதிக்கத்திலிருந்தது. மற்றச் சிலுவைப் போர்களோடு ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, முதற் சிலுவைப் போரே மிகப் பெரியது; மிக்க பயனுடையது.

முதற் சிலுவைப் போரின் விளைவாகப் புனித நாட்டிற்குத் திருப்பயணம் மேற்கொள்ளும் கிறித்துவ அன்பர்களுக்கு உதவவும், முஸ்லிம் ஆதிக்கத்திலிருந்து விடுவித்துப் புதியதாய் நிறுவப்பட்ட கிறித்துவ நாடுகளைக் காக்கவும் வீரத் துறவிகளின் சங்கங்கள் தொடங்கப்பட்டன. அவற்றுட் சிறப்பானவை 1100-ல் ஏற்பட்ட தூய ஜான் வீரர் குழுவும் (Knighhts of St. John) 1123-ல் தொடங்கிய வீரத் திருத்தொண்டர்களின் (Knights Templars) குழுவும், டியூட்டானிக்கு வீரர்களின் (Teutonic Knights) குழுவும்

ஆகும். வீரத்தொண்டு புரியும் துறவிகள் அல்லது துறவு மணப் பான்மை பெற்ற வீரர் குழாம் என அவர்களைச் சொல்லலாம். அச் சங்கங்களின் வரலாறு மிக்க தொல்லையும் துன்பமும் நிறைந்த தாகும். சமய ஆர்வம் தலைசிறந்த துணிவிற்குத் தூண்டுகோலாய் அமைகிறது. ஆனால், அந்த ஆர்வத்தையும் துணிவையும் நல்ல முறையில் இணைத்துச் செயற்படுத்தி வெற்றி காண்பதுதான் அரிதாயிருக்கிறது. சிறிய ஆசியாவைத் துருக்கியரிடமிருந்து மீட்டுக்கொண்ட கிழக்குப் பேரரசு, துருக்கியர் படையெடுப்பு அச்சம் நீங்கி அமைதி பெற்றது; சிரியாவின் கடற்கரைப் பகுதி கிறித்துவர்களின் ஆதிக்கத்தில் வந்ததால் பைசா, ஜெனோவா, வெனிஸ் முதலிய இத்தாலிய நகரங்கள் கீழை நாட்டு வாணிகத் தில் பங்கு கொண்டு வளம் பெற்றன. இத்தாலியக் கடற்படை மத்தியதரைக் கடலில் நல்ல பணி புரிந்தது. மத்தியதரைக் கடலும் முஸ்லிம்களின் ஏரியாய் இருந்த நிலைமை மாறி, இத்தாலிய நகரங்கள் ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று.

முதற் சிலுவைப் போரின் சாதனைகள் ஐரோப்பாவெங்கும் பெருமகிழ்ச்சி ஊட்டியதன் விளைவாய்க் கிறித்துவச் சமய ஆர்வமும் உணர்ச்சியும் பொங்கி வழிந்தன. சிலுவைப் போரின் வெற்றியைப் பாராட்டிய மக்களும் மன்னர்களும், அந்த எண்ணத்தையும் திட்டத்தையும் தோற்றுவித்து வகுத்துக் கொடுத்த திருச்சபை யையும் அதன் தலைவரையும் பாராட்டிப் புகழ்ந்தார்கள். சிலுவைப் போர்களின் காலமே இடைக்காலப் போப்பாட்சி தனிச் சிறப்பும் ஆதிக்க உயர்வும் பெற்றிருந்த காலமாகும்.

## இரண்டாம் சிலுவைப் போர்—1147-49

முதற் சிலுவைப் போரில் கிறித்துவர்கள் வெற்றி பெற்ற தற்குப் பல காரணங்கள் இருந்தன; ஆனால், முஸ்லிம்கள் தோற்ற தற்கு முதற் காரணமும் இறுதிக் காரணமும் அவர்களின் ஒற்றுமைக் குறைவேயாகும். இதை உணர்ந்த முஸ்லிம்கள் அந்தக் குறைபாட்டை உடனடியாக அகற்றிக்கொண்டனர். கி.பி. 1140 அளவில் சிரியாவும் மெசொபொட்டேமியாவும் சீரிய தலைமையில் இணைக்கப்பட்டன. ஒன்றுபட்ட முஸ்லிம் ஆட்சி கிறித்துவ நாடுகளைத் தாக்கிக் கைப்பற்றத் திட்டமிட்டது. 1144-ல் எடிசா நாட்டைக் கைப்பற்றிய முஸ்லிம் தலைவர் ஸாங்கி (Zanki) கிறித்து வர்களை வாளுக்கிரையாக்கி மகிழ்ந்தார். அச்செய்தி ஐரோப்பா வைத் திடுக்கிடச் செய்தது. மேலும் ஜெருசல நாடு துருக்கியரின் கைவசப்படுமோ என்ற அச்சமும் ஏற்பட்டது. அந் நிலையில் தூய பெர்னார்டு ஐரோப்பியக் கிறித்துவர்களைத் தட்டியெழுப்பிச் சமயப் போருக்கு ஆயத்தம் செய்யுமாறு மன்னர்களையும் மற்றோரையும்

வேண்டி நின்ருர். ஃப்ரெஞ்சு மன்னர் ஏழாம் லூயியும் ஜெர் மானியப் பேரரசர் மூன்ரும் கான்ராடும் அழைப்பையேற்றுப் படை திரட்டினுர்கள். அவர்கள் நிலவழியே சென்றதால் இழைப் பேரரசரால் தொல்லைகள் ஏற்பட்டன. சிறிய ஆசியாவில் முதலில் காலடி வைத்த ஜெர்மானியர்கள் தொடர்ந்து தோல்வியே கண்டார்கள். ஃப்ரெஞ்சு மன்னரும் அவருடைய படையும், தூய நாட்டை அடைந்ததும் போர் தொடரப்பட்டது. டமாஸ்கஸ் நகரை முற்றுகையிட்டார்கள். ஆனுல், அதைக் கைப்பற்ற இயல வில்லை. இந்த முற்றுகை அவர்கள் செய்த பெரிய தவருகும். தங்கள் படை வலியெல்லாம் கொண்டு கிறித்துவப் பகைவராகிய ஸாங்கியைத் தாக்கி அழிக்காது, கிறித்துவர்களின் நண்பராய்ப் பழகி வந்த டமாஸ்கஸ் அதிபரை எதிர்த்துத் தோற்றனர். அதனுல், சிரியாவில் கிறித்துவர்களின் நிலை முன்னிலும் கெட்டது. இரண்டாவது சிலுவைப் போரிலீடுபட்டவர்கள் பலவகை இன்னல் களுக்கு ஆளாகித் தோற்றுத் திரும்பிய காட்சியைக் கண்ட தூய பெர்ஞர்டு மனமுடைந்து போனுர். அத் தோல்வி மேலை ஐரோப் பிய நாடுகள் செய்த பாவங்களுக்கும் தெய்வம் தந்த தண்டனையாக அவருக்குத் தோன்றிற்று. மீண்டும் ஐரோப்பிய நாடுகள் சிலுவைப் போரினை மேற்கொள்ளப் பல ஆண்டுகளாயின.

## மூன்ருவது சிலுவைப் போர்—1189-1192

இரண்டாவது சிலுவைப் போர் கிறித்துவர்களுக்குச் சோர் வையும் முஸ்லிம்களுக்கு ஊக்கத்தையும அளித்தது. விரைவில் முஸ்லிம்களுக்குத் திறமை வாயந்த ஒரு தலைவர் கிடைத்தார். வீரமும், பண்பும், சமயப்பற்றும் ஒருங்கே பெற்ற சலாடின் (Saladin) வடசிரியா நாட்டின் தலைசிறந்த தளகர்த்தராயும் தலைமை அமைச்சராயும் விளங்கினுர். கிறித்துவர்களை அந்த வட்டாரத்திலிருந்து வெளியேற்றும் திட்டத்துடன் வலிமை யுடைய ஒரு முஸ்லிம் அரசை நிறுவ முயன்ருர்; சில ஆண்டுகளில் வடசிரியா, மெசொபொட்டேமியா, எகிப்து முதலிய நாடுகளுக்கு மன்னரானுர். புதிய எகிப்தியச் சுல்தான் சலாடின் முயற்சியால் ஆசிய முஸ்லிம்கள் உணர்ச்சி பெறத் தொடங்கினுர்கள். அவர் கிறித்துவர்களை எதிர்த்து ஒரு சமயப் போர் (Jehad) தொடங் கினுர். முஸ்லிம் உலகில் சமயப் போர் உணர்ச்சி பொங்கி வழிந்தது. ஜெருசலத்தைச் சுற்றிலும் சலாடினுடைய இராச்சியம் அமைந்துவிட்டதால் 1187-ல் மிக எளிதாய் அந்தத் தூய நகரை அவர் கைப்பற்றினுர். அன்று முதல், முதல் உலகப் போரில் 1918-ஆம் ஆண்டில் அந்தப் பட்டணத்தை ஆங்கிலப் படைத் தலைவர் ஆலன்பி (Allenby) பிடிக்கும் வரை, ஜெருசலம் முஸ்லிம்

ஆதிக்கத்திலேயே இருந்துவந்தது. சிலுவைப் போர்கள் பல நிகழ்ந்தன. அவற்றில் கிறித்துவ வீரர்கள் பல வெற்றிகளைக் கண்டார்கள். எனினும், ஜெருசலம் அவர்கள் கையில் சிக்கவே யில்லை.

முஸ்லிம்கள் ஜெருசலத்தைப் பிடித்துவிட்டார்கள் என்ற செய்தி மூன்றும் சிலுவைப் போரைத் தூண்டியது. ஐரோப்பிய மன்னருட் பலர் இதில் பங்கு கொண்டனர். இரண்டாவது போரைப்போல மூன்றுவது சிலுவைப் போரும் அரசர்கள் தலைமையில் நிகழ்ந்தது. ஜெர்மன் பேரரசர் பிரெடெரிக்குப் பார்ப ரோசா போப்பின் விருப்பத்திற்கிணங்கிக் கீழை நாட்டிற்கு நிலம் வழியாகச் சென்றார். சிறிய ஆசியாவில் ஓர் ஆற்றைக் கடக்கும் போது அதில் மூழ்கி அவர் இறந்தார். அவருடைய பெரும்படை, தலைவரை இழந்ததால் சிதறிச் சிறுத்த அளவில் சிரியா நாட்டில் போய்ச் சேர்ந்தது. ஜெர்மன் வீரர்கள் சிறைப் படுத்தப்பட்டு அடிமைகளாக்கப்பட்டார்கள். ஃப்ரெஞ்சு அரசர் இரண்டாம் ஃபிலிப்பும், ஆங்கில மன்னர் முதலாம் ரிச்சர்டும் கடல் வழியே சென்று சேரவேண்டிய இடத்தை அடைந்தார்கள். ஆயினும், வழியிலே அவர்கள் ஒருவரோடொருவர் சண்டை யிட்டுப் பிரிந்தார்கள். முதலாம் ரிச்சர்டு சைப்ரஸ் தீவைப்பிடித்து அதைக் கிறித்துவ இராச்சியமாக அமைத்தார். அந்த நாடு முஸ்லிம்களை எதிர்த்துப் போராடுவதற்குச் சிறந்த பாதுகாப் பாய்ப் பல ஆண்டுகள் இருந்து வந்தது.

சிலுவைப் போர்ப் படைகள் சிரியா நாட்டின் கடற்கரை யிலமைந்திருந்த ஏக்கர் (Acre) பட்டினத்தை முற்றுகையிட்டன. முஸ்லிம் தலைவர் சலாடினைக் கடற்கரையிலிருந்து உள்நாட்டிற்கு விரட்டவே இம்முற்றுகை மேற்கொள்ளப்பட்டது. கிறித்துவர் களுக்குப் பல துறைமுகங்களிருந்ததால், ஏக்கர் பட்டினம் அவர் களுக்குத் தேவையில்லை. எனினும், அந்தத் தேவையில்லாத முற்று கையிலே கிறித்துவ வீரர்கள் தங்கள் காலத்தையும் படைவலியை யும் வீணாக்கினார்கள். ஏக்கர் பட்டினம் பிடிபட்டதும் ஃப்ரெஞ்சு மன்னர் தம் நாடு திரும்பினார். ஆங்கில அரசர் மேலும் சில போர்களில் ஈடுபட்டார். இருமுறை அவருடைய படை ஜெரு சலத்தை நெருங்கியது. ஆனால், அது பிடிபடவில்லை. தம்முடைய சிறிய படையைக் கொண்டு முதலாம் ரிச்சர்டு ஒன்றும் சாதிக்க முடியவில்லையெனினும், சலாடினை எதிர்த்துச் சில வெற்றிகளைக் கண்டார். அவரும் சலாடினும் செய்துகொண்ட ஒப்பந்தப்படி கிறித்துவர்கள் ஜெருசலத்திற்குச் சென்று வழிபட்டு மீளலாம். மூன்றும் சிலுவைப் போரில் கலந்துகொண்டு வீரச்செயல்கள்

பல புரிந்து, இறுதியில் கிறித்தவர்களுக்கு ஜெருசலத்தில் வழி படும் சலுகையைப் பெற்றுத் திரும்பிய முதலாம் ரிச்சர்டு தம் நாட்டிற்குச் செல்லும் வழியில் கிறித்துவ நாட்டில் கிறித்துவ மன்னரால் சிறையிடப்பட்ட நிகழ்ச்சி அக்காலத்துக் கிறித்துவப் பண்பாட்டு நிலையை நன்கு விளக்குகிறது. மீட்புப் பணம் (Ransom) பெற்றுக்கொண்டு ஆஸ்திரியக் கோமகனுர் லியோப்பால்டு (Leopold) அவரை விடுவித்தார்.

மூன்ருவது சிலுவைப் போரில் எதிரிகளாய்ப் பங்கு கொண்ட சலாடினும முதலாம் ரிச்சர்டும் சிறந்த வீரர்கள். இருவரும் தம் சமயத்திற்காகப் போரிட்டனர். துணிவிலும், வீரப் பண்பிலும் போராற்றலிலும், ரிச்சர்டு முதன்மை பெற்று விளங்கினுர். ஆனல், மனிதப் பண்பில் சலாடினுக்குத் தோற்றுவிட்டார். ஜெருசலத்தில் பிடிபட்ட வீரர்களைச் சலாடின் விடுதலைசெய்து வீட்டுக் கனுப்பினுர். ஏக்கரில் சிறைப்பட்டவர்களை ரிச்சர்டு கொன்று குவித்தார். அன்பையும் இரக்கத்தையும் அடிப்படையாய்க் கொண்ட கிறித்துவச் சமயத்தால் சிறந்த சிலுவை வீரர்கள் கூடப் பண்படவில்லை என்பது கண்கூடு.

மூன்ருவது சிலுவைப் போரும் தோல்வியுற்றது என்றே சொலல வேண்டும். பல வீரரை உயிர் துறக்கச் செய்து ஏராளமான பொன்னையும் பொருளையும் வீணுக்கி, ஏக்கர் பட்டணத்தைக் கைப்பற்றியதைத் தவிர வீரர்கள் சாதித்தது வேருென்றுமில்லை. ஜெருசலம் முஸ்லிம் ஆதிக்கத்திலிருந்த போதிலும கிறித்துவர்களின் வழிபாட்டிற்குக் குறைவொனறுமில்லை. சலாடினுடைய பொறையாலும் பெருந்தன்மையினுலுமே கிறித்துவாகள் அச் சலுகையைப் பெற்றிருந்தார்கள்.

## நான்காவது சிலுவைப் போர்—1201–1204

மூன்ரும் சிலுவைப் போரின் முடிவில் மூன்ருண்டுகளுக்குப் போர் நிறுத்தம் ஏற்பாடாகியது. ஜெருசலம் சென்று வழிபட்டு வருவதறகுக் கொடுக்கப்பட்ட சலுகையைப் போர் தொடுக்காமலும் குருதி சிந்தாமலும் பெற்றிருக்கலாம். 1193-ல் சலாடின் இறக்கவே, அவர் தம்பியார் எகிப்திறகும் சிரியாவிற்கும் சுல்தான் ஆனுர். தூய நாட்டில் கிறித்துவர்களுக்குச் சொந்தமாயிருந்தது பாலஸ்தீனத்தில் ஒடுக்கலான ஒரு கடற்கரை நிலப்பகுதியே. ஐரோப்பாவில் பல நாடுகளில் உள் நாட்டுப் போர்களும் (கெல்ஃப்-ஹோஹென்ஸ்டாஃபென் போர்கள்) அயல் நாட்டுப் போர்களும் (காபீஷியன்-அஞ்செவின் சண்டைகள்) ஒற்றுமையைக் கெடுத்து அமைதியைக் குலைத்துக்கொண்டிருநதன.

மூன்றும் இன்னொசன்டு, போப்பாட்சியின் ஆதிக்கத்தைப் பெருக்கும் பணியை மேற்கொண்டு திருச்சபைத் தலைமைப் பீடத்தில் அமர்ந்திருந்தார். இரண்டாவது மூன்றுவது போர்கள் முடி மன்னர்களின் பொறுப்பில் நிகழ்ந்தன. நான்காவது சிலுவைப் போரைத் திட்டமிட்டுத் தம் பொறுப்பிலேயே நடத்தப் போப்பு மூன்றும் இன்னொசன்டு விழைந்தார், ஆனால், அதில் கலந்து கொண்ட பிரபுக்களை அவரால் கட்டுப்படுத்த முடியவில்லை. அந்தப் போரின் விளைவுகளும் அவருக்கு மகிழ்ச்சி ஊட்டுவனவாய் இருக்கவில்லை. முதற் சிலுவைப் போரைப் போலவே நான்காவதும், நிலமானியப் பிரபுக்களின் சிலுவைப் போராகவே நடந்தது. தியோபால்டு (Theobald), பால்டுவின், சைமன்-டி-மான்ட்ஃபர்ட்டு (Simon-de-Montfort) முதலியவர்கள் அதில் பங்கு கொண்டார்கள்.

கீழை நாட்டிற்குச் சென்ற சிலுவை வீரர்கள் இத்தாலியிலிருந்த ஜெனோவா, அல்லது வெனிஸ் துறைமுகத்திற்குச் சென்று அங்குக் கலத்தில் ஏறித் திட்டமிட்ட இடத்திற்குப் போவது வழக்கமாயிருந்தது. அந்தத் துறைமுகப் பட்டினங்கள் சிலுவைப் போர் வீரர்களின் கடற்பயண ஏற்பாடுகளைச் செய்வது வாயிலாகப் பெரிதளவு ஆதாயமடைந்தன. உடனடியாகப் பயணக் கட்டணத்தைக்கொடுக்க இயலாதவர்கள் தாங்கள் கடல் கடந்து வரப் பயன்பட்ட கலங்களின் முதலாளிகளுக்காகப் போரிட்டுத் தங்கள் கடனை இறுத்துக்கொண்டார்கள். அந்த வகையில் வெனிஸ் வணிகர்கள் பெரிதும் முன்னேறினார்கள். ஏதென்ஸ் அவர்களுடைய குடியேற்ற நாடாயிற்று. சைப்ரஸ், கிரீட்டு, ரோட்ஸ் (Rhodes) முதலிய தீவுகளில் சில பகுதிகள் அவர்களுக்குச் சொந்தமாயிருந்தன. வெனிஸ் மக்களின் வாணிக ஈடுபாடு மிகுதியாகவே, சிலுவைப் போரின் முறைகளுக்கு மாறுகவும் அதன் நோக்கங்களுக்கு எதிராகவுங்கூடச் செயலாற்ற அவர்கள் தயங்கவில்லை. கான்ஸ்டான்டிநோப்பிள் வாயிலாக இதுகாறும் நடைபெற்ற வாணிகத்தை இத்தாலியக் கடற்கரைப் பட்டினங்கள் பக்கமாய்த் திருப்பிக்கொண்டார்கள். அதற்காகக் கீழை நாட்டு நகரந்தோறும் வாணிக உரிமைகளைப் பெற்றிருந்தார்கள். உப்பங்கழிகள் நிறைந்த வெனிஸ் நகரம் தன் வாய்ப்பையும் வலிமையையும் உணர்ந்து அதனால் மிக்க பயன் அடைந்தது.

நான்காம் சிலுவைப் போர் வீரர்கள் வெனிஸ் நகரம் சென்றபோது கலக்கட்டணத்திற்குப் போதிய பொருள் வசதி அவர்களிடமில்லை. இதையறிந்து ஆதாயமான முறையில் வெனிஸ் பட்டினம் அவர்களோடு பேரம் பேசி முடித்துக்கொண்டது. ஏடிரியாட்

டிக்குக் கடலுக்குக் கிழக்கே ஹங்கேரி மன்னருக்குச் சொந்தமான ஸாரா (Zara) என்ற கிறித்துவப் பட்டினம், வெனிஸ் நகரோடு கடலில் கலம் செலுத்துவதிலும், கடல் கடந்து வாணிகஞ் செய் வதிலும் போட்டியிட்டது. அந்த நகரப் போட்டியை அழிக்க வேண்டும் என்பது வெனிஸின் முதல் திட்டமாகும். மேலும், வெனிஸ் நகரம் கான்ஸ்டான்டிநோப்பிள் அரசியலிலும் தலையிட்டு, அங்குத் தன் வாணிக வளர்ச்சிக்கும் முதன்மைக்கும் ஏற்ற சூழ்நிலையை உருவாக்கவும் திட்டமிட்டிருந்தது.

1202-ல் ஸாரா நகரத்தைத் தாக்கச் சிலுவை வீரர்கள் முற்பட்டார்கள். அப் பட்டின அதிபரான ஹங்கேரிய மன்னர் கிறித்துவர் மட்டுமின்றித் திருச்சபைக்கு அடங்கிய கீழாள் (Vassal) ஆதலால் அந்தக் கிறித்துவப் பட்டினத்தைக் கிறித்துவ வீரர்கள் தாக்குவது அறச்செயலாகாது என்று போப்பு இன்னொ சன்டு எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் அவரால் அந்த நிகழ்ச்சி யைத் தடுக்க முடியவில்லை. கிறித்துவப் படையின் தலைவர்களைப் போப்புச் சமயத்திலிருந்து விலக்கி வைத்தார். சமயத்திலிருந்து விலக்கப்பட்ட தலைவர்களின் தலைமையில் ஒரு கிறித்துவச் சமயப் போர் நிகழும் அரிய காட்சியைக் காணும் பேற்றை ஐரோப்பா விற்கு நான்காம் சிலுவைப் போர் அளித்தது.

ஐந்து நாள் முற்றுகைக்குப் பின் ஸாரா நகரம் வீழ்ந்தது. வெற்றி பெற்ற சிலுவைப்படை கான்ஸ்டான்டிநோப்பிளை நோக் கியது. அழிவுக் குறிகள் வெளிப்படையாகத் தெரியுமாறு மிக நலிந்திருந்த கிழக்குப் பேரரசின் நிலைமை மேலை ஐரோப்பாவின் கவனத்தைக் கவராமலில்லை. ராபர்ட் கிஸ்கார்டு காட்டிய பாதையைப் பின்பற்றிச் சிசிலி நாட்டு ரோஜரும் (Rozer-II) ஜெர்மானியப் பேரரசர் ஹென்றியும் (Henry-VI) பைசான்டியத் தைத் தாக்கிப் பிடித்துக்கொள்ள எண்ணினார்கள். அந்த முயற்சி யில் இப்போது மற்றொரு மேலை ஐரோப்பிய நாடாகிய வெனிஸ் குடியரசு துணிந்து இறங்கியது. ஏற்கெனவே நார்மானியர்களை எதிர்த்துப் போராடுவதற்குக் கான்ஸ்டான்டிநோப்பிளுக்கு உதவி வந்த வெனிஸ் கீழைப் பேரரசில் பொருளாதார சருவாதி காரத்தை நிறுவுவதற்கு வழி வகுத்துக்கொண்டிருந்தது. வெனிஸ் நகர நோக்கம் நிறைவேறுவதற்கான வாய்ப்பை, அப்போது கான்ஸ்டான்டிநோப்பிளில் நிகழ்ந்த வாரிசுப் போராட்டம் அளித்தது.

1203-ல் மீண்டும் போப்பின் ஆணையை எதிர்த்து, சிலுவைப் படை ஏஜியன் வட்டாரத் தீவுகள் பலவற்றைக் கைப்பற்றிப் பேரரசின் தலைநகரை அடைந்தது. பிறகு வீரர்கள் கோட்டையின்

கடற்கரைப் பக்கச் சுவர்களைத் தாக்கினார்கள். அவர்கள் ஆதரவு பெற்றவரை (Isaac-II) பேரரசர் பதவியிலமர்த்தினார்கள். அவப் பேறாகக் கான்ஸ்டான்டிநோப்பிள் குடிமக்கள் கிளர்ந்தெழுந்து, அப்பேரரசரைக் கொன்று, ஒரு புதிய பேரரசரைத் தேர்ந்தெடுத்து அறிவித்தார்கள். சிலுவை வீரர்கள் வேறு வழியின்றி நகரத்தி லிருந்து வெளியேறி வெனிஷியக் கலங்களில் தஞ்சம் பெற்றுத் தப்பினார்கள். மீண்டும் அவர்கள் கான்ஸ்டான்டிநோப்பிளைத் தாக்கிப் பிடித்துக்கொண்டனர். அந்த நகர வரலாற்றில் ஒன்பது நூற்றாண்டுகளாக நிகழாத தாழ்வும் அழிவும் அதற்கு இப்போது ஏற்பட்டன. தலைநகரம் சூறையாடப்பட்டு, அதன் அரிய பொருள் கள் அழிக்கப்பட்டன. வெனிஷியரும், ஃப்ரெஞ்சுக்காரரும் செய்து கொண்ட ஏற்பாட்டின்படி, கீழை நாட்டுப் பகட்டோடு பிளாண் டர்ஸ் கோமகனார் பால்டுவின், பைசான்டியத்தின் அரியணை யேறினார். இவ்வாறு ஏற்பட்ட உரோம இராச்சியம உரம் பெறாமலே பின்னர் மறைந்தது. ஏனைய தலைவர்களும் மானியங்கள் பெற்றார்கள். வெனிஸ் நகருக்குக் கிடைத்த இராச்சியப் பகுதி கடற்கரையை ஒட்டியதாகவே இருந்தது. அதனால், கீழைப் பேரரசு முழுவதிலும் வாணிக விற்பனையின் முற்றுரிமை (Monopoly) வெனிஸ் குடியரசிற்குக் கிடைத்தது.

கீழைப் பேரரசினைத் தாக்கிய துணிகரச் செயல் எதிர்பாராத அளவு பொருளையும் பெருமையையும் அளித்ததால், அச்செயல் வீரர்கள் துருக்கியரைப் பற்றிக் கவலை கொள்ளாமலே திரும்பி விட்டார்கள். போப்பு இன்னொசன்டும் இப்பெரு வெற்றியைத் திருவருள் நிகழ்ச்சியாகக் கருது வரவேற்றார். கிரேக்கத் திருச் சபையும் (Greek Church) உரோமானியத் திருச்சபையும் (Latin Church) இணைந்து ஒன்றுபட்டு ஒரே தலைமையில் இயங்குவதற்கு இப்போது வாய்ப்பேற்பட்டது.

நான்காவது சிலுவைப் போர் சமயப் போராகவே நடைபெற வில்லை. கடற் செலவின் கட்டணத்திற்குப் பதிலாக ஸாரா நகரத்தைத் தாக்கி வென்றபின் சிலுவை வீரர்கள் வெனிஷியக் கலங்களில் எகிப்திற்குச் சென்று முஸ்லிம் ஆதிக்கத்தை அதன் தலைமைப் பீடத்திலேயே எதிர்க்க விரும்பினார்கள். வெனிஸ் வணிகர்கள் எகிப்திய முஸ்லிம்களோடு அக்காலத்தில் வளமிக்க வாணிகஞ் செய்துகொண்டிருந்ததால் மிக்க சூழ்ச்சியோடு சிலுவை வீரர்களைக் கான்ஸ்டான்டிநோப்பிள் பக்கம திருப்பி அந்தத் திசையில் கலம் செலுத்திச் சென்றார்கள். சிலுவைப் போரில் கலந்துகொண்ட வீரர்களும் தலைவர்களும் சமயத்தைவிட ஆதா யத்தையே கருதியதால், அவர்களும் அதற்கிசைந்தார்கள். இவ்

வாறு சிலுவைப்போர் பழிப்பிற்கும் இகழ்ச்சிக்கும் இடந் தந்தது.

நான்காவது சிலுவைப் போரின் விளைவாக ஐரோப்பாவில் வெனிஸ் குடியரசு முதன்மையான வாணிக நாடாயிற்று. அதன் ஆதிக்கம் மத்திய தரைக்கடலின் கிழக்குப் பகுதியில் ஓங்கி நீடித்தது. அது காரணமாய் வெனிஸ் நகரம் கீழை நாடுகளோடு கலைத் துறையிலும் பண்பாட்டுத் துறையிலும் மிக நெருக்கமான தொடர்பு கொள்ளத் தொடங்கிற்று. முஸ்லிம்களை எதிர்த்துப் போராட அழைக்கப்பட்ட வீரர்கள், தங்கள் சமய எதிரிகளை விடுத்துத் தங்களை உதவிக்கழைத்த பைசான்டியப் பேரரசையே தாக்கி அழித்தார்கள். கான்ஸ்டான்டிநோப்பிளில் 1204-ல் நிறுவப் பெற்ற உரோம இராச்சியம் (Latin Kingdom) 1261-ல் அழிந்து, அந்த இடத்தில் பழைய கிரேக்க அரசு மீண்டும் தழைக்கலாயிற்று. நான்காம் சிலுவைப் போரினுல் கான்ஸ்டான்டி நோப்பிள் அடைந்த தாழ்வு இறுதியாய் அந்த நகரம் 1453-ல் துருக்கியர்களால் கைப்பற்றப்படுவதற்குப் பெரிதளவு வழி கோலியது.

## குழந்தைகளின் சிலுவைப் போர்—1212

பதின்மூன்றும் நூற்றுண்டின் தொடக்கத்தில் நிகழ்ந்த நான்காவது சிலுவைப் போர், வாணிகப்போரே அன்றி, சமயப்போர் என்று அதைச் சொல்வதற்கில்லை. அது கிரேக்க ஆட்சியை அழித்து இத்தாலியச் செல்வாக்கைப் பரப்புவதற்காக நிகழ்ந்த ஒரு போராகும். பைசான்டியப் பேரரசிற்குள் மேற்கிலிருந்த திருச்சபையும் கிழக்கிலிருந்த திருச்சபையும் ஒன்ருேடொன்று மோதித் தமது வலிமையைச் சோதித்துப் பார்த்துக் கொண்டன.

நான்கு சிலுவைப் போர்களிலும் அரசர்களும், மானியதார்களும், வீரர்களும், பாமர மக்களும் அறப்போரின் குறிக்கோளை அடையத் தவறிவிட்டார்கள். பெரியவர்கள் செய்யத் தவறியதைச் செய்ய முற்பட்ட குழந்தைகளின் முயற்சியை வாழ்த்தி வரமளிக்கலாம் என்று எண்ணிக் குழந்தைகள் தூய நாட்டிற்குச் செல்ல முன் வந்தார்கள். ஃப்ரானசின் தென்பகுதியில் வாழ்ந்த ஸ்டீபன் (Stephen) என்ற ஆடு மேய்க்கும் சிறுவன் ஊர்ச்சிறுவர்களையும் சிறுமிகளையும் கூட்டிக்கொண்டு பாலஸ்தீனத்திற்குப் புறப்பட்டான். பண்டை நாளில் இஸ்ரேல் நாட்டவர்க்குத் திருவருளால் கடல் வழிவிட்டு விலகியதுபோல, தனக்கும் திருவருள் கூட்டி வைக்கும் என்று அச் சிறுவன் கருதினுன். அவர்கள் மார்சேல்ஸ் நோக்கிச் செல்லும் வழியில் ஏராளமான சிறுவர்கள்

அக்கூட்டத்தில் சேர்ந்துகொண்டார்கள். தூய நாட்டிற்குச் சென்று துருக்கியர்களோடு போரிடுவதை அவர்கள் ஓர் இன்பச் செயலாக எண்ணினார்கள்போலும்! அவர்களைத் தடுக்காது பெரியவர்களும் வாளாவிருந்ததுதான் விந்தையாயிருக்கறது! முப்பதினாயிரம் சிறுவர்கள் துறைமுகப்பட்டினத்தில் கூடினார்கள். ஆனால், அரசினர் அவர்களுட்பெரும்பாலரைத் தடுத்து நிறுத்திவிட்டனர். ஐயாயிரம் சிறுவர்கள் கலங்களில் ஏறினார்கள். புயலிற் சிக்கிய கப்பல் உடைந்து கடலில் மூழ்கியவர்கள் போக, எஞ்சியவர்கள் அலெக்ஸாண்டிரியாவிற்கு அழைத்துச் செல்லப்பட்டு, அடிமைகளாக எகிப்து நாட்டில் விற்பனை செய்யப்பட்டார்கள்.

அதே போல ஜெர்மனியிலும் அந்நாட்டுச் சிறுவர்கள் நிக்கொலஸ் என்ற சிறுவனால் தூண்டப்பட்டார்கள். நாற்பதினாயிரம் சிறுவர்கள் ஆல்ப்ஸ் மலையைக் கடந்து இத்தாலிக்குச் சென்றார்கள், அவர்களுட் பலர், மலை வழியிலே இறந்தனர்; சிலர் இத்தாலியில் தங்கிவிட்டனர்; மற்றும் சிலர், கடல் கடந்து ஃப்ரெஞ்சு சிறுவர்கள் போல அடிமைகளாக்கப்பட்டு உரிமையிழந்தார்கள். சிறுவர்களுள் யாரும் தம் இல்லம் திரும்பவில்லை.

## ஐந்தாவது சிலுவைப் போர்—1228-29

சிறுவர்களின் தனி முயற்சியையும் தன்னலமறுப்பையுங் கண்ட பின்னரும் பெரியவர்கள் செயலற்றுக்கிடப்பது கிறித்துவச் சமயத்திற்கே பெரிய இழிவாகும் என்று விளக்கிப் போப்பு மூன்றும் இன்னொசன்டு மற்றொரு சமயப் போரைத் தூண்டினார். 1217-ல் ஒரு படை எகிப்தைத் தாக்கிப் பிடிப்பதற்காகப் புறப்பட்டது. ஏனெனில், எகிப்தியச் சுல்தான் ஆதிக்கத்திலேதான் ஜெருசலம் இருந்து வந்தது. சென்ற படை வென்ற ஒரே நகரத்தையும் (Damietta) இழந்து திரும்பிற்று.

எகிப்துக்குச் சென்று, நைல் ஆற்றின் வாயில் இருந்த நகரத்தைப் பிடித்தும் ஜெருசலத்தை எட்டிப்பார்க்க இயலாத காரணத்தால், அடுத்த சிலுவைப்படை தூய நாட்டிற்கே செல்லத் திட்டமிட்டது. இந்தச் சமயப் போரில் பெரும்பங்கு கொண்டவர் பேரரசர் இரண்டாம் பிரெடெரிக்கு ஆவர். தூய நாட்டில் அறப்போரை நடத்திய முறையைப் போலவே அவர் நம் நாட்டிலிருந்து அதற்காகப் புறப்பட்ட வகையும் வழக்கத்திற்கு மாறான புதுமையாகவே இருந்தது. அவருக்கும் போப்புக்கும் நிகழ்ந்த உரிமைப் போராட்டம் காரணமாய், இரண்டாம் பிரெடெரிக்குத் தம் நாட்டை விட்டு நீங்கித் தூய நாட்டில் சில மாதங்கள் கழிக்கும் சூழ்நிலையில் அவருடைய பேரரசு இல்லை. ஆனால், அவரை

அங்குச் செல்லுமாறு போப்பு வற்புறுத்தி வந்ததோடு ஆணையும் இட்டார். தூய நாட்டிற்குப் புறப்பட்ட பேரரசர் நோய் காரணமாய்த் திரும்பவே, போப்பினுல் சமயத்திலிருந்து விலக்கப்பட்டார். ஜெருசல மன்னருடைய வாரிசுதாரிணியை மணந்திருந்த பேரரசர் மீண்டும் 1228-ல் பாலஸ்தீனத்திற்குப் பயணமானுர்; சமய விலக்கோடுதான் சென்றுர், தம் நாட்டில் சாரசேனியர்களுடன் நல்லுறவை வளர்த்திருந்தாராகையால், புனித நாட்டு முஸ்லிம்களோடும் அமைதியான முறையிலேயே அறப்போரை முடித்துக்கொள்ள முயன்றுர். முஸ்லிம் தலைவர்களுக்குள் இருந்துவந்த வேறுபாடுகளைப் பயன்படுத்திக்கொண்டு பிரெடெரிக்கு ஓர் உடன் படிக்கையோடு திரும்பினுர். நாற்பதாண்டுகளாகச் சிலுவைப் படைகள் முயன்று, முடியாது என்று கைவிட்ட ஒரு வெற்றி, பெரும் போர் ஒன்றுமின்றியே, அவர்களுக்குப் பிரெடெரிக்கின் வெல் திறத்தால் கிட்டியது. எவ்வித இடையூறுமின்றி ஜெருசலத்திற்குச் சென்று கிறித்துவர்கள் வழிபடலாம்; ஏக்கரிலிருந்து ஜெருசலத்திற்குச் செல்லும் பாட்டையொன்று கிறித்துவர்களுக்காக ஒதுக்கப்பட்டது. ஜெருசலத்திலுள்ள முஸ்லிம்கள் அங்கிருந்த இரு பெரு மசூதிகளிலும் அமைதியாய்த் தொழும் உரிமை வழங்கப் பெற்றுர்கள். இத்தாலியிலிருந்து புறப்பட்டு ஓராண்டு முடிவதற்குள், பேரரசர் ஜெருசலத்திற்குள் சென்று, அத்தூய நகரில் தாமே முடி சூட்டிக்கொண்டார். முதற்சிலுவைப் போருக்குப் பின் கிறித்துவர்கள் காணுத வெற்றியும் பெருமையும் அவர்களுக்கு ஐந்தாம் சமயப் போரில் கிடைத்தன. கிறித்துவச் சமயத்திலிருந்து விலக்கப்பட்ட தலைவர் பெரும் படையிருந்தும் களம் புகாது. வெல் திறத்தைக் கொண்டு பெற்ற வெற்றியின் அருமைப்பாடு விந்தையானது மட்டுமன்றி, பாராட்டுக்குமுரியது. ஆயினும், போப்பு ஒன்பதாம் கிரெகரி (Gregory–IX) அவ்வெற்றியைப் பாராட்ட மறுத்தார்; அன்றியும், அவ்வெற்றியைக் கிறித்துவ உலகிற்களித்த பிரெடெரிக்கை எதிர்த்து, அவர் தூய நாட்டிலிருந்து திரும்புமுன் அவர் நாட்டிலே அறப்போரைத் தூண்டித் தாமே தலைமை தாங்கி நடத்தவும் தொடங்கிவிட்டார்.

படை வலிமையால் பெற்ற வெற்றி போன்றே, வெல்திறத்தால் அடைந்த ஆதாயமும் நிலைக்கவில்லை. முஸ்லிம் தலைவர்கள் பகைத்துக்கொண்டு தங்களுக்குள் போரிட்டார்கள். இந்த உள்நாட்டுப் போரைக் கிறித்துவர்கள் பயன்படுத்திக்கொள்ளத் தவறிவிட்டார்கள். மீண்டும் 1244 ல் எகிப்தியச் சுல்தான் ஜெருசலத்தைக் கைப்பற்றிக்கொண்டார். தொலை நாடுகளுக்குச் சென்று சமயத்திற்காகப் போராடும் உணர்ச்சி ஐரோப்பாவில்

குன்றிவிட்டது. நான்காம் சிலுவைப் போரின் போக்கும் விளைவும், முதற்சிலுவைப் போருக்குப்பின் நிகழ்ந்த சிலுவைப் போர்களின் தோல்வியும், ஐந்தாம் சிலுவைப் போர் வெற்றி யடைந்தும் அதனுலேற்பட்ட பயன் நிலையாமையும் பொது வாய்ச் சிலுவைப் போர்களைப் பற்றி ஐரோப்பிய மக்களின் மனப் போக்கை மாற்றியமைத்தன. மேலும், தூய நாட்டுடன் சில போர்கள் நிகழ்ந்தனவாயினும், அவற்றில் மக்கள் காட்டிய ஆர்வம் மிகக் குறைவாகவே இருந்தது.

சிலுவைப் போர்களின் வரலாற்றை முடிக்குமுன் அப் போர் களுடன் தொடர்பு கொண்ட இடைக்காலச் சமயப் பெரியார் ஒருவரின் தொண்டினைக் குறிப்பிடவேண்டும். ஃப்ரெஞ்சு அரசர் ஒன்பதாம் லூயி, உண்மையான சமயப் பற்றுடைய கிறித்துவர். நாட்டாட்சியை ஒரு கடமையாய்க் கொண்டு அப்பணியில் ஈடுபட் டிருந்த நேரம் போக, மற்றக் காலங்களில் சமயச் சிந்தனையிலும் வழிபாட்டிலும் ஈடுபட்டிருந்தார். 1244-ல் ஜெருசலம் முஸ்லிம்கள் கையிற் சிக்கிவிட்ட செய்தியைக் கேட்ட அப் பெரியார், 1248-ல் ஒரு படையுடன் எகிப்திற்குச் சென்று, சில வெற்றிகளைப் பெற்ருர். ஆனல், அந்த நாட்டிலேயே அவர் படை அழிக்கப் பட்டது. டாமியெட்டாவைப் பிடித்த ஃப்ரெஞ்சுப் படை கெய்ரோவை நோக்கிச் செல்லும் போது, முஸ்லிம்களால் முறியடிக்கப்பட்டது. பெரும்பணச் செலவுடன் ஒன்பதாம் லூயி தம்மைச் சிறையிலிருந்து மீட்டுக்கொண்டு எஞ்சிய வீரர்களுடன் எகிப்திலிருந்து வெளியேற வேண்டியதாயிற்று. பிறகு அவர் பாலஸ்தீனத்திற்குச் சென்று, அங்கே நான்காண்டுகள் தங்கி கிறித்துவ வீரர்களையும் தலைவர்களையும் பெரிதும் ஊக்கி வந்தார். கீழை நாட்டிலிருந்து அவர் புறப்பட்டுச் சென்ற பின், மங்கோலியத் தலைவர் 1268-ல் ஆன்டியோக்கு, ஜாஃபா (Jaffa) என்னும் நகரங்களைப் பிடித்துக்கொண்டார். இச் செய்தியைக் கேட்ட லூயி மீண்டும் ஒரு படையுடன் தூய நாட்டிற்குச் செல்லப் புறப்பட்டார். அவருக்கு உடல் நலிந்திருந்த போதிலும், உள்ள உறுதி அவரை ஊக்கிற்று. ஆங்கில இளவரசர் எட்வர்டும் துணை யாய்ச் சென்ருர். டூனிஸிற்குச் சென்ற படை கொள்ளை நோயினுல் தாக்கப்பட்டது. அதனுல் லூயியும் 1270-ல் இறந்தார். ஆயினும் ஆங்கில இளவரசர் தனியே துணிவுடன் சென்று, 1271-ல் நாசரெத்தைக் கைப்பற்றி, தூய நாட்டிலிருந்து மீண்டார். ஃப்ரெஞ்சு மன்னர் தூய லூயியுடன் பற்றுள்ள இறுதி அறப்போர் வீரர் மறைந்தார். சமயப் பணியில் உள்ளத்தைப் பறிகொடுத் திருந்த அரசர் ஒன்பதாம் லூயி சிலுவைப் போருக்கும் தம் உயிரை உரிமையாக்கினுர். அந்த உத்தமர் திருச்சபையால்

1297-ல் திருத்தொண்டர் தொகையுட் சேர்க்கப்பட்டார். ஒன்ப தாம் லூயி இறந்த பின் சமயப் போர்கள் தொடர்ந்து நடை பெற்றன. எனினும், ஒன்றேனும் அப்பெயருக்கு ஏற்றாற்போல நடைபெறவில்லை. சிரியா (Syria)வில் கிறித்துவ ஆட்சி மறையத் தொடங்கிற்று. முஸ்லிம் தலைவர்களுக்குள் இருந்த பிளவு காரண மாக, அந்த ஆட்சி தொடர்ந்ததேயன்றி, கிறித்துவ ஆட்சியின் திறமையினாலோ வலிமையினாலோ அன்று. 1289-ல் டிரிப்பொலிஸ் கைப்பற்றப்பட்ட பின் 1291-ல் ஏக்கர் முஸ்லிம்களால் பிடிக்கப் பட்டது, முதலாம் ரிச்சர்டு கைப்பற்றிய ஏக்கரின் இழப்போடு தூய நாட்டிலிருந்த கிறித்துவ அரசு முடிவுற்றது. ஜெருசலம் 1918-ல் முதலாம் உலகப் போரின் இறுதியில் முஸ்லிம் ஆதிக்கத்தி லிருந்து விடுபெற்றது. அதன் விடுதலையில் இந்திய வீரர்களும் பங்கு பெற்றார்கள்.

சமயப்பற்றுள்ள கிறித்துவ வீரர்களும், படைக்கலம் தாங்கிய கிறித்துவ அன்பர்களும் தூய நாட்டிற்குச் சென்று சமயப் போரில் ஈடுபடாத ஆண்டே இருநூற்றாண்டுகளாக இல்லையென்று சொல்லும் அளவிற்கு அறப்போர் இடைவிடாது நடைபெற்று வந்தது. சிலுவைப் போர்களை எண்ணி, அவை எட்டு என் பாருண்டு. அப் போர்களின் போக்கையும் தன்மையையும் மறந்தே அவற்றைக் கணக்கிட்டுக் குறிப்பிடக் கூடும். முதற் சிலுவைப் போரைத் தூண்டிய ஒற்றுமையுணர்ச்சியும் சமய ஆர்வமுமே வரலாற்றாசிரியருடைய கவனத்தைக் கவர்கின்றன. மற்றச் சிலுவைப் போர்களைத் தொடர்ச்சியான ஒரு நிகழ்ச்சியாகவே அவர் காண்கிறார்.

அமெரிக்காவை நோக்கிச் சென்ற கொலம்பசின் கடற் பயணத்திற்கு முதற் சிலுவைப் போரை ஒப்பாகக் கருதுவோ மானால், மக்கள் பின்னர் அட்லான்டிக்கு மாக்கடலைக் கடந்து சென்ற பயணங்கள் போல மற்றச் சிலுவைப் போர்களிருந்தன எனலாம். நாகரிகமில்லாத மக்களோடு போராடி, ஐரோப்பா வின் வடதிசையிலும் ஹங்கேரிப் பகுதியிலும் தன் பண்பாட்டைப் பரப்பிய ஐரோப்பியச் சமுதாயம், ஜிப்ரால்டர் இடைகழி முதல் நைல், டான் ஆறுகளின் வாயில்கள் ஈறாக உள்ள பரப்பைப் படை வலியால் வென்று, வாணிக மூலம் விரிவாக்கி, அங்குப் பரவிய இயக்கமே சிலுவைப் போர்களாகும்.

அரசியல் கண்ணோட்டத்துடன் பார்த்தாலும், வாள் அம்பு கொண்டு நிகழ்த்திய சண்டைகள் என்ற முறையில் ஆய்ந்தாலும், சிலுவைப் போர்கள் பெரிய ஏமாற்றத்தையளித்த படுதோல்வியே

யாகும். குறுகிய கால வெற்றிகள், நிலையான தோல்விகள், வீரர் பலரது உயிரிழப்பு, ஏராளமான பொருள் இழப்பு, கிறித்துவச் சமயப் பரப்போ ஆதிக்கவெல்லையோ விரிவடையாமை ஆகிய இவைகளே சிலுவைப் போர்களின் சுருக்கமாகும். இரு நூற்றாண்டுப் போருக்குப் பின்னும், ஆசியாக் கண்டத்தில் கிறித்துவ ஆதிக்கம் எங்குமில்லை. மத்திய தரைக்கடல் தீவுகளான ரோட்ஸ் (Rhodes) சைப்ரஸ் (Cyprus) என்னும் இரண்டில் மட்டுந்தான் கிறித்துவ ஆதிக்கம் சிறிது காலம் நீடித்தது. சிலுவைப் போர்கள் இஸ்லாமியப் படையெடுப்பிலிருந்து ஐரோப்பாவைக் காத்தன என்று சொல்லவும் இடமில்லை. முஸ்லிம் ஆதிக்க அலை சிலுவைப் போர்களுக்குப்பின் மீண்டும் ஐரோப்பாவை நோக்கிப் பெருக்கெடுத்துவந்து கீழைப்பகுதியை விழுங்கத் தவறவில்லை. சிலுவைப் போர்கள் முடிந்து நாற்றைம்பது ஆண்டுகளுக்குள் துருக்கியர்கள் கான்ஸ்டான்டிநோப்பிளைக் கைப்பற்றிப் பைசான்டியப் பேரரசினை அழித்தார்கள்.

சிலுவைப் போர்கள் பெருந்தோல்வியாய் முடிந்ததற்கு முதற் காரணம் சிலுவை வீரர்களிடையே கட்டுப்பாடான அமைப்பும் ஒற்றுமையும் ஒழுங்கும் இன்மையே ஆகும். அவர்கள் நல்ல தலைவர்களைப் பெறவில்லை. வென்று கைப்பற்றிய தூய நாட்டில் குடியேறுவதிலும் ஆதிக்கஞ் செலுத்துவதிலும் ஏற்பட்ட தொல்லைகளும், பைசான்டியப் பேரரசர்களின் குறுகிய மனப்பான்மையும், நார்மானிய வீரர்களின் தன்னலமும், இத்தாலிய நகரங்களுக்குள் போட்டியும் அவற்றின் வாணிகக் குறிக்கோளும், ஜெர்மானியப் பேரரசர்களுக்கும் போப்புகளுக்குமிடையே நிகழ்ந்து வந்த போராட்டமும், கிறித்துவ ஐரோப்பாவின் தோல்விக்கு வேறு சில காரணங்களாகும்.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் சிதறிக் கிடந்த கிறித்துவ நாடுகளை ஒன்றுபடுத்தும் ஆற்றல் போப்பாட்சிக்கு இருந்தது. மக்களிடையில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த மேலைத்திருச்சபை, சிலுவைப் போர்களைத் தூண்டி, பின்னின்று நடத்தவும் முடிந்தது. பதின்மூன்றும், பதினான்காம் நூற்றாண்டுகளில் மக்களிடையில் போப்புகள் மதிப்பிழந்துவிட்டார்கள். போர்களுக்காகப் பணம் திரட்டக் கையாண்ட முறைகளும் கொடுக்கப்பட்ட சலுகைகளும் போப்புகளின் பெருமையைப் பாதித்தன. முஸ்லிம்கள் கைவசமாகிவிட்ட தூய நாட்டை மீட்கப் போப்பு வேண்டுகோள் விடுத்தும் ஐரோப்பிய அரசர் எவரும் முன் வரவில்லை. ஆற்றல் மிக்க போப்பு மூன்றும் இன்னொசன்டின் (Innocent-III) கண்டனத்தையும் பொருட்படுத்தாமல், நான்காவது சிலுவைப்

போர் வீரர்கள் முஸ்லிம் நாடுகளாகிய சிரியாவையும் எகிப்தையும் தாக்காது பைசான்டியப் பேரரசினையன்றோ தாக்கிச் குறையாடினர்கள்? அதன் பின்னர் நடைபெற்ற போர்கள், ஆண்டவன் பெருமையை நிலைநாட்டவோ கிறித்துவம் பரவவோ நிகழவில்லை. தங்கள் நாடுகளின் பெருமைக்காக மன்னர்களும், தத்தம் நகர வாணிக வளர்ச்சிக்காக இத்தாலிய வாணிகத் தலைவர்களும், சிலுவைப் போர்களைப் பயன்படுத்தினர்கள். இஸ்லாமிய ஆதிக்கத்தை ஒடுக்கத் தொடங்கிய போர்கள், போப்பாட்சியை எதிர்த்த அரசர்கள்பாலும், முரண் சமயத்தோர் மேலும் திருப்பப்பட்டன. சிலுவைப் போர்களின் தரமும் குறிக்கோளும் மிகமிகத் தாழ்த்தப் பட்டுவிட்டன.

சமயப் போர்கள் அரசியலாதிக்கப் போர்களாய்த் திரிந்தபின், மக்கள் ஆதரவு அருகியது. முஸ்லிம்களைக் கொன்று குவிப்பதற்கு அளித்த பரிசும் பாராட்டும், கிறித்துவர்களின் குருதியைச் சிந்தினும் உண்டெனக் கழறிய போப்புகளுக்கு மக்கள் ஆதரவும், அத்தகைய போர்களுக்கு மக்கள் ஆர்வமும் அற்றுப் போனதில் வியப்பில்லை.

சிலுவைப் போர்கள் முடிவடைந்த பிறகும், அவற்றின் நினைப்போ, அவற்றுக்கான முயற்சியோ அற்றுப் போகவில்லை. ஐரோப்பிய நாடுகளுக்கு இடையேயும் சிலுவைப் போர்கள் நிகழ்ந்தன. பேரரசிலிருந்த முரண் சமயத்தாரோடும், ஸ்பெயின் நாட்டு முஸ்லிம்களோடும். ஜெர்மனியின் கிழக்கு எல்லையில் வாழ்ந்த லெட்ஸ் (Letts) ஸ்லாவ் (Slavs) மக்களாகிய கிறித்தவர்களல்லாதவரோடும் போரிடுவது சமயப் போராய்க் கருதப்பட்டது. மிகுதியான வரி வசூலிப்பதற்காகவே சில ஃப்ரெஞ்சு மன்னர்கள் சிலுவைப் போர்களை மேற்கொள்ளப் போவதாகப் பறை சாற்றுவித்தார்கள். போருக்கான வாய்ப்பும் முயற்சியும் நாட்டுக்குள்ளேயும் அண்டை நாடுகளிலும் கிடைத்ததால், சிலுவைப் போர்களுக்கான பெரும்பொருள் சேர்க்கையும் முயற்சியும் அரியவாயின, தொலைவிலிருந்த நாடுகளுக்கேகி, பல மாதங்கள் போரில் ஈடுபட்டு, காலத்தையும் பொருளையும் உயிரையும் இழக்கத் துடித்த வீரர்களின் எண்ணிக்கை மிகக் குறைந்துவிட்டது. போப்புப் பத்தாம் கிரெகரி (Gregory-X) ஐரோப்பாவெங்கும் விளம்பரஞ் செய்தும், சிலுவைப் போருக்கு ஆள் திரட்ட முடியவில்லை. பதினோராம் நூற்றுண்டில் பேரொளியாய் விளங்கிய சிலுவைப் போர், பதின் மூன்றும் நூற்றுண்டில் அளவற்ற அல்லல் விளைவித்த—நேர்மையான மக்கள் விரும்பாத-போராய்க் காணப்பட்டது. சமயப்போர் என்றதும் மக்கள் நடுங்கி நழுவினர்கள். சமய நம்பிக்கையில் திளைத்தவர்களுக்கு அறிவுக்கண் திறக்கப்பட்டு விழிப்பேற்பட்டது,

சிலுவைப் போரினுல் ஜெருசலத்தை முகம்மதியர்களிட மிருந்து கிறித்தவர்கள் மீட்கவில்லை; இஸ்லாம் ஒடுக்கப்படவு மில்லை. அதன் ஆதிக்கம் தென்கிழக்கு ஐரோப்பாவில் பரவி. பின்னர் ஆட்டோமன் (Ottoman) துருக்கியர் ஆட்சியேற்பட வழி வகுத்தது. ஆனல் சிலுவைப் போர்களே நிகழவில்லையெனில். முஸ்லிம்கள் மேலை ஆசியாவையும் வட ஆப்பிரிக்காவையும் வென் றதுபோல ஐரோப்பிய நாடுகளையும் சிறிது சிறிதாய்க் கைப்பற்றிக் கிறித்துவச் சமயத்தையும் பண்பாட்டையும் ஒரளவு அழிந்திருக்கக் கூடும். இஸ்லாமிய ஆதிக்கத்திலுள்ள மத்தியக் கிழக்கு நாடுகளின் தேக்க நிலையை (Stagnation) வாழ்வியலிலும் அறிவுத் துறையிலும் ஐரோப்பா அடைந்திருக்கும். அத்தகைய முகம்மதிய ஆதிக்கம் ஐரோப்பாவில் தலை காட்டாமல் தடுத்து இன்றைய ஐரோப்பியப் பண்பாட்டின் சிறந்த கூறுகள் பலவற்றைக் காத்துத்தந்த பெருமை சிலுவைப் போர்களுக்கு என்றுமுண்டு. கீழை நாடுகளில் ஆதிக்கஞ்செலுத்திய இஸ்லாம், அங்கிருந்த பண்பாட்டை ஒரளவு உருக்குலைத்தது. ஆனல், பண்படா மேலை நாட்டவரைக் கிறித் துவம் பண்படுத்தியது. கலை, விஞ்ஞானம், கல்வி, கைத்தொழில், சமுதாயப் பழக்கவழக்கம் முதலிய ஆக்கத் துறைகளில் கிறித் துவச் சமயம் முற்போக்குடையதாயிருந்தது வெள்ளிடை மலை.

சிலுவைப் போர்களினுல் மேலை ஐரோப்பாவில் கிறித்துவம் வலுவடைந்தது. இஸ்லாமிய ஆதிக்கத்திலிருந்து ஸ்பெயின், போர்த்துகல் நாடுகள் விடுவிக்கப்பட்டன. பால்டிக்குப் பகுதியில் வாழ்ந்த கிறித்துவர்களல்லாத மக்கள் ஜெர்மன் ஆதிக்கத்திற் குட்பட்டார்கள். முதல் நூருண்டுகளுக்குப் போப்பாட்சி மிகுந்த செல்வாக்குப்பெற்று விலிவுடன் விளங்கியது. வெனிசியர் வாணிக ஆதிக்கத்தை நிறுவினர். ஆனல், மனிதனுக்கும் கிறித்துவிற்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்தச் சிலுவைப் போரால் முடிய வில்லை. திருச்சபை கிறித்துவப் பகைவர்களோடு போரிட்டு அவர் களைக் கொன்றது போல, வேறு சமயத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்காகவே, கிறித்துவர்களல்லாதவர்களையும் வாள் கொண்டு வெட்டி வீழ்த்தவும் ஆய்த்தமாயிற்று. முதற் சிலுவைப் போர்க் காலத்திலும் மூன்ரும் சிலுவைப் போரின் போதும் யூதர் கள் (Jews) வதைத்துக் கொல்லப்பட்டார்கள் (Pogroms). பின்னர்க் கத்தோலிக்க நாடுகள் பிராட்டஸ்டென்டுகளைத் துன் புறுத்தவும் வதைக்கவும் (Inquisition) பிராட்டஸ்டென்டு நாடுகள் கத்தோலிக்கர்களுக்கு அல்லல் விளைவிக்கவும் சிலுவைப்போர் களின் போதே ஐரோப்பா பழகிவிட்டது.

சிலுவைப் போர்களினுல் மறைமுகமான நிரந்தரமான பயன் கள் பல விளைந்தன என்பது கண்கூடு. சிலுவை வீரன் கீழை

நாடுகளுக்குப் போர் நிமித்தம் சென்ற போது ஒரு புதிய உலகத்திற்கே சென்ருன் என்றுதான் சொல்லவேண்டும். அவ்வுலகில் மக்கள் மிக வசதியாய் வாழ்வதைக்கண்டு அத்தகைய வாழ்வை மேற்கொள்ள அவன் பெரிதும் விழைந்தான். கீழை நாட்டிற்குச் சென்ற கிறித்துவர்கள் தலை சிறந்த நாகரிகம் பெற்றிருந்த பாரசீகர், சீனர், இந்தியரோடு பழகவில்லை. துருக்கியர், சாரசேனியருடன்தான் அறிமுகமானுர்கள்; ஆயினும், அம்மக்களோடு பழகித் தங்கள் வாழ்வை வளமாக்கிக்கொண்டார்கள். நாகரிகமடைந்த நாடுகளுக்குச்சென்று வந்த ஐரோப்பியர்களின் அறிவின் பரப்பு விரிவுபெற்றது. மீண்டும் கீழை நாட்டு அறிவுக் கதிரவன் ஐரோப்பிய நாடுகளின் இருண்டகால இருளேயும் மூடுபனியையும் விரட்ட முன் வந்தான்.

சிலுவைப் போருக்குச் செல்வதே அக்கால மக்களுக்கு அறிவூட்டும் கல்வியாய் அமைந்தது. வீட்டோடிருந்த மக்களுக்கு உலகத்தைக் காண வாய்ப்புக் கிடைத்தது அவர்கள் விரும்பிய விரிந்து பரந்த வாழ்வினைத் திருச்சபையோ, நாடோ (State) தரவில்லை. கீழை நாடுகளின் மக்கள் சூரிய ஒளியையும், இயற்கையழகையும் கண்டுகளித்தார்கள். பைசான்டியக் கிறித்துவர்களுக்காக முஸ்லிம்களோடு போரிடச் சென்ற வீரர்கள் தங்களை ஏமாற்றிய கீழைப் பேரரசுக் கிரேக்கர்களை-சமயத்திற்குக் கேடு சூழ்ந்த கிறித்துவர்களை-வெறுக்கவும், நேர்மையாயும் பெருந்தன்மையோடும் பழகிய முஸ்லிம்களை மதிக்கவும் தலைப்பட்டார்கள். முகம்மதியர்களை ஒறுக்கத் தொடங்கிய போர்கள் இலட்சக்கணக்கான ஐரோப்பிய இளைஞர்களுக்கு அறிவையும் நாகரிகத்தையும் புகட்டும் நல்ல திட்டமாயிற்று.

கீழை நாடுகளில் நிகழ்ந்த சமயப் போர்கள் மேலை நாடுகளுக்கு அமைதி அளித்தன. அப் போர்களில் கலந்துகொள்வதற்காகப் பல நிலமானியப் பிரபுக்கள் தத்தம் நாடுகளிலிருந்து சில ஆண்டுகள் நீங்கிஞர்கள். அவர்களுட் பலர் போரில் உயிரிழந்தனர். நிலமானியதார்கள் விளைவித்த குழப்பமும், உள்நாட்டுப் போர்களுமின்றி நாடு அமைதி பெற்றது. மன்னர்கள் நிம்மதியாய் ஆண்டார்கள். இங்கிலாந்திலும் ஃப்ரான்சிலும் முடியாட்சி வலுப்பெற்றது. நிலமானியப் பிரபுக்களின் எண்ணிக்கை குறைந்து அவர்கள் வலிவற்ருர்கள். நாட்டுப்பற்று வளரவும் வழியுண்டாயிற்று. பலவகையிலும் நிலமானியச் சமுதாய அமைப்பிற்குச் சரிவு ஏற்பட்டது. மேல் மட்டத்திலிருந்தவர்கள் தங்கள் நிலங்களையும் உரிமைகளையும் விற்றுப் பொருள் திரட்டிக்கொண்டு போரில் ஈடுபட்டார்கள். கீழ் மட்டத்திலிருந்தவர்களின் எண்ணிக்கை குறையவே, நில அடிமைகள் (Serfs) விடுதலை அடைந்து

உரிமை பெற வாய்ப்புக் கிட்டியது. தேவைப்படாத நிலமானிய மக்களை அவர்கள் நாடுகளிலிருந்து அகற்றச் சமயப் போர்கள் உதவின.

சமய அடிப்படையில் ஒன்று சேர்ந்து, போப்பாட்சியை ஏற்று, ஒரு பெருநாடாய் இருக்க ஐரோப்பா விரும்பவில்லை. நாட்டின் அடிப்படையில் வளர்ந்து வாழத்தான் ஐரோப்பிய நாடுகள் விழைந்தன. தூய நாட்டில் பல நாட்டு மக்கள் ஒன்று சேர்ந்த போது அவர்களுக்குள்ளிருந்த வேறுபாடுகள் வெளிப் பட்டன. வேறுபாடுகளைக் கண்டு தோன்றிய வெறுப்பே நாட்டின் உணர்ச்சி (Nationality) வளர்ச்சிக்கு முதற்படியாய் அமைந்தது. நிலமானியச் சமுதாய அமைப்புக் கலகலக்கவே, நாட்டுப் பற்றுள்ள முடியாட்சி வலிவடைந்து தனி வல்லாட்சி (Autocracy) தோன்றவும் இடமேற்பட்டது.

சிலுவை வீரர்களும், தூய நாட்டிற்குத் திருப்பயணம் மேற் கொண்ட கிறித்துவ பத்தர்களும், அவர்கள் பின்வந்து நாடுகளைச் சுற்றிப் பார்த்தோரும், சிரியா எகிப்து நாடுகளுடன் திரும்பி விடாது ஏனைய ஆசிய நாடுகளுக்கும் வந்தார்கள் : கீழை நாட்டுப் பொருள்களைப் பெரிதும் விரும்பி வாங்க முற்பட்டார்கள். அவை களின்றி ஐரோப்பிய வாழ்வு சிறக்காத நிலை ஏற்படலாயிற்று கீழை நாடுகளே அளிக்கக்கூடிய பட்டு, நறுமணப் பொருள்கள், சர்க்கரை, பேரீச்சை, கம்பளங்கள், கண்ணாடிச் சாமான்கள், இன்தேறல் (Wine), தோல், மருந்து வகைகள் முதலியன டமாஸ்கஸ் எகிப்து வழியாய் ஜெர்மனி ஃப்ரான்ஸ் இங்கிலாந்து முதலிய நாடுகளின் சந்தைகளில் விற்கத் தொடங்கின. ஐரோப் பாவில் பல்வேறு கீழைநாட்டுப் பொருள்களுக்குத் தேவையை உண்டாக்கி அவற்றைக் கொண்டுவந்து அளிக்கவும் சிலுவைப் போர்கள் தவறவில்லை. சிலுவைப் போர்களுக்குமுன், கீழை நாட்டுப் பொருள்களின் வாணிக முற்றுரிமை யூதர்களிடமிருந்தது. அவர்களின் படுகொலைக்குப் பின் அந்த வாணிகம் கிறித்துவர்கள் கைக்கு மாறியது.

ஆசிய ஐரோப்பிய நாடுகளுக்குள் ஏற்பட்ட தொடர்பாலும் கடல் கடந்த வாணிகத்தாலும் ஐரோப்பியர்கள் வாழ்வே பெரு மாற்றமடைந்தது; பண்பட்டது; வளம் பெற்றது. அவர்களுடைய உணவும் உடையுங்கூடச் சிறந்தன. ஆசிய நாடுகளிலிருந்து பலவகைப் பழங்கள், பருத்தி பட்டாடைகள், தேம்பாகு (Syrup), சஞ்சீவி (Elixir) மருந்து கலந்த இனிய குடிநீர் (Julep), ஆகிய வைகளை ஐரோப்பா இறக்குமதி செய்துகொண்டது. மேலும்,

சாராயம் (Alcohol), இரசக் கலவை (Amalgam), காரம் (Alkali), வெண்காரம் (Borax), பேதி மருந்தாகப் பயன்பட்ட ஒருவகை இலை (Seuma), சூடம் (Camphor) முதலிய பொருள்கள் ஐரோப்பா விற்கு ஏற்றுமதியாயின. இப் பொருள்களைக் குறிக்கும் பல அரபு பாரசீகச் சொற்களை ஐரோப்பிய மொழிகளில் இன்றளவில் காணலாம். அரபு மக்களிடையில் வேதி நூலும் (Chemistry) மருத்துவமும் (Medicine) நெருக்கமான தொடர்பு கொண்டிருந்த அறிவுத் துறைகளாகும். ஏனைய அறிவுத்துறைச் சாதனைகளையும் அரபு மக்களிடமிருந்து ஐரோப்பிய வணிகர்கள் மூலம் கிறித்து வர்கள் அறியவும், பயன்படுத்தவும் தொடங்கினர்கள். பண்டைய கிரேக்கக் கலைகளையும் நூல்களையும் கற்கவும் ஆராயவும் வாய்ப்புக் கிட்டியது.

கீழை நாட்டு விலங்குகளைக் கண்டுகளித்த ஐரோப்பியர்கள் அரபுக் குதிரை, கழுதை, கோவேறு கழுதை போன்ற விலங்கு களைத் தங்கள் நாடுகளுக்குக் கொண்டு சென்றார்கள். சிசிலியிலும் இத்தாலியிலும் அமைக்கப்பட்ட விலங்குக் காட்சிச் சாலைகளிலும் அவை இடம் பெற்றன. நீர்ப்பாசன முறைகளை அரபு மக்களிட மிருந்து ஐரோப்பிய நாட்டினர் அறிந்தனர். கூலங்களை மாவாக்கு வதற்கும், தண்ணீர் இறைப்பதற்கும் கீழை நாட்டினர் பயன் படுத்திய காற்றாடி இயந்திரமும் (Wind Mill) திசை காட்டுங் கருவியும் (Mariner's Compass), பருத்திப் பஞ்சிலிருந்து செய்த காகிதமும் ஐரோப்பாவிற்குச் சென்றன. அரபு இலக்கங்கள் (Arabic Numerals) என்று விளம்பரம் பெற்ற இந்திய எண்கள், குறிக்கணக்கியல் (Algebra) முதலியன கணிதத் துறையில் அரபு மக்களின் அன்பளிப்பாகும். சீனர்கள், இந்தியர்கள், கிரேக்கர்கள், போன்ற நாகரிக மக்களின் அறிவுத்துறைச் சாதனைகளையெல்லாம் அரபு நாட்டினர் அறிந்து அறிவு உலகில் தலைசிறந்திருந்தார்கள். அவர்களுடன் ஏற்பட்ட தொடர்பால் ஐரோப்பிய மக்கள் நாகரிக மக்களின் சாதனைகளைத் தெரிந்து, மேலும் அறிவுப் பாதையில் முன்னேறிச்செல்லும் அரிய வாய்ப்பினைப் பெற்றார்கள்.

மக்கள் கூட்டம், பொருள் இவ்விரண்டின் போக்கு வரவினால் கப்பல் கட்டும் தொழில் வளரவும், கடலில் கலஞ்செலுத்துவதில் தேர்ச்சி பெறவும் இத்தாலிய நகரங்களுக்கு நல்வாய்ப்புக்கிட்டி யது. போர்களின் பளுவையும் பொறுப்பையும் தாங்கிய நாடு களைக் காட்டிலும் இத்தாலிய நகர-நாடுகளே அவற்றால் மிகுதி யாகப் பாதிக்கப்பட்டன. வெனிஸ், பைசா (Pisa), ஜெனோவா (Genoa) போன்ற கடற்கரைப் பட்டினங்கள் செல்வம் கொழிக்க லாயின. வாணிகப் பட்டினங்களாகிய இத்தாலிய நகரங்கள் சிறப்

பான நகர ஆட்சியை அமைத்துக்கொண்டு கலைத்துறையில் பேரும் புகழும் பெற்றன. போட்டியிட்ட ஜெனோவாவுடன் போராடி வெற்றி பெற்ற வெனிஸ், கான்ஸ்டான்டிநோப்பிளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, கட்டடக் கலை முதலிய நுண்கலைகளைப் பேணலாயிற்று. கடல் கடந்த வாணிகம் பெருகவே, உள் நாட்டு வாணிகமும் பெருகிப் பல நகரங்கள் தோன்றி வளரலாயின. வாணிக மக்கள் செல்வர்களாகி, உரிமைகள் பல பெற்று, ஐரோப்பாவில் நடுத்தர வகுப்பினர் தோன்றி வளர வழி கோலினார்கள்.

கடற் பயணத்தை மேற்கொண்ட மாலுமிகளும், வணிகர்களும், வழிப் போக்கர்களும் புதிய நாடுகளைக் காணவும், புவியியல் அறிவை வளர்த்துக் கொள்ளவும் ஆர்வமும் ஆசையும் கொண்டார்கள். அமெரிக்கா போன்ற நாடுகளைக் கண்டுபிடிக்க இந்த இச்சையே தூண்டிற்று. கீழைநாடுகளுக்குப் பயணம் செய்து கொண்டிருந்த ஐரோப்பியர்களின் மனமும் முயற்சியும் மேற்குத் திசையில் திரும்பின. சிலுவைப் போர்களின் வரலாறும் வீரச் செயல்களைப் பற்றிய கவிதைகளும், இலக்கிய வளர்ச்சிக்கு ஆக்கமளித்தன. அரபு நூல்கள் பல கிரேக்க இலத்தீன் மொழிகளில் பெயர்க்கப்பட்டன. கி.பி. 1141-ல் குர்-ஆன் இலத்தீனில் மொழி பெயர்க்கப்பட்டது. அதே காலத்தில் அர்மீனியன் (Armenian) அரபு (Arab.c) முதலிய கீழைத் தேயத்து மொழிகளைக் கற்பிக்கப் பாரிசில் பள்ளியொன்று நிறுவப்பட்டது. ஷாங்கேயில் (Shangai) தங்கியிருந்த ஆங்கில, அமெரிக்க வணிகர்கள் சீன இலக்கியத்தைப் பற்றிக் கவலைப்படாதது போல, இத்தாலிய வணிகர்கள் கிரேக்க இலக்கியத்தைப்பற்றிக் கவலை கொள்ளவில்லை. வெனிஸ் சுவைக்காத பண்டைய இலக்கியத்தைப் பாரிஸ் மக்கள் சுவைத்து மகிழ்ந்தார்கள். பன்னிரண்டாம் பதின்மூன்றும் நூற்றாண்டுகளில் கிரேக்க நூல்கள் பல இலத்தீன் மொழியில் பெயர்த்தெழுதப் பட்டன.

கிறித்துவச் சமயத்தை ஏற்க மறுத்த மக்கள்மீது அதனை வலுக்கட்டாயமாய்த் திணிக்கும் கட்டம் சிலுவைப் போர்களுடன் தொடங்கிற்று. கிறித்துவர்களல்லாதவர்களின் சமய மாற்றத்தில் ஈடுபடாது அவர்களை அழிக்கும் திட்டத்தைத் திருச்சபை மேற்கொண்டது.

# அதிகாரம் 14

## ஐரோப்பிய நாடுகளில் பிரதிநிதித்துவ அமைப்பு முறைகளின் (Representative Institutions) வளர்ச்சி

ஆட்சி அநீதியை எதிர்த்துப் போராடி மக்கள் உரிமை பெறுதல், அளவுகடந்த அரச அதிகாரத்தைக் கட்டுப்படுத்த எழுத்து வடிவத்தில் உரிமைப் பாதுகாப்புப் பத்திரங்களைப் பெறுதல், சமநிலையிலுள்ள மக்களை ஜூரர்களாய்க் கொண்டு வழக்குகளை விசாரித்தல், பிரதிநிதித்துவ ஆட்சிமுறையின் வளர்ச்சி இவை இடைக்கால நிகழ்ச்சிகள், பிரபுக்களாட்சியும், மக்களாட்சியும், முடியாட்சியும், குடியாட்சியும் இடைக்கால ஆட்சிமுறைகளாகும். இங்கிலாந்திலும் ஃப்ரான்சிலும் முடியாட்சியே முக்கிய ஆக்கச் சத்தியாயிருந்தது. பதின் மூன்றும் நூற்றுண்டில் அரசவை (King's court) யை மையமாய்க் கொண்டு பிரதிநிதித்துவ நிறுவனங்கள் வளரலாயின. அரசனின் பொருள் தேவையை நிரப்பவும், நெருக்கடிக் காலங்களில் மன்னனுக்கு ஆதரவு அளிக்கவும், ஆட்சிப் பணியை எளிதாய் நிறைவேற்றவும் பிரதிநிதித்துவ அவைகளும், அமைப்புக்களும் தோன்றின. ஃப்ரெஞ்சு முடியரசு வரம்பில்லாத முடியாட்சி நிலையை நோக்கிச் செல்லத் தொடங்கியபோது, இங்கிலாந்து அதற்கு நேர்மாறான பாதையில் திரும்பிச் சென்று கொண்டிருந்தது.

இங்கிலாந்தில் நாடு தழுவிய தேசீய ஆட்சியில் மக்கள் வாழ்ந்தார்கள். பிரபுக்கள், மேற்றிராணியார்கள் மடாதிபதிகள் (abbots) உள்ளிட்ட பேரவை (Great Council) யின் ஆலோசனையைக் கேட்டு நார்மன் மன்னர்கள் ஆண்டுவந்தனர். சாக்சன் (Saxon) மன்னர்கள் காலத்திலேயே விடன் (Witan) என்ற அத்தகைய பேரவை அரசனுக்கு உதவியது. பேரவைக் குழுவாகிய க்யூரிய ரெஜிஸ் (Curia Regis) என்ற அரச நீதி மன்றம் வழக்குகளைக்

கேட்டு நீதி வழங்கிற்று. ஆங்காங்கு நடைபெறும் குற்றங்களைக் கௌண்டி அல்லது ஷையர் அதிகாரியாயிருந்த ஷெரிஃபு (Sheriff) க்குத் தெரிவிக்க 1166-ல் ஒவ்வொரு ஊரிலிருந்து நால்வரும், மாவட்டத்திலிருந்து பன்னிருவரும் அமர்த்தப்பட்டார் கள். அவர்கள் ஜுரர்கள் (Jurors) என்று அழைக்கப்பட்டார்கள், ஆங்காங்கு சென்று அரசனால் அமர்த்தப்பட்ட நீதிபதிகள் குற்ற வாளிகளை விசாரித்துத் தண்டித்தார்கள். நீதி வழங்குவதில் ஊர் மக்கள் நடுவர்களுக்கு உதவினார்கள். குற்றம்பற்றி, சமநிலை யிலுள்ள பிற குடிமக்களின் கருத்தறிந்து நீதி பரிபாலனம் நடை பெற்றது.

மோசமான ஜான் மன்னனின் கொடுங்கோன்மையை எதிர்த்து குருமார்கள், நிலமானியதார்கள். இடைத்தர வகுப்பினர் ஆகியோர் காண்டர்பரி மேற்றிராணியார் ஸ்டீபன் லாங்டன் தலைமையில் ஒன்று சேர்ந்து தங்கள் உரிமைகளுக்கு உத்தரவாதம் வழங்கும் பேருரிமைப் பத்திரத்தைப் பெற்றார்கள். ஜான் மன்னனை வற்புறுத்தி 1215-ல் வாங்கிய பேருரிமைப் பத்திரம் (Maguacarta) ஆங்கிலேயர் சுதந்தரத்திற்கு ஆதாரமாயிற்று. ஆங்கில மக்களின் உரிமைகளுக்குச் க்ஷேம அடிப்படையாய் (Corner Stone) விளங்கிய அப்பத்திரம் புரட்சியான அறிவிப்பல்ல, பலதர மக்களும் தத்தம் உரிமையெனக் கருதியவற்றைத் திரும்ப எழுத்துப் படிவமாய்ப் பெற்ற அரச வாக்குமூலமே ஆகும். அரசனின் ஒழுங்கற்ற ஆட்சியிலிருந்து மக்களை, சட்ட வாடிக்கை காப்பாற் றிற்று. அரசன் தன்னிச்சைபோல் புதிய வரி விதிக்கவோ, ஒருவரைச் சிறைப் படுத்தவோ, நாடு கடத்தவோ முடியாதவாறு அப்பத்திரம் மக்களுக்குப் பயன்பட்டது. சட்டத்தின் முன் எல்லோரும் சமம் என்ற கருத்தும் அதில் வலியுறுத்தப் பெற் றுள்ளது. ஜுரி முறை விசாரணைக்கும், பிரதிநிதித்துவ நிறுவன மாகிய பார்லிமெண்டிற்கும் பேருரிமைப் பத்திரம் அடிகோலியது.

மூன்றாம் ஹென்றியின் ஆட்சியில் பல குறைகளைக்கண்ட பிரபுக்கள் அக் குறைகள் நீக்கப்பட்டாலன்றி அரசன் கேட்ட பொருளை அளிக்க மறுத்தார்கள். ஆக்ஸ்ஃபோர்டில் கூடிய பார்லி மெண்டு, 1258-ல் ஆட்சியைப் பிரபுக்களின் குழுவிடம் ஒப் படைத்தது. ஹென்றி அதற்குக் கட்டுப்படாததால பிரபுக்கள் ஃப்ரெஞ்சு பிரபு சைமன்–டி–மாண்ட் ஃபோர்டு தலைமையில் போரிட்டு அரசனையும் அவர் தலை மகன் எட்வர்டையும் சிறைப் பிடித்தார்கள். தம்மாதிக்கத்தை உறுதிப்படுத்த 1265-ல் சைமன் ஒரு பார்லிமெண்டைக் கூட்டினார். ஒவ்வொரு ஷையரிலிருந்து இரு வீரர் (Knight)களும், நகரம், பரோவிலிருந்து இரு பிரதிநிதி களும், குருமார்களும், பிரபுக்களும் அக் கூட்டத்திற்கு அழைககப்

பட்டார்கள். சைமன் கூட்டிய பார்லிமெண்டிற்கு நகரப் பிரதிநிதிகள் அழைக்கப்பட்டது புதுமையாகும். அதற்காக மக்கள் அவை (Commons)யின் தந்தையென சைமன் புகழப்பெற்ருர்.

சைமன் செயலைப் பின்பற்றி முதலாம் எட்வர்டு 1295-ல் பார்லிமெண்டைக் கூட்டினுர். மக்களைப் பற்றிய காரியங்களை அவர்களே முடிவு செய்ய வேண்டும் என்ற கொள்கை அடிப்படையில் பார்லிமெண்டு கூடியது. சைமன் காலத்தில் எதிர்க்கட்சியின் கருவியாயிருந்த பார்லிமெண்டை, எட்வர்டு தம் ஆட்சித் திறத்தால் ஆட்சிக்குத் துணைசெய்யும் சாதனமாய் மாற்றிக் கொண்டார். சைமன் பார்லிமெண்டு சாதாரண குடிமக்களுக்கும் அதில் இடமுண்டு என்ற வழக்காற்றை நிலை நாட்டிற்று. குருமார்கள், பிரபுக்களுடன், ஷையர், பரோ பிரதிநிதிகளும் பார்லிமெண்டிற்கு அழைக்கப்பட வேண்டும் என்ற வழக்காறு உறுதிப்படுத்தப்பட்டு எட்வர்டின் பார்லிமெண்டு முழு உருவம் பெற்று ஆட்சிக் கருவியாயிற்று. சட்டமியற்றுவதைப் பார்லிமெண்டு முக்கியப் பணியாய்க் கருதவில்லை. மக்கள் குறைகளைக் கேட்டு அவற்றிற்குத் தீர்வு காணுதல், மன்னனுக்கு வேண்டிய பொருளை அளித்தல், இவையே பார்லிமெண்டு மேற்கொண்ட பணியாகும்.

பதின்மூன்ரும் நூற்ருண்டில் மூன்ரும் ஹென்றி ஆட்சிக் காலத்தில் கூடிய தேசீய அவைகள் பார்லிமெண்டுகள் எனப் பெயர் பெற்றன. அவரவர் வட்டாரங்களில் பொதுப் பணியாற்றிப் பழகிய இடைத்தர வகுப்பினரே நகர, பரோ பிரதிநிதிகளாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பார்லிமெண்டில் கூடியதால் அது ஆக்கம் பெற்றது. மக்கள் குறைகளுக்குத் தீர்வு காணும் வாடிக்கையிலிருந்து ஆட்சிக் குறைகளைக் கண்டிக்கும் உரிமை வளர்ந்தது; நாட்டு வரிவிதிப்பு முழுவதிற்கும் பார்லிமெண்டு உரிமை கொண்டாடியது. பதினன்காம் நூற்ருண்டில் மூன்ரும் எட்வர்டு ஆட்சியில், பார்லிமெண்டு இரு அவைகளாய்ப் பிரிந்தது. குருமார்களும் நிலமானியதார்களும் அமர்ந்திருந்த அவை பிரபுக்கள் அவை (House of Lords), ஷையர், பரோ பிரதிநிதிகள் வீற்றிருந்த அவை மக்கள் அவை (House of commons) என்ற பெயர்களுடன் வரலாற்றில் இடம் பெற்றன. இடைக் காலத்தில் பார்லிமெண்டின் சட்டதிட்டங்களுக்குட்பட்ட முடியாட்சி (Constitutional Monarchy) ஏற்பட்டது.

இரண்டாவது ஹென்றியின் நீதிச் சீர்திருத்தங்களால், இங்கிலாந்து ஒரு சட்ட அமைப்பின்கீழ் வந்ததுபோல், ஃப்ரான்சு

அந்நிலையை நெப்போலியன் ஆட்சி வரை அடையவில்லை. ஃப்ரான்சிலும் ஆட்சி அரசவை உதவியோடு நடைபெற்றது. ஃப்ரெஞ்சு அவை (Estates General) யில் குருமார்கள், பிரபுக்கள், நகர மக்கள் ஆகிய மூன்று வகுப்புகள் (Estates) அங்கம் வகித்தன. தல ஆட்சியில் வேருன்றுத அந்த அவைக்கு ஆட்சிக் கொள்கையை உருவாக்குவதில் உறுதியான, ஆக்கப்பூர்வமான பங்கில்லை. அது பிளவுபட்டிருந்ததாலும், அருமையாகவே கூடிய தாலும் நாட்டில் வல்லாட்சியைத் தடுக்கும் ஆற்றலும் பெற வில்லை. ஆட்சி அதிகாரம் முழுவதும் ஓர் அவையில் குவிந்திருத்தல் பெரிய நாடாகிய ஃப்ரான்சிற்கு நலம் பயப்பதாயில்லை, அவ் வதிகாரம் பல மாகாண அவைகளிலும் பிரிந்திருப்பதே நாட்டிற்கு ஏற்றதாயிருந்தது.

ஒன்பதாம் லூயி அரசவையை மூன்றுகப் பிரித்து முதல் பிரிவிற்கு முக்கியமான நிர்வாகப் பணியைத் தந்தார்; கருவூலப் பிரிவு வரவு செலவு பொறுப்பையேற்றது; மூன்ருவது நாட்டின் உயர்நீதி மன்றமாய் விளங்கிய பார்லிமெண்டாகும். பிரபுக்களின் நீதிமன்றங்களில் நீதி கிடைக்கவில்லையென்று எண்ணியவர்கள் இறுதி நீதிமன்றமாயிருந்த பார்லிமெண்டிற்கு வழக்குகளை எடுத்துச் சென்ருர்கள். நீதி வழங்குவதில் மிகுந்த புகழ்பெற்ற லூயி, பாரிசில் பார்லிமெண்டு (Parlement) என்ற உயர்நீதி மன்றத்தை உருவாக்கினுர். அம் மன்றம் சட்டத்துறையிலும் அரசியலிலும் சிறப்பாய்ப் பணியாற்றிற்று. அதில் நிலமானிய தார்கள், குருமார்கள், வழக்கறிஞர்கள், அறிவாளிகள் அங்கம் வகித்தார்கள். மரபுரிமையாகவோ, விலை கொடுத்தோ உறுப் பினர்கள் பார்லிமெண்டில் இடம் பெற்ருர்கள். ஆங்கில வழக் கறிஞர்கள் அரசனை எதிர்த்துப் பார்லிமெண்டை ஆதரித்தார்கள். உரோமச் சட்டமுறைமையில் ஊறிய ஃப்ரெஞ்சு வழக்கறிஞர்கள் அரச ஆதிக்கத்திற்குத் துணை போனுர்கள்.

போப்பு எட்டாம் பானிஃபேசுடன் நிகழ்ந்த போராட்டத்தில் மக்களாதரவைத் திரட்ட 1302-ல் நான்காம் ஃபிலிப் குரு மார்கள், பிரபுக்கள், மூன்ரும் வகுப்பினர் (Third Estate) என்று குறிப்பிடப்பெற்ற மக்கள் பிரதிநிதிகள் ஆகிய முத்தரத்தினரையும் அழைத்தார்; அந்த ஃப்ரெஞ்சு தேசீய அவை போப்பாட்சியை எதிர்த்த மன்னனை ஆதரித்தது.

புனித உரோமப் பேரரசில் டையட் (Diet) என்ற ஒருவகை பார்லிமெண்டு உருவாகியது. பேரரசிலிருந்த சில வகுப்புகளின் பிரதிநிதியாய் டையட் விளங்கிற்று. அந்தப் பேரவையின் ஒரு

பிரிவு பேரரசரைத் தேர்ந்தெடுக்கும் தேர்வாளர் அவையாகும்; சமயத் தலைவர்களும் சமயச் சார்பில்லாத அரச வகுப்பினரும் இரண்டாவது அவையில் அங்கம் வகித்தனர்; மூன்றுவது பிரிவில் சுதந்தர நகரங்களின் பிரதிநிதிகள் வீற்றிருந்தனர். பேரரசருக்கு உதவவும் ஆலோசனை கூறவும் அவர் அழைத்தபோது ஃப்ராங் ஃபர்டில் (Frank fort) டயட் கூடிற்று. இப் பேரவை பேரரசிற்கு ஆக்கமளிப்பதற்குப் பதிலாக அதன் வலிவைக் குறைத்தது. அதன் மூன்று பிரிவுகளும் பேரரசின் நலத்தைக் கருதாது தன்னலத்திற்கே முதலிடம் அளித்தன.

இங்கிலாந்திலிருந்த பார்லிமெண்டைப்போல் ஸ்காட்லாந்து, போலண்டு, ஸ்பெயின் முதலிய ஐரோப்பிய நாடுகளில் பிரதிநிதித்துவ தேசிய அவைகள் அரசன் ஆதிக்கத்தைக் கட்டுப்படுத்தி மக்கள் உரிமைகளைப் பாதுகாத்து வந்தன. ஸ்பானிஷ் பார்லிமெண்டிற்குக் கோர்டிஸ் (Cortes) எனப் பெயர் வழங்கிற்று.

# அதிகாரம் 15

**இடைக்காலத் திருச்சபை — போப்பு பானிஃபேஸ்— அவிக்னனில் போப்பாட்சி–கான்ஸ்டன்ஸ் பொது அவை.**

புனித உரோமப் பேரரசிற்கும் போப்புகளுக்கும் இடையில் நிகழ்ந்த நீண்ட போராட்டத்தில் போப்புகளே வெற்றி வாகை சூடினார்கள். ஹோஹென்ஸ்டாஃபென் பரம்பரையே அழிந்து போயிற்று. பேரரசோடு போராடி வெற்றி பெற்ற சிறிது காலத்திற்குள் போப்பாட்சி ஃப்ரெஞ்சு அரசோடு மோதி ஈடு செய்ய முடியாத பேரிடர்களுக்குள்ளாயிற்று. இப்புதிய போராட்டத்தில் வலிவுள்ள அரசு எதுவும் போப்புகளை ஆதரிக்கவில்லை. ஜெர்மனி ஒற்றுமையின்றி தலைதூக்க முடியாதபடி நலிந்திருந்தது. பேரரசின் படையெடுப்பு அச்சத்திலிருந்து விடுபட்ட இத்தாலிய நகரங்கள் போப்பை ஆதரிக்க முன்வரவில்லை. பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் போப்பாட்சியிடம் மக்களுக்கு இருந்த ஈடுபாடும் ஆர்வமும் குறைந்துவிட்டன. துறவிகளின் பழைய அமைப்புகள் தம் குறிக்கோளிலிருந்து நழுவிவிட்டன; மடங்களில் மந்த நிலை காணப்பட்டது. போப்புகள் கையாண்டு வந்த சமய விலக்குரிமை, தடையாணை, சமயப்போர் போன்ற ஆன்மீகக் கருவிகளும் செல்வாக்கற்று கூர் மழுங்கிவிட்டன.

## போப்பு பானிஃபேஸ் (Boniface)

1294-ல் தேர்ந்தெடுக்கப்பட்ட போப்பு எட்டாம் பானிஃபேஸ் ஏழாம் கிரெகரியும், மூன்றும் இன்னொசண்டும் கொண்டாடிய உரிமைகளையெல்லாம் விடாப் பிடியாகப் பேணி வந்தார். முடி சூடிய மன்னர்களினும் போப்பாட்சி மேம்பட்டது என்ற உரிமையைக் கொண்டு குற்றஞ்செய்யும் மன்னர்களைக் கண்டிக்கவும், அழிக்கவும், அரசைக் கலைக்கவும், புதிதாய் நிறுவவும் போப்பாட்சி அதிகாரம் பெற்றுளது என பானிஃபேஸ் வாதாடினார். இதனை வலியுறுத்தி அரசுகளுக்கு வழிகாட்டவே போப்பாட்சி

இயேசுவால் ஏற்படுத்தப்பட்டது என்ற மறைநூல் வாசகம் எடுத்தாளப்பட்டது. 1300ஆம் ஆண்டில் உரோம் நகரில் நடைபெற்ற பெருவிழாவில் மக்கள் பெருந்திரளாய் வந்து வெளிப்படுத்திய ஆர்வத்தையும் செலுத்திய அளப்பரிய காணிக்கைகளையும் கண்டு மகிழ்ந்த போப்புத் தாமே பேரரசரும் போப்பும் என உலகிற்கு அறிவித்தார். இத்தகைய கருத்துகளை உடைய போப்பிற்கும், மன்னர்களுக்கும் இடையில் போராட்டம் தவிர்க்க முடியாத ஒன்றாகும்.

1285-ல் நான்காம் பிலிப்பு ஃப்ரெஞ்சு அரியணை ஏறினன். நாட்டை ஒன்றுபடுத்தி ஆட்சியை வலுப்படுத்தி, தேசீய இன உணர்ச்சியை வளர்க்க விரும்பிய மன்னன் வீரர்களைவிட வழக்கறிஞர்களையே மிகுதியாய் நம்பினன். இடைத்தர வகுப்பைச் சேர்ந்த அவனுடைய முதலமைச்சர்கள் அரச அதிகாரத்தின் மேம்பாட்டை வலியுறுத்திய உரோமச் சட்டத்தை நன்கு பயின்றவர்கள். முடியாட்சிக்குத் தேவைப்பட்ட பொருள் வருவாயைப் பெருக்க மிகுதியான வரிவிதிப்பு இன்றியமையாததாகி விட்டது. அரசு மேற்கொண்ட வரிவிதிப்பில் ஃப்ரெஞ்சு குருமார்களின் சொத்தும் உட்படுத்தப்பட்டது. சமயச் சார்பற்ற அரசிற்குத் திருச்சபை சொத்தின் மீது வரி விதிக்க உரிமையில்லை எனக் கருதிய போப்பு 1299-ல் குருமார்கள் அரசிற்கு வரி செலுத்துவதைத் தடுத்து ஓர் ஆணை (Clericis Lalcos)யைப் பிறப்பித்தார். இவ்வாணைக்குப் பதிலிறுக்கும் வகையில் ஃப்ரான்சிலிருந்து இத்தாலியப் போப்பிற்கு எவ்விதப் பொருளும் செல்லாதவாறு அரசு தடுத்துவிட்டது. ஃப்ரெஞ்சுத் திருச்சபையிலிருந்து வரும் வருவாய் அடைப்பட்டுப் போகவே ஃப்ரெஞ்சு அரசுடன் அமைதியாய் வாழ எண்ணித் தம்மாணையைப் போப்பு திரும்பப் பெற்றுக் கொண்டார்.

தன் அரசியல் நோக்கங்களை நிறைவேற்றுவதில் கருத்துச் செலுத்திய நான்காம் ஃபிலிப் மீண்டும் போப்போடு சச்சரவிட வேண்டி வந்தது. பழிபாவத்திற்கஞ்சாத ஃப்ரெஞ்சு முதலமைச்சர் நொகாரெட் (Nogaret) பாமியர்ஸ் மேற்றிராணியார் பெர்னார்டு மீது மன்னனைக் கொல்லச் சதிசெய்ததாகக் குற்றஞ் சாட்டி அவரை அரச நீதி மன்றத்தில் விசாரிக்க உத்தரவிட்டான். குற்றஞ் செய்த குருமார்களை விசாரிக்கவும் தண்டிக்கவும் அரச நீதி மன்றங்களுக்கு அதிகாரமில்லை; ஆதலால் திருச்சபை நீதி மன்றமே விசாரிக்க உரிமையுடையது எனக் கூறி அம்மேற்றிராணியாரை உரோமிற்கு அனுப்புமாறு போப்பு உத்தரவு பிறப்பித்தார். வரி விதிப்பும், நீதி வழங்குதலும் அரச உரிமைகளில் தலையானவை

யாகையால் ஃப்ரெஞ்சு அரச போப்பின் உத்தரவிற்குப் பணிய அவ்வுரிமைகளைக் கொண்டே போப்பாட்சி தன் மேலாண்மையைச் செயல்படுத்த வேண்டியிருந்ததால்; போப்பும் தன் உத்தரவைத் தளர்த்த விரும்பவில்லை.

இரண்டாம் ஹென்றி காலத்தில் இங்கிலாந்தில் தாமஸ் பெக்கெட் எழுப்பிய சட்டக் கேள்வியால் இதே நிலைமைதான் உருவாகி அரசியலைக் குழப்பியது. 1299-ல் போப்பு பிறப்பித்த ஆணை (Unam Sanctam)க்கு அரசன் சார்பில் கடுமையான மறுப்பு வெளியிடப்பட்டது. ஹோஹென்ஸ்டாஃபென் வம்சத்தின் வீழ்ச்சிக்குப் பிறகு ஐரோப்பாவில் முதலிடம் வகித்த, இதுகாறும் கதோலிக்கத் திருச்சபையின் பேராதரவாளராயிருந்த, ஃப்ரெஞ்சு அரச பரம்பரை, போப்பின் ஆதிக்கப் பாதையில் குறுக்கிடும் நிலைமை உருவாயிற்று. பேரரசர் நான்காம் ஹென்றிக்கும் போப்பு ஏழாம் கிரெகரிக்கும் ஏற்பட்ட போராட்டம் போலிருந்தாலும் இப் போராட்டத்தில் கையாளப்பட்ட முறைகளும் போராட்டத்தின் முடிவும் வேறுபட்டன. பேரரசு தோல்வியுற்ற சச்சரவில் ஃப்ரெஞ்சு அரசு வெற்றி பெற்றது. சிலவகைகளில் இங்கிலாந்தை ஆண்ட எட்டாம் ஹென்றியின் ஆட்சியும் நான்காம் பிலிப்பின் ஆட்சியும் ஒத்திருந்தன.

போப்பை அவருடைய பகைவர்களின் உதவியுடன் கைது செய்து, ஃப்ரெஞ்சு மன்னன் கூட்கிவிருந்த திருச்சபைப் பொது அவை முன்பு குற்றவாளியாக நிறுத்த நொகாரெட் திட்டமிட்டான். உரோம் நகருக்கு அருகாமையில் போப்பிற்குச் சொந்தமான ஆனன்யீ (Anagni) அரண்மனையில் ஃப்ரெஞ்சுக்காரர் புகுந்து, கார்டினல்களால் கைவிடப்பட்ட போப்பை, இழிசொற்களால் கேலி செய்தும், தாக்கியும் சிறை செய்தனர். பானிஃபேசுக்கு நேர்ந்த பழிச் செயலைப்பற்றி அவருடைய கருத்திற்கு எதிரியாகிய தாந்தே 'கள்ளர்களிடையில் இயேசு மீண்டும் சிலுவையில் அறையப்பட்டார்' என்று தம் காவியத்தில் பாடிச் சென்றார். மானக்கேட்டிற்குப் பிறகு, மக்கள் கிளர்ச்சியால் விடுவிக்கப்பட்ட பானிஃபேஸ் நீண்டகாலம் வாழவில்லை. அடுத்த போப்பு இரண்டாம் பெனிடிக்கும் ஃப்ரெஞ்சு மன்னருக்குக் கட்டுப்படவில்லை. அவருக்குப்பின் போர்டோ மேற்றிராணியாரும் ஃப்ரெஞ்சு நாட்டவருமான கிளமெண்டு போப்பானார். தேர்தலுக்கு முன்பாகவே ஃப்ரெஞ்சு மன்னருடன் ஒத்துப் போவதாக கிளெமெண்டு அவருக்கு வாக்குறுதி தந்திருந்தார். அவ்வாக்குறுதிக்கேற்பவோ, என்னவோ, போப்பு உரோம்நகரில் தங்காமல் தமக்குச் சொந்தமான அவிக்னனில் (Avignon)

குடியேறினர். ரோன் ஆற்றங்கரையிலிருந்த அவிக்னன் ஃப்ரான்சில் இருந்த போதிலும் ஃப்ரெஞ்சு ஆதிக்கத்தில் இல்லை.

## அவிக்னனில் போப்பாட்சி

உரோம் நகரில் கலவரங்கள் மலிந்து பாதுகாப்பில்லாததால் ஐந்தாம் கிளெமெண்டு அவிக்னனுக்குச் சென்றார். ஏறத்தாழ எழுபதாண்டுகள் (1309—77) அவிக்னனில் வசித்த போப்புகளை ஐரோப்பிய மன்னர்கள், ஃப்ரெஞ்சு மன்னர்களின் கருவிகளாகவே கருதினார்கள். பாபிலோனில் நெபுகட் நேசர் யூதர்களைச் சிறை செய்திருந்ததை எண்ணி, போப்புகள் ஃப்ரெஞ்சு ஆதிக்கத்தி லிருந்த காலத்தைப் போப்பாட்சியின் பாபிலோனிஷ் சிறைவாசம், (Babylonish Captivity of Papacy) எனக் குறிப்பிட்டார்கள். அவிக்னனில் தங்கியபின் போப்பிற்கு ஃப்ரெஞ்சு மன்னனுக்கும் இருந்த பகைநீங்கி, தடை செய்யப்பட்டிருந்த ஃப்ரெஞ்சு வருவாய், போப்பிற்குக் கிடைத்தது. ஃபிரெஞ்சு அரசு காட்டிய இச்சலுகைக்காக, வீரத் தொண்டர் (Knights Templars)களுடைய பெரும் பொருளைக் கவர ஃப்ரெஞ்சு ஆட்சிக்குப் போப்பாட்சி அனுமதி வழங்கியது. வீரத் தொண்டர்கள் தங்கள் உயரியக் குறிக்கோளிலிருந்து நழுவி, வங்கித் தொழிலைச் செய்தும், வட்டிக்கடைக்காரர்களாகியும் பெருஞ்செல்வர்களாய் வாழ்ந்தார்கள் என்ற குறையோடு, இயேசுவை ஒப்புக்கொள்ள மறுத்து, கிரேக்கத் திருச்சபைக் கொள்கைகளைப் பின்பற்றினார்கள் என்ற குற்றமும் அவர்கள்மீது சுமத்தப்பட்டது. சிறைப்படுத்தி, பாரிசில் நீதி விசாரணை செய்து, 1310–ல் 54 வீரத் தொண்டர்களை எரித்தார்கள்.

ஃப்ரெஞ்சு அரசு போப்பாட்சியோடு போராடியபோது, நாட்டு வரலாற்றில் முக்கிய பங்கேற்கவிருந்த ஒரு நிறுவனம் ஃப்ரான்சில் தோன்றியது. நான்காம் பிலிப் திருச்சபையுடன் மோதிய நெருக்கடி காலத்தில் மக்கள் ஆதரவைப்பெற, குருமார்கள், பிரபுக்கள், பொது மக்கள் ஆகிய மூன்று வகுப்புகளின் பிரதிநிதிகள் அடங்கிய நாட்டுப் பேரவையை (States General) 1302-ல் முதல் தடவையாய்க் கூட்டினான். முடியாட்சிக்கு வலிவூட்டுவதற்காகக் கூட்டப்பட்ட அந்த நாட்டு மன்றம் ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பிறகு முடியாட்சிக்கே முடிவு கண்டது. நாட்டுப் பேரவையின் மூன்று பிரிவினரும் தனித்தனியே கூடி போப்புடன் போராடுவதற்கான வாதங்களைக் கேட்டுத் தம் இசைவைத் தெரிவித்தனர். அந்த நாட்டு வரலாற்றில் நெருக்கடி நேரங்களிலெல்லாம் அப்பேரவை கூட்டப்படுவதைக் காணலாம்.

ஐந்தாம் கிளெமெண்டு அவிக்னனில் குடியேறிய நாள்தொட்டு திருச்சபை வரலாற்றில் ஒரு மாற்றத்தைக் காண்கிறோம். பண்டுபோல் தன் உரிமைகளைப்பற்றி போப்பாட்சி பேசிய போதிலும் அவற்றைச் செயல்படுத்தலாம் என்று கனவுகூடப் போப்புகள் காணவில்லை. போப்பாட்சியோடு போராடியதில் ஃப்ரெஞ்சு அரசே வெற்றி பெற்றது.

அவிக்னனில் ஏழு போப்புகள் தங்கியிருந்தார்கள்; பேராவல் மிக்க பிரபுக்கள், கலவரஞ் செய்யும் உரோமாபுரி மக்கள் இருவர் தொல்லையிலிருந்தும் விடுபட்ட போப்புகள் மிகச் சுதந்தரமாய் வாழ்ந்தார்கள். அவிக்னனில் வாழ்ந்த எழுபதாண்டு களில் தங்கள் வருவாயைப் பல்லாற்றாலும் பெருக்கிக் கொண் டார்கள்; விலக்கீடுகளை (Dispensations) த் தாராளமாய் வழங்கியும், பெருந்தொகைக்கு விற்றும் செல்வர்களானார்கள். பல்வேறு திருச்சபை அதிகாரிகளை அமர்த்தி அவர்களிடமிருந்து பெரும் பொருள் பறித்தார்கள். காலித் திருக்கோயில் மானியங்கள் திருச்சபைச் சொத்தென அறிவிக்கப்பட்டு அவற்றின் வருமானம் போப்பின் கருவூலத்தை நிரப்பிற்று. வருமானப் பெருக்கத்தால் வந்த இன்ப வாழ்வு, தீயொழுக்கம், அநீதி எல்லாம் போப்பாட்சி யின் பெருமையையும், ஆற்றலையும் குறைத்தன. எந்த முடி மன்னருக்கும் கட்டுப்படாமலிருந்த காலத்தில் போப்புகள் கிறித்துவ உலகிற்குத் தலைவர்களாய்த் திகழ்ந்தார்கள். அவிக்னன் வாசத்தில் போப்பாட்சி ஃப்ரெஞ்சு அரசரின் முகவராய்க் கருதப் பட்டதால் ஃப்ரான்சின் பகை நாடுகள் அவிக்னனில் இருந்த போது போப்பின் நாடுகளில் கலவரங்கள் ஏற்பட்டன; ஏனைய சிறு நாடுகள் சுதந்தரமடைந்தன. இத்தாலியில் உள்நாட்டுப் போர் மலிந்துவிட்டது. சமய வாழ்வு தாழ்ந்துவிட்டது. திரிதுறவிகள் தங்களுக்குள் சச்சரவிட்டுக்கொண்டு பேரரசினை ஆதரிக்கலானார்கள். போப்பாட்சியை உரோம் நகருக்குத் திரும்பக் கொண்டுவருவது அல்லது போப்பாட்சியிலிருந்து உரோம் நகரை விடுவிப்பது என மக்கள் கிளர்ச்சி செய்தார்கள். திருத் தொண்டர் காதரீன் (Catherine of Siena) திருச்சபை நலத்தைக் கருதியும், இத்தாலியின் நிலைமையை எண்ணியும் தாயகம் திரும்ப வேண்டுமென வேண்டுகோள் விடுத்தும், காலந் தாழ்ந்தால் நாட்டு நிலைமை மிஞ்சிவிடும் என அச்சுறுத்தியும் போப்பிற்கு மடல்கள் தீட்டினார். ஆகவே 1377-ல் பதினோராம் கிரெகரி உரோம் நகருக்குத் திரும்பி வந்தார். அவர் அடுத்த ஆண்டு மறைந்ததும் போப்பாட்சி மீண்டும் பேரிடருக்காளாயிற்று.

உரோம் நகருக்குப் போப்புடன் திரும்பிய கார்டினல்கள் அந் நகரின் கீழான தன்மையைப் பார்த்தும், அவிக்னனில் வாழ்ந்த

இன்ப வாழ்வை நினைத்தும் வருந்தினார்கள். நாட்டரசுகள்மீது போப்புகளுக்கு மேலாதிக்க உரிமை உண்டென்றும் பேரரசுப் பதவி காலியாயிருந்தால் போப்பே பேரரசர் எனவும் உரிமை கொண்டாடியதைப் போப்பாட்சி நிறுத்தவில்லை. மேலாதிக்க உரிமைபற்றி, பேரரசு-போப்பாட்சிக்குள் கருத்து வேறுபாடு நீடித்த போதிலும் பண்டு போல குழப்பமோ, போரோ நிகழவில்லை.

## கான்ஸ்டன்ஸ் பொது அவை :

1378-ல் உரோம் நகரில் போப்புத் தேர்தல் ஆரவாரத்திற்கிடையே நடைபெற்றது. உரோம் நகரவாசி, அல்லது குறைந்த அளவு இத்தாலிய நாட்டானாவது போப்பாக வேண்டும் என்று மக்கள் குரல் எழுப்பினார்கள். போப்பின் பதவிக்கு வந்த ஆறும் அர்பன் நேபின்ஸ் குடிமகன், வன்செயல்களுக்கும் குழப்பத்திற்குமிடையில் நடந்த அர்பன் தேர்தல் செல்லாதென ஃப்ரெஞ்சு நாட்டைச் சார்ந்த கார்டினல்கள் அறிவித்து விட்டு ஏழாம் கிளெமெண்டை போட்டிப் போப்பாகத் தேர்ந்தெடுத்தார்கள். கிளெமெண்டிற்கு இத்தாலியில் செல்வாக்கில்லாததால் அவிக்னனுக்குச் சென்று தங்கினார். போப்பாட்சியில் ஏற்பட்ட இந்த உட்பிளவு (Schism) நாற்பது ஆண்டுகள் (1378-1417) நீடித்தது. இரு போப்புகள் தேர்ந்தெடுக்கப்பட்டு உரோம் நகரில் ஒருவரும், அவிக்னனில் மற்றவரும் வாழ்ந்து வந்தனர். இப்பிளவு ஐரோப்பிய நாடுகளையும் பிரித்தது. நாடுகளின் ஆதரவு அரசியல் காரணங்களையே ஒட்டி அமைந்தது. சில நாடுகளே அவிக்னன் போப்பை ஆதரித்தன. ஒரு போப்பு மற்றவருக்கு மாறாகச் சூழ்ச்சி செய்ததால் பெருங்குழப்பம் ஏற்பட்டது. பழிப்புக்குரிய இந்நிலைமையை விரைவில் அகற்ற திருச்சபை முயன்ற போது பாரிஸ் பல்கலைக்கழகம் பொது அவையைக் கூட்டி உட்பிளவிற்கு முடிவு காணலாம் எனக் கருத்து தெரிவித்து. 1409-ல் பைசா நகரில் பொது அவை கூடிற்று. அது கிறித்துவ உலகின் குரலென மதிக்கப்பட்டது. பொது அவைக்கு வருமாறு இரு போப்புகளும் அழைப்பட்டார்கள். வரத்தவறியதால் பொது அவையைப் பழித்தார்கள், திருச்சபைக்கு முரணான கோட்பாடு உடையவர்கள் என்று குற்றஞ்சாட்டப்பட்டு அவர்களிருவரும் பதவியிலிருந்து விலக்கப்பட்டார்கள். பொது அவை ஐந்தாம் அலெக்சாண்டர் என்ற ஒரு முதியவரை தேர்ந்தெடுத்தது. இத்தேர்தல் உட்பிளவிற்கு முடிவு காண்பதற்குப் பதிலாக மூன்றாம் போப்பை ஏற்படுத்திப் பழிப்பை அதிகரித்தது. அலெக்சாண்டர் சில மாதங்களில் இறந்துவிட்டார். அடுத்தாற்போல் தேர்ந்

தெடுக்கப்பட்ட போப்பு இருபத்து மூன்றுவது ஜான் திருச்சபைக்கு அமைதி தேடித்தரும் பண்புடையவராயில்லை. உட்பிளவால் சமயம் வேறு, ஒழுக்கம் வேறாகி இரண்டிற்கும் தொடர்பற்றுப் போயிற்று; இத்தாலியில் கலவரங்கள் மலிந்தன

பேரரசர் பதவிக்கு மூவர் போட்டியிட்டனர். இறுதியில் 1414-ல் ஜெர்மனியில் ஒற்றுமை ஏற்பட்டு சிஜிஸ்மண்டு பேரரசர் ஆனார். அவர் பிளவு பட்ட திருச்சபையை ஒன்றுக்க விழைந்தார். அதற்கு பொது அவையைக் கூட்டி ஒருமைப்பாடு காணும் ஒரு வழி தானிருந்தது இதனைப் பொது அவை இயக்கம் (Counciliar Movement) என அழைத்தார்கள். திருச்சபைக்குள் போப்பாட்சியின் அதிகாரத்திற்கு அமைப்புச் சார்ந்த தடைகள் ஏதுமில்லை. போப்பைத் திருச்சபை அமைப்பின் ஆதிக்கத்திற்குட்படுத்த, நிரந்தரமாய்க் கட்டுப்படுத்த, பொது அவை பயன்பட்டது. ஆதலால் அதனைத் தெய்வீகக் கருவியாய் மதித்தார்கள்.

பேரரசர் சிஜிஸ்மண்டு 1414-ல் கான்ஸ்டன்சில் பொது அவையைக் கூட்டினார். ஐரோப்பாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் 1300 குருமார்களும் நூறாயிரம் மக்களும் அப் பொது அவைக்குத் திரளாய் வந்தனர். பொது அவையின் நோக்கங்கள் மூன்றாகும்—திருச்சபையில் பிளவு நீக்கி ஒற்றுமை காணல், முரணான கோட்பாடுகளை ஒடுக்குதல், திருச்சபைக் குற்றம் குறைகளைத் திருத்துதல் என்ற மூன்றாகும். மூன்று போப்புகளும் பதவியிலிருந்து விலக வேண்டுமென பொது அவை வற்புறுத்தியது. இருபத்து மூன்றுவது ஜான் பதவியை விட்டு விலக விரும்பாததால், அவரும் மற்றொருவரும் பதவி நீக்கஞ் செய்யப்பட்டார்கள்; மூன்றுமவர் தாமே விலகிக் கொண்டார். 1417-ல் கத்தோலிக்கத் திருச்சபையின் ஒரே தலைவராகப் போப்பு ஐந்தாவது மார்டின் தெரிந்தெடுக்கப்பட்டார். முதல் நோக்கம் நிறைவேறியதும் இரண்டாம் நோக்கமாகிய முரண் சமயக்கோட்பாடுகளை ஒடுக்கும் பணியைப் பொது அவை மேற்கொண்டது.

இங்கிலாந்தில் விக்ளிஃப் என்ற சமய சீர்திருத்தக்காரர் குருமார்களின் தீயொழுக்கத்தைக் கண்டித்து, மறை நூலில் விவரிக்கப்பட்டுள்ள வாழ்க்கை முறையைப் பின்பற்ற வேண்டுமென மக்களைத் தூண்டினார். நாட்டுப்பற்றுளரும், சமய சீர்திருத்த வாதியுமான ஹஸ் திருச்சபையின் பொருள் மாற்றக்கொள்கையினை ஆதாரமற்றதென்றும், சமயத்துறையில் ஒருவனுக்கு அவனுடைய உளச்சான்றே இறுதித் தீர்ப்பு வழங்கும் மறைமென்றும், நாடெங்கணும் பறைசாற்றி பொகீமியா மக்களிடையே விக்ளிஃபின் சீர்திருத்தக் கருத்துகளைப் பரப்பி வந்தார்,

அன்னுரை உரோம் திருச்சபையிலிருந்து விலக்கியது; சீர்திருத் தக்கருத்துக்களைப் பொகீமியா மக்கள் பெருமளவு ஏற்றுக்கொண் டார்கள். சிஜிஸ்மண்டு தன்னுடையதாகிய பொகீமியாவிலும் அமைதி காண விழைந்தார். கான்ஸ்டன்ஸ் பொது அவைக்கு வந்து சுதந்தரமாய்த் தன் கருத்துகளை விளக்கிவிட்டு, தன்னிச்சை போல் திரும்பிச் செல்லலாம் என உயிர் பாதுகாப்பளித்துப் பேரரசர் ஹஸ்ஸிற்கு அழைப்பனுப்பினுர். தம் கொள்கையைப் பொது அவைக்கு எடுத்துச் சொல்லும் ஒருவாய்ப்பாய்க் கருதி அந்த அழைப்பை ஏற்று ஹஸ்ஸும் வந்தார். நம்பி வந்தவரைக் கான்ஸ்டன்ஸ் பொது அவையினர் சிறையிலடைத்தார்கள். அவருடைய வாதங்களைக் கேளாமல், அவருடைய கொள்கைகளைக் கண்டித்துவிட்டு முரண் சமய வாதிக்கு அளித்த உயிர்ப் பாதுகாப்பு நிறைவேற்றப்பட வேண்டியதில்லை எனக்கூறி ஹஸ்ஸை 1415-ல் எரிக்கிரையாக்கி விட்டார்கள்.

இயேசுவிடமிருந்து நேரடியாக அதிகாரத்தைப் பொது அவை பெற்றுள்ளதால், போப்புகளின் மேல் ஆதிக்கஞ்செலுத்தும் உன்னத அதிகாரம் அதற்கு உண்டு என்று கான்ஸ்டன்சில் அறிவிக்கப்பட்டது. மேலும் போப்புத் தேர்தலில் சச்சரவு ஏற்படின் அதற்கு முடிவு காணவேண்டியதும் பொது அவையே. கார்டினல்களின் எண்ணிக்கை மட்டுப்படுத்தப்பட்டது. முரண் சமயக் கோட்பாடுகளை ஒடுக்குதல், திருச்சபைச் சீர்திருத்தம் போன்றவற்றில் போப்புகளும் மற்றும் யாவரும் பொது அவை முடிவையே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும் கான்ஸ்டன்ஸ் பொது அவை தீர்மானித்தது. திருச்சபையின் குற்றங்குறைகளை நீக்கக் கான்ஸ்டன்சில் தீவிர முயற்சி செய்யப்படவில்லை. ஏனெனில், அது மிகச் சிக்கலானது. மீண்டும் ஒரு பொது அவை கூடி அப் பணியை மேற்கொள்ளட்டும் என்று தெரிவித்துவிட்டுப் பொது அவை கலைந்தது.

பொது அவைகள் போப்புகளின் அதிகாரத்தை மிகவும் கட்டுப்படுத்தியதால், அவை கூடுவதை போப்புகள் விரும்பவில்லை. பொகீமியாவில் நெருக்கடி நிலைமை ஏற்பட்டிராவிடில் பேசலில் பொது அவையைக் கூட்டியிருக்கமாட்டார்கள். ஹஸ் எரிக்கிரையாக்கப்பட்டதால் பொகீமியாவில் அவர் கருத்துகள் தீவிரமாய்ப் பரவி சமயப் போரைத் தூண்டியது. ஹஸ் கொள்கைப் பற்றுளர்கள் பேரரசப் படையைத் திணறடித்து ஜெர்மனியிலும் ஊடுருவிச் சென்றுர்கள்.

1431-ல் கூடிய பேசல் பொது அவை தன் மேலாண்மையை ஏற்றுக்கொள்ளாத போப்பைப் பதவியிலிருந்து இறக்கிவிட்டு,

வேறொரு போப்பைத் தேர்ந்தெடுத்து ஒரு புதிய உட்பிளவை உண்டாக்கிற்று. திருச்சபையில் தன்னாற்றலுக்கு மீறிய மாற்றங்களைச் செய்யத் திட்டமிட்டதால் பொது அவை மன்னர்களின் ஆதரவை இழந்து. செயல்பட முடியாமல் 1449-ல் கலைந்தது. பொது அவையின் செல்வாக்குக் குறையவே போப்பாட்சி வலிமைபெற்றது.

போப்புகள் முடிவு செய்து வந்த பிரச்சினைகளைப் பொது அவை கூடிப் பேசுவது, முடிவு செய்வது என்ற நிலை, போப்பாட்சியின் ஆதிக்கத்தில் ஆட்டங்கண்டுவிட்டது என்பதன் அறிகுறியாகும். பொது அவை இயக்கம் போப்புகளின் மீது தன் ஆதிக்க உரிமையை வற்புறுத்திய போதிலும் போப்புகளின் செல்வாக்கு மிகுதியும் குறைந்துவிடாமல் பார்த்துக்கொண்டது. அவ்வியக்கப்புயலில் சிக்கிய போப்பாட்சி கிரேக்க, இலத்தின் திருச்சபைகளை ஒன்று படுத்தும் முயற்சியில் ஈடுபட்டு 1439-ல் இரு திருச்சபைகளுக்கும் ஒருமைப்பாடு கண்டு தன் செல்வாக்கைப் பெரிதளவு மீட்டுக்கொண்டது. புலமை மிக்க ஐந்தாம் நிக்கொலஸ் இத்தாலியில் இலக்கிய கலை மறு மலர்ச்சியை ஆதரித்து, வாடிகன் நூலகத்தைத் தொடங்கி, போப்பாட்சிக் கோட்டையைத் தாக்கித்தகர்க்க முயற்சிசெய்த பொது அவை இயக்கத்தைத் தோல்வியுறச் செய்து, 1450-ல் உரோம் நகரில் ஒரு பெரும் வெற்றி விழாவும் கொண்டாடினர்.

மேற்கிலும் கிழக்கிலும் இருந்த திருச்சபைகளின் ஒருமைப்பாட்டு முயற்சியும் உடன்பாடும் அரசியல் காரணங்களின் விளைவாகும்; சமயக் கொள்கைகளில் சமரசம் ஏற்பட்டதால் விளைந்ததன்று. துருக்கியர் கிழக்குப் பேரரசைத் தாக்கி ஐரோப்பாவில் சில பகுதிகளைக் கைப்பற்றிச் சிறிய ஆசியாவைப் பிடித்துக் கொண்டார்கள். துருக்கியரோடு போராட வலிமை இழந்த கிழக்குப் பேரரசிற்குப் படை உதவி மேற்கிலிருந்துதான் வர வேண்டும். மேலைத் திருச்சபையின் சமயக் கேட்பாடுகளை ஏற்றாலன்றி அவ்வுதவி கிடைப்பதரிது. சிலுவைப் போர் ஆர்வத்தைப் புதுப்பிக்கக் கிழக்குத் திருச்சபை, கோட்பாடு, அமைப்பு முறைகளில் விட்டுக்கொடுத்து, சமரசம் காண முன் வந்தது ஃபெராரா (Ferrara)வில் கூடிய பொது அவைக்கு 700 கிரேக்கக் குருமார்கள் வந்து, வேறுபாடுகளைப் பற்றிப் பேசி ஒரு உடன்பாட்டிற்கும் இசைந்தார்கள். இரு திருச்சபைகளும் இணைந்ததாகப் போப்பாணை பிறந்தது. ஆனால் கான்ஸ்டாண்டி, நோபிள் கோட்டை வாயிலில் துருக்கியர் அணிவகுக்கத் தொடங்கியதும்தான் அப்பெரு நகர் உரோம் தலைமைக்குத் தலை தாழ்த்

தியது; 1452ஆம் ஆண்டு இறுதியில் இரு திருச்சபைகளின் இணைப்பு விழாவையும் கொண்டாடியது.

பொது அவை திருச்சபையைத் திருத்தி அமைக்கத் தவறியதால் போப்பாட்சி வலிமை பெற்றது. போப்புகள் பெரும்பாலும் இத்தாலியர்களாகவே தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஆல்ப்ஸ் மலைக்கப்பாலிருந்த நாடுகளின் மீதிருந்த தங்கள் அதிகாரத்தை விட்டுவிட்டு இத்தாலியில் தங்கள் ஆதிக்கத்தைக் காத்தும், வளர்த்தும் கொண்டார்கள். ஐரோப்பாவில் போப்பாட்சியின் ஆதிக்கம் என்பது பழங்கதையாகிவிட்டது. நாடுதோறும் வளர்ந்து வந்த தேசிய உணர்ச்சியும், எராஸ்மஸ், மார்டின்லூதர் போன்ற சீர்திருத்தக்காரர்களின் கருத்துகளும், போப்பாட்சியாதிக்கத்திற்கு அறை கூவலாய் அமைந்தன. ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் வலிவோடு, விரிவான அளவில் போப்பாட்சி ஆதிக்கம் தாக்கப்படவிருப்பதையும், உரோம் திருச்சபையின் ஒருமைப்பாடு குலையப் போவதையும் யாரும் எதிர் பார்த்திருக்க மாட்டார்கள்.

# அதிகாரம் 16

## அறிவுக் கிளர்ச்சி

பள்ளிகள், பல்கலைக் கழகங்கள் வாயிலாக மக்களுக்குக் கல்வி புகட்டி அறிவைப் பரப்பும் அரும்பணியை உரோமானியக் குடியரசு செய்யத் தவறியதைக் கத்தோலிக்கத் திருச்சபை மேற்கொண்டது. ஏதென்சு, உரோம் இரண்டு குடியரசுகளும் நிலப் பரப்பில் விரிவடைந்தபின், கல்வி அறிவும், உலக அறிவும் பெற வாய்ப்பின்றி, அரசியல் வாதிகள், கீழ்மக்கள் கைகளில் சிக்கிச் சீரழிந்தன. அவ்விருவகை அறிவும் ஆட்சி முறைகளை ஆராயவும், அமைத்துக் கொள்ளவும் உதவியது. பதின்மூன்றுவது நூற்றுண்டில், எவருக்கும் அடிமைப்படாது, அறிவோடு ஆட்சியில் பங்கு கொள்ள வேண்டும் என்ற மனப்பான்மை வளர்ந்தது. வரம்பில் ஆட்சியில், அது மன்னனுடையதானுலும், குருமாருடையதானுலும், மக்கள் வாழ விரும்பவில்லை. ஆட்சிப் பொறுப்பைப் பகிர்ந்து கொள்ள அறிவு இன்றியமையாதது என உணர்ந்து, பள்ளிகளில் பல்துறைச் செய்தி அறிவையும் அளித்து அறியாமை இருளிலிருந்து மக்களை விடுவிக்க வழிகள் வகுக்கப்பட்டன. ஒரு முடிவெடுப்பதற்குச் செய்தி அறிவும், வாக்களிப்பதற்கு எதனை ஆதரிக்கிருேம் என்ற தெளிவும் வேண்டும். கல்வி அறிவைப் பெருதவன் கையில் சிக்கிய வாக்குரிமை பயன்தராததோடு தீங்கும் செய்யவல்லது. நம்பிக்கை அடிப்படையில் வாழ்ந்த சமுதாயம் அறிவை அடிப்படையாய்க் கொண்ட வாழ்வை நோக்கி அடியெடுத்து வைத்தது.

கத்தோலிக்கத் திருச்சபைக் கல்வியையும் அறிவையும் பரப்பியதன் நோக்கம் மக்களின் மனதை அடக்கி ஆள்வதற்கல்லாமல் அவர்களின் அறிவை வளர்த்து அவர்களிச்சைபோல் எண்ணவும் செயல்பட அனுமதிக்கவும் அன்று. இடைக் காலத்தில், ஆர்வத்தோடு மக்களின் கல்விக் கண்ணைத் திறந்த பெரியார்கள் பேரரசர்

சார்லேமேனும் ஆங்கில மன்னன் ஆல்ஃப்ரெடுமே ஆவார்கள். திருச்சபையும் பேரரசும் தங்களுக்குள் நடைபெற்ற அதிகார முதன்மைப் போராட்டத்தில் மக்களைத் தத்தம் பக்கம் ஈர்க்கவே கல்வி அறிவு பயன்படுத்தப்பட்டது. அவர்களின் முரண்பட்ட வேண்டுகோட்களில் சிக்கியவர்கள் சிந்திக்கலானார்கள். பேரரசர் இரண்டாம் ஃப்ரெடெரிக் மன்னனும் போப்பு ஏழாம் கிரெகரியும் தத்தம் கட்சியைப் பற்றி எழுப்பிய வாத, எதிர்வாதப் போரில், பொது மக்களே தீர்ப்பளிப்பவர்களாக இருந்தார்களேயன்றி, வாதிட்டோர் அன்று. போப்பாட்சியில் ஏற்பட்டப் பிளவும் ஒழுங்கீனமும், போப்பு அவிக்னனுக்குச் சென்ற நிகழ்ச்சியும் மக்களைச் சிந்திக்கச் செய்தன. திருச்சபை உயர் மட்டத்திலிருந்த ஆடம்பர வாழ்வையும் போப்பாட்சியிலிருந்த வரிச்சுமையையும் மக்கள் குறை கூறினார்கள். அதன் பின்னர் வழிபாட்டில் குருமார் களுக்கு அளிக்கப்பட்ட முக்கியத்தின் அவசியத்தையும் திருச்சபை யின் சில கொள்கைகளையும் கண்டித்தனர்.

பன்னிரண்டாம் நூற்றூண்டில் சமய அடிப்படையாகிய நம்பிக்கை (Faith)க்கும் விஞ்ஞான (Sciehce)த்திற்கும் சுவை யான தீவிரப் போராட்டம் தொடங்கியது. புகழ் ஏணியின் உச்சியில் இருந்த திருத்தொண்டர் பெர்னார்டும் (St. Bernard) அறிஞர் அபெலார்டும் (Abelard) என்றும் இறுதி முடிவு காணவியலாத ஒரு சிக்கலான செய்தியைப் பற்றி புலமைக் கொள்கை அடிப்படையில் வாதப்போர் நிகழ்த்தினார்கள். ஒருவன் எந்த அளவு சமயத்திற்கு அறிவு அடிப்படையைத் தேடவேண்டும், எந்த அளவு நம்பிக்கை அடிப்படையில் மரபு வழிக்கோட்பாட்டை ஏற்கவேண்டும்? அறிவின் இசைவை நாடாத சமயம் உண்டா, மெய்ப்பிக்கக் கூடிய ஒன்று சமயக் கோட்பாடு வரிசையில் வைத்து எண்ணும் தகுதி உடையதா? இவ் வினாக்கள் இன்று போல அன்றும் புதிராகவே இருந்தன. சமயக்கோட்பாட்டைப் பொறுத்த அளவில் திருச்சபை ஏற்றுக்கொண்டதுதான் உண்மையானது என்பதே இடைக்கால நிலையாகும். அபெலார்டு தாம் மரபு வழாதவர் எனச்சொல்லிக் கொண்டார். அவரிடத்தில் குற்றங்கண்டபோது சுதந்தரமாய்ச் சிந்திக்கும் ஒருவருடைய உரிமையைப் பெர்னார்டு தாக்கினார்; உள்ளிருந்தே பகைவனுக்குக் காட்டிக்கொடுக்கும் அபெலார்டிட மிருந்த உண்மையாகிய அரணைப் பாதுகாத்தார்.

அரிஸ்டாட்டில் நூல்கள் அரபு மொழியிலிருந்து இலத்தீனில் பெயர்க்கப்பட்டு ஐரோப்பிய அறிவுத் தொகுப்பில் சிறப்பிடம் பெற்றன. கிரேக்க ஞானி அரிஸ்டாட்டில் கிறித்துவத்திருத்

தொண்டராகவே கருதப்படும் அளவிற்கு அவருடைய கருத்து களைப் போற்றிய ஜெர்மன் அறிஞர் ஆல்பெர்ட்டும் (Albert of Cologue, 1193-1280) இத்தாலிய அறிஞர் அக்வினசும் (Thomas of Aquins 1226-1274) அக்கால அறிவுலகத்தை ஆட்டிப்படைத் தார்கள். அபெலார்டு அறிவிற்கு எழுப்பிய கோயில் கிரேக்க அறிஞர் அரிஸ்டாட்டிலுக்கு ஆலயமாயிற்று. ஆக்ஸ்ஃபோர்டிலும் பாரிசிலும் பேராசிரியராய்ப் பணிபுரிந்த ஆங்கில விஞ்ஞானி ரோஜர் பேகன் (Roger Bacon) அக்காலத்தில் அறிவு என்றால் அரிஸ்டாட்டில் என்றிருந்த வழக்காற்றினைக் கண்டித்தார். நம்பிக்கை, அறிவு, இரண்டுமே கடவுட் கொடையாகையால் அவ்விரண்டும் ஒத்துப்போகவேண்டுமே அல்லாது எவ்வாறு முரண்படலாம் என்று வினவினார் அக்வினஸ். அருள்வெளிப் பாட்டின் (Revelation) உண்மைகள் அறிவைக் கடந்து நிற்கலாம். ஆனால், அதனை மறுக்கவியலாது என்பதே அவருடைய சித்தாந்தம்.

இடைக்காலச் சிந்தனையாளர்கள் மரபு வழிக்கோட்பாட்டு (orthodox) நூல்களுக்கு விளக்க உரைகள் எழுதி மெய்யியல் அறிவை (Theology) உருவாக்கினார்கள். சட்டம், மருத்துவம், ஏரணம் ·(Logic) இறையியல் முதலிய அறிவுத்துறைகள் பேராக்கம் பெற்றன. அறிவுத்தினவு எடுத்த மக்கள், இளம் வயதினரும், முதியவர்களும் புலமையும் புகழும் பெற்ற பேராசி யர்கள் இருப்பிடங்களை நோக்கிச்சென்று அறிவுப் பசியைத் தீர்த்துக் கொண்டார்கள். கற்றோரும் கற்பிப்போரும் தனித்தனியே கழகங்களை அமைத்துக் கொண்டு விதிமுறைகளையும் வகுத்துக் கொண்டார்கள். அக் கழகங்களே கல்லூரிகளாகவும், பல்கலைக் கழகங்களாவும் வளர்ந்தன. போப்பாட்சியும் பேரரசும் மனித இன முன்னேற்றத்திற்காக தெய்வத்தால் ஏற்படுத்தப்பட்ட இரு உலகச் சத்திகள்; இடைக்கால எழுத்தாளர்கள் பல்கலைக்கழகத்தை மூன்றாவதாய்க் கருதினார்கள். பன்னிரண்டாம் நூற்றாண்டு அறிவு இயக்கம், பதினைந்தாம் நூற்றாண்டு மறுமலர்ச்சிக்கு வழி கோலியது. கல்வி, திருச்சபையைச் சேர்ந்தவர்களின் தனி உரிமையாயிருந்த நிலை மாறி, ஏனையோரும் கற்கலானார்கள். வாணிபப் பெருக்கால் நகரங்களில் தோன்றிய செல்வர்கள் இலக்கியத்தையும் கலையையும் ஆதரித்தனர். சாசர் (Chaucer), ஃப்ராய்ஸார்ட் (Froissart), பொக்காஷியோ (Boccaccio) போன்ற எழுத்தாளர்கள் அறிவுலகத்தை அலங்கரிக்கலானார்கள். பதினான்காம் நூற்றாண்டில் விஞ்ஞான உலகமும் காட்சியளிக்கத் தொடங்கியது. ஆக்ஸ்ஃபோர்டு பாரிசுப் பல்கலைக்கழகங்கள் இறையியல் நுட்ப (Subtlety) ஆராய்ச்சியினை விடுத்து, காட்சியறி (Observation)வையும் செயல் ஆய்வை (Experiment)

யும் கொண்டு அறியப்படும் விஞ்ஞானச் செய்திகளில் கருத்துச் செலுத்தின.

சுதந்தரத்தோடும் செல்வாக்குடனும் இருந்த ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகப் பேராசிரியரும் குருமார்களில் ஒருவருமாகிய விக்ளிஃப் (Wycliffe) 1320ஆம் ஆண்டில் யார்க்ஷையரில் பிறந்தார். சிறிது காலம் பாலியல் (Balliol) கல்லூரித் தலைவராகவும் பணியாற்றினர். அவருடைய முற்போக்கான கொள்கைகளுக்காகப் பல்கலைக் கழகத்திலிருந்து வெளியேற்றப்பட்டார். அவர் கண்ட லோலார்டி இயக்கம் (Lollardy) இடைக்காலத் திருச்சபை நடைமுறைகளையும் கருத்துகளையும் கண்டித்தது. பின்னல் ஏற்பட்ட சமயச் சீர்திருத்த இயக்க (Protestant)த்தின் எல்லா முக்கிய நிலைகளையும் விக்ளிஃப் இயக்கத்திலும் கொள்கையிலும் காணலாம். அவர் சமய சீர்திருத்தத்தின் விடிவெள்ளியென அழைக்கப் பெற்ருர். இலத்தின் மொழியிலிருந்த மறைநூலின் கருத்துகளை, பிறர் படித்துச் சொல்லக் கேட்டு வாழ்ந்த மக்கள், நேரிடையாக அதனைப் படித்து உணர வாய்ப்பளிக்கும் பொருட்டு விவிலியத்தை ஆங்கிலத்தில் ஆக்கித் தந்தார். மறைநூலையே அடிப்படையாய்க் கொண்டு விக்ளிஃபின் ஏழைச் சீடர்கள் சமயக் கருத்துகளைப் பரப்பி வந்தார்கள். திருச்சபைக்குச் சொந்தமான நிலமானியங்களை அரசு எடுத்துக் கொண்டால் குருமார்கள் ஆடம்பர வாழ்வை நீக்கி ஒழுக்கமாய் வாழ்வார்கள், அரசின் வருமானம் கூடும், மக்கள் வரிச்சுமை குறையும் என்ற அரசியல் சித்தாந்தத்தை ஆதாரித்தார். ஒரு நாட்டுத் திருச்சபை அந் நாட்டரசனின் ஆதிக்கத்திலிருப்பதையே அவர் விரும்பினர். இக் கொள்கை ஆங்கில மன்னன் எட்டாம் ஹென்றியின் காலத்தில் அமலுக்கு வந்தது. சமயக் கடமைகளைப் புறக்கணித்து, அரசியலில் ஈடுபட்டிருந்த மேற்றிராணியார்களையும் பாவமன்னிப்புச் சீட்டுகளை விற்று திருச்சபையின் பெருமையைக் குலைத்து வந்த திரிதுறவிகளையும், விக்ளிஃப் சாடினர்; திருச்சபையில் குருமார் ஆட்சியைக் கண்டித்தார். திருமறை நூலே வாழ்க்கைக்கு வழிகாட்டி யென்ருர், இறுதியாகக் கத்தோலிக்கச் சமயத்தின் அடிப்படை மெய்ம்மையையே உண்மை அல்லவென்றும், அப்பத்தை இயேசுவின் திருவுடலாக மாற்றும் வியத்தகும் ஆற்றல் குருமார்களுக்கில்லை என்றும் அறிவித்தார். விக்ளிஃப் மறைந்த பிறகும் லோலார்டி இயக்கம் நீடித்தது. பாமரமக்கள் மறைவாக அந்த இயக்கத்தில் இருந்தனர். பதினைரும் நூற்ருண்டில் இங்கிலாந்தில் ஏற்பட்ட சமய சீர்திருத்தம் விக்ளிஃப் பரப்பிய கொள்கைகளிலிருந்தே வளர்ந்தது.

பொகிமியாவில் 1373-ல் செக் (czech) இனத்தில் பிறந்து, பிராக் (Prague) பல்கலைக் கழகத்தில் ஆசிரியப் பணியை மேற் கொண்டு வாழ்ந்த ஜான்ஹஸ் (John Hus) விக்ளிபின் வாரிசாக விளங்கினார். இயேசுவின் சொற்களைப் பேசியும் பின்பற்றியும் வந்த தம்மைக் கிறித்துவச் சமய மறுப்பாளர் என எவ்வாறு கூறலாமென்று ஹஸ் கேட்டார். கான்ஸ்டன்சில் கூடிய திருச்சபை அவை அவரை எரியிலிட்டுக் கொல்வது என்று முடிவு செய்தது. அவருடைய வீர மறைவு முதல் சமயப் போருக்கு வித்திட்டது. அவரைப் பின்பற்றிய பொகிமியர்கள் போப்பாட்சிமீது போர் தொடுத்தனர். சமய சீர்திருத்தப் போர்களுக்கு முன்னோடியா யிருந்தன பொகிமியச் சமயப் போர்கள்.

போப்பாட்சியில் பிளவு (Schism) ஏற்பட்டு இரு போப்புகள் போட்டியிட்டபோது உயர்மட்ட குருமார்களின் பொது அவையைக் கூட்டி திருச்சபைச் சிக்கலைத் தீர்ப்பதைத் தவிர வேறு வழி புலப்படவில்லை. பொது அவை திருச்சபையைத் திருத்தக் கிடைத்த தெய்வீகக் கருவியாய்க் கருதப்பட்டது. அத்தகைய சீர்திருத்தத்தை மேற்கொள்வதற்குக் காலம் கூடி வந்து கொண் டிருந்தது. பொதுவாய்ப் போப்பின் ஆடம்பர வாழ்வு, சமயச் சார்பல்லாத செயல்களில் ஈடுபாடு, அதிகார இச்சை, குருமார் களின் தெய்வீகச் சக்தி, சடங்குகள்—இவையே சீர்திருத்தக்காரர் களின் கண்டனத்தில் மேலோங்கி நின்றன. பொது அவை பேசலில் (Basel) கூடி திருச்சபையைத் திருத்த மேற் கொண்ட முயற்சி பயனளிக்கவில்லை. 1450-ல் போப்பின் ஆதிக்கக் கோட்டை வலிவும் பொலிவும் பெற்று விளங்கியதைக் கண்டவர்கள் ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் அதற்கு ஏற்படவிருந்த அதிர்ச்சியையும் சரிவையும் எதிர்பார்த்திருக்க முடியாது.

1453-ல் கான்ஸ்டாண்டிநோபிளைத் துருக்கியர்கள் கைப்பற்றிய பின் கிரேக்க அறிஞர்கள் சுவடிகளுடன் இத்தாலிக்கு வந்து கிரேக்க அறிவைப் பரப்பினார்கள் என்ற கருத்துத் தவறானது. அதற்கு அரை நூற்றாண்டிற்கு முன்னரே கிரேக்க மொழியைப் பயிலவும் நூல்களைப் படிக்கவும் தொடங்கிவிட்டனர். புத்துயிர் பெற்ற கிரேக்க அறிவு பதினைந்தாம் நூற்றாண்டில் ஏற்பட்ட அறிவு மறுமலர்ச்சியின் ஒரு முக்கிய பகுதியாயிருந்தது; மறு மலர்ச்சிக்கு அது காரணமாகாது. கிரேக்க நூல்களைப் பயில் வதற்கு முன்னரே இத்தாலிய மொழியில் சிறந்த கவிதைகளை எழுதத் தொடங்கிவிட்டார்கள். ஐரோப்பா விழிப்படைந்து, புறக்கணிக்கப்பட்டிருந்த கிரேக்க உரோம நூல்களைக் கற்றுப் புதிய அறிவைப் பெற ஆவலோடிருந்தது. இலக்கிய, கலை

மறுமலர்ச்சி, விரிவடைந்து வந்த பட்டறிவிலும், காலவேகத்தில் மாறிக் கொண்டிருந்த தேவைகளிலும், இயற்கையாய்த் தோன்றியதே யன்றி புற நிகழ்ச்சியால் தூண்டப்பட்டதன்று.

இரண்டாம் ஃப்ரெடெரிக் இத்தாலிய மொழியில் அழகிய உணர்ச்சிப் பாடல்களைத் தீட்டித் தாந்தே (Dante)யின் இத்தாலியக் கவிதைகளுக்கு வழி வகுத்தார். 1300ஆம் ஆண்டில் தாந்தே எழுதிய தெய்வீக இன்பியல் நாடகம் (Divine Comedy) தலைசிறந்த காப்பியமாகும். அக்கால மக்களின் உணர்ச்சி, ஆர்வ நம்பிக்கை, அறிவு முதலியவற்றை அக் காப்பியத்தில் காணலாம். அது வர்ஜில் (Virgil) வழிகாட்ட, தாந்தே மேற்கொண்ட பயண விவரக் கவிதையாகும். தாந்தே நரகத்திற்குச் செல்கிறார். தூய்மைப் படுத்துமிட (Purgatory)த்தில் தம் காதலி பியாட்ரிசை (Beatrice)ச் சந்திக்கிறார், பிறகு சுவர்க்கத்தில் அவளே அவருக்கு வழிகாட்டி அழைத்துச் செல்கிறாள். கிரேக்க இலக்கியத்தின் சிறப்பை உணர்ந்து உலகிற்கு உணர்த்தியவர் தாந்தே யாவார். அவருக்குப் பின் மனிதப் பற்றாளராய் (Humanist) விளங்கிய பெட்ரார்க் (Petrarch, 1304—1384) அக்காலக் கருத்தை உருவாக்கினார். போப்பு ஐந்தாம் நிக்கொலசும், ஃப்ளாரென்சு நகர மெடிசி (Medici) ·குடும்பத்தாரும் கிரேக்க அறிவைப் பரப்ப போட்டியிட்டனர். கிரேக்க உரோமானிய இலக்கியப் பயிற்சி இத்தாலியிலிருந்து ஜெர்மனி ஃப்ரான்சு, இங்கிலாந்து நாடுகளில் பரவி ஐரோப்பிய அறிவுச் செல்வத்தின் நிரந்தரப் பகுதியாயிற்று. கோலட் (Colet), தாமஸ்மோர் (More) எராஸ்மஸ் (Erasmus) போன்றோர் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தை மறுமலர்ச்சி இயக்கத்தின் தலைமைப்பீடமாக்கினார்கள்.

கலைத்துறையிலும் மறுமலர்ச்சி ஏற்பட்டது. அத்துறையும் கிரேக்க உரோமானியர்களின் கலையையே முன்மாதிரியாய்க் கொண்டது. சுதந்தரம், அழகு, மகிழ்ச்சி மூன்றும் கிரேக்க வாழ்வில் போற்றப்பட்டவை, இடைக்காலம் அறியாதவை. மறுமலர்ச்சிக் கால மக்கள் அம் மூன்றையும் தங்கள் வாழ்வில் காண விழைந்தார்கள். சிறந்த கட்டிடங்களும், சித்திரங்களும், சிற்பமும் ஐரோப்பாவிற்குப் புது அழகுணர்ச்சியை ஊட்டி புத்துயிர் பெற்ற கலைச்சின்னங்களாய்த் திகழ்ந்தன. கியாட்டோ (Giotto) மைக்கேல் ஆஞ்சிலோ (Michael Angelo) இராஃபேல் (Raphael) லியார்னடோ-டா-வின்சி (Leonardo da Vinci) ஆகியோர் தலைசிறந்த கலைஞர்களாவார்கள்.

இடைக்கால மக்கள் மறுமைக்கு முக்கியத்துவம் அளித்து வந்தனர். மறுமலர்ச்சியாளர்கள் இம்மைக்கு முக்கியத்துவம் தந்து திருச்சபையையும் குருமார்களையும வசை பாடினார்கள். திருச்சபையில் குறை காணவும் போப்பாட்சியை எதிர்க்கவும் மக்கள் ஆயத்தமானார்கள். மறுமலர்ச்சிக்காலம் இடைக்கால வாழ்வு முறைகளையும் எண்ணங்களையும் எதிர்த்துக் கிளர்ச்சி செய்த காலம் என்று சொல்லலாம். கிரேக்க உரோமக் கவிகளையும் அறிஞர்களையும் மட்டுமன்றி, அவர்களின் தெய்வங்களையும் மறுமலர்ச்சியாளர்கள் போற்றலானார்கள்.

# அதிகாரம் 17

**கருங்கொள்ளை நோயும் அதன் விளைவுகளும் :**

தூர கிழக்கு நாடுகளில் தோன்றிய கருங் கொள்ளைநோய் (Black Death) இடைக்காலப் போக்குவரவுப் பாதையில் இருந்த நாடுகளின் வழியே சிறிய ஆசியாவிலும் அங்கிருந்து இத்தாலி வழியாக ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலும் பரவி எண்ணற்ற மக்களின் உயிர்களைக் குடித்த கொடிய நோயாகும். இக் கொள்ளை நோய் காஸ்பியன் கடல் பகுதியில் கொறிவிலங்கு (Jerboa)களுக்கு ஏற்பட்டுப் பிறகு மனிதர்களைத் தொத்திக்கொண்டு தொல்லை தந்தது. அந் நோய் வந்தவர்களுக்குக் காய்ச்சலும் உடலெங்கும் கருங்கட்டிகளும், வெடிப்பும் தோன்றி, வெடிப்பிலிருந்து குருதி வந்தது. உடல் வலிவுள்ள இளம் வயதினரையே அந் நோய் தேடிப் பிடித்தது. நோயினால் சிலர் திடீரென்று இறந்தனர். பலர் சில மணி நேரம் துடித்து மடிந்தனர். அவிக்னன் என்ற இடத்தில் புதைக்கப்பட்ட சடலங்களைத் தோண்டி போப்பின் ஆணைப்படி, நோய் முதல் நாடினார்கள், பதினாயிரம், நூறாயிரம் மக்கள் ஆங்காங்கு இறந்தார்கள் என்ற கணக்கும் ஐரோப்பாவின் மக்களில் கால் பாகம் மடிந்தார்கள் என்ற விவரமும், நம்பத் தக்கவையாயில்லை. இயற்கையில் ஏற்படும் பேரிடர்களினால் அளவிடவோ, மட்டுப்படுத்தவோ முடியாத சாவும், துன்பமும் நேரிடுவது எதிர்பார்க்க வேண்டிய ஒன்றுதானே! சமுதாயத்தில் ஒழுக்கக்கேடுகள் போன்ற நீடித்த பெரிய விளைவுகள் ஏற்படும் அளவிற்கு மக்கள் செத்து மடிந்த புள்ளி விவரங்கள் கிடைத்துள்ளன.

1348ஆம் ஆண்டு அளவில் பரவிய கொடிய நோய் சிற்றூர்களையும் நகரங்களையும், மடாலயத் துறவிகளையும் பல்கலைக் கழக மாணவர்களையும், மானியதார்களையும் உட்குடிகளையும் சூறையாடியது. உயர்மட்ட மக்களிடையில் இறந்தவர்களின் எண்ணிக்கை விவரங்களே கிடைப்பதால், உழவர்களிடையில் இறப்பு விகிதம்

குறைவெனக் கருதலாகாது. பயிர்த் தொழிலே நடைபெற முடியாத அளவிற்குக் குடிமக்கள் சாவு பெருகி இருந்தது. நோயினால் ஏற்பட்ட அழிபாடு ஹுலகு (Hulagu), தாமுர்லேன் (Tamurlane) செய்த படுகொலைகளின் எண்ணிக்கையையும் மிஞ்சியது.

பெரிக்ளிஸ் காலத்திலும் மார்க்கஸ் ஆருலியஸ் (Aurelius) காலத்திலும் கொள்ளைநோய் பரவி மக்களைக் கொன்று குவித்தது. ஆனால், 1348-ல் வந்த கருங் கொள்ளை நோய் மானிட இனத்தை அடியோடழிப்பதில் ஈடு இணையற்றதாயிருந்தது. இங்கிலாந்தில் மக்கள் மூன்றில் ஒரு பகுதிக்கு மேல் இறந்தனர்; ஆக்ஸ்ஃபோர்டு மாணவர்களில் மூன்றில் இரு பகுதியினர் நோய்க்குப் பலியானார்கள். ஐரோப்பாவில் சாவுக் கணக்கு இரண்டரைக் கோடியென ஹெக்கர் (Hecker) மதிப்பிட்டுள்ளார். சீனத்திலிருந்து திரும்பும் போது டமஸ்கஸ் நகரத்தில் கருங் கொள்ளை நோயினால் துன்புற்றவர்களைக் கண்டதாக அரபு வழிப்போக்கர் இபின்பட்டுடா (Ibn Batuta) அறிவிக்கிறார். இந் நோய் பரவியதால் ஏற்பட்ட விசித்திர விளைவுகளை ஃப்ளாரன்சு நகரில் சிலர் எவ்வாறு சிற்றின்பங்களில் திளைத்தார்கள், வேறு சிலர் எப்படிக் கொள்ளைக்காரர்களாய் மாறினார்கள், என்று இத்தாலியக் கதாசிரியன் பொக்காஷியோவின் வர்ணனைகளில் காண்கிறோம்.

மடத்துத் துறவிகள் இறந்ததால் கல்வியும் இலக்கிய வளர்ச்சியும் குன்றின. இலக்கணப் பள்ளிகளில் ஃப்ரெஞ்சு ஆசிரியர்களின் எண்ணிக்கை குறைந்தால் ஆங்கில ஆசிரியர்கள் அமர்த்தப்பட்டார்கள். சிற்றூர்கள் பலவற்றில் குருமார்களே இல்லை. கட்டடங் கட்டும் கலைஞர்கள் குறையவே பழைய கோதிக் (Gothic) முறைக்குப் பதிலாக எளிய கட்டிடக்கலை வளரத் தொடங்கியது.

உழவுத் துறையில் ஏற்பட்ட விளைவுகளால் பொருளாதார நிலை பெரிதும் மாற்றமடைந்தது. நிலத்தை நேரிடையாகப் பயிரிட்டோர் பலர் உயிர் நீத்ததால் அவர்களின் எண்ணிக்கை கணிசமாய்க் குறைந்தது; நிலத்தின் பெரும்பகுதி பயிரிடப்படாமலேயே தரிசாய்க் கிடந்தது. பண்ணைச் சொந்தக்காரர்கள், வெளியாட்களின் உதவியின்றி நோய்க்குத் தப்பிய உழவர்களைக் கொண்டு உழவுத் தொழிலை மேற்கொள்ள முடியாத அவல நிலையேற்பட்டது. உழவர்கள் கூலி உயர்வு கேட்டார்கள். பழைய கூலியை வாங்கிக் கொள்ள வேண்டுமென அவர்களை வற்புறுத்தி 1349-ல் கூலியாட்கள் சட்டம் நிறைவேற்றப்பட்டது. கூலி உயர்வு கேட்பதோ, கொடுப்பதோ குற்றமாக்கப்பட்டது. நாட்டில் ஒரு காட்டத்திலிருந்து வேறொரு பிரிவிற்குப் பயிரிடுவோர் இடம்

பெயரலாகாதெனச் சட்டம் இயற்றப்பட்டது. பொருளாதாரக் கட்டாயத்தில் தோன்றிய நிலையினைச் சட்டங்களால் மாற்ற முடியவில்லை. அந் நிலையைக் கண்டு இங்கிலாந்திலும் ஃப்ரான்சிலும் ஆளுங்கணம் அஞ்சியது; குடியானவர்கள் கிளர்ந்தெழுந்தார்கள்; உழவர் கலகங்கள் ஏற்பட்டன. இறுதியில் நில அடிமை முறை ஒழிந்தது. பழைய பண்ணைமுறை வலியிழந்து நிலத்தோடு பிணைக்கப்பட்டிருந்த உழவர்கள் விடுதலை பெற்றனர். ஆண்டை எவர், அடிமை எவர் என்ற நிலையில் பழைய நிலமானிய அமைப்புக் கலகலத்தது. சமுதாயத்தில் காணப்பட்ட ஏற்றத் தாழ்வினை, அதுவரையில் இறைவன் படைப்பு என எண்ணியிருந்த மக்கள் எதிர்க்கலானார்கள். இச் சூழ்நிலையில்தான் பொது உடைமை (Communism)யின் தொடக்கத்தை உலக வரலாறு தீட்டிய வெல்ஸ் (H. G. Wells) காண்கிறார்.

சில மானியதார்கள் புதிய நிலையை ஏற்றுக்கொள்ளாது தங்கள் விளைச்சல் நிலங்களை மேய்ச்சல் நிலங்களாய் மாற்றி ஆட்டுப் பண்ணைகளைத் தொடங்கினார்கள். இதனால் இங்கிலாந்தில் கம்பளி நூற்பும் நெசவுத் தொழிலும் தோன்றி சிறந்த வகையில் வளர்ந்தன. சில நிலக்கிழார்கள் தங்கள் நிலங்களைக் குத்தகைக்கு விட்டு குத்தகை முறையை உழவுத் தொழிலில் ஏற்படுத்தினார்கள். கம்பளி ஏற்றுமதியால் கடல் பயணமும் கப்பல் கட்டும் தொழிலும் ஆக்கம் பெற்றன. உழவுத் தொழிலில் ஏற்பட்ட விளைவுகளில் கைத்தொழில்கள் வளரத் தொடங்கின.

# அதிகாரம் 18

## நூறுண்டுப் போர் 1337 - 1453

பதின்மூன்றுவது நூற்றுண்டின் இறுதியில் ஐரோப்பாவின் மேற்குப் பகுதியில் இங்கிலாந்தும், ஃப்ரான்சும் வலுமிக்க நாடுகளாயிருந்தன. இங்கிலாந்து ஒன்றுபட்டு ஓர் அரசன் கீழ் நல்ல ஆட்சி முறையை அமைத்துக்கொண்டு நாகரிகக் கலைகளில் ஐரோப்பாவில் முன்னணியிலிருந்தது. இடைக்கால உரோமானியப் பேரரசின் சிதைவிற்குப் பின் அவ்வாதிக்க நிலையினை எய்திய ஃப்ரான்சு, வலுமிக்க முடியாட்சியின்கீழ், போப் பாட்சியைத் தன்னடிப்படுத்தி சிறப்புற்றிருந்தது. அவ்விரு நாடுகளும் பதினுன்காம் நூற்றுண்டில் நீண்டதோர் அழிவுப் போரில் குதித்தன. அத் தொடர்ந்த போரினுல் இரு நாடுகளின் வரலாறும் ஆட்சிமுறையும் பெருமாற்றமடைந்தன.

போருக்கு முன்னரே ஃப்ரான்சின் பல பகுதிகள் ஆங்கில மன்னரின் ஆட்சிக்குட்பட்டிருந்ததால், அந் நாடு ஒன்று படவும், நாடு முற்றிலும் ஃப்ரெஞ்சு ஆட்சி ஏற்படவும் வழியில்லாதிருந்தது. ஆதலால் நூற்றுண்டுப் போரின் அடிப்படை காரணம் ஃப்ரான்சில், கயீன் (Guienne) காஸ்கனி (Gascony) போன்ற பகுதிகளில் ஆங்கில ஆட்சி நீடிப்பதா அல்லது ஃப்ரெஞ்சு மன்னன் ஃப்ரான்சின் எல்லாப் பகுதிகளிலும் ஆட்சியை ஏற்படுத்துவதா என்பதே; ஒன்று ஃப்ரான்சு முற்றிலும் ஆங்கில ஆதிக்கம் ஏற்பட வேண்டும், அல்லது அந் நாட்டிலிருந்து ஆங்கிலேயர் அடியோடு விரட்டப்பட வேண்டும். இதற்கு முடிவு காணவே இரு நாடுகளுக்கும் நூறுண்டுகளுக்குமேல் தொடர்ந்து, ஆனல் இடைவேளைகளோடு, போர் நிகழ்ந்தது. போருக்கு வேறு காரணங்களும் இருந்தன.

எட்வர்டு பாலியலும், டேவிட் புரூசும் ஸ்காட்லாந்து அரச பதவிக்குப் போட்டியிட்டனர். அவ்விருவரையும் முறையே

ஆங்கில மன்னன் மூன்றும் எட்வர்டும் ஃப்ரெஞ்சு அரசன் ஆறும் ஃபிலிப்பும் ஆதரித்தனர். மேலும் ஸ்காட்லாந்தில் இழந்த தங்கள் ஆதிக்கத்தை மீண்டும் நிலைநிறுத்த ஆங்கிலேயர்கள் விரும்பினார்கள். ஆறும் ஃபிலிப் கடல்மட்டத்திற்குத் தாழ்ந்திருந்த நாடுகளில் (Low Countries) தம்மாதிக்கத்தை நிறுவப் போரிட்ட போது அப் பகுதிகளிலிருந்து ஓடிவந்த அரசியல் அகதிகளுக்கு ஆங்கில மன்னர் அடைக்கலம் தந்தார். ஆறும் ஃபிலிப் ஆங்கிலேய-ரிடமிருந்த தம் நாட்டை மீட்க அவர்கள் ஆதிக்கத்திலிருந்த காஸ்கனியை 1333-ல் தாக்கினார்; கயீனில் கலகத்தைத் தூண்டினார். ஃப்ளாண்டர்சுடன் ஆங்கிலக் கம்பளி நூல் வாணிகத்தைக் கட்டுப்படுத்தியதாலும் ஆங்கிலோ-ஃப்ரெஞ்சு பகை வளர்ந்தது. மூன்றும் எட்வர்டு அந்நாட்டிற்குச் சென்றபோது ஃப்ரெஞ்சு மக்கள் ஏற்படுத்திய வாணிபக் கட்டுப்பாட்டால் வருந்திய ஃப்ளெமிங்குகள் ஃப்ரெஞ்சு அரசிற்கே உரிமை கொண்டாடுமாறு ஆங்கில மன்னனைத் தூண்டினார்கள். அவ்வாறு செய்வதால் ஏற்படும் ஆக்கத்தைக் கருதி மூன்றும் எட்வர்டு தம்மை ஃப்ரெஞ்சு மன்னராக அறிவித்துக் கொண்டார்.

நான்காம் ஃபிலிப்பிற்குப் பின்வந்த மூன்று ஃப்ரெஞ்சு மன்னர்களும் ஆண் வாரிசின்றி இறந்தனர். புதிய ஃப்ரெஞ்சு மன்னன் ஆறும் ஃலிப் நான்காம் ஃபிலிப்பின் தம்பி மகன். நான்காம் ஃபிலிப்பின் மகளும், 1328-ல் இறந்த நான்காம் சார்லசின் தங்கையும் ஆகிய இசபெல்லாவின் மகன் என்ற முறையில் மூன்றும் எட்வர்டு அரசுரிமை கொண்டாடினன். நில உடைமை யுரிமை பெண்ணிற்குக் கிடையாது என்று, சாலிக் (Salic) சட்டத்தை விரிவு படுத்தி, எட்வர்டின் உரிமை மறுக்கப்பட்டது. பெண்ணிற்கு உரிமையில்லையேயன்றி அவ்வுரிமையை அவளின் ஆண் வாரிசுக்கு மறுக்க முடியாதென ஆங்கிலேயர் வாதிட்டனர்.

இரு நாடுகளுக்குள் இருந்த ஆதிக்க, வாணிபப் போட்டிக் காரணமாய் நிகழ்ந்த நூறுண்டுப் போர் நிலமானியப் போராய்த் தொடங்கி, இறுதியில் நாட்டின் போராகி முடிவுற்றது. நூறுண்டுப் போர். தொடர்பாக நடந்த பல போர்களையும் நான்கு கட்டங்களாய்ப் பிரித்துக் காணலாம். இருதரப்பிலும் வீரர்கள் பல வீரச் செயல்கள் புரிந்தார்களெனினும், மக்கள் அடைந்த துன்பம் கொஞ்சமல்ல; அப் போர் ஃப்ரான்சு நரக வேதனைக்குள்ளாகியது என வரலாற்றுசிரியன் வருந்துகிறுன்.

இங்கிலாந்தைத் தாக்கவந்த ஃப்ரெஞ்சு கடல்படை ஸ்லூயிஸ் (Sluys) என்னுமிடத்தில் 1340-ல் நிகழ்ந்த கடல்சண்டையில்,

ஆங்கிலக் கடற்படையால் அழிக்கப்பட்டது. 1346-ல் கிரெசி (Crecy) போர்க்களத்தில், பெரும் வெற்றியடைந்த ஆங்கிலேய விற்படை, அடுத்த ஆண்டில் ஃப்ரெஞ்சு நாட்டின் நுழைவாயிலும் கடற்கரைப் பட்டினமுமாகிய கலே (Calais)யைக் கைப்பற்றியது. ஆங்கிலக் கால்வாயில் (English Channel) ஆதிக்கம் பெற்ற ஆங்கிலேயர்கள் ஃப்ரான்சை நினைத்தபோது தாக்கக் கலேயை அடித்தளமாக்கிக் கொண்டார்கள். 1355–ல் போர் நிறுத்த ஒப்பந்தம் முடிவுற்றதும் எட்வர்டின் வீரத் தலைமகன் கறுப்புக் கவச இளவரசன் (Black Prince) ஃப்ரான்சின் தென் பகுதியைச் சூறையாடி மீண்டும் போர்க் கொடி உயர்த்தினான். 1356-ல் பாய்ட்டியர்ஸ் (Poitiers) போர்க்களத்தில் இளவரசரின் படையைக் காட்டிலும் ஆறுமடங்கு பெரிய ஃப்ரெஞ்சுப்படை ஆங்கிலப் படையைத் தாக்கித் தோல்வியுற்றது. ஃப்ரெஞ்சு மன்னன் ஜான் சிறைப்பட்டான். 1360-ல் ஏற்பட்ட பிரெடிக்னி (Bretigny) உடன்படிக்கைப்படி ஃப்ரான்சில் பல நிலப்பகுதிகளைப் பெற்றுக் கொண்டு எட்வர்டு தம் வாரிசுரிமையை விட்டுக் கொடுத்தார். இனி ஃப்ரான்சு, ஸ்காட்லாந்து வாரிசுரிமைப் போரில் தலையிடுவ தில்லையென்றும் ஜான் மன்னனை மீட்கப் மீட்சிப் பணமாக பெருந் தொகை கொடுப்பதென்றும் ஒப்புக் கொண்டது.

இவ்வாறு நூறாண்டுப் போரின் முதல் கட்டம் ஆங்கிலேயருக்கு வெற்றியாய் முடிந்தது. ஆங்கிலேயர் பெரும் ஃப்ரெஞ்சுப் படைகளைத் தோற்கடித்து வெற்றிமேல் வெற்றி பெற்றதற்குப் பல காரணங்களிருந்தன. ஃப்ரான்சைப்போல் இங்கிலாந்து நிலமானிய அமைப்பால் பிளவுபட்டு ஒற்றுமை இன்றி வலிமை குறைந்த நாடாயில்லை. ஆங்கிலப் படை அரசாணைக்கீழ் பணி யாற்றிய நாட்டுப்படையாயிருந்ததால் ஃப்ரெஞ்சு நிலமானியப் படையால் அதற்குமுன் நிற்க முடியவில்லை. கறுப்பு(க்கவச) இளவரசர் கையாண்ட புதிய போர் முறைகளும் தந்திரமும், நெடுந்தூரம் ஊடுருவிச் சென்று பகைவர்களிடையில் அச்சத்தை ஊட்டிய ஆங்கிலேயரின் நீண்ட விற்களும் (Long Bow) அவர் களுக்குப் பெரும் வெற்றிகளைக் குவித்தன. ஃப்ளாண்டர்ஸ் நகரங் களும் ஆங்கிலேயருக்கு உதவின. ஆங்கில மன்னர் இரண்டாம் ஹென்றியைப்போல மூன்றாவது எட்வர்டும் ஃப்ரெஞ்சு மன்னனுக்குச் சொந்தமாயிருந்த பகுதியைக் காட்டிலும் அதிக மான ஃப்ரெஞ்சு நிலப்பகுதியில் ஆதிக்கஞ் செலுத்தினான்.

பிரெடிக்னி ஒப்பந்தத்திற்குப் பிறகு ஃப்ரான்சில் ஆங்கில ஆதிக்கம் சரியத் தொடங்கியது; ஃப்ரெஞ்சுப்படை அமைப்பில் ஏற்பட்ட மாற்றமே இதற்குக் காரணமாயிருந்தது. நிலமானியப்

படையை நம்பிக் கொண்டிராது. கூலிப்படை யொன்று பெர்ட்ராண்டு கஸ்க்லின் (Bertrand du Guesclin) சீரிய தலைமையில் ஒப்படைக்கப்பட்டது. கிரெசி, பாய்ட்டியர்ஸ் போன்று திறந்தவெளிச் சண்டைகளில் ஈடுபட மறுத்துக் கெரில்லாமுறை தாக்குதல்களில் புதிய தலைவர் இறங்கினர். அக்வினடன் மாகாண ஆளுநராயிருந்த கறுப்பு(க்கவச) இளவரசர் விதித்த புதிய வரிகளை எதிர்த்து மக்கள் கொதித்து எழுந்தனர். 1372-ல் நிகழ்ந்த லாராஃசேல் (La Ro chelle) சண்டையில் ஃப்ரெஞ்சு கடல் படை வென்றது. ஆங்கிலேயர் தங்கள் நாட்டைச் சூறையாடுவதைச் சகிக்காது ஃப்ரெஞ்சுசக்காரர்கள் இழந்த பகுதிகளைச் சிறிது சிறிதாக மீட்கலானர்கள். 1377ஆம் ஆண்டில் மூன்றாவது எட்வர்டு இறந்தபோது, கலே, போர்டோ (Bordeaux) பயோன் (Bayonne), அவற்றின் அருகிலிருந்த கடலோரக் குறுகிய நிலம் மட்டுமே ஆங்கிலேயர் வசமிருந்தன. ஆயினும் வலுமிக்க ஆங்கில மன்னன் மீண்டும் வாரிசுரிமைப் போரைத் தொடர வாய்ப்பிருந்தது.

ஆறும் சார்லஸ் அறிவாற்றலை இழந்தார்; உள்நாட்டுப் போர் மூண்டது. ஐம்பது ஆண்டுகளுக்குப்பின் யார்க்கிஸ்டு (Yorkist) களும், லங்காஸ்டிரியன் (Lancastrian)களும் எவ்வாறு இங்கிலாந்தில் அரசுரிமைக்குப் போட்டியிட்டுப் பொருதினர்களோ அவ்வாறே பர்கண்டியர்களும், ஆர்மெனக்கோமகனை (Duke of Armagnac)ச் சேர்ந்த நிலமானியப் பிரபுக்களும் ஃப்ரெஞ்சு அரச பதவிக்குப் போரிட்டனர். இவ்வுள் நாட்டுப் போர் முற்றுப் பெறுவதற்கு முன்னரே ஆங்கிலேயர் நூற்றாண்டுப் போரினைத் தொடங்கினர்கள்.

மூன்றாவது எட்வர்டின் பெயரன் இரண்டாம் ரிச்சர்டு ஃபிரெஞ்சு மன்னன் மகளை மணந்ததாலும், அவருக்குப்பின் அரசோச்சிய நான்காம் ஹென்றிதான் ஏற்படுத்திய புதிய லங்காஸ்டிரிய வம்சத்தை நிலைநிறுத்துவதில் ஈடுபட்டிருந்ததாலும் இரு நாடுகளுக்கும் இடையில் போர் நிகழவில்லை. 1395-ல் ஏற்பட்ட போர் நிறுத்தம் அடுத்த இருபது ஆண்டுகளுக்கு நீடித்தது. ஃப்ரான்சில் வெற்றி பெற்று லங்காஸ்டிரிய வம்சத்தை இங்கிலாந்தில் வலுப்படுத்துவதற்காகவே மீண்டும் போர் தொடங்கப்பட்டது. அப்போரின் மூன்றாவது கட்டமாக ஐந்தாம் ஹென்றி 1415-ல் ஆழங்கூர் (Agincourt) என்ற களத்தில் பெரும் வெற்றி பெற்றார். இவ்வெற்றி எல்லா வகையிலும் கிரெசி, பாய்ட்டியர்ஸ் வெற்றிகளை மிஞ்சியது. பர்கண்டிக் கோமகன் கொலையுண்டபின், பர்கண்டியர் ஆங்கிலேயருக்கு

ஆதரவு தந்தனர். அவர்கள் உதவியுடன் ஆங்கிலேயர் நார்மண்டியைக் கைப்பற்றினர். 1420-ல் டிராய் (Troyes) ஒப்பந்தம் ஏற்பட்டது. ஐந்தாம் ஹென்றி காதரைன் இளவரசியை மணந்து ஆறும் சார்லசின் பெயரில் நாட்டை ஆட்சி புரிவதென்றும் அவருக்குப் பின் ஃப்ரான்சிற்கு மன்னராவதென்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆனால், 1422-ல் இரு மன்னர்களும் ஒருவர் பின் ஒருவராய் இறந்தனர்.



ஒப்பந்தந்திற்கு மாறாக ஏழாம் சார்லஸ் ஃப்ரெஞ்சு அரியணை ஏறிய போது அந்நாட்டின் நிலை மிக இருண்டிருந்தது. பர்கண்டியர் ஆதரவுடன் ஆங்கிலேயர் ஆதிக்கஞ் செலுத்தினர். வலுவற்றிருந்த ஃப்ரெஞ்சு ஆட்சி ஆங்கில ஆதிக்கத்தின் முடிவைக் காணவிருந்தது, வெற்றி மன்னன் என்ற பட்டத்தையும் சார்லஸ் பெற விருந்தான். நூறுண்டுப் போரில் ஈடுபட்டிருந்த இரு நாடுகளின் நிலை தலை கீழாக மாறியது. ஆங்கில மன்னன் ஆறும் ஹென்றி ஒரு குழந்தை; அக் குழந்தையே ஃப்ரான்சிற்கும் அரசனென்று பாரிசில் அறிவிக்கப்பட்டது. டிராய் ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ள மறுத்த ஃப்ரெஞ்சு பிரபுக்களும், மக்களும் ஏழாம் சார்லஸுக்குத் துணை நின்றனர். நூறுண்டுப் போரில் நான்காவது கட்டம் தொடங்கியது. ஏழாம் சார்லஸ் தலைமைக்குரிய பண்புகள் ஏதுமின்றி இருந்ததால், அவன் படை பல இடங்களில் தோற்று 1428-ல் ஆர்லியன்சு நகரில் ஆங்கிலேயரால் முற்றுகை இடப் பட்டது. அந்நகரம் ஆங்கிலேயர் வசமானல் ஃப்ரான்சின் நடுப் பகுதியும் ஆங்கில ஆதிக்கத்திற்குட் பட்டு விடும். அந்த நெருக்கடி யான நிலையில் எதிர்பாராத வகையில் சார்லசிற்கு ஆதரவு கிடைத்தது.

## கன்னி ஜோன்

தாய் நாட்டின் சுதந்தரத்தைக் காக்க ஒரு நாட்டுப்புறப் பெண் முன் வந்தாள். மலைப் பகுதியில் டாம்ரெமி (Domremy) என்ற சிற்றூரில் ஒரு குடியானக் குடும்பத்தில் ஜோன் பிறந்தாள்; பள்ளிக்குச் செல்ல வாய்ப்பில்லை, தனித்திருந்து கடவுளை வழி படுவதில் காலத்தைக் கழித்தாள். ஒரு நாள் விண்ணில் எழுந்த சில ஒலிகளைக் கேட்டுத் தனக்கு ஒரு தெய்வ ஆணை பிறந்திருப்ப தாகக் கருதினாள். முற்றுகை இடப்பட்டிருந்த ஆர்லியன்சு நகரை விடுவித்து, ஏழாம் சார்லசிற்கு ரீம்ஸில்(Rheims) முடிசூட்டி ஆங்கிலேயரை நாட்டைவிட்டு விரட்டுவதே தெய்வம் தனக் களித்தப் பணியென எண்ணினாள். இதைப் போன்றே பல பெண்கள் தெய்வ ஆணைபெற்று நாட்டிற்கு உதவ முன் வந்ததில் கன்னி ஜோன் ஒருவளே அரசவைக்குச் சென்று அங்கு அரசன் உட்பட எல்லோரையும் நம்பச் செய்து தான் ஏற்ற தெய்வக் கட்டளையை நிறைவேற்றும் அரிய வாய்ப்பைப் பெற்றாள். பதினெட்டாண்டே நிரம்பிய ஜோன் ஆணுடை அணிந்து, ஒரு படையை ஆர்லியன்சை நோக்கி நடத்திச் செல்லத் தொடங் கியதும், அக் காட்சியைக் கண்ட மக்கள் யாவரும் தன்னம்பிக்கை யும் துணிச்சலும் பெற்றார்கள்; எதிரிமுகாமில் அகாரணமான அச்சங்கள் தோன்றின; போரில் ஒரு திருப்பமும் ஏற்பட்டது.

அளவிடமுடியாத ஆக்கமும் ஊக்கமும் பெற்ற ஃப்ரெஞ்சு வீரர்கள், ஆர்லியன்சு நகரை ஆங்கிலேயர் முற்றுகையிலிருந்து விடுவித்தனர். ஆர்லியன்சு நகரை விடுவித்த கன்னி (Maid of orleans) ஜோனின் வீரச் செயலில் அருள் விளையாட்டைக் கண்ட படை, வெற்றிமேல் வெற்றியைக் குவிக்கத் தொடங்கியது. படே (Patay) தோல்வி கண்டது, டிராய் பிடிபட்டது. சார்லசு ரீம்ஸ் நகரத்திலைக் கோயிலில் 1429-ல் முடிசூட்டவும் பெற்றான். ஜோன் ஏற்று வந்த தெய்வீகப் பணி பெரிதளவு நிறைவேறிற்று. இனி ஆங்கிலேயரை நாட்டிலிருந்து துரத்தும் பணி ஒன்றே எஞ்சி இருந்தது. அதனை நிறைவேற்ற முனைந்த ஜோன் பர்கண்டியரால் சிறைப்படுத்தப்பட்டு ஆங்கிலே யருக்கு விற்கப்பட்டாள். சூனியம், சமயக் கருத்திற்கு முரண் படுதல், சமயத் தலைமை எதிர்ப்பு முதலிய குற்றங்கள் சாட்டப் பட்டு நீண்டதோர் நீதி விசாரணைக்குப் பின் ரூவன் நகரில் 1431-ல் எரியூட்டப்பட்டு ஜோன் இறந்தாள். அவள் இளமை, எளிமை, உயர்குறிக்கோள் எதுவுமே அக் கொடிய தண்டனையிலிருந்து அவளைக் காப்பாற்றவில்லை. பாரிஸ் பல்கலைக்கழகமும், பர்கண்டி யர்களின் கருத்தை ஆதரித்து, அவளைச் சூனியக்காரி என்று கருதியது. திருச்சபையும் அவளைப் பற்றி அவ்வாறே எண்ணியது. 1456-ல் ரூவன் நீதிமன்றம் அவளுக்களித்த தீர்ப்பையும் தண்டனை யையும் கண்டித்து ஜோன் குற்றமற்றவள் என போப்பு அறிவித்தார். அண்மைக் காலத்தில் ஜோன் கத்தோலிக்கத் திருச்சபையால் ஒரு திருத்தொண்டராக்கப்பட்டார் (Saint Joan) இவ்வாறு ஜோன் என்ற கன்னிப் பெண்ணின் புகழ்மிக்க வீர வரலாறு காலத்தோடு வளர்ந்துள்ளது.

கன்னி ஜோனால் முடிசூட்டப்பெற்ற ஏழாம் சார்லஸ் ஆங்கி லேயரிடமிருந்து அவளை மீட்க எவ்வித முயற்சியும் செய்யாதது வியப்பிற்கும் வேதனைக்கும் உரியது. ஜோன் இறந்த பிறகும் அவள் காட்டிய துணிச்சல், நாட்டுப்பற்று, ஊட்டிய உற்சாகம் மக்களைத் தூண்டும் மாபெரும் சக்தியாக விளங்கிற்று. ஆதலால் அவள் தொட்ட பணி தொடர்ந்தது. அவள் நாமம் கேட்ட மாத்திரத் தில மக்கள் ஆவேசத்துடன் நாட்டிலிருந்து ஆங்கிலேயரை அகற்றும் பணியில் முனைந்தனர். மக்களின் நாட்டுப் பற்றும் சமயப் போரின் உணர்ச்சியும் நூருண்டுப் போரின் தன்மையை மாற்றின. பர்கண்டியரும் மனம் மாறி 1435-ல் ஆங்கிலேயரை ஆதரிப்பதைக் கைவிட்டனர். ஆர்க்ஜோனின் (Joan of Arc) உயிர்த் தியாகம் நாட்டைப் பகைவரிடமிருந்து மீட்டதோடு ஒன்று படுத்தியது. 1436-ல் பாரிஸ் ஆங்கிலேயரை ஆதரிக்க மறுத்தது.

ஜோன் தோற்றுவித்த சுதந்தர உணர்வினுல் உந்தப்பட்ட ஃப்ரெஞ்சு மக்கள் தாய்நாட்டை மீட்க இடைவிடாது ஆங்கிலேயரோடு போரிட்டு வெற்றியுங் கண்டனர். அவர்கள் புதிதாய் அமைத்துக்கொண்ட துப்பாக்கிப் படையும் அவ்வெற்றிக்குக் காரணமாயிருந்தது. 1453-ல் காஸ்டிலன் சண்டையே நூருண்டுப் போரை முடிவிற்குக் கொண்டு வந்தது. கலே நீங்கலாக நாடு முழுவதும் ஆங்கிலேயர் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டது. நிலமானியப் போராய்த் தொடங்கித் தேசியப் போராய் முடிவுற்றது. தொடக்கத்தில் ஆங்கிலேயர்கள் வியத்தகு வெற்றிகளைப் பெற்ருர்கள்; இறுதியில் ஃப்ரெஞ்சு மக்களே வெற்றியடைந்தார்கள்.

நூருண்டுப் போரில் ஆங்கிலேயர் தோல்விக்குப் பல காரணங்களைச் சொல்லலாம். ஃப்ரெஞ்சுக்காரர் ஒன்றுபட்டு, நாட்டுப் பற்றுடன், அன்னிய ஆதிக்கத்திலிருந்து விடுபட வேண்டுமென்ற ஒரே குறிக்கோளுடன் போரிட்டனர். ஆங்கில விற்படை ஃப்ரெஞ்சு துப்பாக்கிப் படைக்குமுன் நின்று சமாளிக்க முடியவில்லை. ஆங்கில மன்னன் ஆரும் ஹென்றி அறிவாற்றல் இழந்தான். ஆட்சித் திறமும் போர்த் திறமும் ஒருங்கே பெற்ற பெட்ஃபோர்டு (Duke of Bedford) கோமகனுக்குப் பிறகு போரை நடத்த ஆங்கிலத் தலைவன் யாருமில்லை. ஆங்கிலேயர் பர்கண்டியரின் ஆதரவையும் இழந்தனர். உட்பகையால் பிளவுபட்டிருந்த ஆங்கில நிலமானியதார்கள் சில ஆண்டுகளுக்குப்பின் உள்நாட்டுப் போரில் ஈடுபட்டனர்.

மக்கள் உயிருக்கும், பொருளுக்கும் மிகுதியாய்ச் சேதம் விளைவித்தப் போர்களில் நூருண்டுப் போரும் ஒன்று எனலாம். ஃப்ரான்சிற்கு ஏற்பட்ட துன்பமும் அழிவும் கொஞ்சமல்ல. ஆட்சி சீர்குலைந்ததன்றி ஒரு நூற்ருண்டுக்குமேல் நாட்டில் ஒற்றுமை ஏற்பட முடியாமலிருந்தது, அப் போரினுல் நாட்டிற்குச் சில நன்மைகளும் ஏற்பட்டன. நிலமானியப் பிரபுக்கள் பலர் இறந்தனர். எஞ்சியவர்களும் படை வலிமை குன்றி அரசனை எதிர்க்கும் ஆற்றலை இழந்துவிட்டனர். முடியாட்சி வலிமை பெற்றது. நாட்டினப்பற்று வளர்ந்து நாடு ஒன்றுபட்டது. ஆர்லியன்சு ஆணைப்-பத்திரம் (Ordonnancc of orleans) பலமிக்க முடியாட்சிக்கு வழிவகுத்தது, அச் சட்டப்படி நிலத்தின் பேரிலும் இதரச் சொத்தின் பேரிலும் ஃப்ரெஞ்சு மன்னன் டெயில் (Taille) என்னும் வரி விதித்தான். அந்த வருமானத்தைக் கொண்டு மன்னன் ஒரு நிரந்தரப் படையை வைத்துக் கொண்டான். நூருண்டுப் போரில் சிதைவுற்ற முடியாட்சி போர் முடிவில் எல்லா அதிகாரங்களையும் ஒருசேரத் தன்னிடத்தில் வைத்துக்கொண்டு வலிமை மிக்கதாய் வளர்ந்தது.

இங்கிலாந்தில் இதற்கு நேர்மாருன அரசியல் வளர்ச்சியைக் காண்கிருேம். போர் தொடர்ந்தும், நீடித்தும் நிகழந்ததால் பணச் செலவு அதிகரித்தது. அதனைச் சமாளிக்க ஆங்கில மன்னர்கள் அடிக்கடி மக்கள் அவையாய் விளங்கிய பார்லி மெண்டைக் கூட்டி அதிக மானியங்களைப் பெற்றனர். மூன்ரும் எட்வர்டின் பணத் தேவை ஆங்கிலப் பார்லிமெண்டிற்கு ஆட்சிக் குறைகளுக்கு நிறைவு காணவும், உரிமைகளைப் பெற்று தன்னுதிக் கத்தை ஏற்படுத்திக் கொள்ளவும், வாய்ப்பாக இருந்தது. போரின் காரணமாய்ப் போர்ச் செலவு மிகவும், மிகுந்த செலவை ஈடுகட்ட பார்லிமெண்டை அணுகி மன்னர்கள் மானியங்கள் கேட்கவும், மானியங்களை வழங்குமபோது பார்லிமெண்டாதிக்கம் ஏற்படவும், வளரவுமாகப் பார்லிமெண்டரி முறை ஆட்சி அல்லது வரையறுக் கப்பட்ட முடியாட்சி வலுப்பெற்றது. வரிகள் பார்லிமெண்டிள் இசைவுடன் விதிக்கப்பட்டன. ஒரு நிலையான படையும் இங்கிலாந்தில் இல்லை. இங்கிலாந்தில் ஆட்சி மொழி ஃப்ரெஞ்சு மொழியாயிருந்தது மாறி ஆங்கிலம் ஆட்சி மொழியும் இலக்கிய மொழியுமாகியது. போரின் காரணமாய் நெசவுத் தொழிலை ஆங்கிலேயர் மேற்கொண்டனர். ஃப்ரான்சு பின்பற்றிய செலா வணிக் கொள்கைக் காரணமாய் விலையேற்றமும், பணவீக்கமும் ஏற்பட்டு மேற்கு ஐரோப்பிய நாடுகள் துன்புற்றன. இங்கிலாந் தில் குடியானக் கலகம் 1381-ல் ஏற்பட்டது; தலைவரி விதிக்கும் அளவிற்கு நெருக்கடி நிலை உண்டாயிற்று. அச் சூழ்நிலையில்தான் அவிக்னன் போப்புகள் தங்கள் வருமானத்தை அதிகப்படுத்த ஒவ்வொரு திருச்சபை மானியமும் முதலாண்டு விளைவைத் தங்களுக்குத் தரவேண்டுமென கட்டளை பிறப்பித்தனர்.

இங்கிலாந்தில் நிலமானிய முறை சிதையத் தொடங்கியது. நாட்டுப்பற்று வளர்ந்து நாட்டின வளர்ச்சி ஏற்பட்டது. ஃப்ரான்சின் போர்க்களங்களில் சண்டையிட்டுப் பழகிய ஆங்கிலப் பிரபுக்கள் அமைதியை விரும்பவில்லை. ஆரும் ஹென்றியின் ஆட்சியும் அவர்களை அடக்கி ஆள வலிவற்றிருந்தது. ஆதலால் பிரபுக்கள் லங்காஸ்டிரியர்களோடும் யார்க்கிஸ்டுகளோடும் இணைந்து உள்நாட்டுப் போருக்கு ஆக்கமளித்தனர். முப்ப தாண்டுகள் நடைபெற்ற ரோஜாப்பூப் போர்களை (Wars of the Roses) நூருண்டுப் போரின் விளைவாகவும் சிற்றளவில் அதன் தொடர்ச்சியாகவும் கருதலாம். நூருண்டுப் போரில் தோற்ருலும் அதிலிருந்து இறுமாப்புடன் இங்கிலாந்து வெளியேறியது என்றே சொல்ல வேண்டும்.

# அதிகாரம் 19

## பதினான்கு, பதினைந்தாம் நூற்றாண்டுகளில் ஜெர்மனியும், இத்தாலியும் 1300—1499

இங்கிலாந்து, ஃப்ரான்சு, ஸ்பெயின் முதலிய நாடுகளின் வரலாற்றிலிருந்து ஜெர்மானிய வரலாறு மாறுபட்டிருந்தது. அந் நாடுகள் நிலமானியதார்களின் தனி உரிமைகளைக் கட்டுப்படுத்தி ஓர் ஆட்சியின் கீழ் ஒன்று பட்டிருந்தன. ஆனால், ஜெர்மனி நிலமானியதார்களை அடக்கி ஆளாது சிறு சிறு அரசுகளாய்ச் சிதறிக் கிடந்தது. 1268-ல் ஹோ ஹென் ஸ்டாஃபென் பரம்பரை முடிவுற்றதும், பேரரசு வீழ்ந்தது; ஜெர்மன் முடியாட்சியும் சின்ன பின்னமாயிற்று, சில ஆண்டுகள் பேரரசரே இல்லை; திரும்பி ஏற்பட்டப் பேரரசும் பெயரளவிலே ஒடுங்கிவிட்டது. ஃப்ரெடெரிக் பார்பரோசா கனவு கண்ட ஐரோப்பா தழுவிய முடியாட்சியை நிறுவ எந்த ஜெர்மன் மன்னனும் முயலவில்லை.

பேரரசர்-போப்பாட்சிப் போராட்டத்தில் ஜெர்மன் பிரபுக்களில் பலர் வலிமையும் முக்கியத்துவமும் பெற்றனர்- அந் நாட்டின் எதிர்காலம் அவர்கள் கைகளில் இருந்தது . பன்னிரண்டு பிரபுக்களின் குடும்பங்களே ஜெர்மன் அரசியல் வரலாற்றினை உருவாக்கின். அவர்கள் ஆண்ட பகுதிகள் இணைந்து ஐரோப்பிய வரலாறு உருப் பெற்றது.

பேரரசின் வலிமை குறைந்ததற்குக் காரணம் போப்புகளுடன் போராடியது மட்டுமல்ல; ஏழு தேர்வாளர்கள் பேரரசரைத் தேர்ந்தெடுக்கும் முறையும் காரணமாயிருந்தது. அதிகாரத்தை விட்டுக் கொடுத்தே வெறும் பட்டத்தைப் பெற்றார்கள் பேரரசர்கள். ஆற்றல் குறைந்த அரசர்களே தேர்ந் தெடுக்கப்பட்டார்கள். ஜெர்மனியில் பெரும் நிலப் பரப்பினை ஆளும் உரிமை பெறாதவர், செல்வாக்கில்லாதவர், ஃப்ரான்சிற்கும் போப்பாட்சிக்கும் உகந்தவர்—இவர்களையே தேர்வாளர் தெரிந்

தெடுத்தார்கள். பேரரசர் பதவி தகப்பனுக்குப் பின் தனயன் என வழிவழியாய் வராதவாறும் தேர்வாளர்கள் பார்த்துக் கொண்டார்கள்; தேசப் பற்றுள்ள மன்னனை ஜெர்மனி பெறு வதையும் அவர்கள் விரும்பவில்லை. ஜெர்மனியின் எல்லைப்புற மன்னனும் நாட்டிற்குப் புறத்தே ஆதிக்கம் தேடிக் கொள்பவனு யும் இருந்தவர்களையே அவர்கள் தேடிப்பிடித்தார்கள்.

பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்தே பேரரசு வலிமை குன்றி வந்தது. ஐரோப்பாவில் ஹாப்ஸ் பர்க்க் வம்சம் ஆற்றல் மிக்க அரச பரம்பரைகளில் ஒன்றாயிருந்தும், அதனால் பேரரசு வலிமை யடையவில்லை. சமயச்சார்பில்லாத உயர்ந்த பதவியாயிருந்த பேரரசர் பதவி பதினைந்தாம் நூற்றாண்டில் மதிப்பிழந்து வந்தது. ஐரோப்பாவில் மட்டுமன்றி ஜெர்மனியிலும் அதிகாரமிழந்து உயிரற்ற உடலாகவே பேரரசு காட்சி தந்தது.

பத்தொன்பது ஆண்டுகள் பேரரசரே இல்லாமலிருந்து 1273-ல் ஹாப்ஸ்பர்க்க் குடும்பத்தைச் சேர்ந்த ருடால்ஃப் பேரரச ராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார். பொஹீமியா அரசர் ஆட்டோக் கரோடு மார்ச் ஃபீல்டு (March field) என்ற களத்தில் போரிட்டு ஆஸ்டிரியாவைப் பறித்துக்கொண்டு டான்யூப் பள்ளத்தாக்கில் புகழ்மிக்க ஹாப்ஸ்பர்க்க் பரம்பரையை அவர் நிலை நாட்டினார். அவ்வம்சத்தினர் புனித உரோமப் பேரரசின் அரியணையில் சில நூற்றாண்டுகள் வீற்றிருந்தனர்; முதல் உலகப் போர் முடியும் வரையில் ஆஸ்டிரியப் பேரரசர்களாயுமிருந்தார்கள். உரோமப் பேரரசு மெலிந்த நிலையில் மீண்டும் உயிர் பெற்றது; ஜெர்மனி அதன் ஆதிக்கத்தில் இல்லை. அரசியல் ஒற்றுமை இன்மை ஜெர்மன் வாழ்க்கையின் நடைமுறை சிறப்புக் கூறாயிருந்தது; தேசப்பற்று மங்கிக் கிடந்தது. இதற்குக் காரணம் தேர்வாளர் களின் தனனலமே என்று சொல்லலாம்.

தனக்குக் கீழ்ப்படிய மறுத்த பொஹீமியா மன்னன் ஜெர்மன் பகுதியைத் தாக்கியபோது ருடால்ஃப் ஆட்டோக்கரோடு சண்டையிட்டு மார்ச் ஃபீல்டு என்ற இடத்தில் வெற்றி பெற்றார். ஆஸ்டிரியப் பேரரசின் வலிமைக்கு மார்ச் ஃபீல்டு சண்டையே அடிகோலியது. பொஹீமியா ஜெர்மனியோடு இணைவதற்கு திருமண ஒப்பந்தம் வழிவகுத்தது. ருடால்ஃப் ஆட்சியின் வெற்றி அவருடைய வாரிசிற்குப் பேரரசர் பதவி கிடைக்காமல் செய்து விட்டது. இரு நூற்றாண்டுகளுக்குப் பிறகே பேரரசின் மணிமுடி ஹாப்ஸ்பர்க்க் குடும்பத்தின் பரம்பரைச் சொத்தாயிற்று.

1347-ல் பொஹீமியா நாட்டரசர் சார்லஸ் லக் செம்பர்க்க் பேரரசர் ஆனார். 1356-ல் அவரால் பிறப்பிக்கப்பட்ட பொற்

கட்டளை (Golden Bull) ஜெர்மன் மக்களை ஓர் ஆட்சியின்கீழ்க் கொண்டு வர முயற்சிக்கவில்லை. பொஹீமியா, சாக்சனி, ரைன் பகுதி, பிராண்டன்பர்க் ஆகிய நான்கு நாடுகளின் தன்னாட்சி யுரிமைக்கு உறுதிமொழி அளித்து, அமைதிக் கேட்டை சார்லஸ் வளர்த்தார். இனி அந் நாடுகளின் அரசுரிமை மூத்த மகனுக்கே என்று விதித்து, ஓர் அரசன் இறந்தால் அவனுக்குப் பிறகு பிறகு அவ்வரசை அவனுடைய மக்களுக்குள் பிரிவினை செய்யும் ஜெர்மன் வழக்கம் தடைசெய்யப்பட்டது.

ஹாப்ஸ்பர்க் பரம்பரையின் பெருமைக்கும் மேன்மைக்கும் பலவகையிலும் காரணமாயிருந்த நான்காம் சார்லஸ் (1347-78) பேரரசினை ஒன்றுபடுத்தத் தவறிவிட்டார். தந்தை நாடாகிய பொஹீமியாவில் பல வெற்றிகளைக் குவித்தார். பிராக் (Prague) பல்கலைக் கழகத்தை நிறுவி உயர் கல்வியை வளர்த்தார். அறிவு வளர்ச்சியும், தேசிய உணர்ச்சியும் நாட்டில் ஹஸைட் (Hussite) இயக்கம் தோன்றவும், பரவவும் ஏதுவாயிருந்தன. பொஹீமியா, சைலீஷியா, பிராண்டன்பர்க் மொரேவியா, சார்லசிற்குச் சொந்தமான பெல்ஜியப் பகுதி அவருடைய ஆட்சிக்குட்பட்ட நாடுகளாகும். அவர் சந்ததியினர் ஒரு பரந்த அரசை ஆளும் வாய்ப்பைப் பெற்றனர். ஹங்கேரியோடும், ஹாப்ஸ்பர்க் குடும்பத்தோடும் திருமண ஒப்பந்தங்களால் தன்னை சார்லஸ் இணைத்துக்கொண்டார். ஆஸ்டிரிய நாட்டிற்கு அதன் போர்களைக் காட்டிலும் திருமண உறவுகளே அதிக வெற்றிகளை அளித்தன.

சார்லஸ் மறைந்தபின் அவர் பதவிக்கு மூவர் போட்டி யிட்டனர். நான்காம் சார்லசின் இளையமகன் சிஜிஸ்மண்டு (Sigismund 1410-37) தேர்ந்தெடுக்கபபட்டு ஹங்கேரியிலும் பொஹீமியாவிலும் எவ்வித எதிர்ப்புமின்றி ஆட்சி புரிந்தான். கண்டத்திலேயே இவரை மிஞ்சிய ஆற்றல் படைத்த அரசர் யாரு மில்லை. விக்ளிஃபின் சமயக் கொள்கைகளைப் பின்பற்றி ஹஸ் (Huss) தொடங்கிய சமயச் சீர்திருத்த இயக்கம் அவர் காலத்தில் பொஹீமியாவை அலக்கழித்தது. சிஜிஸ்மண்டு திருச்சபையில் ஒற்றுமை காண முயன்றார். பைசா நகரில் கூடிய திருச்சபைப் பேரவை தொடங்கிய சமயப் பணியை வெற்றிகரமாய் முடிக்க கான்ஸ்டன்சில் திருச்சபை அவையைக் கூட்டினார். அவர் விருப்பம் முற்றுப் பெறுமலேயே அவை கூடிக் கலைந்தது.

சிஜிஸ்மண்டின் மருமகனும், ஹாப்ஸ்பர்க் குடும்பத்தைச் சேர்ந்தவருமான இரண்டாம் ஆல்பெர்ட் பேரரசரானார். பேரரசப்

பதவி அவர் காலந்தொட்டு ஹாப்ஸ்பர்க் பரம்பரையிலேயே நிலைத்துவிட்டது. இந்த மரபுவழி அரசுரிமை கூட பேரரசிற்கு வலிமையைத் தரவில்லை. பேரரசிற்கு ஜெர்மனியில் ஆதிக்க மேற்படுத்த ஆஸ்டிரிய அரச வம்சம் மீண்டும் மீண்டும் முயன்றும் வெற்றி காணவில்லை. பேரரசு ஜெர்மனியின் தேசிய அரசாங்கமாயிருந்தது; கண்டத்தில் ஓர் உயர்ந்த சமயச்சார்பில்லாத பட்டமாக விளங்கிற்று.

ஆதலால் பேரரசின் வரலாறு ஜெர்மனியின் உண்மை வரலாறாகாது. தனிநாடுகளின் கட்டற்ற நடவடிக்கையிலே, மக்களின் வளமான வாழ்விலே, பெருநகரங்கள், சங்கங்களின் முன்னேற்றத்திலே வாணிகப் பெருக்கத்திலே, பல்கலைக்கழகங்களின் வளர்ச்சியிலே ஜெர்மன் வரலாற்றைக் காணவேண்டும். ஜெர்மனியின் சின்னஞ்சிறுநாடுகளைப் பேரரசினால் பாதுகாக்க முடியவில்லை. அவை தம்மைக்காத்துக் கொள்ளக் கூட்டரசுகளும் கூட்டுக் குழுக்களும் அமைத்துக்கொண்டன. ஹான்சியாடிக் சங்கமும் (Hanseatic League) ஹெல்வெடிக் கூட்டாட்சியும் (Helvetic Confederation) அவற்றில் முக்கியமானவை. வட ஜெர்மன் எல்லையிலும் ரைன் பள்ளத்தாக்கிலும் இருந்த முக்கிய நகரங்கள் தற்காப்பிற்காக இயற்கையாய் அமைத்ததுதான் ஹான்சியாடிக் சங்கமாகும். பால்டிக் பகுதியிலிருந்த வாணிப நகரங்கள் அதில் இணைந்திருந்தன. வாணிக நிமித்தம் தோன்றிய அச் சங்கம் நூற்றைம்பது ஆண்டுக் காலம் வலிமைபெற்ற அமைப்பாயிருந்தது.

அயல்நாட்டுத் துறைமுகங்கள் பகைமுகாம்களாயிருந்தன; கடல் கொள்ளைக்கூட்டத்தாரின் தொல்லை மற்றோர்பக்கம். தன்னந்தனியே வாணிபப் பொருள்களை எதிரிகளிடமிருந்து காத்துக்கொள்ளும் ஆற்றல் எந்த ஒரு நகரத்திற்குமில்லை. வாணிகம், மீன்பிடித்தல் முதலிய தொழில்களில் ஒன்றுக் கொன்று உதவ லுபெக், ஹாம்பர்க் போன்ற எழுபதிற்கும் அதிகமான நகரங்கள் கூட்டமைப்பு ஏற்படுத்திக்கொண்டன. அவ்வமைப்பால் வாணிகம் பெருகிற்று, ஜெர்மனியின் வடபகுதி வலிமை அடைந்தது. நார்வே, சுவீடன், டென்மார்க் மூன்றும் இணைந்த கூட்டமைப்போடு ஹான்சியாடிக் சங்கம் கடும்போர் செய்தது. பதினைந்தாவது நூற்றுண்டில் மீன்பிடிக்கும் தொழில் குன்றியதும், சங்கத்தின் முக்கியத்துவம் குறைந்தது. ஜெர்மன் பேரரசு வலிவோடிருந்திருந்தால் சங்கத்தின் வரலாறு மாறுபட்டிருக்கும்.

ஹான்சியாடிக் சங்கத்தைவிட நிலையான ஓர் இயக்கம் பேரரசின் ஆற்றல் குறைவின் காரணமாய் ஜெர்மனியின் தென்

பகுதியில் உருப்பெற்றது. அதுவே சுவிஸ் குடியரசை ஈன்றெடுத்த ஹெல்வெடிக் கூட்டாட்சியாகும். பல பிரபுக்களின் ஆதிக்கத்திலிருந்த நகரங்களும் நிலப் பகுதிகளும் சுதந்தர உணர்ச்சியால் உந்தப்பட்டு விடுதலை பெறும் முயற்சியில் ஈடுபட்டன. 1291-ல் மூன்று காட்டுக் கோட்டங்கள் (Forest Cantons) நிரந்தர சங்கம் அமைத்துக்கொண்டு ஆஸ்டிரிய ஹாப்ஸ்பர்க் பரம்பரையை அச்சுறுத்தின. சுவிஸ் மக்கள் வீரத்துடன் தொடர்ந்து போரிட்டு விடுதலை பெற்றார்கள். சுதந்தரம் பெற்ற சுவிஸ் குடியரசு 1648-ஆம் ஆண்டு வரை பேரரசின் பகுதியாயிருந்தது.

ஜெர்மனியின் வடகிழக்கில் பிரஷியாவும் அதற்கு அருகில் போலண்டும் இருந்தன; தென் மேற்கில் சுவாபியன் சங்கம் ஏற்பட்டது. இவ்வாறு பேரரசின் ஆதிக்கத்திலிருந்து பல பகுதிகள் விடுதலை பெற்றன. டியுடானிக் அமைப்பைச் சேர்ந்த வீரத் தொண்டர்கள் (Knights of the Teutonic order) குடியேறியும், சமய மாற்றஞ் செய்தும் பிரஷியாவை வென்ற வரலாற்றிலே ஜெர்மன் வரலாற்றினைக் காணலாம். 1415 ல் ஹோஹென் சோலர்ன் குடும்பத்தைச் சேர்ந்த ஃபிரெடெரிக்கிற்குப் பிராண்டன்பர்க் ஆட்சியுரிமையைத் தந்து பின்னால் பிரஷிய அரசு தோன்றுவதற்குச் சிஜிஸ்மண்டு வழிவகுத்தார்.

ஜெர்மன் நகரங்கள் வாணிகத்தால் வளமடைந்து கலைத் துறையில், தொழில் துறையில், முன்னேற்றமடைந்திருந்தன. நுரெம்பர்க் (Nuremberg) ஆக்ஸ்பர்க் (Augsburg) போன்ற நகரங்களில், உலகில் வேறெங்கும் காணமுடியாத அளவு, செல்வம் கொழித்தது. கொலோன், (Cologne) வியன்னு நகரங்களில் சிறந்த கோயில்களும், அரண்மனைகளும், நகரக் கூடங்களும் கட்டப்பட்டன. நகர மக்கள் தத்தம் நகர மேன்மையைப் பற்றிக் கவலைப்பட்டார்கள்; அதற்காகக் குருதி சிந்தவும் ஆயத்தமாயிருந்தார்கள். ஜெர்மானியர் வெடி மருந்து உற்பத்திக்கும் சிறந்த பீர் வகைக்கும் பெயர் பெற்றவர்களாயிருந்தார்கள். நாட்டுப் பண்ணிலும் சிறந்து விளங்கினார்கள். இலக்கியத் துறையில் முன்னணியில் இல்லாவிடினும், ஜெர்மானியர் அச்சுப் பொறியைக் கண்டுபிடித்து மனித சமுதாயத்திலே புரட்சி செய்தார்கள்.

**இத்தாலி :** அறிவுத் துறையில் எந்த ஐரோப்பிய நாட்டையும் விட மிக முற்போக்குடன் விளங்கிய இத்தாலி·நாடு இடைக்காலத்தில் ஓர் ஆட்சியின்கீழ ஒன்றுபட முடியவில்லை. அந்நாட்டில் வாழ்ந்த பல்வேறு இனங்கள் ஆதிக்கத்திற்காக ஒன்றோடொன்று போரிட்டு வந்தன. அரசியல் பெருமைக்காகப் போப்பும் பேரரசரும்

போட்டியிட்டுப் போரிட்டு வந்ததால், இத்தாலிய நகரங்கள் அந்த நிலையைப் பயன்படுத்திக்கொண்டு பேரரசின் அதிகாரிகளை விலக்கிவிட்டுத் தனியாட்சி அமைத்துக் கொண்டு சுதந்தரமாய் வாழத் தொடங்கின. மீண்டும் அந்நகரங்களைத் தம் ஆதிக்கத்தில் கொண்டுவரப் பேரரசர் முதலாம் ஃப்ரெடெரிக் செய்த முயற்சி போப்பினுலும், லம்பார்டு சங்கத்தினுலும் முறியடிக்கப்பட்டது. நகரங்கள் விரும்பிய சுதந்தர நிலையை லெக்னுனே (Legnano) சண்டை (1176)யும், கான்ஸ்டன்ஸ் உடன்படிக்கை(1183)யும் தந்தன. இரண்டாம் ஃப்ரெடெரிக் இறந்தபின் பேரரசருக்கு இத்தாலியில் எவ்வித அதிகாரமும் இல்லை.

போப்பாட்சியும் நாட்டை ஒன்றுபடுத்தவில்லை. இத்தாலியில் எந்த நாடும் ஏனைய நாடுகளைத் தன்னுதிக்கத்திற்குட்படுத்தி ஓர் ஆட்சியைத் தோற்றுவிக்கும் ஆற்றல் பெற்றிருக்கவில்லை. இத்தாலியில் நிலையாகப் பின்பற்றப்பட்ட கொள்கை யாதெனில் ஏனைய நாடுகளைவிட ஏதாவது ஒரு நாடு வலிமை பெற்ருல், அதனை மற்ற நாடுகளெல்லாம் சேர்ந்து எதிர்ப்பதுவே. ஆதலால், பல நகர நாடுகளையும் மற்றும் சில நாடுகளையும் உடைய இத்தாலி புவியில் ஒரு குறியீடாகவே (Geographical Expression) இருந்தது.

நகரங்கள் ஒன்ருேடொன்று தொடர்ந்து போரிட்ட வண்ணமிருந்தன. வெனிசிற்கும் ஜெனேவாவிற்கும், ஃப்ளாரென்சிற்கும் பைசா (Pisa) விற்கும், இடையில் மரபுப் பகை இருந்து வந்தது. கெல்ஃப், கிப்பெலின்ஸ் என்ற பழைய கட்சிகளின் பெயர்களில் உட்பகை வளர்ந்து நாடுகளைப் பிளவுபடுத்தியது. இப் போர்களில் குடிமக்கள் படைக்குப் பதிலாக ஐரோப்பியக் கூலிப்படையே பயன்பட்டு வந்தது. இப் பழக்கம் நாட்டை அயலார் படையெடுத்து வெல்ல வாய்ப்பளித்தது.

பல்வகைப் போர்களினுல் நாட்டில் குழப்ப நிலை நிலவியது. மக்களிடையே வகுப்பு வேறுபாடுகளிருந்தன. பிரபுக்களும், வணிகச் செல்வரும் அரச அதிகாரத்தைப் பெறப் போட்டியிட்டனர். தொழில் துறைகளில் ஈடுபட்டவர்களின் உரிமைகள் மதிக்கப்படவில்லை. வன்செயல்களால் ஏற்பட்ட அமைதிக் கேட்டிற்கு முடிவுகாண பொடெஸ்டா (Podesta) என்ற சிறப்பு அதிகாரி (Dictator)களைத் தேர்ந்தெடுத்து முழு அதிகாரத்தையும் அவர்களிடம் நகரங்கள் ஒப்படைத்தன. ஆட்சியில் பங்குபெற சமுதாயத்தில் கீழ்மட்டத்திலிருந்தவர்கள் குழுக்கள் (guilds) அமைத்துப் பொடெஸ்டாவிற்குப் போட்டியாகத் தலைவனைத் தேர்ந்து கொண்டு போரிட ஆயத்தமானுர்கள். உயர்மட்டத்

திலிருந்த உரிமையாளர்களைப் பேரரசர் ஆதரித்தார்; ஏனையோர் போப்பின் ஆதரவைப் பெற்றனர். பதின்மூன்றுவது நூற்றுண்டில் நிகழ்ந்த உள்நாட்டுப் போர்கள் நகரக் குடியரசுகளில் வல்லாளர்களை (Tyrants)த் தோற்றுவித்தன.

பதினன்கு, பதினைந்தாம் நூற்றுண்டுகளில் இத்தாலியின் நிலைமை கி. மு. நான்காம் நூற்றுண்டில் கிரேக்க நாட்டு நிலையை ஒத்திருந்தது—நகரங்களுக்குள் கடுமையான போட்டி, குழுச் சண்டை, நிலையான சங்கங்கள் அமைத்துக்கொள்ள இயலாமை, வடக்கிலிருந்து அயலார் படையெடுப்பச்சம், கலையிலும், கருத்திலும், உண்மையிலும், அழகிலும் பெருமைபடத்தக்க ஈடுபாடு—இவையே அந்நாடுகளிடையே நிலவிய ஒத்த நிலைகளாகும். மேலும் இத்தாலியும் கிரீசும் குடிமக்கள் படையைக் கைவிட்டுக் கூலிப் படையைப் பயன்படுத்தினர்கள். கூலிப்படையின் தலைவர்களும் (Condottieri) அவர்களால் பயிற்றுவிக்கப் பெற்ற வீரர்களும் ஐரோப்பாவின் பல்வேறு நாட்டினங்களைச் சேர்ந்தவர்கள். நகரப் பாதுகாப்பு அதன் வாழ்வில் அக்கறை இல்லாத அன்னியர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

இத்தாலிக்கென்று தனி வரலாரொன்றுமில்லை. நகர நாடுகளின் வரலாறுகளே அதன் வரலாருயிருந்தது. 1300-ஆம் ஆண்டளவில் பீடுமாண்ட் (Piedmont) பகுதியில் சவாய்க் கோமகன் ஏனைய நிலமானியதார்களோடு மேலாண்மைக்குப் போரிட்டுக் கொண்டிருந்தான். லம்பார்டி நகரங்களில் வல்லாட்சி நிலவியது; டஸ்கனி நகரங்கள் உள்நாட்டுப் போர்களில் ஈடுபட்டு வல்லாட்சியை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. போப்பின் நாடுகளில் நகரங்கள் போப்பாட்சியிலிருந்து விடுபட முயன்று கொண்டிருந்தன. பதினைந்தாம் நூற்றுண்டில் இத்தாலியைத் தமக்குள் பங்கிட்டுக்கொண்டு ஆளவிருந்த ஐந்து சத்திகள்—வெனிஸ், லம்பார்டு, டஸ்கனி, உரோம், நேபிள்ஸ்—அந்நிலையெய்த ஆயத்தஞ் செய்து கொண்டிருந்தன.

வாணிபம், கலை, இலக்கியம் மூன்று துறைகளிலும் ஏற்பட்ட எழுச்சியினுலும் வளர்ச்சியினுலும் நாகரிக ஏணியில், மற்ற ஐரோப்பிய நாடுகளால் எட்டமுடியாத நிலையில், இத்தாலி இடம் பெற்றது. வாணிபப் பெருக்கமும், போர் மனப்பான்மையும் இணைந்து ஆட்சித் துறையில் வல்லாட்சியை வளர்த்தது. உட்கலகங்களை அடக்கி, தொழிலை வளர்க்கவும், வாணிபத்தைப் பெருக்கவும் உறுதியும் வலிமையும் உள்ள ஆட்சி தேவைப்பட்டது. இலக்கியம், சிற்பம், சித்திரத் துறைகளில் இத்தாலிய எழுத்

தாளர்களும், கலைஞர்களும் மனித வாழ்வில் ஒரு புதிய காலத்தை உருவாக்கினார்கள்.

நேபிள்ஸ். நேபிள்சும் அண்டை நாடாகிய சிசிலியும் இரண்டு நூற்றுண்டுகள் போரிட்டன. ஆஞ்செவின் அரசர்கள் நேபிள்சையும் ஸ்பானிஷ் அரகான் வம்சம் சிசிலியையும் ஆண்டனர். ஹங்கேரியும் நேபிள்சும் திருமண உறவினால் பிணைக் கப்பட்டன. அரகான் வம்சத்தோடு செய்து கொண்ட மண ஒப்பந்தம், சிசிலியையும் நேபிள்சையும் 1435-ல் ஓர் ஆட்சிக்குக் கீழ் கொண்டு வந்தது. அமைதி நிலவியும் நகர நாடு நாகரிகத்தில் பின் தங்கிவிட்டது. கவர்ச்சியான தட்பவெப்ப நிலைக்கும், இயற்கைக் காட்சிகளுக்கும் நேபிள்ஸ் பெயர் பெற்றிருந்தது.

உரோம்: ஃப்ரெஞ்சு எல்லையை ஒட்டிய அவிஃக்னனில் (Avignon) போப்புகள் தங்கி இருந்ததால் உரோம் நகர பிரபுக்கள் இரு கட்சிகளாய்ப் பிரிந்து போரிட்டு நகர அமைதிக்கு ஊறு விளைத்தனர்; மக்களும் கலகஞ் செய்தார்கள். ஒழுங்கும் அமைதியும் ஏற்படுத்த மக்கள் 1347-ல் ரியென்சி (Rienz) என்பவரை உரிமைக் காவலர் (Tribune) ஆக்கினார்கள். போரிட்ட பிரபுக்கள் விரட்டப்பட்டார்கள். பிறகு ரியென்சியும் நாடு கடத்தப்பட்டு, சில ஆண்டுகளுக்குப் பின் ஏற்பட்ட கிளர்ச்சியில் உயிரிழந்தார். 1377-ல் போப்பு உரோம் நகருக்குத் திரும்பி வந்தார். பதினைந்தாம் நூற்றுண்டில் போப்புகள் தங்கள் நாட்டை விரிவாக்கிக்கொண்டார்கள். உரோம் வரலாறும் போப்பாட்சியின் வரலாறும் ஒன்றுகிவிட்டது.

ஃப்ளாரென்ஸ்: இதன் வரலாறு, மற்ற நகரங்களின் வரலாற்றினைவிட பலரும் மிக நன்ருய் அறிந்த ஒன்ருகும். ஃப்ளாரென்ஸ் இத்தாலியின் ஆன்மீகத் தலைநகரம்; தாந்தேயின் பிறப்பிடம்; நெசவு, வங்கித் தொழில்களுக்கும், வாணிகத்திற்கும் புகழ் பெற்ற நகரம். வங்கித் தொழில் பல நாட்டரசாங்கங்களோடு தொடர்பு ஏற்படுத்தியது. தொடக்கத்தில் நிலமானியதார்கள் இந் நகரத்தை ஆண்டார்கள்.

அவர்களை எதிர்த்து வணிகரும் கம்மியரும் போராடி 1282-ல் வெற்றி பெற்றதன் பயனுகத் தொழிலதுறைத் தலைவர்கள் ஆட்சி நடுவர்களானார்கள். பிரபுக்களும் எளியவர்களும் இவ் வாட்சியை விரும்பாததால் நீடிக்கவிடவில்லை. பணக்காரத் தொழில் சங்கத் தலைவர்கள் அரசோச்சியதால், மக்கள் கிளர்ச்சி ஒடுக்கப்பட்டது. பிறப்பாலும் செல்வத்தாலும் மேம்பட்டோர்

கிலர் ஆட்சிப்பீட மேறினார்கள். முதலில் அல்பீசி (Albizzi) குடும்பம் ஐம்பது (1382-1434) ஆண்டுகளுக்கு மேல் திறமையுடன் ஆண்டனர். பிறகு மெடிசி (Medici) குடும்பத்தார் போட்டியிட்டு ஆதிக்கத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள். அவர்கள் ஏறக்குறைய இரு நூற்றாண்டுகள் ஆட்சி செய்தார்கள். மெடிசி குடும்பத்தார் வங்கித் தொழிலதிபர்கள். அயல்நாடுகளில் அவர்களுடைய செல்வாக்கு, அறிவு ஆட்சித் திறம், செல்வச் செழிப்பு ஆகியவை ஆதிக்கப்போட்டியில் அவர்களுக்கு வெற்றி தந்தன. காசிமோ—டி—மெடிசி (Cosimo de Medici)யும் அவருடைய பெயரர் லொரென் சோவும் சிறந்த முறையில் ஆட்சிப் புரிந்தனர். உரோமாபுரியில் அகஸ்டஸ் சீசர் ஆண்டதைப் போல், காசிமோ நகருக்குத் தேவையான அமைதி, ஒழுங்கு, பாதுகாப்பு மூன்றையும், அளித்தார்; இலக்கியத்தையும் கலைகளையும் ஊக்குவித்தார். சிறப்புமிக்க லொரென்சோ (Lorenzo the Magnificent, 1469—92) குடியாட்சி நிறுவனங்களை நீக்கிவிட்டு எழுபது உறுப்பினர்கள் கொண்ட அரசவை (privy Council) உதவியுடன் ஆட்சிப் புரிந்தார். அருகிலிருந்த சிறு நாடுகளை வென்று டஸ்கனி முழுவதையும் தன்னாதிக்கத்திற்குட்படுத்தினார்.

**மிலான்;** ஆல்ப்ஸ் மலையைக் கடந்து செல்லும் வாணிபப் பாதையில் அமைந்து, உழவுத் தொழில், போர்க் கருவி செய்யும் தொழில் இரண்டிலும் தலைசிறந்து விளங்கியதோடு, ஈடு இணையில்லாக் குதிரைகளுக்கும், பட்டாடைகளுக்கும் பெயர் பெற்றிருந்தது. ஆட்சியில் அமர்ந்திருந்த விஸ்காண்டி (Visconti) குடும்பம் தன் நாட்டை விரிவாக்கும் திட்டத்தை மேற்கொண்டது. 1350-ஆம் ஆண்டிறகுள் லம்பார்டி முழுவதும் அதன் அதிகாரத்திற்குட்பட்டுவிட்டது. தெற்கில் ஃப்ளாரன்சின் எல்லையையும் மிலான் எட்டியது. விஸ்காண்டி குடும்பம் பெண்களை மணஞ்செய்து கொடுப்பதன் வாயிலாக ஐந்து அரச வமசங்களோடு உறவு ஏற்படுத்திக் கொண்டது. அக் குடும்பத்தில் தலைசிறந்த கியான் கலீசோ விஸ்காண்டி (Gian Galeazzo Visconti, 1378-1402) இத்தாலியின் சுதந்தரத்தைக் காக்க வட இத்தாலியில் ஒரு வலிமை பெற்ற அரசு தேவையென உணர்ந்து ஒன்றை ஏற்படுத்த முயன்றார். அதற்குப் போப்பாட்சியில் இருந்த நிலையையும் உள்நாட்டுப்பகையினால் நேபிள்ஸ் வலிவிழந்திருந்த அரசியல் வாய்ப்பையும் பயன்படுத்திக்கொண்டார். வெனிசும், ஃப்ளாரென்சும் அவருடைய படைத்தாக்குதலகளுக்கு ஆளாகி அதன் வெற்றிகளைக் கண்டு அஞ்சின. கியான் பேவியா பல்கலைக்கழகத்தின் புரவலராயிருந்தார்; அரண்மனைகள், கோட்டைகள், பாலங்கள் கட்டி ஆக்க வேலையிலும் சிறந்து விளங்கினார்.

அவருக்குப்பின் அரை நூற்றாண்டு வரலாறு மிலான் செய்த போர்களும் வெனிசும் ஃப்ளாரென்சும் அப் போர்களில் தம்மைக் காத்துக்கொண்ட நிகழ்ச்சிகளுமே. அவ்விரண்டு நாடுகளும் தம் வலிமையாலும் செல்வத்தாலும் மிலான் நிறுவ விழைந்த வலிய அரசு ஏற்படாதவாறு தடுத்துவிட்டன. இம் மூன்று நாடுகளும் தங்களுக்குள் போரிட்டு வீணாக்கிய காலத்தையும் ஆற்றலையும் துருக்கியர் திசையில் திருப்பியிருந்தால், ஐரோப்பாவை அவர்களிடமிருந்து காப்பாற்றியிருக்கலாம்.

1447-ல் விஸ்காண்டி குடும்பம் வாரிசற்றுப்போனதும் கூலிப்படைத் தலைவர்கள் லம்பார்டியைக் கைப்பற்றிக் கொண்டார்கள். வெனிசின் மேல் படையெடுத்துச் சென்று வெற்றி பெற்ற ஃப்ரான்செஸ்கோ ஸ்ஃபோர்சா (Francesco Sforza) தன்னைக் கோமகனாய் ஏற்றுக்கொள்ளுமாறு மிலான் மக்களை வற்புறுத்தி வெற்றியும் அடைந்தான். மிலானை ஆண்ட இரு குடும்பங்களின் வரலாறும் குற்றமும் கொடுமையும் நிறைந்த ஒன்றாகும்.

ஜெனோவா: வாணிகத்தால் வளர்ந்த இத்தாலிய நகரங்களில் ஜெனோவா ஒன்றாகும். 1261-ல் கான்ஸ்டாண்டிநோபிளைத் திரும்பப்பெற, கிரேக்கப் பேரரசருக்கு உதவி செய்து, அதன் பரிசாகக் கருங்கடல் வாணிபத்தில் ஜெனோவா தனியுரிமை பெற்றது. ஜெனோவாவோடு கடல் வாணிகத்தில் போட்டியிட்ட பைசா நகரம் 1284-ல் மெலோரியா கடல் சண்டையில் தோல்வியடைந்தது. வெனிசும் ஜெனோவாவும் போட்டி காரணமாய் இருநூறாண்டுகளுக்கு மேல் போரிட்டன. இறுதியில் வெற்றி பெற்றது வெனிசு; ஜெனோவா நலிவுற்றது.

**வெனிஸ்:** உப்பங்கழிகள் (Lagoons) சூழ்ந்த நகரமாகிய வெனிஸ் அவ்வுப்பங்கழி அரண்களைப் பயன்படுத்தி, ஏடிரியாடிக் கடல் பகுதியில் ஆதிக்கம் பெற்ற அரசுகளின் தாக்குதல்களுக்கு, ஈடுகொடுத்து வந்தது. சுற்றுத் தீவுகளிலிருந்த மக்களைத் தன் ஆதிக்கத்திற்குட்படுத்தி, வாணிபத்தில் முன்னேறுவதற்கேற்ற ஓர் உறுதியான பிரபுக்கள் ஆட்சியை அந் நகரம் நிறுவிக்கொண்டது. கி.பி. 697ஆம் ஆண்டிலிருந்து கோமகன் (Doge) வெனிசை ஆண்டு வந்தான். பன்னிரண்டாம் நூற்றாண்டினிறுதியில் 480 உறுப்பினர்கள் கொண்ட பேரவை கோமகனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெற்றது. ஆறே உறுப்பினர்களாலாகிய குழுவொன்று அவருக்கு ஆட்சியில் துணை செய்தது. அறுபதின்மர் அவை முக்கிய பிரச்சினைகளைப் பற்றி தன் கருத்தைத் தெரிவித்தது. 1297-ல் பேரவை உறுப்பினர்கள். மரபுரிமை பெற்று ஒரு சிலர்

ஆட்சி உறுதிப்பட்டது. மக்கள் கிளர்ச்சிகளை அடக்கக் கட்டற்ற அதிகாரத்தோடு பதின்மர் குழு நிறுவப்பட்டது. அக் குழுவின் கொலைகாரச் செயல்கள் வெனிசுக்கு, வேறெந்த நகர நாடும் காணுத உறுதியான, நீடித்த ஆட்சியை வழங்கின. கீழை நண்ணிலக் கடலில் இருந்த தீவுகளைக் கைப்பற்றிக்கொண்டு, பால்கன் தீவக்குறையின் தலைநிலத்தில் (Main land) கணிசமான நிலத்தையும் வெனிசு தன்னரசில் இணைத்துக் கொண்டது. இத்தாலியப் பெரு நிலப் பகுதியில் தன்னுதிக்கத்தை விரிவுபடுத்தியபோது வெனிசு மிலாஞேடு மோத வேண்டியதாயிற்று.

1172-ல் மக்களுக்குப் பதிலாகப் பிரபுக்களே பேரவையில் தேர்வாளர்களாகி கோமகனைத் தேர்ந்தெடுத்து அவனிடம் ஆட்சியைப் பெயரளவிலே ஒப்படைத்தார்கள். முஸ்லிம் ஆதிக்கத்திலிருந்த எகிப்தைத் தாக்க விரும்பிய நான்காம் சிலுவைப் போர் வீரர்களைத் திசை திருப்பிவிட்டு 1204-ல் கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்ற வெனிஸ் பெரிதும் உதவிற்று. அதன் பிறகு கீழை நாடுகளோடு வாணிபஞ் செய்து பெரும் பொருளை ஈட்டிற்று. செல்வ வளம் பெருகியதும் சில முக்கியமான பணக்காரக் குடும்பங்கள். ஆட்சியிலிருந்து மக்களை நீக்கிவிட்டு, அதிகாரத்தைக் கைப்பற்றின. 1297-ல் பேரவையில் 'உறுப்பினராகும் உரிமையுடைய குடும்பங்களின் பட்டியல் தயாரிக்கப்பட்டு, அப் பட்டியலில் புதிதாய் எப் பெயரையும் சேர்க்கக் கூடாது எனத் தடையும் விதிக்கப்பட்டது. இதனைப் பேரவை வாயில் அடைப்பு (Closing of the Great Council) எனக் கூறிஞர்கள். கோமகனைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு பட்டியலில் சேர்க்கப்பட்ட 1212 குடிகளிடம் ஒப்படைக்கப்பட்டது; அவர்களே ஆட்சியில் அதிகாரிகளாயிருக்கும் உரிமையும் பெற்றவர்கள். தங்கள் உரிமைகளைத் திரும்பப்பெற மக்கள் செய்த கிளர்ச்சி அடக்கப்பட்டு, பதின்மர் குழு அமர்த்தப்பட்டது. நாட்டுப் பகைவர்களை இரகசியமாகவும், விரைந்தும் தாக்கி அவர்களை ஒடுக்குவதே அக் குழுவின் பணித் திட்டமாயிருந்தது. ஆண்டுதோறும் அமர்த்தப்பட்ட அக் குழு வெனிசில் ஆட்சிப் பொறுப்பையேற்று நடத்தியது.

1380-ல் வாணிகத்துறையில் போட்டியிட்ட ஜெனேவாவை வெனிஸ் சியோக்கியாப் போர்க்களத்தில் தோற்கடித்தது. பாடுவா (Padua), வெரோனு போன்ற இடங்களைக் கைப்பற்றி இத்தாலியத் தலைநிலத்தில் தன்னுதிக்கத்திலிருந்த நிலப்பரப்பை விரிவாக்கியதும் வெனிசுக்கும் மிலானுக்கும் போர் ஏற்பட்டது. 1453-ல் கான்ஸ்டாண்டிநோபிள் துருக்கியர் வசமான நிகழ்ச்சி வெனிஸ் அரசிற்கு நண்ணிலக்கடலின் கிழக்குப் பகுதியில் சாவுமணி

அடித்தது. தன் வாணிப வளர்ச்சி ஒன்றை மட்டும் கருதித் தன்னோடு வாணிப உறவு கொண்டிருந்த எகிப்தைத் தாக்க நினைத்த நான்காம் சிலுவைப்போர் வீரர்களைக் கான்ஸ்டாண்டிநோபிளைத் தாக்க உதவிய வெனிஸ் கிறித்துவச் சத்திக்கு ஊறு விளைத்து துருக்கியரை ஊக்குவித்துத் தனக்கே கேட்டைத் தேடிக் கொண்டது.

வெனிஷிய ஆட்சிப்போக்கு வாணிகத்தால் உருவாக்கப் பட்டது. ஜெனோவாவுடன் நிகழ்ந்த நீண்ட போர் சந்தைகளுக்காகத்தான். ஐரோப்பிய வாணிகப் பொருள்களில் பெரும்பகுதி வெனிஷியக் கலங்களிலேதான் ஏற்றப்பட்டது. வெனிசில் அரசோச்சியவர்கள் மக்கள் அன்பையும் ஆதரவையும் ஒருங்கே பெற்று மக்களுக்கு நல்வாழ்வையும் ஆட்சிக்கு உறுதியையும் ஒழுங்கை (order)யும் அளிக்கத் தவறவில்லை. ஒற்றர்கள் நாடெங்கும் உலவி மக்கள் நிலையை அறிந்து எதிர்பாராத நிகழ்ச்சி ஏதும் நடைபெறுதவாறு பார்த்துக்கொண்டார்கள். ஏழைகள் வரிச் சுமையால் துன்புறவில்லை; மக்களுக்குப் பொழுதுபோக்குக் காட்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டன; மக்கள் திறமையைக் காட்ட ஒரு நாடக அரங்கும் வெனிசில் இருந்தது. குறைந்த செலவில் நீதியைப் பெற்ற மக்கள் மனநிறைவோடு வாழ்ந்தார்கள்.

# அதிகாரம் 20

## சுவிஸ் குடியரசின் தோற்றமும் வளர்ச்சியும் 1291—1499

கரோலிங்கியப் பேரரசிலும், பிறகு ஹோஹன் ஸ்டாஃபென் அரசிலும், ஜெர்மன் பகுதியாயிருந்த தென் சுவாபியா (Suabia)வில் வாழ்ந்துவந்தவர்களே சுவிஸ் மக்களாவார்கள். ருடால்ஃப் (Rudolf) என்ற சுவிஸ் பிரபு தோற்றுவித்த, புகழ்மிக்க ஹாப்ஸ் பர்க் அரச குடும்பம் செய்த தவறுகளின் காரணமாய், ஜெர்மன் அரசிலிருந்து பிரிந்த நாடுகளில் ஒன்றுதான் சுவிட்ஜர்லாந்தாகும். மலைவாசிகளாகிய உழவர்கள், இடையர்கள், காடுவாழ்வோர் டியுடானிய மரபுகளையும், அமைப்புகளையும் போற்றி வந்தனர், நிலமானியக் கட்டுப்பாடுகளில் வாழ விரும்பவில்லை. பதின் மூன்றுவது நூற்றுண்டில் லூசெர்ன் (Lucerne) ஏரியைச் சுற்றி யிருந்த ஆற்றுப்படுகைகளில் (Valleys) வசித்த உழவர்கள் நிலமானியதாரின் ஆதிக்கத்தை உதறிவிட்டுத் தங்கள் நாட்டைத் தங்கள் விருப்பப்படி ஆளுவதென முடிவு செய்தனர். இம் முயற்சியில் குறுக்கிட்ட ஹாப்ஸ்பர்க் பிரபுக்களோடு அவர்கள் போரிட நேரிட்டது. சுவிஸ் மக்கள், மேல் மானியதார்களின் கொடுங்கோன்மையிலிருந்து விடுபட விரும்பினுர்களேயன்றிப் பேரரசின் மேலாண்மையிலிருந்து விலக நினைக்கவில்லை.

கி.பி. 1245-ல் லூசெர்னுக்கு அருகில் இருந்த கோட்டையைச் சுவிஸ் மக்கள் எரித்துத் தங்கள் உரிமைப் போராட்டத்தைத் தொடங்கினுர்கள். பேரரசின் கொடுங்கோல் ஆட்சியாளர் களோடும், உள்ளூர் நிலமானியதார்களோடும் போராடிய ஆல்ப்ஸ் பள்ளத்தாக்கு வாசிகள் 1291-ல் சிறு சிறு குடியரசுகளை அமைத்துக்கொண்டு சுவிட்ஜர்லாந்து நாட்டிற்கு அடிகோலி னுர்கள். ஊரி (Uri), சுவிஸ் (Schwyz) என்ற இரு காட்டுக் கோட்டங்களும் ஹாப்ஸ்பர்க் கோமகன்களின் ஆதிக்கத்தி

விருந்து விடுதலை பெற்றதன் அடையாளமாய்ப் பேரரசர் இரண்டாம் ஃப்ரெடெரிக் (1212–1250) கிடமிருந்து உரிமைப் பட்டயம் பெற்றன. இவ்விரு கோட்டங்களும் அண்டர்வால்டென் (Unter walden) என்ற மூன்றாவது கோட்டமும் இணைந்து தம்முரிமையைக் காத்துக்கொள்ள 1291–ல் ஒரு கூட்டுக் கழகம் (Confederacy) அமைத்துக்கொண்டன.

அயல்நாடுகளில் சுவிஸ் மக்கள் ஊடுருவியதால் அவர்கள்மீது லெப்போல்டு மன்னன் படையெடுத்துச் சென்றான். சுவிஸ் கூட்டுக் கழகக் கோட்டங்கள் 1315–ல் மார்கார்டன் (Morgarten) போர்க் களத்தில் கோல்களையும் கோடரிகளையும் கொண்டே ஆஸ்டிரியப் படையைத் தாக்கி அழித்துவிட்டன. இவ் வெற்றிக்குப்பின், மேலும் பல கோட்டங்கள் (Cantons) கூட்டு ஆட்சியில் இணைந்தன. பதினான்காவது நூற்றாண்டின் இடைப்பகுதியில் சூரிச் (Zurich), பெர்ன் (Berne) முதலிய கோட்டங்களும் சேர்ந்து சுவிஸ் கூட்டாட்சியை வலுப்படுத்தின. 1386-ல் நிகழ்ந்த சுதந்தரச் சண்டையில், செம்பாச் (Sempach) என்னுமிடத்தில் விங்கல் ரீடைச் சேர்ந்த ஆர்னல்டு (Arnold of Winkelried) பகைவர்களைத் தாக்கி எண்ணற்ற எதிரி ஈட்டிகளைத் தம் மார்பகத்தில் ஏந்தி வீரச் செயல் புரிந்தார். அச் சண்டையோடு அரச ஆதிக்கத்திலிருந்தும் கூட்டாட்சி விடுதலை பெற்றது. வில்லியம் டெல் (Tell) என்பவரின் வீரக் கதை இச் சுதந்தரப் போராட்டத்தின் பகுதியேயாகும். 1388–ல் நடந்த நாஃபெல்ஸ் (Nafels) சண்டையில் மீண்டும் சுவிஸ் கோட்டங்கள் வீர காவியம் படைத்தன; அதன்பின், ஃப்ரெஞ்சு மக்களோடு போரிட்டுப் பர்கண்டியர்களைத் தோற்கடித்து ஜெர்மானிய அரசில் வீரத்திற்கு இருப்பிடமாய்த் திகழ்ந்தன.

உரோம, இத்தாலிய, ஃப்ரெஞ்சு மொழிகள் பேசிய கோட்டங்கள் கூட்டுக் குழுவில் இணைந்தன. ஆல்ப்ஸ் ஆற்றுப்படுகைக் குடியரசுகளுக்குப் பேரரசின் அரசியல் அமைப்பில் ஒளிபொருந்திய வரலாற்றிற்கு இடமில்லை. வலிவுமிக்க சுவிஸ் கூட்டுக் குழுவிற்கு நாட்டாட்சியில் பங்கில்லை. சுவிஸ் மக்களின் வீரத்தை ஜெர்மன் அரசியலறிஞர்கள் புறக்கணித்தார்கள். 1495-ல் பேரரசின் ஆட்சியமைப்பைச் செம்மைப்படுத்தச் செய்த முயற்சியிலும் சுவிஸ் மக்களுக்கு வாய்ப்பளிக்கப்படவில்லை. தங்கள் இசைவைப் பெறாத வரியைக் கொடுக்கவோ, தாங்கள் ஏற்காத ஒரு தலைவன்கீழ் வாழவோ, அவர்கள் விரும்பவில்லை. 1499-ல் நிகழ்ந்த சுவாபியப் போரில் அவர்கள் தொடர்ந்து வெற்றி பெற்றனர். அதுவே அவர்களின் சுதந்தரப் போர் எனலாம். மூன்று காட்டுக் கோட்டங்கள் 1291-ல் கூட்டுக்குழு அமைப்பில் தொடங்கி, 1499-ல்

ஏற்பட்ட பேசெல் (Basel) உடன்படிக்கையோடு அவர்களின் உரிமைப் போராட்டம் முடிவுற்றது.

அரசியலில் சுதந்தர வேட்கை, மொழி, இனம், சமயம் மூன்றிலும் மாறுபட்ட மக்களை இணைக்கும் சத்தியாய் இருந்தது. ஸ்விஸ் மக்களின் விடுதலை கணிசமான நிலப்பரப்பில் குடியாட்சிக் கோட்பாடு பெற்ற முதல் வெற்றியாகும். அரசியல் சுதந்தர எண்ணத்தை மறந்திருந்த ஐரோப்பியக் கண்டத்திற்கு அக் கருத்தைத் திரும்ப அளித்தவர்கள் சுவிஸ் மக்களே. அவர் களிடமிருந்து எல்லா ஐரோப்பியப் படைகளும் பல பாடங்களைக் கற்றன. ஆஸ்டிரிய நாட்டை உருவாக்கிய ஹாப்ஸ்பர்க் அரச வம்சமே சுவிட்ஜர்லாந்தையும் உருவாக்கியது. ஜெர்மானியர் நிலையிலிருந்து நோக்கினால் அவ்வரச பரம்பரையினரே சுவிட்ஜர் லாந்தை இழக்கக் காரணமாயிருந்தார்கள். ஆஸ்டிரிய வம்சத்தின் நிலையான எதிர்ப்போடும், பழிவாங்கும் மனப்பான்மையோடும் போரிட்டுச் சுவிஸ் குடியாட்சிக் கரு வளரவேண்டியிருந்தது. பேரரசின் பல கொடுங்கோல் ஆட்சிகளிலிருந்து வெளியேறிய சுதந்தரப் போராட்டக்காரர்களுக்குப் பிற்காலத்தில் சுவிஸ் பட்டணங்கள் புகலிடமாயிருந்தன.

சுவிஸ் குடியரசு மக்களாட்சி முறைகளின் சோதனைக் கூட மாயும், அமைதிக்கு இருப்பிடமாயும் வளரலாயிற்று. அகில உலக அருளிரக்க மனிதப் பண்பிற்கு அடையாளமாய் ஜெனீவா செஞ்சிலுவைக் கொடி உள்ளது.

# சிறப்பு நிகழ்ச்சிகள்

| | |
|---|---|
| கி.பி. 306–337 | பேரரசர் கான்ஸ்டன்டைன். |
| ,, 330 | கான்ஸ்டாண்டிநோபிள் கால்கோள் இடல். |
| ,, 378–395 | பேரரசர் முதலாம் தியோடோஷியஸ். |
| ,, 410 | உரோம் நகரை அலாரிக் கைப்பற்றுதல். |
| ,, 476 | மேற்கில் உரோமப் பேரரசின் முடிவு. |
| ,, 481 | குளோவிஸ் ஃப்ராங்குகளின் மன்னன். |
| ,, 496 | குளோவிஸ் கிறித்தவராதல். |
| ,, 489–526 | தியோடரிக்கு இத்தாலிய மன்னன். |
| ,, 527–595 | பேரரசர் ஜஸ்டினியன். |
| ,, 529 | துறவியர் பெனிடிக்டு மான்டிகாசினோவில் மடம் நிறுவுதல். |
| ,, 568 | இத்தாலியின் வடபகுதியை லம்பார்டுகள் பிடித்தல். |
| ,, 570 | நபிநாயகம் மகம்மது பிறப்பு. |
| ,, 590–604 | பெரியார் (போப்பு) கிரெகரி. |
| ,, 597 | அகஸ்டின் இங்கிலாந்து வருகை. |
| ,, 614 | பாரசீகர் ஜெருசலத்தைக் கைப்பற்றுதல். |
| ,, 622 | மகம்மது மெக்காவிலிருந்து வெளியேறுதல்—ஹெஜிரா—முஸ்லிம் ஊழித் தொடக்கம். |
| ,, 637 | சசனீடு பரம்பரை வீழ்ச்சி. |
| ,, 664 | விட்பி (திருச்சபை) அவை முடிவு. |
| ,, 732 | டூர்ஸ் சண்டையில் ஃப்ராங்குகளின் வெற்றி—சாரசேனியர்களின் தோல்வி. |
| ,, 714–741 | சார்லஸ் மார்டெல். |
| ,, 756 | பெப்பின் கொடை—போப்பின் நாடுகள் தோன்றின. |
| ,, 768–814 | ஷார்லேமேன். |
| ,, 786–809 | ஹரூன்-அல்-ராஷிது, பாக்தாது காலிஃப். |

| | |
|---|---|
| கி.பி. 800 | ஷார்லேமேன் பேரரசராய் உரோம் நகரில் முடி சூட்டப்பெறுதல்—தூய உரோமப் பேரரசு தொடக்கம். |
| ,, 866 | பைசான்டியத் திருச்சபை' உரோம் திருச்சபையிலிருந்து விலகிப் போதல். |
| ,, 911 | குளூனி மடம் நிறுவப்படுதல். |
| ,, 916–936 | ஹென்றி ஃபௌலர். |
| ,, 936–973 | முதலாம் ஆட்டோ. |
| ,, 973–983 | இரண்டாம் ஆட்டோ. |
| ,, 983–1002 | மூன்றும் ஆட்டோ. |
| ,, 987–1328 | (ஃப்ரான்சில்) காபேஷிய மன்னர்கள். |
| ,, 1002–1024 | இரண்டாம் ஹென்றி. |
| ,, 1039–1056 | மூன்றும் ஹென்றி. |
| ,, 1056–1106 | பேரரசர் நான்காம் ஹென்றி. |
| ,, 1073–1085 | ஹில்டிபிராண்டு—போப்பு ஏழாம் கிரெகரி. |
| ,, 1077 | நான்காம் ஹென்றியின் கனோசாக் கழிவிரக்கம். |
| ,, 1079–1142 | அபெலார்டு. |
| ,, 1096–1099 | முதற் சிலுவைப் போர். |
| ,, 1106–1122 | ஐந்தாம் ஹென்றி. |
| ,, 1108–1137 | ஆரும் லூயி. |
| ,, 1118 | வீரத் திருத்தொண்டர்கள் நிறுவனம். |
| ,, 1122 | வெர்ம்ஸ் ஒப்பந்தம். |
| ,, 1147–1149 | இரண்டாம் சிலுவைப் போர். |
| ,, 1137–1180 | ஏழாம் லூயி. |
| ,, 1137–1268 | ஹோஹென் ஸ்டாஃபென் பரம்பரை. |
| ,, 1152–1190 | ஃபிரெடெரிக்கு பார்பரோசா. |
| ,, 1172 | சலாடின் சுல்தான் ஆனர். |
| ,, 1189–1192 | மூன்றும் சிலுவைப் போர். |
| ,, 1190–1197 | ஆரும் ஹென்றி. |
| ,, 1183 | கான்ஸ்டன்ஸ் உடன்படிக்கை. |
| ,, 1187 | ஜெருசலத்தின் வீழ்ச்சி. |
| ,, 1198–1216 | போப்பு மூன்றும் இன்னொசன்டு. |
| ,, 1200 | பாரிஸ், ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகங்கள் நிறுவப்படுதல். |
| ,, 1202–1204 | நான்காம் சிலுவைப் போர். |
| ,, 1215–1250 | இரண்டாம் ஃபிரெடெரிக்கு. |
| ,, 1214 | பொவைன் சண்டை. |

கி.பி. 1215 பேருரிமைப் பத்திரம்.
,, 1226–1270 ஒன்பதாம் லூயி (தூய லூயி).
,, 1265 சைமன் பார்லிமெண்டு.
,, 1285–1314 நான்காம் ஃபிலிப்பு.
,, 1295 மாதிரிப் பார்லிமெண்டு.
,, 1300 தாந்தேயின் தெய்வீக இன்பியல் நாடகம்.
,, 1309–1377 அவிக்னனில் போப்புகளின் சிறைவாசம்.
,, 1320–1384 விக்ளிஃப்.
,, 1337–1453 நூறுண்டுப் போர்.
,, 1340 ஸ்லூயிஸ் கடல் சண்டை.
,, 1346 கிரெசிச் சண்டை.
,, 1348 கருங்கொள்ளை நோய்.
,, 1356 பாய்ட்டியர்ஸ் சண்டை பொற்கட்டளை (Golden Bull).
,, 1347–1378 பேரரசர் நான்காம் சார்லஸ்.
,, 1360 பிரெடிக்னி உடன்படிக்கை.
,, 1377 போப்பு உரோம் நகர் திரும்புதல்.
,, 1373–1415 ஜான் ஹஸ்.
,, 1378–1417 போப்பாட்சியில் உட்பிளவு.
,, 1381 குடியானவர்கள் கலகம்.
,, 1410–1437 பேரரசர் சிஜிஸ்மண்டு.
,, 1415 ஆழங்கூர் சண்டை.
,, 1420 டிராய் ஒப்பந்தம்.
,, 1428 ஆர்லியன்ஸ் முற்றுகை.
,, 1429 ஏழாம் சார்லஸ் ரீம்சில் முடிசூட்டப்பெறுதல்.
,, 1431 கன்னி ஜோன் எரிக்கப்படுதல், பேசல் பேரவை.
,, 1453 கான்ஸ்டாண்டிநோபிளைத் துருக்கியர் கைப்பற்றுதல்.
,, 1469–1492 சிறப்புமிக்க லொரென்சோ.
,, 1499 சுவாபியப் போர்—பேசல் உடன்படிக்கை.

# மேற்கோள் நூற்பட்டியல்


## (அ) படித்தற்குரியவை

1. A. J. Grant : A History of Europe.
2. H. A. L. Fisher : A History of Europe.
3. Cantor, N. D. : Mediaeval History.
4. Streyer and Munro : The Middle Ages.
5. Artz, F. B. : The Mind of the Middle Ages.
6. Previteorton, C. W. : Shorter Cambridge Mediaeval History, 2 vols.
7. C. R. L. Fletcher : The Making of Western Europe, Vol. 1. The Dark Ages A. D. 300-1000.
8. Henri Piernne : A History of Europe from the Invasion to the XVI Century.
9. Painter, S. : A History of the Middle Ages.

## (ஆ) பார்வையிடற்குரியவை

1. A. J. Toynbee : A Study of History abridged by D. C. Somerwell.
2. H. G. Wells : The Outline of History.
3. James Bryce : The Holy Roman Empire.
4. Katz, S. : The Decline of Rome and the Rise of Mediaeval Europe.
5. C. J. H. Hayes and P. T. Moon Ancient and Mediaeval History.
6. Bertrand Russell : History of Western Philosophy.
7. H. Rashdall : Universities of Europe, Vol. 3.

# கலைச் சொற்கள்

A

| | | |
|---|---|---|
| Age | — | காலம், ஊழி. |
| Allegory | — | தொடர் உருவக் கதை. |
| Altar | — | படையல் மேடை. |
| Apostate | — | கொள்கை துறந்தவர். |
| Autocracy | — | வல்லாட்சி. |

B

| | | |
|---|---|---|
| Barbarian | — | நாகரிகமில்லாதவர் — மிலேச்சர்கள்—கிரேக்கர், உரோமானியர் அல்லாதவர். |
| Benefice | — | மானியம். |
| Block Death | — | கருங்கொள்ளைநோய். |

C

| | | |
|---|---|---|
| Canton | — | கோட்டம். |
| Cathedral | — | தலைக்கோயில். |
| Charity | — | அறவுதவி. |
| Corner Stone | — | சேம அடிப்படை. |
| Conscious Personality | — | விழிப்போடு கூடிய தனிப்பண்பு |
| Count | — | கோட்டத் தலைவர் |

D

| | | |
|---|---|---|
| Dialectics | — | தருக்க இயல். |
| Diplomacy | — | வெல்திறம். |
| Discipline | — | ஒழுங்குமுறை. |
| Dispensation | — | விலக்கீடு. |
| Doge | — | வெனிஸ்கோமகன். |
| Duke | — | கோமகன். |

E

Epic — வீரகாதை.
Era — ஊழி.
Excommunication — சமய விலக்கு.
Experiment — செயல் ஆய்வு.

F

Feudalism — நிலமானியக் கொள்கை.

G

Garrison — காவற்படை.
Ghost — ஆவி உரு.
Guild — குழு, சங்கம்.

H

Heresy — முரண் சமயம், சமய மறுப்பு.
Hostage — பிணை.

I

Inquisition — சமய மறுப்பாளர்களை ஒறுக்கும் நீதிமன்றம்.
Institution — அமைப்புமுறை.
Interdict — தடையாணை.
Investiture — பதவி அமர்த்தம்.

J

Jerboa — கொறி விலங்கு.

L

Lay men — பொதுநிலை மக்கள்.
Legendary Figure — புனைகதை உருவம்.
Legion — படையணி.
Liturgy — வழிபாட்டுச் சுவடி.
Logic — அளவைநூல், ஏரணம்.

M

Mainland — பெருநிலப்பகுதி.
Miracle — திருவருள் நிகழ்ச்சி.
Modern — இக்கால.
Monasticism — மடாலயக் கொள்கை.
Monopoly — விற்பனை முற்றுரிமை.
Mosaic — பலவண்ண.

N

Naked Despotism — அம்மணமான வல்லாட்சி.

O

Observation — காட்சி அறிவு.
Ordination — தீக்கை.
Organisation — அமைப்பு, நிறுவனம்.

P

Paganism — உரோமானிய, கிரேக்கச் சமயக் கொள்கை-புறச்சமயம்.
Papacy — போப்பாட்சி.
Peninsula — தீவக்குறை.
Phantom — கற்பனைத் தோற்றம்.
Phase — பருவம்.
Philosopher — மெய்ப்பொருள் அறிஞர்.
Policy — கொள்கை முறை.
Precedence — முதன்மை.
Proclaim — பறைசாற்று.

R

Ransom — மீட்புப் பணம்.
Revelation — தெய்வீக அறிவிப்பு.
Ruins — சிதைவுகள்.

S

Sacrilege — தெய்வம் பழித்தல்.
Schism — உட்பிளவு.
Scholasticism — புலமைக் கொள்கை.
Schoolmen — சமய அறிஞர்கள்.
Secular — சமயச் சார்பற்ற.
Serf — அடிமை ஊழியர்.
Stake — கழுமரம்.
Stirrup — படித்தட்டு.
Succession — மரபு வழி உரிமை.
Successors — கால்வழியினர்.
Super tax — மேல் வரி.
Symbolism — குறிப்பு அடையாள முறை

T

Theologian — சமய சித்தாந்தி.
Theology — இறையியல், மெய்யியல் அறிவு.
Theory — தத்துவம்.
Temporal Powers — உலகியல் (சமயஞ்சாரா) அதிகாரிகள்.
Transubstantiation — பொருள் மாறுபாடு.
Tribe — பண்படாக் குழு, குலம்.
Tribune — உரிமைக் காவலர்.
Troubadour — பாணர்.
Tyrant — வல்லாளர்.

V

Villeins — உட்குடிகள்